S153



# மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

(University with Potential for Excellence)

தொலைநிலைக் கல்வி இயக்ககம்

www.mkudde.org



எம்.ஏ., முதலாமாண்டு

# அரசியல்





தாள்–3

# இந்தியாவில் தேசிய மற்றும் மாநில அரசமைவு





**S 153**

தொலை நிலைக்கல்வி இயக்ககம்

அரசியல்

எம்.ஏ. முதலாம் ஆண்டு

தாள் - 3

# இந்தியாவில் தேசிய மற்றும் மாநில அரசமைவு

**மதுரை காமராசர் பல்கலைக்கழகம்**
**மதுரை — 625 021.**

அன்புள்ள மாணவர்களே,

முதுகலை அரசியல் மாணவராகிய உங்களை வரவேற்கிறாம். அரசியல் கல்வி மிகவும் அவசியமானது என்பதை நீங்கள் அறிவீர்கள். முதுகலை அரசியலில் இந்தியாவில் தேசிய மற்றும் மாநில அரசமைவு அரசியல் அமைப்பு வளர்ந்த விதம், இப்பாடம் இது வரை நிகழ்ந்த மாற்றங்கள், தற்போது உள்ள அரசியல் அமைப்பு, சமுதாய வளர்ச்சிக்கு வித்திட்ட தலைவர்களின் கருத்துக்கள், எண்ணங்கள் ஆகியன குறித்து அமைந்துள்ளது. இது ஓர் உயிரேட்டமுள்ள பாடம் என்பதை நீங்கள் அறிந்துகொள்ள வேண்டும். இப்பாடப்பகுதியில் மொத்தம் 10 பாடப்பட்டியலாக அமைத்துள்ளோம். நமது அரசியல் முறையில் அவ்வப்பொழுது ஏற்படும் நிகழ்வுகள், மாற்றங்கள் ஆகியவற்றை அறிந்திட செய்தித்தாள்கள், வானொலி, மற்றும் தொலைக்காட்சி ஆகியவற்றைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். மேலும் இப்படிப்பு மாணவர்களின் வாழ்க்கைக்கு பெரிதும் பயனளிக்கும் என நம்புகிறோம்.

உங்கள் நல்ல முயற்சிக்கு எங்கள் நல்வாழ்த்துக்கள்.

அரசியல்துறை

# SYLLABUS
## Paper III

## National and State Polity in India

| | |
|---|---|
| Unit : 1. | Introduction – the nature of the Indian Politics – Sources of the Indian Political Thought and stages of Indian Political System- transfer of power- British Legacy . |
| Unit : 2 | Basic Features of Indian Constitution- secularism and socialism in India- India and common wealth. |
| Unit : 3 | Fundamental Rights and Duties - Directive Prinicples of State Policy. |
| Unit : 4 | Federalism- unitary - federalism in centre State relation. |
| Unit : 5 | Union legislature – Prime Minister and Council of Ministers – President and Vice President – Constitutional Amendments |
| Unit : 6 | Civil Service -Local Government- Rural and Urban Local Government |
| Unit : 7 | National issues : Linguistic Re- Organization of the States – Problem of official language - Terrorism - communisms and Linguism in India |
| Unit : 8. | Elections and Electoral Reforms – Party system in India – Pressure groups |
| Unit : 9 | State Governments : The State Legislature – the Role of Governor – Judiciary - Supreme and High Courts. |
| Unit : 10 | Society in the Madras Presidency in 1900 – Non- Brahmins – the Dravidian Movement – Modernization and Development – Human Rights. |

## SELECT REFERNCES


1. V.P. Varma, Studies in Hindu Political Thought and its Metaphysical Foundations, Delhi, Mothilla Banarsidass, 1974.
2. S.a. Wolpert and Gokhale, Berkeley, University and California Press, 1962.
3. G. Woodcock, Mohandas Gandhi, London, Fontana, 1971.
4. G. Austin, The Indian Constitution : Cornerstone of a Nation, Oxford, Oxford University Press, 1966.

5. G. Austin, Working a Democratic Constitution : The Indian Experience, Delhi, Oxford University Press, 2000.
6. D.D. Basu, An Introduction to the Constitution of India, New Delhi, Prentice Hall, 1994.
7. D.D. Basu and B. Parekh (ed.). Crisis and Change in Contemporary India, New Delhi, Sage 1994.
8. C.P. Bhambri, The Indian State : Fifty Years, New Delhi, Shipra, 199.
9. K.R. Bombwall, The Foundations of Indian Federation, Bombay, Asia Publishing House, 1967.
10. P. Brass, Politics of India since Independence, 2nd edn., Cambridge, Cambridge University Press, 1994.
11. P. Brass, Caste Faction and Party in Indian Politics, vols,2, Delhi, Chanakya Publications, 1984-1985.
12. A. Chanda, Federalism in India : A study of Union – State Relations, London, George Allen & Unwin, 1965.
13. B. Dasgupta and W.H. Morris-Jones, patterns and Trends in Indian Politics, New Delhi, Allied Publishers, 1976.
14. J. Dasgupta, Language Conflict and National Development, Berkeley, University of California Press, 1970.
15. C. Fuller and C. Jaffrelot (eds.), The BJP and the Compulsions of Politics in India, Delhi, Oxford University Press, 1998.
16. N.G. Jayal (ed.), Democracy in India, Delhi, Oxford University Press, 2001.
17. S. Kaushik (ed.), Indian Government and Politics, Delhi University, Directorate of Hindi Implementation, 1990.
18. A. Kohli, Democracy and Discontent : India's Growing Crisis of Governability, Cambridge, Cambridge University Press, 1991.
19. R. Kothari , Caste and Politics in India, New Delhi, Orient Longsman, 1970.
20. R. Kothari, Party System and Election Studies, Bombay, Asia Publishing House, 1967.
21. Narian (ed.), State Politics in India, Meerut , Meenakshi Prakashan, 1967.
22. T.K Oomen, Protest and Change : Studies in Social Movement, New Delhi, Sage, 1990.

23. M.V. Pylee, Constitutional Government in India, Bombay, Asia Publishing House, 1977.
24. M.V. Pylee, An Introduction to thè Constitution of India, New Delhi, Vikas, 1998.
25. A. Ray, Tension Areas in India's Federal System, Calcutta, The World Press, 1970.
26. R. Roy, Bureaucracy and Development, New Delhi, Manas Publication, 1974.
27. N.C. Sahni (ed.), Coalition Politics in India, Jullunder, New Academic Publishing Company, 1971.
28. J.R. Siwarch, Dynamics of Indian Government & Politics, New Delhi, Sterling Publishers, 1985.
29. Singh, M.P. and H. Roy (eds.), Indian Political System: Structure, Policies, Development, New Delhi, Jnanada Prakashan, 1995.
30. M.N. Srinivas, Social Change in Modern India, Bombay, Allied Publishers, 1966.
31. R. Thakur, The Government & Politics of India, London, Macmillan, 1998.
32. Hardgrave, Jr. R. The Dravidian movement (Popular prakashan, 1965)
33. Baker, C.J, The Politics of South India (Vikas, 1976)
34. Washbrook, D.A. The Emergency of Provincial Politics (Vikas, 1976)
35. Elkins. D.J. Electoral Participation in a South Indian Context (Vikas, 1975)
36. Irschick, Eugine. F, Politics and Social Conflict in South India (QUP, Bombay, 1969).
37. Government of India, Renewing Local Self-government in Rural India; New Delhi, Ministry of Rural Development 1994.
38. Palanithurai, G. ; rejuvenating republic through local government ; grass root governance vol-II, No II, june 2004
39. Kashyap, Subhash : Our Constitution – An Introduction to Indian's Constitution and Constitution Law, National Trust, India, 2008.
40. Poornima, G.R.Suresh Kumar, M.N; The constitution of India, Sura Books P. Ltd, 2008.

# பாடப்பட்டியல்

அலகு—1: இந்திய அரசியலின் இயல்பு — இந்திய அரசியல் சிந்தனையின் ஆதாரம் — அதிகாரமாற்றம் ஆங்கிலேயர் அளித்துச் சென்ற பிரச்சனைகள்

அலகு—2: அரசியலமைப்பின் அடிப்படை பண்புகள் — மதச்சார்பின்மையும் சமதர்மம் — இந்தியாவும் காமன்வெலத்தும்.

அலகு—3: அடிப்படை உரிமைகளும் கடமைகளும் — அரசு நெறிமுறைக் கோட்பாடு

அலகு—4: கூட்டாட்சி – மத்திய – மாநில உறவுகள்

அலகு—5: மத்திய அரசு – ஆட்சித்துறை – குடியரசுத்தலைவர் — அரசிலமைப்புத்திருத்தம்

அலகு—6: அரசுப்பணி – தேர்வாணைக்குழு – நகர, ஊரக உள்ளாட்சி அரசாங்க அமைப்புகள்

அலகு—7: பிராந்தி மனப்பான்மை – மொழிவாரி மாநிலங்கள்— ஆட்சி மொழிப்பிரச்சனை

அலகு—8: தேர்தலும் தேர்தல் சீர்திருத்தங்களும் — கட்சிமுறை – தன்னலக்குழுக்கள்

அலகு—9: மாநில அரசு – ஆட்சித்தறை – ஆளுநரின்பணி நீதித்துறை – நீதிப்புணராய்வு

அலகு—10: பிராமணீய எதிர்ப்பின் தோற்றம் — சுயமரியாதை இயக்கம் — பத்திரிக்கை, சினிமா, ஆகியவற்றின் பங்கு – நவீனமயமாக்கம் மற்றும் முன்னேற்றம்.

# அலகு—1

## இந்திய அரசியலின் இயல்பு, இந்திய அரசியல் முறையின் பல்வேறு படிநிலைகள், இந்திய அரசியல் சிந்தனையின் ஆதாரம்.

### முன்னுரை

சுதந்திரத்திற்குப் பின் இந்தியக் குடியரசு மேற்கத்திய முறையிலான பாராளுமன்ற அரசாங்க முறையினைப் பின்பற்றியது. இந்திய வரலாற்றில் முதன் முறையாக அரசாங்க நிறுவனங்கள் இந்திய மக்களால் இயற்றப்பட்ட அரசியல் அமைப்பின் படி நிறுவப்பட்டன. இந்தியக் குடியரசுத்தலைவர், பிரதம மந்திரி, அமைச்சரவை, நாடாளுமன்றம், நீதிமன்றங்கள் முதலியவைகளின் செயல் அமைப்பு, மேற்கத்திய அரசாங்கத்தில் உள்ளது போல் உள்ளன. மக்கள் இறைமை, பொறுப்புள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட அரசு, நீதிப்புனராய்வு, ஈரவைச் சட்டமன்றம் போன்றவைகள் மேற்கத்திய நாடுகளில் தோன்றி வெற்றிகரமான முறையில் பின்பற்றப்படுகின்றன. இவைகள் இந்திய அரசியலிலும் புகுத்தப்பட்டுள்ளன. ஆகையால் நம்முடைய அரசியல் முறையானது மேற்கத்திய அரசாங்க முறையை ஒத்திருக்கிறது என்று சொன்னால் மிகையாகாது. ஆயினும், சிறிது ஆழ்ந்து நோக்குவோமாயின் இந்திய அரசியல்முறை மேற்கத்திய அரசியல் முறையை ஓரளவு பின்பற்றி இருந்தபோதிலும், இந்தியப் பாரம்பரியம், அனுபவம், தேவை ஆகியவற்றிற்குப் பழக்கமில்லாத நடைமுறைகளும், நோக்கங்களும் அதில் காணப்படுகினறன. இந்திய அரசியலமைப்பு முறை வளர்ந்து வரும் ஒன்றாகும். அதன் இறுதிவடிவம் இன்றும் தெளிவாக இல்லை என்று நார்மன் D. பால்மர் கூறுகிறார்.

### நோக்கங்கள்

இந்திய அரசியல் சிந்தனையின் மூலங்கள் மற்றும் இந்திய அரசியல் முறையின் படிநிலைகளை கற்றறிதல்.

முடியாட்சி காலத்தில் இந்தியாவில் நிலவிய அரசியல் முறையினை தெரிந்து கொள்ளுதல்.

அதிகாரம் மாற்றம் மற்றும் ஆங்கிலேயர் அளித்துச் சென்ற முறைகளையும் பிரச்சினைகளையும் பகுத்தறிதல்.

மொழிவாரி மாநிலங்களின் சீரமைப்பினை உணர்தல்.

இந்திய மாநிலங்களின் இணைப்பில் வல்லபாய் படேலின் பங்கினைப் புரிந்து கொள்ளுதல்.

**அலகின் வடிவமைப்பு** (Unit Structure)

**இந்திய அரசியலின் இயல்புநிலை**

**இந்திய அரசியல் சிந்தனையின் மூலங்கள் மற்றும் அரசியல் முறையின் படிநிலைகள்**

**முடியாட்சி காலத்தில் இந்தியாவில் நிலவிய அரசியல் முறை**

**மவுண்ட்பேட்டன் திட்டம் பற்றிய அறிக்கை**

**1947ம் ஆண்டு இந்திய சுதந்திரச் சட்டம்**

**ஆங்கிலேயர் விட்டுச் சென்ற பாரம்பரியங்கள்**

**நிர்வாக சீர்திருத்த மாற்றங்கள்**

**இந்திய தேசீய காங்கிரஸின் உருவாக்கம்**

**சட்டம் மற்றும் நீதித்துறையின் செயல்பாடுகள்**

**இந்திய மாநிலங்களின் இணைப்பில் சர்தார் வல்லபாய்பட்டேலின் பங்கு**

**தொகுப்புரை** (Summary)

**முக்கிய வார்த்தைகள்** (Keywords)

**முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனை** (Check your progress questions)

**இந்த அலகு சம்பந்தமாக மேலும் படிக்க வேண்டிய நூல்கள்** (Books for further reading)

**வினாக்களும் செய்முறைப் பயிற்சிகளும்** (Questions and exercises)

## 1.1. இந்திய அரசியலின் இயல்பு: (The Nature of Indian Politics)

**இந்தியாவின் பாராளுமன்றம் எனும் நூலில் மாரிஸ் ஜோன்ஸ் இந்திய அரசியல்முறை பயிலும் மாணவர்களை இதே போல் எச்சரித்துள்ளார். நமக்கு பழக்கமான நிறுவனங்கள் நமக்குப் பழக்கமான செயல் தான் செய்யும் என்று நாம் எண்ணிவிடக்கூடாது; அரசியல் தன்மையை அரசியல் அல்லாத இயக்கங்களில் தோன்றக்கூடிய சக்திகள் இந்தியத் தன்மையுடையவை. இதன் விளைவாக இந்திய அரசியலின் பல்வேறு நிலைகளில் இத்தனித்தன்மை வாய்ந்த சிறப்புக் கூறுகள் காணப்படுகினறன. இந்திய சுதந்திரத்திற்கு முன் மகாத்மா காந்தியின் சீரிய தலைமையும், சுதந்திரத்திற்குப் பின் ஜெயபிரகாஷ் நாராயணன், கிருபளானி, வினோபா பாவே போன்றவர்களின் முக்கியப் பங்கும் இந்திய தலைமைக்கு எடுத்துக்காட்டுகளாகும். பழங்கால மதத் தத்துவங்கள் இன்றைய அரசியலில் நெருங்கிய தொடர்பு பெற்றிருப்பதால் அரசியலில் பல்வேறு மதத்தத்துவங்கள் பல்வேறு மட்டங்களில் உள்ள பிரச்சனைகள் இந்தியாவிற்கே உரித்தானவையாக உள்ளன. ஆகையால் மேற்கத்திய முறையிலான நாடாளுமன்றக் குடியரசு சிந்தனையின் மூலங்களையும் ஆராய வேண்டும்.**

## 1.1.1. இந்திய அரசியல் சிந்தனையின் மூலங்களும், இந்திய அரசியல் முறையின் படிநிலைகளும்

(Sources of Indian Political Thought and stages of Indian Political System)

நாகரிகமடைந்த எல்லா நாடுகளும் ஒரு சில காலகட்டத்தில் புத்துணர்ச்சி பெறுவதற்காக வழி தேடி தங்களுடைய கடந்த காலத்தை எண்ணிப் பார்க்கின்றன. இதற்கு இந்தியாவும் விதிவிலக்கல்ல. ஒரு நோக்கமும் இல்லாமல், பழம் பெருமையையே பேசிக்கொண்டு இருப்பது தீவிரமான நாட்டுப்பற்றை ஊக்குவித்து, இந்தியத் தன்மையில்லாத நோக்கங்களை ஏற்க தடை இடலாம். ஆனால், இவைகள் இந்திய மக்கள் தங்களுடைய வரலாற்றைப் புரிந்து கொள்ளவும். அதைப் பாராட்டவும் உதவி செய்கின்றன என்று பால்மர் கூறுகிறார்.

இந்தியா, பல நிலைகளில் ஆரியர்கள், முகமதியர்கள், ஆங்கிலேயர்களின் கட்டுப்பாட்டின் கீழ் இருந்தது. இந்திய அரசியல் சிந்தனையை ஆராய வேண்டுமென்றால், நாம் இந்தக்கால கட்டங்களையும் பார்க்கவேண்டும். அரசியல் சிந்தனை வளர்ச்சிக்கு நம்முடைய பழங்கால நூல்களாகிய வேதங்கள், உபநிடதங்கள் போன்றவை பெரும் பங்காற்றின.

சிந்து சமவெளியில் கி.மு. 2000 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே தலைசிறந்த நாகரிகம் தோன்றியிருந்தது. இன்று காணப்படும் சில இந்து சமய வழிமுறைகள் புத்த சமயத்தின் வளர்ச்சியினால் ஓரளவு சீர்திருத்தம் செய்யப்பட்டவையாகும். அறம், பொருள், இன்பம், வீடு முதலியன வாழ்க்கையின் நான்கு முடிவுகளாக நான்கு நிலைகளில் வைக்கப்பட்டு, சமூக அரசியல் வாழ்வில் இடம் பெற்றன. புத்த, சமண சமயத்தின் கொள்கையான அகிம்சை, கண்ணனின் கீதை, இராமயணத்தில் காணப்படும் அரசியல் தத்துவம் முதலியன இந்திய அரசியல் சிந்தனையிலும், சமூக வழிமுறைகளிலும் பல்வேறு நிலைகளில் காணப்படுகின்றன. அதிக வரலாற்றுக் கூறுகள் இல்லாத நிலையில், இந்துமத வாழ்க்கை முறைதான் இந்தியாவில் மிக முக்கியமான அரசியல் வரலாற்று மூலக்கூறாகும்.

### 1.1.2. முடியாட்சி காலத்தில் இந்தியாவில் நிலவிய அரசியல் முறை (Political System during the Monarchy)

முடியாட்சி இருந்த காலத்தில் கூட ஒருவிதமான மக்களாட்சி முறை அரசு நிலவியது. ஆங்காங்கே நிலவிய சிறு பஞ்சாயத்து முறை அரசுகள் ஜனநாயக முறையின் நல்முத்துக்களாக விளங்கின. அதிகாரங்கள் குவிக்கப்பட்ட அதிகாரத்துறையாட்சி மௌரியர்கள் காலத்திலும், குப்தர்கள் காலத்திலும் நடைமுறையிலிருந்தது. தர்மம், மரபு, வழக்கம் முதலியவைகளின் அடிப்படையில்தான் அன்றைய வாழ்க்கை முறையில் சட்டங்கள் அமைந்திருந்தன. தண்டம், (தண்டனை) ராஜதருமம் இவைகள் தான் அரசனின் அதிகாரத்தைக் கட்டுப்படுத்தின. ஆனால் எந்த ஒரு மனிதனாலும் இயற்றப்பட்ட சட்டங்கள் அரசனின் அதிகாரங்களைக் கட்டுப்படுத்தவில்லை. அரசனின் உள்நாட்டு அதிகாரங்கள் பற்றி ஏழு அங்கக் கோட்பாடும், வெளிநாட்டு உறவுகள் பற்றி மண்டலக் கோட்பாடும் விளக்குகின்றன.

தென்னிந்தியாவில் சோழர்கள் காலத்தில் அரசர்களின் பாதுகாப்பின் கீழ் சுயமாக ஆட்சி செய்யும் கிராம சபைகள் இருந்தன என்பதற்கு போதிய ஆதாரங்கள் இருக்கின்றன. முடியாட்சி தலைவரை வழிபடுதல், தருமம், தண்டனை, கருமம் முதலியவைகளின் மொத்த உருவமாகக் கடந்த காலம் காணப்பட்டது. சங்கங்கள் போன்ற சிறு மக்களாட்சி மன்றங்கள் தவிர வேறு எங்கும் மக்கள் பிரதிநிதிகள் காணப்படவில்லை.

குப்தர்கள் காலத்திற்குப் பின் இந்திய அரசியல் நிலை வீழ்ச்சியுற்றது. ஆனால், இந்த வீழ்ச்சி சிறிது காலத்திற்கு, மேற்கே ஹர்ஷராலும், தெற்கே சோழர்களாலும், பல்லவர்களாலும் நிறுத்தப்பட்டது. இந்தியாவில் அரசியல் ஒருமைப்பாடும், சமூக ஒற்றுமையும் காணப்படவில்லை. இங்கு நூற்றுக்கணக்கான தலைவர்கள் இருந்தனர். இவர்களுக்கிடையே ஏற்பட்ட சிறு சிறு பூசல்களினால் தங்களுடைய சக்திகளை அவர்கள் வீணாக்கினார்கள். இந்தியா ஒரு பூகோள வடிவமாகத் திகழ்ந்ததே தவிர, எந்தவித அரசியல் ஐக்கியமாகவும் திகழவில்லை.

#### (அ) முகமதியர் ஆட்சி காலத்தில் நிலவிய அரசியல் முறை (Political System during the Reign of Muslims)

இடைக்காலத்தில் பல சக்தி வாய்ந்த வெளிநாட்டினர் இந்தியாவின் மீது படையெடுத்தனர். இது இந்திய வரலாற்றில் முக்கியமான காலகட்டமாகக் கருதப்பட்டது. முகமதியர்கள் பெருமளவில் இந்தியாவின் மீது படையெடுத்துத் தங்களுடைய ஆட்சியை நிறுவ ஆரம்பித்தனர்.

இதனால் முகமதியர்களின் அரசியல் மற்றும் நிர்வாகத்துறை இந்தியாவில் தோன்ற ஆரம்பித்தது. ஆயிரக்கணக்கான இந்துக்கள் இஸ்லாமிய மதத்திற்கு மாற்றப்பட்டனர். முகமதியர்கள் காலத்திலிருந்து சுதந்திரப்போராட்டம் வரையில் இந்த இரு மதங்களுக்கிடையே சச்சரவுகள் இருந்து வந்தன. இதனால் இந்தியா 1947ம் ஆண்டில் இரண்டு நாடுகளாகப் பிரிக்கப்பட்டது. ஔரங்கசீப்பிற்குப் பின் (1707) முகமதியர்கள் ஆட்சி வீழ்ச்சியுறத் தொடங்கியது. 1762ஆம் ஆண்டு இவ்வாட்சி முடிவு பெற்றது. முகமதியர்கள் ஆட்சி வீழ்ச்சியுறத் தொடங்கியது. முகமதியப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பல காரணங்கள் உள்ளன. இவர்களின் ஆட்சி, பேரரசின் தன்மையையும், இராணுவ பலத்தையும் மட்டுமே நம்பியிருந்தன. தேசிய உணர்ச்சியோ, அதனடிப்படையில் எழும் நாட்டுப்பற்றோ, அப்பற்றுடன் கூடிய மக்களின் ஆதரவோ இவ்வாட்சிக்கு இருக்கவில்லை. மேலும் இவ்வரசின் அடிப்படை இந்தியாவின் பழங்கால மரபுகளை ஒட்டியதாக இருக்கவில்லை.

## (ஆ) கிழக்கிந்திய கம்பெனி ஆட்சியின் கீழ் அரசியல்முறை (Political System under the East India Company)

மேற்கத்தியர்களின் வருகையால்தான் முகமதியர்களின் ஆட்சி வீழ்ச்சியுற்றது. வாஸ்கோடகாமா என்ற போர்ச்சுகீசியர் கடல்வழி பாதையை கண்டுபிடித்ததால், பிரெஞ்சுநாட்டவர், போர்ச்சுகீசியர்கள், டச்சுக்காரர்கள், ஆங்கிலேயர்கள் போன்றோர் தங்களுடைய வியாபாரங்களை இந்தியாவில் ஆரம்பித்தனர். 1600ஆம் ஆண்டு நிறுவப்பட்ட பிரிட்டிஷாரின் கிழக்கிந்திய கம்பெனியும் அவைகளில் ஒன்று ஆகும். ஐரோப்பியாவின் வியாபார கம்பெனிகள் இந்தியாவின் பிராந்திய அரசுகளுக்கிடையில் காணப்பட்ட வேற்றுமைகளை தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்தின. இங்கிலாந்துக்காரர்களுக்கும், பிரெஞ்சுக்காரர்களுக்குமிடையில் இந்தியத் துணைக் கண்டத்தில் நடந்த போர்கள் இதை எதிரொலித்தன. முடிவில் பிரிட்டிஷ் கிழக்கிந்திய கம்பெனி, இந்தியாவில் அதிக இடங்களைக் கைப்பற்றி தனது ஆட்சியை நிறுவியது. இதன் விளைவாக வியாபரத்தில் ஆர்வம் குறைந்து, அரசியலில் ஈடுபட்டு ஊழல்கள் மலிந்தன. ஆகவே பிரிட்டிஷ் பாராளுமன்றம் கிழக்கிந்தியக் கம்பெனியின் நிர்வாகத்தைச் சீர்திருத்த விரும்பி ஒழுங்குமுறைச் சட்டங்களை இயற்றியது. 1858ஆம் ஆண்டு மகாராணியாரின் பிரகடனத்திற்கு பின்பு கிழக்கிந்திய கம்பெனியின் நிர்வாகத்தை ஆங்கிலேய அரசாங்கம் மேற்கொண்டது. இதன் விளைவாக இந்தியத் துணைக்கண்டம் 1947ஆம் ஆண்டு வரை இங்கிலாந்தின் நேரடிக் கட்டுப்பாட்டில் இருந்தது.

## 1.2. மவுண்ட்பேட்டன் திட்டம்: (Lord Mountbatten's Plan)

வேவல் பிரபுவைத் தொடர்ந்து, மவுண்ட்பேட்டன் பிரபு இந்தியாவின் கவர்னர் ஜெனரலாக வந்தார். அதிகாரத்தை மாற்றிக் கொடுப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்வதற்கென இவர் இந்தியாவிற்கு அனுப்பப்பட்டார். இவர் இந்தியாவில் உள்ள எல்லா முக்கிய அரசியல் கட்சித் தலைவர்களையும் கலந்தாலோசித்தார். ஐக்கிய இந்தியா என்ற அடிப்படையில் காங்கிரஸ் கட்சிக்கும், முஸ்லீம் லீக்கிற்கும் இடையேயுள்ள கருத்து வேறுபாடுகளைத் தீர்த்து சமரசம் ஏற்படுத்துவது முடியாதது என்பதனைக் கண்டறிந்தார். உடனடியாக அரசியல் தீர்வு காண்பதோடு 1947ஆம் ஆண்டு ஜீன் மாதத்திற்கு முன்னதாக அதிகாரம் மாற்றிக் கொடுக்கப்படவேண்டும் என்பதையும் உணர்ந்தார். மேலும் நாட்டைப் பிரித்து அதன் அடிப்படையில் அதிகாரம் மாற்றிக்கொடுக்கப்பட வேண்டும் என்பதையும் உணர்ந்தார். பிரிட்டிஷ் அதிகாரத்தின் ஒப்புதலோடு 1947ஆம் ஆண்டு ஜீன் மாதம் 3 ஆம் தேதி இவர் இந்தியாவின் அரசியல் கருத்து வேறுபாட்டைத் தீர்ப்பதற்கான தன்னுடைய திட்டத்தை அறிவித்தார்.

அ) இந்தியா, பாகிஸ்தான் என்ற இரண்டு டொமினியன்களை ஏற்படுத்துவதற்கும், வங்காளம், பஞ்சாப் ஆகிய பகுதிகளைப் பிரிப்பதற்கும் இத்திட்டம் வழி வகுத்தது. பஞ்சாப், வங்காளம், சிந்து, பலூசிஸ்தான், வடமேற்கு எல்லைப்பகுதி, அஸ்ஸாம் பகுதிகளிலுள்ள முஸ்லீம் பெரும்பான்மை கொண்ட சில்காட் மாவட்டம் ஆகிய பகுதிகளுக்கு இந்திய யூனியனோடு சேர்ந்து இருப்பதற்கோ அல்லது விலகிச் செல்வதற்கோ உரிமை கொடுக்கப்பட்டிருந்தது. பெரும்பான்மை இந்துக்களைக் கொண்ட வங்காளம், பஞ்சாப் மாவட்டங்களுக்கும் இதே உரிமை வழங்கப்பட்டிருந்தது. இந்திய யூனியனோடு சேர விரும்பாத பகுதிகள் தங்களது நிலைமையைத் தாமே முடிவு செய்துகொள்ளும் வகையில் அமைந்ததுதான் மவுண்பேட்டன் திட்டமாகும். ஆகையால் தான் இவ்வுரிமையானது இந்தியாவின் எல்லாப் பகுதிகளுக்கும் கொடுக்கப்பட்டிருந்தது.

1. பஞ்சாப், வங்காளம் ஆகிய பகுதிகளில் முஸ்லீம் பெரும்பான்மை கொண்ட மாவட்டங்களும், முஸ்லீம் பெரும்பான்மையில்லாத மாவட்டங்களும் தனித்தனியாகத் தங்களது சட்டப்பேரவையின் மூலமாகத் தங்களது விருப்பத்தை முடிவு செய்ய உரிமை கொடுக்கப்பட்டிருந்தது.

2. வடமேற்கு எல்லைப் பகுதி, முஸ்லீம் பெரும்பான்மை கொண்ட சில்காட் மாவட்டம், ஆகியவற்றில் வயது வந்தோர் வாக்குரிமை அடிப்படையில் இது முடிவு செய்யப்படும்.

3. சிந்து பகுதியில் சட்டப்பேரவையின் மொத்த வாக்கெடுப்பின் பேரில் முடிவு செய்ய வேண்டும்.

4. பலூசிஸ்தானில் பிரதிநித்துவ நிறுவனங்கள் சேர்ந்து அமர்ந்து முடிவு எடுக்க வேண்டும்.

ஆ) இரண்டு டொமினியன்களுக்குமிடையே சொத்துக்கள், கடன்கள் ஆகியவற்றைப் பிரிப்பதற்குரிய ஏற்பாடு செய்யப்பட்டது. இரண்டு அரசுகளுக்கும் ஆரம்பத்தில் முழு உரிமையோடு டொமினியன் அந்தஸ்து வழங்க முடிவெடுக்கப்பட்டது. மேலும் அவ்விரு அரசுகளுக்கும் பின்னால் பிரிட்டிஷ் காமன்வெல்த்திலிருந்து பிரிந்து செல்லும் உரிமையும் வழங்க வழி செய்யப்பட்டது. பஞ்சாப், வங்காளம் ஆகிய பகுதிகளில் உள்ள பெரும்பான்மை இந்துக்களைக் கொண்டிருந்த மாவட்டங்கள் இந்திய யூனியனோடு சேர்ந்து இருக்க முடிவு எடுத்தன. வடமேற்கு எல்லைப்பகுதி, சிந்து, பலூசிஸ்தானம், முஸ்லீம் பெரும்பான்மை கொண்ட பஞ்சாப், வங்காளம் ஆகிய பகுதிகளும் சில்காட் மாவட்டங்களும் பாகிஸ்தானுடன் சேருவதற்கு முடிவு செய்தன.

இந்திய பிரிவினை, அதிகார மாற்றம் ஆகிய கருத்துக்களடங்கிய மவுண்ட்பேட்டன் திட்டத்தை ஜீன் 10ஆம் தேதி முஸ்லீம் லீக்கும், ஜீன் 15ஆம் தேதி காங்கிரஸ் கட்சியும் ஏற்றுக்கொண்டன. இந்தியச் சுதந்திர சட்டம் 1947ஆம் ஆண்டு ஜீலை 18ஆம் தேதி பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்டது. 1947ஆம் அண்டு ஆகஸ்ட் மாதம் 15ஆம் தேதி இந்தியா, பாகிஸ்தான் என்ற இரண்டு டொமினியன்கள் ஏற்படுத்தப்பட்டன. முகமது அலி ஜின்னா பாகிஸ்தானின் முதல் கவர்னர் ஜெனரலாகவும், மவுண்ட்பேட்டன் இந்தியாவின் முதல் கவர்னர் ஜெனரலாகவும் பதவியேற்றனர்.

### 1.2.1. 1947ஆம் ஆண்டு இந்திய சுதந்திரச் சட்டம் (Indian Independence Act 1947)

இந்தியச் சுதந்திரச் சட்டத்தின்படி, தன் விருப்புரிமை அதிகாரங்கள், விசேடப் பொறுப்புக்கள் மற்றுமுள்ள விஷயங்களை செயல்படுத்துவதில் கவர்னர் ஜெனரல் தனது அமைச்சர்களது ஆலோசனைப்படி நடக்கவேண்டும். புதியதொரு அரசியலமைப்பு உருவாக்கும் வரையில், இருக்கின்ற டொமினியன் அரசியல் நிர்ணய சபையே அந்தந்த டொமினியனின் சட்டப்பேரவையாகச் செயல்படும் என்றும்,

டொமினியன்களும் அதனுள் அடங்கிய மாகாணங்களும் 1935ஆம் ஆண்டைய இந்திய அரசுச் சட்டத்தின் ஷரத்துக்கு ஒப்பாகச் செயல்படும் என்றும் இச்சட்டம் குறிப்பிட்டிருந்தது. ஆனால் 1947ஆம் ஆண்டைய இந்திய சுதந்திரச் சட்டம் 1935ஆம் ஆண்டைய இந்திய அரசுச் சட்டத்தில் மாற்றங்கள் செய்யலாம் என்றும் குறிப்பிட்டிருந்தது. இந்தியாவிற்கான செயலாளர் என்ற பதவியை இச்சட்டம் நீக்கிவிட்டது. இவ்வாறாக, இந்தியாவில் பிரிட்டிஷ் அதிகாரத்தை இச்சட்டம் நீக்கியது. ஆனால் அவ்வரசியல் முறை ஒரு வெற்றிடத்தில் அறிமுகமாக்கப்பட வேண்டிய முறையாகவோ அல்லது புதியதாக கண்டுபிடிக்கப்பட வேண்டிய முறையாகவோ தோன்றவில்லை. ஆங்கிலேயே ஆட்சி முடிவுற்று, அதிகாரம் கைமாறிய போது, அதிகாரத்தோடு வேறு சில முக்கிய காரியங்களும் இந்திய அரசியல் முறைக்கு மாற்றப்பட்டது. ஆகவே இந்தியாவில் அரசாங்கமும், அரசியலும் ஆங்கிலேயே ஆட்சி அளித்துச் சென்ற முறைகளினின்றும் தான் உருவாக்கப்படவேண்டும் என்று கூறப்பட்டது. மாநில பிரிவு அரசாங்க முறைகள், அரசியல் இயக்கங்கள், அரசியலில் ஈடுபட்டுள்ள மக்களை அரசாங்கத்தோடு இணையச் செய்யும் பல்வேறான மத்தியஸ்த நிறுவன அமைப்புகள், இன்றைய இந்திய அரசியலில் நிலவும் பிரச்சினைகள், வாக்குறுதிகள் போன்ற அனைத்தையும் ஆங்கிலேய ஆட்சியிலிருந்துதான் இந்தியா உரிமையோடு பெற்றுக்கொண்டது. இதனால் இந்திய அரசாங்கமும், அரசியலும் பண்டைய இந்தியாவில் நிலவிய பெரும்பாலான முறைகளைப் பின்பற்றியது எனக் கூறுதல் தவறு. இந்தியாவின் வரலாற்றில் இடையில் தோன்றிய பல ஆட்சிகளில் ஆங்கிலேயே ஆட்சியும் ஒன்றாகக் கருதப்பட்டது. இந்திய கலாச்சாரத்தையும், பரம்பரை வழக்கங்களையும் மாற்றியமைக்கும் அளவிற்கு பிற ஆட்சிகள் வலுப்பெற்று விளங்கவில்லை. ஆனால் அதே நேரத்தில் அழியாத அடையாளங்களை வருங்காலத்திற்கு அளித்துச் செல்லும் அளவிற்கு ஆங்கிலேய ஆட்சி வலிமை வாய்ந்ததாக விளங்கியது. இந்திய சுதந்திரப்போர் ஒரு புரட்சியாகக் கருதப்படாமல் ஒரு போராட்டமாக நடத்தப்பட்டது.

### 1.2.2. ஆங்கிலேயர் விட்டுச் சென்ற அரசியல் பாரம்பரியங்கள் (The British Legacy)

சுதந்திர இந்தியாவிற்கு உருவாக்கப்பட்ட அரசியலமைப்பின் பெரும்பகுதி 1935ஆம் ஆண்டு இந்தியச் சட்டத்தில் இருந்து எடுக்கப்பட்டவையாகும். இந்திய அரசியலமைப்பில் காணப்படும் கூட்டாட்சி விதிகள் 1935ஆம் ஆண்டு சட்ட விதிகளிலிருந்து தெளிவாக உருவாக்கப்பட்டதென்பது, மைய, மாநில அரசுகளின் அதிகாரங்கள் மையப்பட்டியல், மாநிலப் பட்டியல், இணைப்பட்டியல் ஆகிய தலைப்புக்களின் கீழ் கொடுக்கப்பட்டிருப்பதிலிருந்து புலனாகிறது.

1935ஆம் ஆண்டு சட்டத்தைப் போன்று, சுதந்திர இந்தியாவில் அரசியலமைப்பும் மைய அரசுக்கு பரந்த தன் விருப்புரிமையையும், எண்ணற்ற அதிகாரத்தையும் வழங்கியுள்ளது. மாநிலப் பட்டியலில் காணப்படுபவைகளின் மேல் மாநிலச் சட்டமன்றங்கள் சட்டமியற்றுவதோடு, இணைப்பட்டியலில் காணப்படுகின்ற காரியங்களை மேற்பார்வை செய்யும் மற்றும் கட்டுப்படுத்தும் பணிகளை மைய அரசோடு பகிர்ந்து கொள்கிறது. மையப்பாடு மற்றும் பரவலாக்கப்படல் போன்ற தத்துவங்கள் கொண்டு இந்திய அரசியலமைப்பு ஒரு பாதியளவிலான கூட்டாட்சியாகத் திகழ்கிறது. இது இன்னொருவிதமான ஆங்கிலேயே இரட்டையாட்சி முறையாகும். இவ்விதமாக கூட்டாட்சி அமைப்புமுறை அரசாங்கம் ஆங்கிலேயர் அளித்துச் சென்ற முறைகளில் மிக முக்கியமானதாகக் கருதப்படுகிறது.

நிர்வாகம், அலுவலக ஊழியர்கள் போன்றவற்றைப் பொறுத்த மட்டில், இன்றைய இந்தியாவில் காணப்படும் அதிகார வர்க்க ஆட்சிமுறையானது, ஆங்கிலேயே ஆட்சி அளித்துச்சென்ற ஒரு முறையாகும். பண்டைய இந்தியாவில் எந்த முறை நிலவி வந்தாலும் கடந்த நூற்றாண்டில் மாவட்டங்களை அடிப்படையாகக் கொண்டு ஆங்கிலேயே ஆட்சி தனக்கென்றொரு ஆட்சிமுறையை ஏற்படுத்திக்கொண்டது. ஒவ்வொரு மாவட்டமும் பல கிராமங்களால் ஆன தாலுக்காக்களைத் தன்னகத்தே கொண்டு திகழ்ந்தது. நகராட்சிகள் தங்களுக்கென்று நகராட்சி அரசாங்கங்களைத் தோற்றுவித்தன. மேற்கூறிய இம்முறைகளை சுதந்திர இந்தியா ஆங்கிலேயரிடமிருந்து பின்பற்றியது. இம்முறையில், ஒவ்வொரு பிரிவிலும் பொதுவான பொறுப்புடைய அதிகாரமிக்க ஒரு அதிகாரி காணப்பட்டார். மாவட்ட அதிகாரி கலெக்டராகவும், மாஜிஸ்திரேட்டாகவும், நிர்வாகியாகவும் செயல்பட்டார். நிர்வாகம், படிநிலையுடையதாகக் காணப்பட்டது. சுதந்திர இந்தியாவில் கொண்டு வரப்பட்ட சீர்திருத்தங்களால் கலெக்டர் பாதுகாப்பதோடு வரி வசூலிக்கும் பணியையும் ஆற்றுகின்றார்.

தல அரசாங்கங்களைப் பொறுத்தமட்டில் பண்டைய இந்தியாவைப் பற்றிக்கூறும் இலக்கியங்கள் தல அரசுகள் பண்டைய இந்தியாவின் கிராமங்களில் நிலவியதை எடுத்தியம்பிய போதிலும், இன்று வரை உள்ளாட்சி அரசாங்க முறையில் அதிகாரப் பரவலாக்கல் முழுமையாக செய்யப்படவில்லை. 1881—ஆம் ஆண்டு ரிப்பன் பிரபு கொண்டு வந்த தீர்மானத்தைத் தொடர்ந்து, மாவடடம் மற்றும் அதற்குக் கீழ்மட்ட அமைப்புகளில் உருவாக்கப்பட்ட அதிகாரிகளில்லாத குழு அமைப்புக்கள் வெற்றிகரமாகச் செயல்படவில்லை. ஆனால், அதே நேரத்தில் ஆங்கிலேயர்கள் தல அரசாங்கச் சீர்திருத்தங்களை உருவாக்க விருப்பம் கொண்டிருந்தனர் என்பது உண்மை. அதிகாரம் கைமாறிய போது சட்டப்புத்தகத்தில் காணப்பட்ட பல்வேறான தல அரசு தொடர்பான சட்டங்களின் வாயிலாக ஆங்கிலேயரின் அவ்விருப்பம் புலனாகிறது.

இவ்விதமான தல அரசு அமைப்புக்களையும், அதிகார வர்க்க அமைப்பயையும் இணையச் செய்யும் முற்றுப்பெறாத இப்பரிசோதனை முறையை இந்தியா, ஆங்கிலேயரிடம் இருந்து பெற்றிருக்கிறது என்று மாரிஸ் ஜோன்ஸ் என்பார் கூறுகிறார். நடைமுறையில் கொண்டு வரப்பட்ட பஞ்சாயத்து ராஜ் முறைகளாலும் மையப்படுத்தப்பட்ட அதிகார வர்க்க ஆட்சி முறையைத் தோற்றுவிக்க முடியவில்லை. ஆங்கிலேயே ஆட்சியர்கள் ஆட்சியைத் துறந்து சென்ற பிறகும், ஐ.சி.எஸ். ஆதிகாரிகள் ஓய்வு பெற்ற பிறகும், முன் காணைப்பட்ட அரசாங்க அமைப்புகள் எவ்வித மாறுதலும் இன்றி தொடர்ந்து செயல்பட்டு வந்தன. இவ்வமைப்புக்கள் இந்திய அரசியல் முறைகளாகத் தொடர்ந்து இருந்து வருகின்றன. "ஆங்கிலேயே அரசு முறைகளை நீக்கிவிட்டால் நாடு முழுவதிலும் ஒரு குழப்பமான நிலையைத் தான் பார்க்க முடியும்" என்று வல்லபாய் பட்டேல் கூறினார்.

## 1.2.3. நிர்வாக சீர்திருத்த மாற்றங்கள்
(Changes for Administrative Reforms)

நிர்வாக சீர்திருத்தம் மிகத் தேவை என்பது உணரப்பட்டு, பல்வேறான நிர்வாகச் சீர்திருத்தங்கள் அவ்வப்போது நிறைவேற்றப்பட்டு வருகிறது என்றாலும், இந்திய நிர்வாகம் மாற்றங்களை எதிர்த்து தடைசெய்கின்றது. ஆங்கிலேயர் உருவாக்கிய பொதுப்பணித்துறையைப் பொறுத்தமட்டில் இந்தியப் பொதுப் பணியின் துணையோடு, மாநிலப் பொதுப்பணிகள் குறிப்பிடத்தக்க அளவு வளர்ந்தன. இன்றும் நாம் மத்திய மாநிலப் பொதுப்பணி அமைப்புக்குழுக்களை நிறுவி இருக்கின்றோம். ஆனால் வேலைக்கு ஆட்கள் சேர்ப்பு, பயிற்சி, அரசு ஊழியர்களின் பணி போன்ற முறைகள் இன்றும் ஆங்கிலேய முறைகளைத் தழுவியதாகத்தான் காட்சியளிக்கின்றன. மேற்கத்திய பாராளுமன்ற ஜனநாயக அரசியல்கட்சி முறை, சட்ட ஆட்சிமுறை போன்றவைகளை இந்தியா ஆங்கிலேயரிடம் இருந்து பின்பற்றியதோடு, அரசாங்கத்தை இயக்க உதவும் சக்திகளையும், மக்களையும், அதிகார வர்க்கத்தையும் இயக்கி வரும் மனோத்தத்துவ சக்திகளையும், ஆங்கிலேயரிடம் இருந்து போதுமான அளவு பின்பற்றியமையால், இந்தியாவின் ஒற்றுமையையும், ஒருமைப்பாட்டையும் பாதுகாக்க முடிந்தது. ஆங்கிலேய ஆட்சி சுதந்திர இயக்கங்களைத் தூண்டியதோடு, அவற்றை ஓரளவு அனுமதித்து வந்ததால், பல்வேறான மொழி, மதம், வகுப்பு, சாதி போன்றவற்றைச் சார்ந்த இந்தியர்கள் ஒருங்கிணைய முடிந்தது. ஆனால், பல்வேறான பிராந்தியங்களையும் முற்றிலுமாக ஒழிக்கவில்லை. அதே நேரத்தில் ஒரு பொது விரோதியை எதிர் நோக்குவதற்காக, பிராந்திய மொழிப் பிரச்சனைகள் ஒத்தி வைக்கப்பட்டன.

## 1.2.4. மொழிவாரி மாநிலங்கள் சீரமைப்பு

(Reorganisaion of Lingustic States)

ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் மொழிவாரி மாநில எண்ணங்கள் ஆரம்பித்து முடிவில் அவ்வகையான மாநிலங்கள் சுதந்திரத்திற்குப் பின் உருவெடுத்தன. 1921ஆம் ஆண்டு மொழிவாரியாக இந்திய மாநிலங்கள் அமைக்கும் கோரிக்கையை இந்திய தேசிய காங்கிரஸ் விடுவித்தது. மொழிவாரியாக மாநிலங்களை மறு சீரமைக்கும்பணி அன்று பிரதமராயிருந்த பண்டித ஜவஹர்லால் நேருவிடம் ஒப்படைக்கப்பட்டது. அவர் அவ்வாறான மறு சீரமைப்பை முழுஅளவில் எதிர்த்தார். “மொழிப் போரட்டாங்களைத் துாண்டி, அதன்மூலம் சுதந்திரத்திற்கு முன் காங்கிரஸ் ஒரு மாபெரும் அரக்கத் தன்மையை தோற்றவித்தது. அத்தன்மை இன்று இந்தியா தனியொரு நாடாகத் திகழ்வதற்குப் பாதகமாய் அமைந்துள்ளதோடு, இந்திய அரசாங்கத்தின் திறமைக்குக் கடும் சோதனையாகத் திகழ்கின்றது” என்று நேரு கூறினார். தேசிய இயக்கம் தேசிய ஒருமைப்பாட்டைத் தோற்றுவித்ததோடு, சுதந்திர இந்தியாவின் ஆட்சியைத் தலைமையேற்று நடத்தத் தேவையான தலைமையையும் அளித்தது. தேசிய இயக்கமும் மகாத்மா காந்தியின் தலைமையின் கீழ் இயங்க ஆரம்பித்த போது, பரந்த நோக்குடைய முற்போக்கு எண்ணங்கள், தீவிர மற்றும் பிற்போக்கு எண்ணங்களை வென்றதை நன்கு உணர முடிந்தது.

## 1.3. இந்திய தேசீய காங்கிரஸின் உருவாக்கம்

(Origin of Indian National Congress)

ஒரு சிறு இயக்கமாக ஆரம்பிக்கப்பட்ட இந்திய தேசிய காங்கிரஸ் நாளடைவில் காங்கிரஸ் கட்சியாக உருவெடுத்தது. இவ்விதமாக, அரசியல் கட்சிகளின் அமைப்பு, நிறுவனம், பணி போற்றவற்றை போராட்டக் காலத்தில் ஆங்கிலேயரிடமிருந்து காங்கிரஸ் கட்சியின் மூலமாய் இந்தியர்கள் பெற்றுக்கொண்டனர். பொதுவுடைமைக் கட்சியைத் தவிர்த்து, பெரும்பாலான பிற கட்சிகள் நாளடைவில் இந்திய தேசிய காங்கிரஸிலிருந்து தோன்றியவையாகும். இவ்வாறு தேசிய இயக்கம் பல்வேறான முறைகளை அளித்துச் சென்றது. ஆனால் இன்றைய இந்திய அரசாங்கத்தையும், அரசியலையும் பெருமளவு பாதிக்கும் அளவில் தேசிய இயக்கம் மக்களை அரசாங்கத்திற்கு எதிரான ஒரு கருத்தினைக் கடைப்பிடிக்க உருவாக்கியது. பல்லாண்டு காலமாக அரசாங்கத்தை எதிர்த்து அரசாங்கத்திற்கு கீழ்ப்படியாமலிருக்கும் ஒரு இயக்கமாகத் தேசிய இயக்கம் கருதப்பட்டது. சுதந்திரத்திற்குப் பிறகும்

மக்கள் அரசாங்கத்தை எதிர்க்கும் மனப்போக்கைத் தொடர்ந்து பின்பற்றினர்.

இந்தியாவின் ஆட்சிமொழி தொடர்பான பிரச்சனை ஆங்கிலேய ஆட்சியின் மற்றுமொரு நன்கொடையாகும். ஒரு இயக்கம் என்கிற அளவில், காங்கிரசிற்கு அந்திய மொழியாகிய ஆங்கிலத்திற்குப் பதிலாக ஒரு இந்திய தேசிய மொழியை வளர்த்து, அதனைப் பின்பற்றும் பெரும் பணியை மேற்கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டது. மிகப் பெரும்பான்மையான வலிமை பொருந்திய ஒரு கட்சி என்ற முறையில் காங்கிரஸ் அக்கொள்கையை நடைமுறைக்குக் கொண்டுவர முயற்சிகளை ஆரம்பித்தது. ஆங்கிலம் அதிக அளவில் பரவியிருந்ததாலும், ஆங்கிலக் கல்வி பெருகி இருந்தமையாலும், கல்வி அறிவு படைத்தோருக்கு அரசாங்கத்தோடு தொடர்புகொள்ள ஆங்கிலம் தவிர்க்க முடியாத ஒன்றாக மாறியமையாலும் ஆங்கிலத்தை முழு அளவில் கைவிட சில பிராந்தியங்கள் எதிர்ப்புத் தெரிவித்ததோடு, அரசாங்கத்தின் அதிகாரப் பூர்வமான கொள்கையை எதிர்த்தன. ஆட்சி மொழிப் பிரச்சனை ஆங்கிலேயர் ஆட்சி அளித்துச் சென்ற ஒரு முக்கிய பிரச்சனையாகும். தேர்தல், பிரச்சாரம், வாக்குரிமை போன்றவை தேசிய இயக்கத்தோடு தொடர்பு கொண்ட பிரதிநித்துவ ஆட்சியாளர்களால் புகுத்தப்பட்டு, தேசிய இயக்கத்தின் போது மக்களிடம் எடுத்துச் செல்லப்பட்டன.

இன்று இந்திய அரசியலில் காணப்படும் கட்சி தாவும் பழக்கம் தேசிய இயக்கத்திலிருந்து தோன்றியது என்றால் அது மிகையாகாது. பல மாறுபட்ட விருப்பங்களின் கூட்டமைப்பாக இந்திய தேசிய காங்கிரஸ் திகழ்ந்தது. நாடு சுதந்திரம் அடைய வேண்டும் என்ற பொதுவிருப்பத்தின் கீழ் இந்த வேறுபட்ட விருப்பங்களிடையே ஒரு உடன்படிக்கை ஏற்படுத்த காங்கிரஸ் கடினமாக உழைத்தது. இதனால் கட்சியில் உட்பூசல்கள் நிறைந்து இருந்தன. கட்சிக் கட்டுப்பாடு பலவீனமாக இருந்த காரணத்தால், யார் வேண்டுமானாலும் கட்சியில் சேரவும், விலகவும் முடிந்தது. இந்த மனநிலையை எல்லா அரசியல் கட்சிகளும் இன்று ஆதரிக்கின்றன. இது பிரதிநித்துவ முறை அரசாங்கத்தின் பெரும் குறையாகத் திகழ்கிறது.

முற்றிலும் இந்தியர்களைக் கொண்ட சில தொழில்கள் காணப்பட்டன. இத்தொழில்புரிவோர் தேசிய இயக்கத்தின் மேல் பற்றுகொண்டு விளங்கியதோடு, ஒரு இடைநிலைச் சக்தியாகவும் திகழ்ந்தனர். இவர்கள் தேசிய இயக்கத்திற்கும், ஆங்கில அரசாங்கத்திற்கும் ஒரு இணைப்பை ஏற்படுத்தினர். ஆசிரியர், மருத்துவர், வழக்கறிஞர் போன்ற தொழில்புரியும் அங்கத்தினர்கள் ஆங்கிலத்தின் பயனைப் பகிர்ந்து கொண்டதோடு, தேசிய இயக்கத்தில் நாளடைவில் முக்கிய இடங்களைப் பிடித்து, ஆங்கில ஆட்சி காலத்தில்

சட்டமன்றத்திலும், கவுன்சில்களிலும் பங்கேற்றனர். இச்சட்ட மன்றங்கள் அரசாங்கத்திற்கும், தேசிய இயக்கத்திற்கும் இடையே உரையாடல் நடைபெறச் சிறந்த இடமாக அமைந்தன. ஆங்கிலேயருக்கு எதிராகச் செயல்பட்ட சிறந்த இடமாக திகழும் சட்டமன்றத்தையும், கவுன்சிலையும் மகாத்மா காந்தியின் சீரிய தலைமையின் கீழ் இயங்கிய தேசிய இயக்கம் திறமையாகப் பயன்படுத்தியது. ஆங்கில ஆட்சியாளர்களுக்கு எதிராக பலாத்காரமான நேரடி செயல்முறைகளைப் பின்பற்ற வேண்டும் என்ற கருத்தை காந்தியடிகள் ஏற்றுக்கொள்ளவில்லை. ஆனால், பாராளுமன்றத்தில் பங்கெடுத்தலையும், அதே நேரத்தில் அமைதியாக அஹிம்சா முறையில் எதிரிப்புத் தெரிவித்தலையும் அவர் இணைத்துக்காட்டினார். இம்முறை செயல்பட்டால் தலைவர்களுக்கு அரசாங்கத்தைப் பற்றிய பயிற்சி கிடைப்பதோடு, சுதந்திரமும் விரைவில் கிடைக்கும் என்று கருதினர்.

## 1.3.1. சட்டம் மற்றும் நீதித்துறையின் செயல்பாடுகள் (The Function of Law and Judiciary)

ஆங்கிலேயச் சட்டமும், நீதித்துறையும் ஒரு இடைநிலைக் காரணியாகச் செயல்பட்டன. மாரிஸ் ஜோன்ஸ் அதனைப் பின்வருமாறு விளக்குகின்றார். பாராளுமன்றத்தைக் காட்டிலும் நீதித்துறையின் செல்வாக்கு இந்திய மக்களின் வாழ்வை நீண்ட காலத்திற்கு ஆட்கொண்டது. நீதித்துறையின் சட்டங்களும், வழிமுறைகளும் மதிப்புடையதாக காணப்பட்டதால், அத்துறை புகழோடு, அரசியல் தாக்குதல்களிலிருந்து விடுபட்டு விளங்கியது. எனவே போராட்ட காலத்தில் நீதிமன்றத்தைப் புறக்கணிக்க வேண்டும் என்ற கருத்து வலுப்பெறவில்லை. நீதிமன்றங்கள், சட்டத்தொகுப்புக்கள், வழக்கறிஞர்கள் போன்ற அத்தனை சக்திகளும், பரம்பரை பழக்க வழக்கங்களும், தற்கால மேற்கத்திய மதிப்பீட்டு தன்மைகளுக்கும் இடையே ஒரு இணைப்பை ஏற்படுத்தும் பெரும்பணியை ஆற்றியுள்ளன. ஆங்கிலச் சட்டமுறைகளும், நீதித்துறை அமைப்பும் இந்தியாவில் ஆழமாக வேரூன்றியதோடு, இவற்றை ஆங்கிலேயர் அதிகாரம் கைமாறும் நேரத்தில் இந்தியாவிற்கு அளித்துச் சென்றனர். இந்நேரத்தில் சுதந்திர இந்தியாவிற்கு அரசியலமைப்பை உருவாக்கிக் கொடுக்க இந்திய வழக்கறிஞர்கள் ஆற்றிய பெரும் தொண்டினை எண்ணிப் பார்க்க நாம் யாவரும் கடமைப்பட்டிருக்கிறோம்.

## 1.3.2. இந்திய மாநிலங்களின் இணைப்பில் சர்தார் வல்லபாய் பட்டேலின் பங்கு (The Role of Sardar Vallaba Bhai Patel in the amalgation of Indian States)

இவற்றைத் தவிர்த்து இதரப் பல கடமைகளையும் ஆங்கிலேய ஆட்சி இந்தியாவிற்கு அளித்துச் சென்றது. இந்திய துணைக்கண்டத்தை இரண்டாகப் பிரித்து 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு 15ஆம் தேதி சுதந்திரம் வழங்கத் திட்டமிடப்பட்டவுடன், குறுநில மன்னர்களின் பிரச்சனை தோன்றி, அப்பிரச்சினையை எவ்வாறு சமாளிப்பது என்ற வினா எழுந்தது. இம்மன்னர்களின் சமஸ்தானங்கள் சர்தார் வல்லபாய்பட்டேலின் முயற்சியினால் இணைக்கப்பட்டன. இந்தியாவின் புதிய வரைபடத்தில் ஹைதராபாத், ஜம்மு—காஷ்மீர், மைசூர், ஆகிய மாநிலங்கள் மட்டும் பழைய குறுநில மன்னர்களின் நாட்டு அமைப்பையுடையதாக விளங்கின. இப்பெரிய மாநிலங்களுடன் 275 சிறிய மாநிலங்கள் ஒன்றாக இணைந்து ஐந்து மாநில அமைப்புகள் ஒருங்கிணைந்து இந்திய யூனியனில் "B" பிரிவு மாநிலங்கள் உருவெடுத்தன. "A" பிரிவு மாநிலங்களாக 216 குறுநிலப் பகுதிகள் இணைந்தன. "C" பிரிவு மாநிலங்களாக 61 இதர சிறிய பகுதிகள் இணைந்தன. நாளடைவில் மேற்கூறிய முறைகள் மாற்றியமைக்கப்பட்டன. ஆனால், ஆங்கிலேயர் விட்டுச்சென்ற இப்பிரச்சனை ஒரு மாபெரும் பிரச்சனையாகக் காட்சியளித்தது.

பாமர மக்களுக்கு வசதி செய்து கொடுத்தல் இன்னொரு பிரச்சனையாக சுதந்திர இந்தியாவில் காணப்பட்டது. பெருமளவிலான ஜனத்தொகை வறுமையால் வாடும் நாட்டில், நல்லதொரு பொருளாதாரக் கொள்கையை உருவாக்கும் பணியில் நிச்சயமாக முழு அறிவையும் மனத்தையும் பயன்படுத்துதல் வேண்டும். ஆங்கிலேயர் பாமர மக்களைப் புறக்கணித்தனர். மேலும் பாமர மக்களுக்காக எந்தவொரு கொள்கையையும் அவர்கள் உருவாக்கவில்லை. அவர்களுடைய பொருளாதார வளத்தை நிலைநிறுத்த எந்த முயற்சியையும் மேற்கொள்ளவில்லை. காங்கிரஸ் முதலில் ரானடே, கோகலே என்பவர்களின் தலைமையின் கீழ் இப்பிரச்சனையில் தனக்கிருந்த ஆர்வத்தை வெளிக்காட்டியது. ஆனால், கிராம பொருளாதாரத்தை வளர்க்கும் தேவையை மகாத்மா காந்தி தான் முதன்மையாக எடுத்தியம்பினர். அவர் ஒரு புது அதிசயமான தோற்றத்தைக் சித்தரித்துக் காட்டினார். மதுவிலக்கு, கிராமத்தொழில், அஹிம்சை போன்றவற்றைப் பின்பற்றும், கட்சி சார்பற்ற பரவலாக்கப்பட்ட ஜனநாயக, சமூக, அரசியல் திட்டத்தை வகுத்தார். அத்திட்டம் தொழில் மயம், நகர மயம், மையப்பாட்டுக் கொள்கை ஆகியவற்றை எதிர்த்து, இவ்விரண்டு

திட்டங்களுக்கு இடையே பொருளாதாரப் பிரச்சினை ஏற்பட்டு இன்றும் தீர்வு காணப்படாமல் இருக்கிறது. காந்தியக் கொள்கைகள் சில இந்திய அரசியலமைப்பில் இடம் பெற்றுள்ளன.

## 1.4. தொகுப்புரை (Summary)

இந்த அலகில் மாணவர்கள் கற்றுக்கொள்ள வேண்டிய பிரதான அம்சம் ஆங்கிலேயர் விட்டுச்சென்ற முறைகளும், பிரச்சனைகளையும் பற்றி மிகத் தெளிவாக ஆய்வு செய்யப்பட்டிருக்கிறது. ஆங்கிலேயர்கள், பாமர மக்களின் நலனைப் பேணத் தவறிவிட்டனர். வறுமையைப் போக்க, பொருளாதாரத்தை வளர்க்க சமூதாயத்தை மேன்மைப்படுத்த தவறிவிட்டனர். இக்கடமைகளை ஆற்றும் பெரும் பொறுப்பை இந்தியர்களுக்கு விட்டுச்சென்றனர். மேலும், சமூகம், அரசியல் பொருளாதாரம், கல்வி, நிர்வாகம் போன்றவற்றில் சீர்திருத்தங்கள் செய்யப்பட வேண்டியதன் தேவை உணரப்பட்டது. இப்பிரச்சனைகளைத் தீர்ப்பதில் போராடி வெற்றி காண சுதந்திர இந்தியா முடிவு செய்தது. இதை நிறைவேற்ற சில அடிப்படை நோக்கங்களும், தீர்மானங்களும் தேவைப்பட்டன. இந்தப் பணியை அரசியல் நிர்ணய சபை புதிய அரசியலமைப்பை இயற்றும் போது மேற்கொண்டது.

## 1.5. முக்கிய வார்த்தைகள் (Keywords)

அ) மதமாற்றம் : ஒரு மதத்தைச் சேர்ந்த ஒருவரை அவரின் விருப்பத்திற்கு விரேதமாக வேற்று மதத்திற்கு மாறச் செய்வது மதமாற்றம் ஆகும். முகமதியர்கள் இந்திய படையெடுப்பின் போது, தன்னால் கைப்பற்றப்பட்ட நிலப்பகுதிகள் அனைத்திலும் உள்ள இந்துக்களை, முகலாய மதத்திற்கு வலுக்கட்டாயமாக இந்துக்கள் மாற்றப்பட்டனர்.

ஆ) அரசியாரின் பிரகடனம் : 1958ஆம் ஆண்டு இந்தியாவில் சிப்பாய் கலகத்திற்குப் பின்பு கிழக்கிந்திய கம்பெனியின் வசம் உள்ள இந்திய நிலப்பரப்புகள் அனைத்தையும் ஆங்கில அரசின் நேரடிப்பார்வையில் ஆட்சி புரிந்தமையை அரசியார் பிரகடனம் என்கிறோம்.

இ) மாநிலங்களின் இணைப்பு : சுதந்திரத்திற்கு பின்பு சர்தார் வல்லபாய் பட்டேல் அவர்கள், இந்தியாவுடன் இணைய மறுத்த பல சிறு சிறு குறுநிலமன்னர்களின் ஆட்சி எல்கையையும், மைசூர், ஹைதராபாத் போன்ற அரசினுடைய ஆட்சிப் பகுதியையும், ஜம்மு & காஷ்மீர் பகுதிகளையும் இந்தியாவுடன் ஒரே பகுதியாக இணைய வைத்தார். இதுவே மாநிலங்களின் இணைப்பாகும்.

ஈ) தேசிய இயக்கம் : இந்தியாவில் மக்களிடையே இருந்த தேசிய இயக்கத்தையும், தேசிய உணர்வினையும் தூண்டி ஆங்கிலேயர்களுக்கு எதிராக சுதந்திர வேட்கையை உருவாக்கிய கட்சி தேசிய இயக்கம் ஆகும்.

## 1.6. முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக் கேள்விகளுக்கான பதில்கள்: (Answers for Cyp Questions)

கேள்வி எண்.1— இந்த கேள்விக்கான விடையை பகுதி எண்.1.1.2.ல் அறிக.

கேள்வி எண்.2— இந்த கேள்விக்கான விடையை பகுதி! எண்.1.2.2.ல் அறிக

கேள்வி எண்.3— இந்த கேள்விக்கான விடையை பகுதி எண்.1.3.ல் அறிக

## 1.7. இந்த அலகு சம்பந்தப்பட்ட மேலும் படிக்க வேண்டிய நூல்கள்: (Books for Further Readings)


1. Weshlerook, D.A. She Emergence of provinicial Politics, Vikas :1976.
2. Bhambri, C.P: The Indian State: fifty years: New Delhi, Shipra, 1999
3. Basu, D.D: Am Introduction to the Costitution of India, New Delhi, Prentice Hall: 1994.
4. Singh.M.and Roy.M.P. (eds) Indian Political System: Structure, Political, development, New Delhi, Jnanda Prakasham 1995.

## 1.8. வினாக்கள் / செய்முறைப் பயிற்சிகள்: (Question and Exercise)

1. இந்திய தேசிய இயக்கம் தோன்றி வளர்த்த வரலாற்றை விவரிக்கவும்.
2. மவுண்ட்பேட்டன் திட்டம் பற்றிய அறிக்கையை கூர்ந்தாய்வு செய்க.
3. 1947ம் ஆண்ட இந்திய சதந்திரச் சட்டத்தின் சிறப்புப் பண்புகளை எடுத்துரைக்கவும்.
4. பிரிட்டிஸ் அரச இந்தியாவிற்கு அளித்துச் சென்ற அரசியல் பாரம்பரியங்கள் பற்றி ஆராய்க.
5. இந்திய மாநிலங்களின் இணைப்பில் சர்தார் வல்லபாய் பட்டேலின் பங்கினை ஆய்க.

# அலகு —2

## இந்திய அரசியலமைப்பின் சிறப்புத் தன்மைகள் : இந்தியாவில் மதச் சார்பின்மை : சமதர்மம் : இந்தியாவும் காமன்வெல்த்தும்

### முன்னுரை

ஒவ்வொரு அரசியலமைப்பும் சில சிறப்புத்தன்மைகளைப் பெற்றுள்ளது. அந்தந்த நாட்டின் அரசியல், அமையப்பெறுகின்றன இந்தியாவின் அரசியல், சமுதாயம், வரலாற்றுச் சூழல்கள் இந்திய அரசியலமைப்பில் எதிரொலிக்கின்றன. பல நல்ல அரசியல் அமைப்புகளிலிருந்து எடுக்கப்பட்ட நல்ல அம்சங்கள் பலவற்றை உள்ளடக்கியதாகத் திகழ்கிறது. இந்திய அரசியலமைப்பு உலகின் மிகப்பெரிய மக்களாட்சி நாடாகத் திகழ்கின்ற காரணத்தினால் உலக நாடுகளின் அரசியலமைப்புகளிடையே முக்கியத்துவம் வாய்ந்ததாக விளங்குகிறது. மேலை நாட்டின் மக்களாட்சிப் பண்புகளையும், ஒரு நாட்டின் பொருளாதார நிலையும் பெற்றுள்ளது. இந்திய குடியரசில் எல்லாக் குடிமக்களுக்கும் சமூக, பொருளாதார, அரசியல் நீதி உத்திரவாதம் வழங்கப்பட்டுள்ளது. சிறுபான்மையினர், மலைவாழ்மக்கள், பழங்குடியினர் மற்றும் பின் தங்கிய மக்களுக்கு தகுந்த பாதுகாப்பு அளிக்கப்பட்டுள்ளது. இந்திய நீதித்துறை சுதந்திரமாகவும் நீதிப்புனராய்வுத் தன்மையும் பெற்றது. இவ்வுலகில் கீழ்கண்ட சிறப்புத் தன்கைள் கொடுக்கப்பட்டுள்ளன.

### நோக்கங்கள் (Objectves)

இந்திய அரசியலமைப்பின் சிறப்புத்தன்மைகளைப் புரிந்துகொள்ளுதல்.
இந்திய அரசியலமைப்பின் ஆதாரங்களை உணர்தல்.
மதச்சார்பின்மைபற்றி அரசியல் தலைவர்களின் கருத்தினைக் கற்றறிதல்.
9இந்தியாவில் சமதர்மம் பற்றி தெரிந்து கொள்ளுதல் வடிவமைப்பு.

### அலகின் வடிவமைப்பு (Unit Structure)

இந்திய அரசியலமைப்பு உருவாக்கம்

அரசியலமைப்பு ஆதாரங்கள் (Sources of the Constitution)

முகவுரை (Preamble)

இந்திய அரசியலமைப்பின் சிறப்புத்தன்மைகள் (Salient Features of the Indian Constitution)

1. நீண்ட அரசியலமைப்பு (Lengthiest Constitution)
2. எழுதப்பட்ட அரசியலமைப்பு (Written constitution)

3. பாராளுமன்ற முறையிலான அரசாங்கம் (Parliamentary Form of Government)
4. கூட்டாட்சி முறை (Federal System)
5. அடிப்படை உரிமைகள் (Fundamental Rights)
6. அடிப்படை கடமைகள் (Fundamental duties)
7. அரசு வழிகாட்டி நெறிகள்(Directive Principles of State Policy)
8. சமயச்சார்பற்ற அரசு (Secular State)
9. ஒற்றைக் குடியுரிமை (Single Citizenship)
10. நீதிப்புனராய்வு (Judicial Review)
11. அரசியலமைப்பு திருத்த முறை (Procedure for Amendment of the Contitution)
12. வயது வந்தோர் வாக்குரிமை (Universal Adult Franchise)
13. நெருக்கடி நிலை (Emergency Provision)
14. காமன்வெல்த் உறவு (Common wealth Membership)

இந்தியாவில் மதச் சார்பின்மை (Secularism in India)
இந்தியாவில் சமதர்மம் (Socialism in India)
இந்தியாவில் மேற்கொள்ளப்பட்ட சமதர்ம நடவடிக்கைகள் (Measures taken for Socialism in India)
இந்தியாவும் காமன்வெல்த்தும். (India and Commonwealth)
தொகுப்புரை (Summary)
முக்கிய வார்த்தைகள் (Key words)
முன்னேற்றத்தை அறிவதற்கு தன்னிறைவுச் சோதனை (CYP)
மேலும் படிக்க வேண்டிய நூல்கள் (Books for further Reading)
வினாக்களும் / செயல்முறைகளும் Questions and Exercises

## 2.1. இந்திய அரசியலமைப்பு உருவாக்கம்

சுதந்திர இந்தியாவின் அரசியலமைப்பு அரசியல் நிர்ணய சபையினால் உருவாக்கப்பட்டது. காபினெட் தூதுக்குழுவின் திட்டத்தின்படி அரசியல் நிர்ணயசபை தேர்ந்தெடுக்கப்பட்டது. இந்திய மாநிலங்களில் சட்டசபைகளுக்கான தேர்தல்கள் நடைபெற்றன. பிறகு மாநில சட்டசபை உறுப்பினர்கள் தங்கள் மாநில மக்கள் தொகையின் அடிப்படையில் மாநிலத்திலிருந்து அரசியல் நிர்ணய சபைக்கான உறுப்பினர்களை பத்து லட்சத்திற்கு ஒருவர் வீதம் தேர்ந்தெடுத்து அனுப்பினார்கள். இது தவிர சீக்கிய உறுப்பினர்களும், முஸ்லீம் உறுப்பினர்களும் தங்கள் மக்கள் தொகையின் அடிப்படையில் அரசியல் நிர்ணய சபைக்கு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்தார்கள்.

இந்தியாவிற்குத் தேவையான அரசியல் சட்டம் ஒன்றை உருவாக்கும் பொருட்டு, அரசியல் நிர்ணய சபையின் முதல் கூட்டம் 1946 டிசம்பர்—9ல் டாக்டர். சச்சிதானந்த சின்ஹா என்பவரின் தலைமையின் கீழ் கூடியது. இக்கூட்டத்தில் டாக்டர் ராஜேந்திர பிரசாத் அரசியல் நிர்ணய சபையின் நிரந்தரத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இடைக்கால அரசின் தலைமை அமைச்சரான நேரு "குறிக்கோளடங்கிய தீர்மானம்" (Resolution with objectives) ஒன்றைக் கொண்டு வந்தார். இத்தீர்மானம் மக்களின் எண்ணங்கள், விருப்பங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்திருந்தன. இந்த தீர்மானம் விவாதத்திற்குப் பிறகு நிறைவேற்றப்பட்டது. அதன்பின் சபையின் முதல் கூட்டத் தொடர் 1946 டிசம்பர் 21—ல் முடிவடைந்தது.

சபையின் இரண்டாவது கூட்டத்தொடர் 1947 ஜனவரி 20 முதல் 26ம் தேதி வரை கூடியது. வழிப்படுத்தல் குழு (Steering Committee), சபை நடவடிக்கைகள் பற்றிய குழு, சிறுபான்மையினரைப் பற்றிய அறிவுரைக்குழு, மத்திய அரசு அதிகாரங்களைப் பற்றிய குழு போன்ற முக்கியமான குழுக்கள் ஏற்படுத்தப்பட்டன.

மூன்றாவது கூட்டத்தொடர் 1947 ஏப்ரல் 22 முதல் மார்ச் 2 வரை நடைபெற்றது. இதில் மத்திய அரசின் அதிகாரங்களைப் பற்றிய குழு அறிக்கையும், அடிப்படை உரிமை, சிறுபான்மையினரைப் பற்றிய குழுவின் அறிக்கையும் சமர்ப்பிக்கப்பட்டன. நான்காவது கூட்டத்தொடரில் மேலும் சில அறிக்கைகள் சமர்ப்பிக்கப்பட்டன. அடிப்படை உரிமைகள் பற்றிய உட்குழுவின் அறிக்கையும், உயர்நீதிமன்றத்தைப் பற்றிய அறிக்கையும் சமர்ப்பிக்கப்பட்டது. பல்வேறு அறிக்கைகள் மீது விவாதங்கள் நடைபெற்றது. நிதி உறவுகளைப் பற்றிய நிபுணர் குழுவும் அமைக்கப்பட்டது. 1947 ஏப்ரல் 22ம் தேதி இந்தியாவின் தேசியக் கொடியையும் இச்சபை முடிவு செய்தது.

1947ஆம் ஆண்டு ஆகஸ்டு 29—ல் பல்வேறு குழுக்களின் அறிக்கைகளின் அடிப்படையில் அரசியலமைப்பை வரைவதற்கான "வரைவுக்குழு" (Drafting Committee) ஒன்று டாக்டர் அம்பேத்கார் தலைமையில் அமைக்கப்படடது. அக்குழுவில் K.M.முன்ஷி T.T.கிருஷ்ணமாச்சாரி, N.கோபாலசாமி ஐயங்கார், அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர், முகமது சாதுல்லா, N.மாதவமேனன், D.P.கெய்தான் ஆகியோர் இடம் பெற்றிருந்தார்கள். "அரசியலமைப்பு வரைவு" 1948 ஜனவரியில் மக்களின் விவாதத்திற்கு விடப்பட்டது. தங்களது கருத்துக்களைக் கூற மக்களுக்கு எட்டு மாத கால அவகாசம் கொடுக்கப்பட்டது. 1948 நவம்ப

4—ம் தேதியிலிருந்து விவாதங்கள் நடைபெற்றன. மொத்தம் கொண்டுவரப்பட்ட 7635 திருத்தங்களில் 2473 திருத்தங்கள் மட்டுமே விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்டன. 1949 நவம்பர்—26ல் மூன்றாவது வாசிப்பு நிறைவுபெற்று, டாக்டர்.ராஜேந்திர பிரசாத்தின் கையொப்பத்துடன் புதிய அரசியலமைப்பு உருவாக்கப்பட்டது. அரசியலமைப்பு நிர்ணய சபையானது 2 ஆண்டுகள், 11 மாதங்கள், 18 நாட்களில் மொத்தம் 11 கூட்டத் தொடர்களை நடத்தியது. அரசியலமைப்பின் வரைவு மட்டும் 114 நாட்கள் விவாதிக்கப்பட்டது. இறுதியாக 1950 ஜனவரி 26ம் தேதி சுதந்திர இந்தியாவின் புதிய அரசியலமைப்புச் சட்டம் செயல்படத் தொடங்கியது.

## 2.1.1. அரசியலமைப்பு ஆதாரங்கள்

இந்திய அரசியலமைப்பை உருவாக்கிய நிபுணர்கள் பல சாதனைகளைச் செய்ய வேண்டியிருந்தது. பல நாடுகளின் அரசியலமைப்புக்களை ஆராய்ந்து அவைகளில் இந்திய சூழலுக்கு ஏற்ப பல மாற்றங்களைச் செய்து, இந்திய அரசியலமைப்பை உருவாக்கியுள்ளனர். ஆனால் 1935ம் ஆண்டு இந்திய அரசுச்சட்டம் தான் இந்திய அரசியலமைப்புச் சட்டத்திற்கு கருவாக அமைந்தது. ஏறத்தாழ 75% அரசியலமைப்புக் கூறுகள் 1935 ஆம் ஆண்டுச் சட்டத்தைத்தான் அடிப்படையாகக் கொண்டுள்ளது. இங்கிலாந்திலுள்ள பல அரசியலமைப்புக் கூறுகள் பின்பற்றப்பட்டன. ஆட்கொணர்வித்தல், செயலுறுத்தல், தடையுறுத்தல், நெறிமுறையுறுத்தல், தகுமுறை வினவல் போன்ற நீதிப்பேராணைகளுக்குரிய உரிமைகள் நமது அரசியலமைப்பிலும் சேர்க்கப்பட்டன. அமெரிக்க உரிமைகள் மசோதவைப் போன்று நமது அடிப்படை உரிமைகள் இந்திய அரசியலமைப்பில் உள்ளது. அயர்லாந்து அரசியலமைப்பிலிருந்து அரசு வழிகாட்டி நெறிகள் இரவல் வாங்கப்பட்டன. முகவுரை மற்றும் தலைமை நீதிமன்றம் ஆகிய கூறுகள் அமெரிக்க அரசியலமைப்பின் அடிப்படையில் அமைக்கப்பட்டன. அரசியல் திருத்தமுறை ஜெர்மானிய வெய்மர் அரசைப் பின்பற்றிச் சேர்க்கப்பட்டன.

பல்வேறு அரசியலமைப்பு முறைகள் நமது இந்திய அரசியலமைப்பிற்கு ஆதாரங்களாக உள்ளன. 1976ல் 42வது அரசியலமைப்புத் திருத்தத்தின் வாயிலாக இந்திய அரசியலமைப்பில் சேர்க்கப்பட்ட அடிப்படைக் கடமைகள் சோவியத் யூனியனின் அரசியலமைப்பைப் பின்பற்றி உருவாகின. பல்வேறு அரசியலமைப்புகள் பின்பற்றப்பட்ட காரணத்தால் இந்திய அரசியலமைப்பை ஓர் இரவல் பை (A Bage of Borrowing) எனக் குறிப்பிடுவர். அரசியலமைப்புகள் மட்டுமின்றி, அரசியல் நிர்ணய சபையின் விவாதங்கள், ஐவர்

ஜென்னிங்சு, D.D. பாசு போன்றோரின் அரசியலமைப்பு பற்றிய நூல்களும் ஆதாரங்களாகத் திகழ்கின்றன.

1935 ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்ட இந்திய அரசாங்கச் சட்டம் இந்திய அரசியலமைப்பை உருவாக்கிய இந்த ஏழு பிரமுகர்களை மிகவும் கவர்ந்தது. தற்போதுள்ள விதி 251 இந்திய அரசாங்கச் சட்டத்தின் விதி 107ஐத் தழுவியுள்ளது. மேலும் கூட்டாட்சித் தன்மை, மத்திய மாநில உறவுகள், மூன்று அதிகாரப் பட்டியல்கள், நெருக்கடி நிலைப் பிரகடனம் போன்ற அம்சங்கள் மேற்குறிப்பிட்ட 1935 ஆம் ஆண்டு சட்டத்தை ஆதாரமாகக் கொண்டுள்ளன.

### இந்திய அரசியலமைப்பின் ஆதாரங்கள்

| வ.எண்: | அம்சங்கள் | | ஆதாரமான நாடுகள் |
|---|---|---|---|
| 1. | பாராளுமன்ற முறை, சட்டமியற்றும் முறை, ஒற்றைக்குடியுரிமை குடியரசுத் தலைவர் ஒரு பெயரளவுத் தலைவர் | — | இங்கிலாந்து |
| 2. | அடிப்படை உரிமைகள், துணைக் குடியரசுத் தலைவர், உச்சநீதிமன்ற அதிகாரங்கள், நீதிப்புனராய்வு | — | அமெரிக்க ஐக்கிய நாடுகள் |
| 3. | கூட்டாட்சி அமைப்பு மற்றும் இந்திய அரசாங்கச் சட்டம் 1935 | — | கனடா |
| 4. | அரசுக்கான நெறிமுறைக் கோட்பாடு ஜனாதிபதியைத் தேர்ந்தெடுக்கும் முறை | — | அயர்லாந்து |
| 5. | நெருக்கடி நிலைப் பிரகடனம | — | ஜெர்மனி |
| 6. | அடிப்படைக் கடமைகள் | — | முந்தைய ஐக்கிய சோவியத் சோசலிசக் குடியரசு (USSR) |
| 7. | குடியரசு | — | பிரான்ஸ் |
| 8. | பொதுப்பட்டியல், முகப்புரையின்மொழி அதிகாரப்பங்கீடு | — | ஆஸ்திரேலியா |
| 9. | அரசியலமைப்புத் திருத்த முறை | — | தென்னாப்பிரிக்கா |
| 10. | சட்டத்தின் ஆட்சி | — | ஜப்பான் |

## 2.1.2. சிறப்பான முகப்புரை

ஒன்றுபட்ட இந்தியா என்ற அடிப்படைத் தத்துவத்தை இலட்சியமாகக் கொண்டு அறிஞர்கள் பலரால் புடமிடப்பட்டு வார்ப்படம் செய்யப்பட்டதே இந்திய அரசிலயமைப்புச் சாசனம். இந்தியா அனைத்து அதிகாரங்களையும் பெற்ற ஒரு ஜனநாயக, சோஷலிச மதச் சார்பற்ற நாடு என்று முகப்புரையில் கூறப்பட்டுள்ளது. இதில் சோஷலிச, மதச்சார்பற்ற ஆகிய வார்த்தைகள் 42—வது அரசியலமைப்பு திருத்தத்தின் படி 1976ல் சேர்க்கப்பட்டது.

“இந்திய மக்களாகிய நாம் இந்தியாவை இறைமை அதிகாரமுள்ள மக்களாட்சிக் குடியரசாக நிறுவ உளமார உறுதி கூறுகிறோம்”

“நாட்டின் குடிகளுக்கெல்லாம் சமூக, பொருளாதார, அரசியல் நீதியையும், எண்ணம், பேச்சு, கோட்பாடு, மதம், வழிபாடு ஆகியவற்றில் முழு உரிமையையும்”,

“வாழ்க்கை நிலையிலும் வாய்ப்புகளிலும் சமத்துவத்தையும் பெற்றுத்தர விழைவதுடன்”

“அவர்களிடையே சகோதரப்பண்பை வளர்த்து தனிமனிதனது உயர் தகுதியையும், நாட்டின் ஒற்றுமையையும் நிலைநாட்டுவதாக உறுதி கூறுகிறோம்”.

இந்த முகப்புரை அரசியலமைப்பை உருவாக்கியவர்களின் உள்ளக்கிடக்கையையும், நோக்கத்தையும் தெளிவாகக் காட்டுகிறது. இந்திய மக்களாகிய நாம் என்ற வார்த்தை அரசியலமைப்பின் உண்மையான ஆற்றலும், அதிகாரமும் (இறைமை) மக்களிடம் இருப்பதை உணர்த்துகிறது. சமூக, பொருளாதார சமத்துவமும், நீதியும் அரசாங்கங்களின் குறிக்கோளாக இருக்க வேண்டும் என்பதை உணர்த்துகிறது. எனவே இந்த முகப்புரையே அரசியலமைப்பின் அடிப்படையாக அமைந்துள்ளது.

## 2.2. இந்திய அரசியலமைப்பின் சிறப்புத் தன்மைகள்

### 1) நீண்ட அரசியலமைப்பு

இந்திய அரசியலமைப்பு உலகின் மற்ற அரசியலமைப்புகளை விட நீளமானது, விரிவானது, இது 395 விதிகளையும், 8 அட்டவணைகளையும், 22 பகுதிகளையும் கொண்டுள்ளது. 9—வது அட்டவணை 1951 முதல் சட்டத்திருத்தத்தின் போது சேர்க்கப்பட்டது. 10—வது அட்டவணை 1985ல் 52வது அரசியல் சட்டத்திருத்தத்தின்படி சேர்க்கப்பட்டது. 11—வது அட்டவணை 1993ம் வருடம் 73வது அரசியலமைப்புத் திருத்தத்தின்படியும், 12—வது அட்டவணை 1993ல்

74வது திருத்தத்தின்படியும் அரசியலமைப்பில் இணைக்கப்பட்டுள்ளன. அரசியலமைப்ப பின்னீடு 448 விதிகளாகவும் 12 அட்டவனைகளாகவும் 24 பகுதிகளாகவும் பெருகிவிட்டன. தற்போது இந்திய அரசியலமைப்பு விரிவாக இருப்பதற்குக் காரணம், இதில் மத்திய அரசு, மாநில அரசுகள், மத்திய நேரடி ஆட்சிக்குட்பட்ட பகுதிகளின் அமைப்பு அதிகாரங்களும் விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளதே காரணம். ஆட்சித்துறையைப் பற்றிய பகுதிகளும் இணைக்கப்பட்டுள்ளது. இந்தியாவில் பல்வேறு பின்தங்கிய வகுப்பினர்களக்கு கொடுக்கப்பட்டுள்ள சலுகைகள், அடிப்படை உரிமைகள், கடமைகள், வழிகாட்டி நெறிகள் ஆகியவை இடம் பெற்றுள்ளன. பல மதத்தினர், இனத்தவர் பல்வேறு மொழிகள், சிறுபான்மையினர் அதிகாரப் பங்கீடு போன்றவைகள் பற்றியும் விரிவாகத் தரப்பட்டுள்ளது. எனவே தான் இந்திய அரசியலமைப்பு மிக நீளமாகக் காணப்படுகிறது.

2) எழுதப்பட்ட அரசியலமைப்பு

இந்திய அரசியலமைப்பானது ஒரு எழுதப்பட்ட அரசியலமைப்பாகும். ஒரு கூட்டாட்சி நாட்டிற்கான முதல் தகுதி, அந்த நாட்டின் அரசியலமைப்பு எழுதப்பட்டிருக்க வேண்டும். நமது நாட்டின் அரசியலமைப்பு "அரசியலமைப்பு நிர்ணய சபை"யால் விவாதிக்கப்பட்டு, எழுதப்பட்டு ஒரு ஆவணமாக உள்ளது. எனவே இது புனிதமாகக் கருதப்படுகிறது. மத்திய மாநில அரசுகளுக்கிடையிலான அதிகாரப்பங்கீடு மிகவும் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. அரசாங்கத்தின் ஒவ்வொரு அமைப்புகளும் அவற்றின் செயல்பாடுகளும் விரிவாக எழுதப்பட்டுள்ளன.

3) பாராளுமன்ற முறையிலான அரசாங்கம்

இந்திய அரசியலமைப்பின் அடுத்த சிறப்புத்தன்மை, அது மத்தியிலும் மாநிலங்களிலும் பாராளுமன்ற முறையிலான அரசாங்கங்கள் அமைவதற்கு வழி வகை செய்துள்ளதேயாகும். இதற்குக் காரணம் ஆங்கில ஆட்சியின் போது ஆங்கிலப் பாராளுமன்ற முறையைப் பற்றி இந்தியர்கள் நன்றாக அறிந்து கொண்டதேயாகும். ஜனாதிபதியும், மக்களவை, மக்கள் மேலவை மாநிலங்களவை, என்ற இரு சபைகள் அடங்கிய பாராளுமன்றமுமே சட்டமியற்றும் அதிகாரம் படைத்துள்ளது. மக்களவை உறுப்பினர்களின் எண்ணிக்கை 545க்கு அதிகப்படாமல் இருக்க வேண்டும். இவர்களில் 535 பேர் மாநிலங்களிலிருந்தும் 8பேர் யூனியன் பிரதேசங்களிலிருந்தும் மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுவர். இரண்டு ஆங்கிலோ இந்தியர்களை குடியரசுத்தலைவர் நியமனம் செய்வார். இதன் ஆயுட்காலம் ஐந்து ஆண்டுகள் ஆகும். ராஜ்ய சபையில் மாநில சட்டமன்றங்களால் தேர்வு

செய்யப்பட்ட 238 உறுப்பினர்களும், ஜனாதிபதியால் நியமனம் செய்யப்பட்ட 12 உறுப்பினர்களும் உண்டு.

இந்த பாராளுமன்றமே உண்மையான ஆட்சித்துறையாக செயல்படுகிறது. நாட்டின் பிரதம மந்திரியும், அவரது அமைச்சரவையின் பிற உறுப்பினர்களும் பாராளுமன்றத்திலிருந்தே நியமனம் பெறுகிறார்கள். இவர்கள் பாராளுமன்றத்திற்குப் பொறுப்பு உடையவர்கள். பாராளுமன்றத்தின் நம்பிக்கை இருந்தால் தான் இவர்கள் ஆட்சியில் தொடர்ந்து செயல்படமுடியும்.

**4. கூட்டாட்சி முறை:**

இந்திய அரசியலமைப்பின் முதலாம் பிரிவில் இந்தியா மாநிலங்களின் ஒன்றியம் (Union of States) என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் நடைமுறையில் அது ஒரு கூட்டாட்சி அரசாவே செயல்படுகிறது. கூட்டாட்சி அரசியலமைப்புக்குத் தேவையான மூன்று தன்மைகளும் இந்திய அரசியலமைப்பில் காணப்படுகின்றன. முதலாவது, மத்திய அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கங்களுக்கும் இடையிலான அதிகாரங்கள், மத்திய அரசு பட்டியல், மாநில அரசுபட்டியல், பொது அதிகாரப்பட்டியல் என்று மூன்று பிரிவாக தெளிவாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இரண்டாவதாக அரசியலமைப்பின் மேலாண்மை காணப்படுகிறது. எழுதப்பட்ட அரசியலமைப்பாகவும் உள்ளதால் அரசியலமைப்பைத் திருத்துவது சிறிது கஷ்டமானதாகவும் உள்ளது. கூட்டாட்சியின் மூன்றாவது அம்சமான நீதிமன்றத்தின் மேன்மையும் காணப்படுகிறது. அரசியலமைப்பின்படி சுதந்திரமாகச் செயல்படும் நீதிமன்றங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவ்வாறு கூட்டாட்சி முறை பண்புகள் காணப்படுகின்றன. ஆனால் ஒற்றையாட்சிப் பண்புகளும் அதிகமாகக் காணப்படுகிறது. எனவேதான், இந்திய அரசியலமைப்பு ஒரு அறைகுறையான கூட்டாட்சி (Quasi – Federation) அரசியலமைப்பு என்று கூறப்படுகிறது.

முன்னேற்றத்தை அறிவதற்குகான தன்னறிவுச் சோதனை கேள்விகள்

1. இந்திய வரைவுக்குழு பற்றி ஒரு கட்டுரை எழுதுக.

2. இந்திய அரசியலமைப்பில் ஆதாரங்களை எடுத்துரைக்கவும்.

3. ஒன்றிய பிரதேசங்களின் நிலைப்பாடுப்பற்றி கட்டுரை வரைக.

**5. அடிப்படை உரிமைகள் (Art 14—30)**

மக்களின் நல்வாழ்வுக்குத் தேவையான உரிமைகள் அடிப்படை உரிமைகள் என அழைக்கப்படுகிறது. இந்திய அரசிலயமைப்பின் மூன்றாவது பாகத்தில் அடிப்படை உரிமைகள் பற்றிக் கூறப்பட்டுள்ளது. மக்களின் அடிப்படை உரிமைகள் பின்வருவன.

- சமத்துவ உரிமை (Right to Equality) (Articles 14-18)
- சுதந்திர உரிமை (Right to Freedom) (Art-19-22)

➢ சுரண்டலுக்கெதிரானஉரிமை
(Right Against Exploitation -Art-23-24)
➢ அரசியலமைப்புக்குட்பட்டுப் பரிகாரம் தேடும் உரிமை (Right Constitutiional Remedis) (Art-32)
➢ பண்பாடு மற்றும் கல்விக்கான உரிமை (Cultural and Educational Rights) (Art-29-30)

## 6. அடிப்படைக் கடமைகள் (Fundamental Duties)

42வது அரசியல் திருத்தச் சட்டம் 1976 டிசம்பர் 18ல் பாகம் IV-A அடிப்படை கடமைகள் கொண்டு வரப்பட்டது. இதன்படி இந்திய மக்களுக்குப் பத்து அடிப்படைக் கடமைகள் சேர்க்கப்பட்டுள்ளன. ஆனால் 2000ஆம் ஆண்டு கொண்டுவரப்பட்ட 86—வது அரசியல் திருத்தம் 11—வது அடிப்படைக்கடமைகளை வழங்கியுள்ளது அரசியலமைப்பின் விதி எண்.51—A அடிப்படைக்கடமைகளை பற்றி கூறுகிறது.

❖ அரசியலமைப்பை அங்கீகரித்தல், தேசியகீதம் தேசியக்கொடி போன்றவற்றிற்கு மரியாதை அளித்தல்
❖ இந்திய ஒருமைப்பாட்டைப் பாதுகாத்தல்
❖ சகோதரத்துவ உணர்வுகளைப் பரப்புதல்
❖ விடுதலைப் போராட்டத்தின் போது ஏற்றுக்கொண்ட உன்னத இலட்சியங்களைப் பேணுதல்
❖ தேசிய நலனுக்கு முன்னுரிமை கொடுத்தல்.
❖ இந்திக் கலாச்சாரத்தைப் பேணுதல்
❖ சுற்றுப்புறச் சூழலைப் பாதுகாத்தல்
❖ தொழில், விஞ்ஞான, விவசாய ஆராய்ச்சிகளில் பங்கு பெறுதல்
❖ பொதுச்சொத்துக்களைப் பாதுகாத்தல் மற்றும் வன்முறையைத் தவிர்த்தல்
❖ எல்லாக்கடமைகளையும் அக்கறையுடன் நிறைவேற்றுதல்
❖ 6 வயது முதுல் 14 வயதுவரை கட்டாயக் கல்வி அளித்தல்

## 7. அரசு வழிகாட்டி நெறிகள் (Part IV – Article 36-51)

நான்காவது பாகத்தில் அரசு வழிகாட்டி நெறிகள் உள்ளன. மத்திய அரசும், மாநில அரசுகளும் தங்கள் கொள்கைகளையும், சட்டங்களையும் உருவாக்கும் பொழுது இந்த நெறிகளைப் பின்பற்ற வேண்டும். மக்கள் நல அரசு (Welfare State) எனும் இலக்கை அடைய அரசு பின்பற்ற வேண்டிய வழிகளைச் சுட்டிக்காட்டுகின்றன. மக்களின்

சமூக, பொருளாதார முன்னேற்றத்திற்கான கொள்கைகளையும், காந்தியக் கொள்கைகளையும், அரசு வழிகாட்டு நெறிகள் கொண்டுள்ளன. ஆனால் இவைகளைக் கட்டாயமாக அரசுகள் நிறைவேற்ற வேண்டும் என்று அவசியமில்லை. இக்கொள்கைகளைத் தார்மீக் கடமை எனலாம்.

8. சமயச் சார்பற்ற அரசு

சமயச்சார்பற்ற அரசு இந்திய அரசியலமைப்பின் மிக முக்கியச் சிறப்பியல்பாகும். இந்தியா பல்வேறு மதங்களையுடைய நாடு. எனவே 42வது அரசியலமைப்புத் திருத்தத்தின் படி முகவுரையில் "சமதர்ம" "சமய சார்பற்ற" என்ற இரண்டு வார்த்தைகள் சேர்க்கப்பட்டன. எந்தச் சமயத்தையும் அரசு அங்கீகரிப்பதில்லை. ஆனால் குடிமக்கள், தான் விரும்பும் எந்த மத்தையும் பின்பற்ற உரிமையுண்டு. அரசாங்கத்திற்கென்று எந்தச் சமயமும் இல்லை. எனவே இந்திய அரசு சமயச்சார்பற்ற அரசாகும்.

9. ஒற்றைக் குடியுரிமை

கனடா, அமெரிக்கா போன்ற நாடுகளில் இரட்டைக் குடியுரிமை வழங்கப்பட்டுள்ளது. ஆனால் இந்திய மக்கள் எங்கு வாழ்ந்தாலும் அவர்கள் இந்தியக் குடிமக்களே. அவர்கள் வாழும் மாநிலத்தின் குடியுரிமை பெற்றவர் எனக் கருத இயலாது. இமயம் முதல் குமரி வரை வாழும் அனைவரும் இந்தியக் குடிமக்கள் என 1955ம் ஆண்டு இயற்றப்பட்ட குடியுரிமைச்சட்டம் உத்திரவாதம் வழங்கியுள்ளது. இந்திய பாராளுமன்றத்தில் இயற்றப்பட்ட இரட்டைக் குடியுரிமைச்சட்டம் 12.02.2003—ம் ஆண்டு நடைமுறைக்கு வந்துது. அயல் நாட்டில் குடியிருக்கம் வெளிநாடுவாழ் இந்தியர்களுக்கு மட்டும் பொருந்தும். ஆனால் அவர்கள் தேர்தலில் போட்டியிட, வாக்களிக்க, வேலை வாய்ப்பு பெற தகுதியற்றவர்கள். அதாவது அமெரிக்கா, பிரிட்டன், கனடா, ஆஸ்திரேலியா, பின்லாந்து, ஐயர்லாந்து, சைவிரஸ், ஸவீடன், சுவிட்சர்லாந்து, பிரான்சு, கிரீஸ் மற்றும் போர்ச்சுகல் போன்ற நாடுகளில் வசிக்கும் வெளிநாடு வாழ் இந்திய மக்களுக்கு மட்டும் இரட்டை குடியுரிமை வழங்கப்பட்டுள்ளது.

10. நீதிப்புனராய்வு

நமது அரசியலமைப்பின் மற்றொரு முக்கிய இயல்பு சுதந்திரமான நீதித்துறையாகும். உச்ச நீதிமன்றம் மற்றும் மாநில நீதிமன்றம் நீதிப்புனராய்வு அதிகாரத்தைப் பெற்றுள்ளன. நிர்வாகத்துறையின் செயல்பாடுகளும், பாராளுமன்றம் மற்றும் மாநிலச் சட்டசபைகள் இயற்றும் சட்டங்களும் அரசியலமைப்புச் சட்டத்திற்கு இசைவாக உள்ளதா இல்லையா எனப் புனராய்வு செய்யும் அதிகாரம் நீதித்துறைக்கு உள்ளது.

அரசியலமைப்பிற்கு முரணானதாக இருப்பின் சட்டங்கள் செல்லாது எனத் தீர்ப்பளித்துத் தடை விதிக்க நீதித்துறைக்கு அதிகாரம் உண்டு. மக்களையும் அரசியலமைப்பையும் கட்டிக் காக்கும் காவலனாக நீதித்துறை செயல்படுகிறது.

## 11. அரசியலமைப்புத் திருத்த முறை

இந்திய அரசியலமைப்பு நெகிழும் மற்றும் நெகிழாத்தன்மைகளைப் பெற்றுள்ளது. இந்திய அரசியலமைப்பைத் திருத்துவது கடினமுமல்ல, எளிதுமல்ல. இந்திய அரசியலமைப்பைத் திருத்த இரண்டு வழிகள் உள்ளன.அவை:

1. அரசியலமைப்பிலுள்ள சில சாதாரண விதிகளைப் பாராளுமன்றத்தின் பெரும்பான்மை ஆதரவுடன் திருத்தலாம்.

2. குடியரசுத்தலைவரின் தேர்தல் முறை அதிகாரங்கள், நீதிமன்றங்கள், பாராளுமன்றத்தில் மாநிலங்களின் பிரதிநிதித்துவம் போன்றவைகளைத் திருத்த வேண்டுமெனில் இரு சபைகளின் மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கையில் பெரும்பான்மை ஆதரவு தேவை அத்துடன் பாதி மாநிலங்களின் ஒப்புதலும் தேவையாகும். ஆனால் இதுவரை 104 அரசியலமைப்புத் திருத்தங்களையும் 12 அட்டவனைகளையும் 24 பகுதிகளையும் கொண்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## 12. நெருக்கடி நிலை

இந்திய அரசியலமைப்பு குடியரசுத் தலைவருக்கு நெருக்கடி நிலைப் பிரகடனம் செய்ய அதிகாரம் வழங்கியுள்ளது. குறிப்பிட்ட மாநிலங்களில் சட்டம் ஒழுங்கு நிலைநாட்டப்படவில்லையெனில் அவசரநிலைப் பிரகடனம் செய்யப்படுகிறது. நெருக்கடி நிலைப் பிரகடனத்தின் போது குடியரசுத் தலைவருக்கு அதிக அதிகாரம் உண்டு. மேலும் நிதிநிலை மோசமடையும் பட்சத்தில் நெருக்கடி நிலைப் பிரகடனம் செய்யப்படலாம்.

## 13. காமன்வெல்த் உறவு

இந்தியா சுதந்திரம் பெற்ற பிறகு 1950 ஜனவரி 26ம் தேதி குடியரசான பிறகும் காமன்வெல்த் அமைப்பில் உறுப்பினராக இருந்து வருகிறது. காமன்வெல்த் அமைப்பு என்பது, முன்பு ஆங்கிலப் பேரரசில் அடிமை நாடுகளாக இருந்து பிறகு சுதந்திரம் பெற்ற நாடுகள் தங்களது பழைய தொடர்புகளைத் துண்டித்துக்கொள்ளாமல் இங்கிலாந்துடன்

அடிக்கடி கலந்தாலோசித்துக் கொள்ளும் ஒரு அமைப்பு என்று கூறலாம். இந்தியாவின் வேண்டுகோளுக்கு இணங்க பிரிட்டிஷ் காமன்வெல்த் என்ற பெயர் "காமன் வெல்த் நாடுகளின் அமைப்பு" என்று மாற்றப்பட்டது. இதன்படி நாம் இங்கிலாந்தின் அரசியை காமன் வெல்த்தின் தலைவியாக ஏற்கிறோம். காமன்வெல்த்தில் நாமாக விரும்பியே அங்கம் வகிப்பதால், அது நம் சுதந்திரத்தையோ, இறைமையையோ எந்த விதத்திலும் பாதிப்பது ஆகாது. நம்முடைய காமன்வெல்த் உறவுகள் நாம் அரசியல், பொருளாதார, சமுதாயத்துறைகளில் முன்னேற்றமடைய பெரிதும் உதவுகின்றன.

14. வயதுவந்தோருக்கு வாக்குரிமை

அரசியலமைப்பின் 326வது விதி நிறம், இனம், மொழி மத வேறுபாடுகள் எதுவும் இல்லாமல் 21 வயது நிரம்பிய ஆண், பெண் அனைவருக்கும் வாக்குரிமை வழங்கியது. 1989 ஜனவரியில் நிறைவேற்றப்பட்ட 61வது அரசியலமைப்புத் திருத்தத்தின் மூலம் இந்த வயது வரம்பு 18ஆகக் குறைக்கப்பட்டது. இதன்படி இந்தியாவில் கோடிக்கணக்கானவர்கள் வாக்குரிமை பெற்றார்கள். 2004ம் ஆண்டு நடந்த பொதுத்தேர்தலில் 63 கோடி வாக்காளர்கள் ஓட்டுப்போட தகுதிபெற்றனர். இதுவரை நடந்த பொதுத்தேர்தல்கள் வெற்றிகரமாக நடந்திருப்பதிலிருந்து அரசியலமைப்பு மீது மக்கள் வைத்துள்ள நம்பிக்கை வீண் போகவில்லை என்றே கூறவேண்டும்.

## 2.2.1. இந்தியாவில் மதச்சார்பின்மை

இந்தியாவைப் பொறுத்தமட்டில் இங்குள்ள மக்களிடையே பலதரப்பட்ட சமயப்பிரிவுகள் காணப்படுகின்றன. இங்குள்ள மக்கள் பல் வேறுபட்ட நம்பிக்கைகளையும் மாறுபட்ட பலசமயப் பின்னணிகளையும் கொண்டவர்களாக விளங்குகின்றனர். அத்துடன் உலகில் வேறெங்கிலும் இல்லாத வகையில் பல்லாண்டு காலமாக, சமயக் கருத்துக்கள் அவர்களுடைய வாழ்க்கையில் இரண்டறப் பின்னிப் பிணைக்கப்பட்டுள்ளது. இத்தகைய சூழ்நிலையில் மதச் சார்பின்மை, இந்தியாவிற்கு மிகவும் இன்றியமையாத தேவையாக விளங்கியது. இந்தியாவிற்கும் மேலை நாடுகளுக்குமிடையே இருந்த தொடர்பின் விளைவாக, அதுவரை மேலைநாடுகளில் மட்டுமே காணப்பட்ட மதச்சார்பின்மை வேட்கை இந்தியாவையும் பற்றியது.

பின்னர் ஆங்கிலேயரின் ஆட்சிக்காலத்தில் இஸ்லாம் ஆட்சிப் பீடத்திலிருந்து அகற்றப்பட்ட பொழுது நிர்வாகப் படிநிலைகளில் இந்துக்கள் தங்களுக்கு பல பதவிகளும் செல்வாக்கும் இல்லாதிருந்ததைக் கண்டனர்.

இந்நிலையைச் சீக்கியர்கள் போன்ற பிற சிறுபான்மை மதத்தினரும் அறிந்த பொழுது அச்சலுகைகளைத் தாங்களும் அடையவிரும்பி தங்களைத் தனிப்பட்ட ஒரு அரசியல் கூறு என்று அரசாங்கம் அங்கீகரிக்க வேண்டும் என்று குரலெழுப்பினர். இதன் விளைவாக நாட்டில் ஒன்றிற்கொன்று பகையுள்ள ஒன்றையொன்று சந்தேகிக்கக் கூடிய பல இனப்பிரிவுகளும், இனத்தலைமைகளும் தோன்றின. இக்காலக்கட்டத்தில் ஏராளமான மக்கள் கிறிஸ்தவ மதத்தைத் தழுவ முற்பட்டதும், இந்து மதத்திற்கு மலர்ச்சியூட்டும் வகையில் இந்திய தேசீய காங்கிரஸ் செயல்பட முற்பட்டதும், இவை எல்லாவற்றிற்கும் மேலாக ஜாதிப்பிரிவுகளால் சிதறுண்டு காணப்பட்ட இந்தச் சமுதாயம் ஆங்கிலேயர்கள் இந்திய அரசியலில் புகுந்து விளையாடுவதற்கேற்ற சமூக மற்றும் அரசியல் சூழ்நிலைகளை உருவாக்கிக் கொடுத்தன. இவ்வாறு இந்தியச் சமுதாயமானது, தன்னிடையே காணப்படும் மதம் மற்றும் ஜாதியப் பிரிவுகளை மனதிற்கொண்டே எப்பொழுதும் செயல்படுவதால் அது ஒரு மூடிய அமைப்பாகவே திகழ்ந்தது. எனவே, அங்கு ஒரு சில முற்போக்குக் கருத்துக்கள் புகுத்தப்பட்டபொழுது, அது அவைகளைத் தன்னுடன் இணைத்துக்கொள்ளாதது ஒரு இயற்கையான நிகழ்ச்சியே ஆகும். இருப்பினும், அது மதச்சார்பின்மை போன்ற கருத்துக்களை ஏற்கத் தலைப்பட்ட பொழுது அக்கருத்துக்கள் இந்திய சமுதாய அமைப்பிற்கும் பொருந்துமாறு மாற்றி அமைக்கப்பட்டு, அவைகளுக்குப், புது விளக்கங்களும் கொடுக்கப்பட்டன. ஒரு நாட்டின் சமுதாய மட்டத்தில் மதச் சார்பின்மைப் பண்புகள் காணப்படாத போது, அந்நாட்டின் அரசு மதச்சார்பற்றது என்று கருத முடியாது. எனவே, இந்திய மக்களை மதச்சார்பற்றவர்களாகச் செய்ய வேண்டிய பெரும் பணி அரசின் பொறுப்பின் கீழ் வந்தது. ஆனால் இக்கடமையைச் செய்வதற்கு அரசு இம்மியளவும் பொருத்தமற்ற ஒரு செயற்கருவி என்பது கண்டு குறிப்பிடத்தக்கது. எனவே இதனை அடிப்படையாகக் கொண்டு தான், நாம் இந்தியாவின் மதச்சார்பின்மை பற்றிய பிரச்சனைகளை நோக்கவேண்டும். மதச்சார்பின்மை என்ற சொல்லுக்குப் பலர் பல காலங்களில் பலவிதமாகப் பொருள் கூறியுள்ளார்கள். சமயச் சமத்துவம், பாகுபாட்டுடன் நடத்தப்படாமை, சிறுபான்மையோருக்கு சமயச் சலுகைகள் அளிப்பது, சகிப்புத்தன்மை ஆகியவைகளுடன் நாத்திகம் என்ற பொருளிலும் மதச்சார்பின்மை என்ற வார்த்தை பயன்படுத்தப்பட்டிருக்கிறது. மதச்சார்பற்ற நாடு என்றால் சமயங்களுக்கெதிரான ஒரு நாடு என்று பொருள் அல்ல. எந்த ஒரு சமயத்தையும் சாராத அல்லது எந்த ஒரு சமயத்திற்கும் தன்னுடைய ஆதரவைத்தராத நாடு என்பதே அதன் சரியான பொருள் ஆகும்.

### (அ) அரசியல் நிர்ணய சபையின் கருத்து

இதுபற்றி அரசியல் நிர்ணய சபையில் விவாதம் நடந்தபொழுது, மதச்சார்ப்பின்மைப் பண்பை, இந்தியச் சமுதாயத்தில் வன்முறைகள்

மிகுந்து காணப்பட்ட ஒரு சூழ்நிலையைச் சமாளிக்கவல்ல ஒரு அருமருந்தாகவே இந்திய அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் கருதினார்கள். எனவே ஒரு மதச்சார்பற்ற அரசை நிறுவும் எண்ணத்தில் தான் அவர்கள், அதில் மத, இன அடிப்படைகளில் யாருக்கும் பாரபட்சங்கள் காட்டப்படாமலிருக்கவும் மதம், நம்பிக்கை மற்றும் வழிபாட்டு உரிமைகள் அனைவருக்கும் கிடைக்கவும் வழிவகைகள் செய்திருந்தனர்.

(ஆ) "மதச் சார்பின்மை" பலவாறாக விமர்சிக்கப்பட்டாலும், இந்தியாவில் அப்பண்பும் ஒரு இலட்சியக் கோட்பாடாக மதித்தேற்கப்பட்டதுடன், அதற்கு ஒரு மாபெரும் வரவேற்பும் நல்கப்பட்டது. மதச்சார்பற்ற அரசை உருவாக்குவதில் ஒரு பெரும் வெற்றி வீரராகத் திகழ்ந்த நேரு மதச் சம்பந்தமான விவகாரங்கள் அரசியலில் குறுக்கிடுவதைப் பெரிதும் வெறுத்தார். சாதிப் பிரிவுகளால் தாக்கப்பட்டிருக்கும் இந்திய சமுதாயத்தை மாற்றி எல்லா மதத்தினரும், அவர்களுடைய கருத்துக்களும் இணைந்து ஒரு மதச்சார்பற்ற தேசிய அரசை நிறுவ அவர் பேராவல் கொண்டிருந்தார். அரசியல் கலக்கப்பட்ட மதம் நன்மை பயக்காது என்பது அவரது திண்ணமான எண்ணமாகும்.

இதனாலேயே 42—வது அரசியல் திருத்தத்தின் மூலம் நாம் அரசியலமைப்பின் முன்னுரையில் ஒரு புதிய கோட்பாடாகப் புகுத்தப்பட்ட "மதச்சார்பின்மை" என்ற சொற்றொடர் எந்த ஒரு புதிய முக்கியத்துவம் வாய்ந்த சாதனையையும் நிகழ்த்தி விட்டதாகக் கருதமுடியாது.

### 2.2.2. இந்தியாவில் சமதர்மம்

நம் நாட்டின் சுதந்திரப்போராட்டக் காலங்களிலேயே சமதர்மச் சிந்தனைகள் பல தோன்றலாயின. இந்தியாவின் சொத்துக்கள் இங்கிலாந்திற்குச் சுரண்டிக் கொண்டு செல்லப்பட்டதே இந்தியாவின் வறுமைச் சூழலுக்கு முக்கியக் காரணம் என்று தாதாபாய் நெளரோஜி போன்ற அறிஞர்கள் கருத்துத் தெரிவித்தனர். பொதுவாக இங்கிலாந்தின் ஏகாதிபத்தியம் இச்சுரண்டல் கோட்பாட்டின் அடிப்படையிலேயே ஆராயப்பட்டது. தனி மனித உடைமைத்துவம் சார்ந்த அரசு தலையிடாக் கொள்கைக் கோட்பாட்டினை எம்.ஜி ரானடே, டேலங்கு போன்ற தலைவர்கள் வெகுவாக விமர்சித்தனர். இந்தியாவின் பொருளாதார நிலையை முன்னேற்றும் வகையில் சுறுசுறுப்புடன் செயலாற்றும் முற்போக்கான எண்ணங்கொண்ட ஒரு அரசாங்கமே இந்தியாவிற்கேற்றது என அவ்வறிஞர்கள் கருதினர். மேலும், வாணிபத் துறையிலுள்ள நல்ல பண்புகளைத் தக்க வைத்துக்கொண்டு பொருத்தமற்ற, அறிவுக்கொவ்வாத, நாட்டிற்குக்கேடு விளைவிக்கும் வகையில் அதனுடன்

இணைந்திருக்கும் மற்ற பண்புகளைக் களையும் வகையில் அரசு தலையிட்டுக் கட்டுப்படுத்த வேண்டும் என்று கூறினர்.

எனினும், 1917ஆம் ஆண்டைய ரஷ்யப் புரட்சிக்குப் பின்னரே இந்தியாவில் சமதர்மக் கொள்கைகளின் மீது அதிகக் கவனம் செலுத்தப்பட்டது. 1920ஆம் ஆண்டின் தொடக்கம் தொட்டு இந்தியர்களிடையே பல தெளிவற்ற சமதர்ம மற்றும் பொதுவுடைமைக் கருத்துக்கள் பரவத் தொடங்கின. "திட்டமிடுதல்" என்ற புதிய கருத்து இந்தியர்களிடையே மிகுந்த செல்வாக்கைப் பெற்றிருந்தது. பண்டித நேரு மற்றும் சுபாஷ் சந்திர போஸ் போன்றவர்கள் தங்களைச் சமதர்மவாதிகள் என்று கூறிக்கொண்டனர். தொழில் மையப்படுத்தலும், திட்டமிடுதலும் இந்தியாவிற்கு இன்றியமையாதது என்பதில் நேரு திடமான எண்ணம் கொண்டிருந்தார். நாட்டிலுள்ள விவசாயிகள் மற்றும் தொழிலாளர்களின் வாழ்க்கையை அரசின் திட்டங்களின் மூலமே சிறப்புறச் செய்ய முடியும் என்ற கருத்தில் மக்களுக்கு நம்பிக்கை ஏற்படச் செய்ய விழைந்தார். 1938ஆம் ஆண்டு காங்கிரஸ் ஏற்படுத்திய தேசியத் திட்டக்குழுவில் இவ்விரு தலைவர்களுமே பங்கேற்றிருந்தனர்.

எம்.என்.ராயின் கருத்துக்களும் ஜெயப்பிரகாஷ் நாராயணன் அச்சுத பட்டவர்தன், எம்.ஆர்.மசானி, அசோக் மேத்தா, அச்சர்யா நரேந்திரதேவ் மற்றும் பலரும் இணைந்து நிறுவிய காங்கிரஸ் சோசலிசக் கட்சியும் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியும் இந்தியாவில் சமதர்மக் கொள்கைகளுக்கேற்ற ஒரு சூழ்நிலையை உருவாக்கிக் கொடுத்தன. ஆனால் தன்னை ஒரு சமதர்மவாதி என அறிவித்துக்கொண்ட காந்திஜி இதுபற்றிக் குறிப்பிடுகையில் "பிறரிடமிருந்து எடுத்தேற்கப்படும்" சமதர்மக் கொள்கைகள் நம் தேவைகளைப் பூர்த்தி செய்யும் என்பதுடன் அவைகள் தீமை மிக்கவை. மேலும், அரசர்களை அழிப்பதன் மூலம் அரசர்களையும் ஆண்டிகளையும் ஒன்றாக்கிவிட முடியாது. அதேபோல் முதலாளிகள் தொழிலாளிகள் என்ற வேறுபாட்டைக் களைந்து அவர்களைச் சமத்துப்படுத்துவதன் மூலமும் சமதர்மத்தைக் கொணர இயலாது. உண்மையான சமதர்மம் என்னவெனில் அரசனும் தன்மை மக்களின் தொண்டனாக நினைத்து ஒரு சமதர்மவாதியாகச் செயல்படுவதே ஆகும். உண்மை மற்றும் அகிம்சை ஆகிய இரு பண்புகளும் இச்சமதர்மக் கொள்கைகள் என்று அழைக்கப்படுகிற பொதுவுடைமைக் கருத்துக்களினின்றும் மாறுபட்ட மனிதாபிமானப் பண்புகள் நிறைந்த ஒரு சமதர்மக் கொள்கையை, காந்திஜி அவர்கள் ஆதரித்தார். அத்துடன் நூல் நூற்றல், கிராமத் தொழில்கள் பொறுப்பான்மை முறை போன்ற கொள்கைகளையும் ஆதரித்தார். சுருங்கக்கூறின் அரசின் முக்கியத்துவம் குறைந்தும் தனிமனிதர்கள் முக்கியப் பங்கேற்றுச் செயல்படுவதாகவும் காணப்படும் ஒரு சமுதாயத்தில்

காந்திஜி பற்றுக்கொண்டிருந்தார். இந்தியக் கிராமங்களின் வளர்ச்சிக்குத் தொழில்மயமாக்குதல் மற்றும் முதலாளித்துவம் போன்ற கொள்கைகள் ஊறுவிளைவிக்கும் என்று கருதியதால் அவர் இக்கருத்துக்களைத் தன் சமதர்மக் கொள்கைகளில் எதிர்த்தார். மேலும் அவருடைய கொள்கைகளில் அஹிம்சை முறையிலான புரட்சிகளும் ஏற்கப்பட்டிருந்தது ஒரு தனிச்சிறப்பாகும்.

## 2.2.3. இந்தியாவல் மேற்கொள்ளப்பட்ட சமதர்ம நடவடிக்கைகள்:

1931ஆம் ஆண்டு கராச்சியில் நடத்த காங்கிரஸ் கட்சியின் கூட்டத்தில் எடுக்கப்பட்ட தீர்மானத்தின் படி எல்லா அதிகாரங்களும் நடைமுறையில் எல்லாச் செயல்முறைகளையும் கட்டுப்படுத்தும் தீவிரமிக்க சமதர்ம அரசை நிறுவவேண்டும். ஒவ்வொரு மனிதனும் முன்னேறும் வகையில் அனைவர்க்கும் சமய வாய்ப்புக்கள் அளிப்பதற்கு அரசு பாடுபடவேண்டும் என்பதே என்னுடைய சமதர்மக் கருத்தகளாகும்" என்று நேரு கருத்துத் தெரிவித்தார். சோவியத் பாணியை அப்படியே பின்பற்றுவதில் அவருக்கிருந்த வெறுப்பு "தயக்கமிக்க சமதர்மவாதி" என்ற பெயரை அவருக்கு ஈட்டித் தந்தது. ஆனால் அதே சமயத்தில் நேரு தன்னை "ஜனநாயக சமதர்மவாதி" என்று கூறிக்கொண்டார். சமதர்மப் பண்புகளை ஒட்டிக் காணப்படும் "கலப்புப் பொருளாதாரத்தில்" நேரு நம்பிக்கை கொண்டார். சமதர்மம், ஜனநாயகம் மற்றும் பொருளாதாரத் திட்டங்கள் ஆகியவைகள் ஒன்றாக இணைத்துச் செயல்பட அவர் விழைந்தார்.

நேருவின் மறைவிற்குப் பின்னும் காங்கிரஸ் கட்சி, சமதர்மத்தின் மீது தான் கொண்டிருந்த நம்பிக்கையைத் தொடர்ந்து வலியுறுத்தியது. எனினும் இதுவரை பொருளாதாரக் கொள்கையை உருவாக்கிய "ஒற்றைத் தலைமை" நிலை மறைந்து "கூட்டுத் தலைமை" ஏற்பட்டது. 1969ஆம் ஆண்டை ஒட்டி காங்கிரஸ் கட்சியின் கொள்கைகள் கட்சிக்குள்ளும், கட்சிக்கு வெளியேயும் வெகுவாக விமர்சிக்கப்பட்டன. "இளந்துருக்கியர்கள்" என்று வர்ணிக்கப்பட்ட காங்கிரஸ் கட்சியின் இடதுசாரி அணியினருக்கும், அக்கட்சியின் மூத்த தலைவர்களுக்கும் இடையே தகராறுகள் பல எழுந்தன.

1969ஆம் ஆண்டு காங்கிரஸில் நிகழ்ந்த பிளவு, இடதுசாரி அணியினரைத் பிரதம அமைச்சர் இந்திரா காந்தியை ஆதரிக்கத் தூண்டியது. இப்பொழுதிலிருந்து, தேசியமயமாக்குதல் கொள்கையை

அதுநாள்வரை மிகுந்த எச்சரிக்கையுடன் அணுகிய முறை கைவிடப்பட்டது. 1969ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் 19ஆம் நாள் ஒரு அவசரச் சட்டத்தின் மூலம் 14 தனியார் வங்கிகள் தேசியமயமாக்கப்பட்டன.

1970ஆம் ஆண்டு திருமதி.இந்திராகாந்தியின் கீழ் செயல்பட்ட அரசாங்கம், அதுவரை முன்னாளய சமஸ்தான மன்னர்கள் பெற்று வந்த மானியங்கள், சலுகைகள் மற்றும் முன்னுரிமைகளை ஒழிக்கும் வகையில் பாராளுமன்றத்தில் ஒரு சட்ட முன் மொழிவை தாக்கல் செய்தது. மன்னர் மானிய ஒழிப்புச் சட்டம் மற்றும் வங்கிகளைத் தேசியமயமாக்குதல் சட்டம் ஆகிய இரு சட்டங்களும் சிறந்த சமதர்மக் கொள்கைகளைக் கொணர விழைகின்றன என்று பலராலும் பாராட்டப்படடன. ஆனால் இவ்விரு சட்டங்களையும் நம் நீதிமன்றங்கள் ஏற்கவில்லை. எனவே 1971ஆம் ஆண்டு நடந்த பொதுத் தேர்தல்களின் போது காங்கிரஸ் கட்சி தன் கொள்கை விளக்க அறிக்கையில் நம் அரசியல் அமைப்பில் காணப்படும் அரசு நெறிமுறைக் கொள்கைகளச் செயல்படுத்த முடியாவண்ணம் நம் நீதிமன்றங்கள் இயங்குகின்றன என்று குறிப்பிட்டிருந்தது.

நிலச் சீர்திருத்தங்கள், அவசரகால நிலையின் போது அறிவிக்கப்படட 20 அம்சப் பொருளாதாரத் திட்டம், 42வது அரசியலமைப்புத் திருத்தத்தின் மூலம் நீதித்துறையின் அதிகாரங்கள் குறைக்கப்பட்டு அடிப்படை உரிமைகளுக்கு மேலாக அரசு நெறிமுறைக் கொள்கைகளுக்கு வழங்கப்பட்ட முதன்மைத்துவம் மற்றும் சொத்துரிமை மீது திணிக்கப்பட்ட வரம்புகள் ஆகியவற்றை இந்தியாவில் மேற்கொள்ளப்பட்ட சில சமதர்ம நடவடிக்கைகள் எனக்கொள்ளலாம்.

சமதர்ம அரசிற்கு ஒரு சிறந்த மாற்றை அளிக்கும் வகையில் ஜெயப்பிரகாஷ் நாராயணன் அவர்கள் காந்தீய நோக்குடன் நாட்டின் சமதர்மச் சக்திகளை ஒன்றிணைக்க முயன்றார். காந்திஜியைப் போல் இருவரும் தானகவே முன் வந்து விருப்பத்துடன் பணிபுரிய விழையும் பல நிறுவனங்கள் தங்களால் இயன்ற வேலைகளைச் செய்ய வேண்டும் என்று விரும்பினார். பொறுப்பான்மை முறையில் தமக்கிருந்த நம்பிக்கையை வைத்திருந்தார். அவருடைய நல்வாழ்த்துக்களுடன் ஆட்சிக்கட்டில் ஏறிய ஜனதா அரசு அவர் காட்டிய வழியல் நடக்கத் தவறியது.

இந்தியாவில் சமதர்மக் கொள்கையின் எதிர்காலம் பின்வரும் இரு பண்புகளில் ஏதாவது ஒன்றினைத் தெரிந்தெடுத்து ஏற்க வேண்டியிருக்கும். அவற்றில் ஒன்று, காந்திஜி கற்பித்த நெறிமுறைகளுக்கேற்ப அனைத்து அதிகாரங்கள் மற்றும் வளங்கள் ஆகியவற்றைப் பன்முகப்படுத்திச் செயல்படுதல், மற்றொன்று, அரசாங்கம்

விரும்பும் அதிகாரக் குவிப்பு முறையைப் பின்பற்றிச் செயல்படுதல், இவ்விரு முறைகளில் எது பின்பற்றப்படுகிறதோ அதைப் பொறுத்தே இந்தியாவின் எதிர்காலம் அமையும்.

நரசிம்மராவ் பிரதமரான காலத்தில் பொருளாதாரத் தளர்த்தல் மூலம் இந்தியாவில் சோசலிசத்திற்கு ஒரு முடிவு கட்டினார் என்றே கூறவேண்டும். உலகமயமாக்கப்பட்ட பொருளாதாரத்தில் இந்தியா பங்கேற்றதும், அந்நிய முதலீடு, அந்நியச் செலவாணி ஆகியவற்றில் இந்தியா மேற்கொண்ட நிலையும் எதிர்காலத்தில் இந்தியா தாராளமான பொருளாதாரத்தையே ஏற்கும் என்பதை உறுதிப்படுத்துகின்றன.

## 2.3.4. இந்தியாவும் காமன்வெல்த்தும்

இந்திய அரசியலமைப்பு 1950ம் ஆண்டு ஜனவரித் திங்கள் 26ஆம் நாள் நடைமுறைக்கு வந்தது. இந்திய அரசியல் அமைப்பு இங்கிலாந்தின் அன்பளிப்பல்ல. அது நமக்கு நாமே தயாரித்து அளித்துக்கொண்டது ஆகும். அரசியலமைப்பு நடைமுறைக்கு வந்த நாளில் இந்தியா ஒரு உண்மையான இறைமை பெற்ற குடியரசாக மாறியது. இருப்பினும், இந்தியா, பிரிட்டிஷ் காமன்வெல்த்தோடு தனது தொடர்புகளைத் துண்டித்துக்கொள்ளவில்லை.

இந்தியத் தலைவர்கள் இந்தியாவை ஒரு குடியரசாக்க விழைந்த பொழுது இந்தியா பிரிட்டிஷ் காமன்வெல்த்தில் தொடர்ந்து அங்கம் வகிப்பதா? அல்லது அதிலிருந்து வெளியேறுவதா? என்ற வினாவிற்கு அவர்கள் விடை காண வேண்டியிருந்தது. இவ்வமைப்பில் ஆங்கிலேய முடிமன்றத்தின் மீது நம்பிக்கை கொண்டிருந்த நாடுகள் மற்றும் அவர்களின் மேலாதிக்கத்தின் கீழிருந்த நாடுகள் அங்கத்துவம் பெற்றிருந்தன. இந்தியா ஆங்கிலேயர்களின் மேலாதிக்கத்தின் கீழ் இருந்த காலம் வரை காமன்வெல்த்தில் அதன் அங்கத்துவம் ஒரு இயற்கையான நிகழ்ச்சியாகவே இருந்தது. அயர்லாந்து தன்னுரிமை பெற்ற குடியரசாக மாறியபோது, 1948ஆம் வருடத்திய அயர்லாந்து குடியரசுச் சட்டத்தின் மூலம் இங்கிலாந்தினுடனான தனது தொடர்புகளை முற்றிலும் விலக்கிக் கொண்டது போல இந்தியாவும் தன் முன்னாளைய ஆட்சியாளர்களுடன் கொண்டிருந்த எல்லா வகையான தொடர்புகளையும் நீக்கிக்கொள்ள வேண்டும் என்று பெரும்பாலான இந்தியர்கள் கருதினர். மேலும், இதுவரை காமன்வெல்த்தில் குடியரசு நாடுகள் அங்கத்துவம் பெற்றதாக வரலாறு எதுவும் இல்லை. அத்துடன் எல்லாக் குடியரசு நாடுகளுக்கும் காமன்வெலத் அமைப்பின் கதவுகள் திறந்துவிடப்பட்டால் அந்த அமைப்பின் கட்டுக்கோப்பான தன்மைகள் கெட்டுவிடும் என்றும் அதன் அங்கத்தினர்களுள் பலரும் கருதினர். தன்னுரிமை பெற்றவுடன்

இங்கிலாந்துடன் தொடர்புகளை, இந்தியா முற்றிலும் துறந்துவிடும் என்று காங்கிரஸ் கட்சியின் சில முக்கிய உறுப்பினர்கள் கருத்துத் தெரிவித்தனர். ஆனால், அதுபற்றிய முடிவுகள் மேற்கொள்ளப்படும் பொழுது, காமன்வெல்த்தில் இந்தியாவின் அங்கத்துவத்தைத் தொடர்ந்து முடிவெடுப்பதெனத் தீர்மானம் மேற்கொண்டனர்.

இதற்குப் பல காரணங்கள் உண்டு. முதலாவது இரண்டாம் உலகப்போர் முடிவடைந்த தருணத்தில் இந்தியத் தலைவர்களுக்கும், இங்கிலாந்தின் ஆட்சியாளர்களுக்குமிடையே ஒரு சுமூகமான உறவு நிலை காணப்பட்டது.

இரண்டாவதாக, 1947ஆம் ஆண்டு இலண்டனில் கூடிய காமன்வெல்த் நாடுகளின் தலைமை அமைச்சர்கள் காமன்வெல்த் அங்கத்துவம் பற்றிய ஒரு தீர்மானத்தை வெளியிட்டனர். அத்தீர்மானத்தின் வாசகங்களான இந்திய மக்களின் எண்ணப்படி, இந்தியா, தான் நிறைவேற்றிய பின்பற்றவிருக்கும் ஒரு புதிய அரசியலமைப்பில், தன்னை ஒரு இறைமையுள்ள தன்னுரிமைக் குடியரசாகப் பிரகடனப்படுத்திக்கொள்ளும் என்ற கருத்தை இந்திய அரசாங்கம் காமன்வெல்த்திலுள்ள ஏனைய அரசாங்கங்களுக்குத் தெரியப்படுத்தியுள்ளது. இருப்பினும், இந்திய அரசாங்கமானது காமன்வெல்த்தல் தனக்கிருக்கும் நம்பிக்கையையும், அதில் தொடர்ந்து அங்கதினராகவிருப்பதற்குத் தன்னுடைய விருப்பத்தையும் காமன்வெல்த் தன்னுரிமையுள்ள நாடுகளின் ஒரு தன்விருப்பமுள்ள இணையம் என்பதைத் தெளிவுறுத்தியும் இங்கிலாந்தின் அரசரை அதன் தலைவராக ஏற்பதில் தனக்கிருக்கும் விருப்பத்தையும் அறுதியிட்டுத் தெரிவித்துள்ளது. இத்தீர்மானத்தினால், காமன்வெல்த்தில் பிற நாடுகள் அங்கத்துவம் பெறுவதற்கான அடிப்படைப் பண்புகள் மாறாமல் இருப்பதனால் காமன்வெல்த்தில் பிற நாடுகள் அங்கத்துவம் பெறுவதற்கான அடிப்படைப் பண்புகள் மாறாமல் இருப்பதனால், இத்தீர்மானத்தை காமன்வெல்த்தில் அங்கத்தினர்களாக உள்ள பிற நாடுகளின் அரசாங்கங்கள் இந்தியா காமன்வெலத்தில் தொடர்ந்து அங்கம் வகிப்பதை ஏற்று அங்கீகரிக்கின்றன.

“காமன்வெல்த் நாடுகள் இங்கிலாந்தின் அரசருக்கு விசுவாசமுள்ள நாடுகளாகத் திகழவேண்டும் என்ற கொள்கையை ஏற்காமல், அதில் இந்தியா தொடர்ந்து அங்கம் வகிக்கும் என்ற இந்தியாவின் தீர்மானத்தை நேரு அறிவித்தது, காமன்வெல்த்தின் அடிப்படை அமைப்பில் ஒரு மாற்றத்தைக் கொணர்ந்து “பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடுகள் என்ற பெயரிலிருந்து “பிரிட்டிஷ்” என்ற வார்ததை அகற்றப்பட்டு காமன்வெல்த் நாடுகள் என வழங்கப்படலாயிற்று.

மேற்கண்ட அத்தீர்மானம் சட்டத் தன்மை கொண்ட ஒரு அறிக்கை அல்ல. எனவே, இந்திய அரசியலமைப்பில் இத்தீர்மானம் இடம் பெறவில்லை. இது தன்னுரிமை பெற்ற நாடுகளின் இணையத்தைக் குறிக்கும் தன் விருப்பமுள்ள ஒரு தீர்மானமாகும். ஆனால், இத்தீர்மானம் இந்தியாவில் பரவலாக விமர்சிக்கப்பட்டது. "இந்தியாவிற்கும் காமன்வெல்த்தில் அங்கத்தினராக உள்ள பிற வெள்ளையர் நாடுகளுக்குமிடையே ஏற்படும் இணையம் இயற்கையானது என்று கூறமுடியாது. ஏனெனில், இந்நாடுகளுக்கும் இந்தியாவிற்குமிடையே இனம், மதம் மற்றும் பண்பாடு இவைகளின் அடிப்படையில் எந்தவிதமான ஒற்றுமையும் காணப்படவில்லை. எனவே, இத்தீர்மானத்தை இந்தியா மேற்கொண்டது அதன் விதி, மற்றும் அதன் வலிமை மீது அது கொண்டிருக்கும் அவநம்பிக்கையைக் குறிப்பதாக உள்ளது" என்று ஒரு சாராார் கண்டனம் தெரிவித்தனர். ஆனால், இதற்கு நேரு மறுமொழி கூறுகையில், "காமன்வெல்த்தில் நாடுகள் தாங்களாகவே தம் விருப்பத்துடன் இணைந்துள்ளன. அந்நாடுகளில், அதில் தொடர்ந்து அங்கம் வகிப்பதற்கு விருப்பமில்லையெனில் அதிலிருந்து அவர்கள் தாங்களாகவே பிரிந்து சென்று விடமுடியும்" என்றார்.

காமன்வெல்த்தின் உறுப்பினர் என்பதானது இந்தியாவிற்கு சில நன்மைகளைப் பெற்றுத் தந்தது. இரு தரப்பு மற்றும் பல தரப்பு ஒப்பந்தங்களின் மூலமாகவும் பல நிகழ்ச்சிகளின் பரிமாற்றங்கள் மூலமாகவும் இந்தியாவிற்கும், பிற காமன்வெல்த் உறுப்பு நாடுகளுக்குமிடையே பண்பாடு. கல்வி பொருளாதாரம் மற்றும் வாணிபத் துறைகளில் பல ஒப்பந்தங்கள் எளிதில் ஏற்கப்பட்டன. இருப்பினும், இங்கிலாந்து சூயஸ் கால்வாய் பிரச்சனையில் நடந்து கொண்ட விதம் இந்தியா தொடர்ந்து காமன்வெல்த்தில் அங்கம் வகிப்பதில் ஒரு பெரும் சர்ச்சையை உருவாக்கியது. மேலும், காமன்வெல்த் அமைப்பு, அதன் உறுப்பினர்களிடையே காணப்படுகின்ற பிரச்சனைகளைத் தீர்ப்பதற்கேற்ற வலிமையைக் கொண்டிருக்கவில்லை. இந்தியா—பாகிஸ்தான் பிரச்சனைகளையும், தென்ஆப்பிரிக்காவில் காணப்பட்ட இனவெறிக் கொள்கை மீதான பிரச்சனைகளையும் காமன்வெல்த்தினால் ஒரு சுமூகமான முறையில் தீர்க்க இயலாமற் போயிற்று. மேலும், பிரிட்டனின் ஐரோப்பியப் பொதுச் சந்தையின் அங்கத்துவமும், தன் புதிய வெளிநாட்டு மக்களின் குடியேற்றக் கொள்கைகளும், இந்தியாவை வெகுவாகப் பாதித்துள்ளது என்று சில விமர்சகர்கள் கருத்துத் தெரிவித்துள்ளனர்.

முன்னேற்றத்தை அறிவதற்குகான தன்னறிவுச் சோதனை கேள்விகள்

4. இந்தியாவில் மதச்சார்பின்மை விவாதிக்கவும்

5. இந்தியாவில் சமதர்ம வாதிகளின் கொள்கையினை ஆய்வ செய்க.

6. கலப்ப பொருளாதாரம் பற்றி சிறுகுறிப்ப வரையவும்.

எனினும் தென்னாப்பிரிக்காவில், பெரும்பான்மையினர் பெற்ற அரசின் வெற்றியும், சுதந்திரம் காமன்வெல்த்தின் மூலம் ஓரளவு ஏற்பட்டதாகக் கூறலாம். நைஜீரியா போன்ற உறுப்பு நாடுகளில் ஏற்படும்

மனித உரிமைக்கான ஆபத்துக்களிலும் காமன்வெல்த் உறுதியாகப் போராடியுள்ளது. ஆகவே இதில் தொடர்ந்து உறுப்பினராக இருப்பது இந்தியாவிற்கு நன்மையே.

## 2.3.தொகுப்புரை:

இந்த அலகில் மாணவர்கள் புரிந்து கொள்ளக்கூடிய அதாவது இந்திய அரசயிலமைப்பு ஒரு எழுதப்பட்ட அம்சங்கள் மிகத் தெளிவாக கூறப்பட்டுள்ளது மிக நீண்ட முழு இறைமையுடைய மக்களாட்சிக் குடியரசு ஆகம். இந்தியா ஓர் சமயச் சார்பற்ற அரசாக வழங்குவது மட்டும் அல்லாமல், சோசலிச அரசாகவுமத் விளங்குகிறது. சமூக, பொருளாதார மற்றும் அரசியல் துறைகளில் குடிமக்கள் அனைவருக்கும் சமவாய்ப்பு வழங்குகிறது. குடிமக்களின் அடிப்படை உரிமைகள் அரசயில் சட்டத்தால் உறுதிசெய்யப்பட்டுள்ளன. மேலும் அரசு சட்டம் இயற்றும் போது கருத்தில் கொள்ள வேண்டிய வழிகாட்டு நெறிக்களும் சேர்க்கப்பட்டுள்ள இந்திய அரசியலமைப்பு மற்றும் பாராளுமன்ற மேலாண்மை உறுதி செய்யப்பட்டுள்ளது. அதே சமயம் நீதித்துறையின் சுதந்திரமும் நிலை நாட்டப்பட்டுள்ளது. நீதித்துறைக்கு நீதிப்புனராய்வ அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது. இந்திய அரசியலமைப்ப வலிமையான மைய அரசைக் கொண்ட மாநிலங்களின் ஒன்றியம் ஆகும். இந்திய அரசயிலமைப்பு கலப்பு பொருளாதாரக் கொள்கையையும் சமதர்ம சிந்தனையும் கொண்டள்ளன.

## 2.4. முக்கியவார்த்தைகள்:

1. மதச்சார்பின்னை : எந்த ஒரு மதத்திற்கும் அரசு முக்கியத்துவம் அளிக்காமல் அனைத்து மதத்தையும் சமமாக பாவிப்பதாகும்.
2. அதிகாரப் பங்கீடு : அரசின் ஒட்டு மொத்தமான அதிகாரத்தை மத்திய அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கத்திற்கும் சமமாக பங்கீடு செய்து எஞ்சிய அதிகாரத்தை மாநில அரசாங்கத்திற்கு வழங்குவது.
3. நெருக்கடி நிலை : இந்தியாவின் பாதுகாப்ப மற்றும் பிரகடணம் அமைதிக்குப் பங்கம் விளைவிக்கும் நிலை மற்றும் நிதிநிலை நெருக்கடிகாலங்களிலும் குடியரசு தலைவர் பிறப்பிக்கும் ஆணையாகும்.

4. கலப்புப் பொருளாதாரம் : அரசு நிறுவனங்களும் தனிநபர் நிறுவனங்களும் சேர்ந்து இணைந்து பொருளாதார முறை.

5. சமதர்மம் : பொருளாதார நடவடிக்கைகள் மீது தடைகள் விதிக்கப்பட்டு அதன் மூலம் ஒரு சிலரிடம் மட்டும் செல்வம் குவிதல் தடை செய்தல்.

## 2.5. முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக் கேள்விகளுக்கான பதில்கள்:

கேள்வி எண்.1 — இந்த கேள்விக்கான விடையை பகுதிஎண்.2.1—ல் அறிக.
கேள்வி எண்.2 — இந்த கேள்விக்கான விடையை பகுதிஎண்.2.1.1—ல் அறிக.
கேள்வி எண்.3 — இந்த கேள்விக்கான விடையை பகுதிஎண்.2.2—ல் அறிக.
கேள்வி எண்.4 — இந்த கேள்விக்கான விடையை பகுதிஎண்.2.2.1—ல் அறிக.
கேள்வி எண்.5 — இந்த கேள்விக்கான விடையை பகுதிஎண்.2.2.2—ல் அறிக.
கேள்வி எண்.6 — இந்த கேள்விக்கான விடையை பகுதிஎண்.2.2.3—ல் அறிக.

## 2.6. இந்த அலகு சம்பந்தப்பட்ட மேலும் படிக்க வேண்டிய நூல்கள்:

1. Pylee, M.V: An Introduction to the Constitution of India, New Delhi, Vikas: 1998.
2. Poornima G.R.and Suresh M.V.The Constitutionof India: Sura Books P.Ltd., Chennai 2008.
3. Dharmaraj.J: Modern Governments: Dency Publications: Sivakasi: 2008.

## 2.7. வினாக்களும் / செய்முறைப்பயிற்சிகள்:

1. இந்திய அரசயிலமைப்பின் முக்கிய சிறப்புப் பண்புகளை ஆய்க.
2. இந்திய அரசியலமைப்பு வரைவக் குழு வினைப்பற்றி ஒரு கட்டுரை எழுதுக.
3. இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் முகப்புரையில் கண்டுள்ள குறிக்கோள்கள் யாவை?
4. இந்திய காமன்வெல்த் உறவினைப்பற்றி பகுப்பாய்வ செய்க.
5. இந்தியாவில் மதச்சார்பின்மை மற்றும் சமதர்மம் பற்றி அரசியல் தலைவர்களின் கருத்தினை விவாதி.

# அலகு – 3
# அடிப்படை உரிமைகளும் கடமைகளும்: அரசு-கொள்கையின் வழிகாட்டி நெறிகள்:

## முன்னுரை:

ஜனநாயக நாடுகளில் ஜனநாயக மரபிற்கு ஏற்ப சில அடிப்படை உரிமைகள் மக்களுக்கு வழங்கப்படவேண்டும். இவ்வுரிமைகளை அரசு மீறாமல் இருத்தல்வேண்டும். இவ்வுரிமைகளுக்கான உத்திரவாதத்தை அரசு மக்களுக்கு வழங்க வேண்டும். எனவே, பொதுவாக ஜனநாயக நாடுகளில் இவ்வுரிமைகள் அரசியலமைப்பில் தெளிவாக கூறப்பட்டுள்ளத. ஜனநாயக தத்துவத்தை கடைபிடிக்கும் இந்தியாவில் அடிப்படை உரிமைகள் மற்றும் கடமைகள் வகுத்தளிக்கப்பட்டுள்ளன. மேலும் இந்திய அரசியலமைப்பில் பொதிந்து காணப்படும் எண்ணங்களின் பிரதிபலிப்பாக அரசு வழிகாட்டி நெறிமுறைகள் காணப்படுகின்றன. எனவே இவ்வுலகில் அடிப்படை உரிமைகள், கடமைகள் மற்றும் அரசு வழிகாட்டி நெறிகள் மிக தெளிவாக கூறப்பட்டுள்ளது.

## நோக்கங்கள் (Objectives)

அடிப்படை உரிமைகளின் தன்மைகளை கற்றறிதல்
அடிப்படை உரிமைகள் மற்றும் கடமையினை புரிந்துகொள்ளுதல்
அரசு நெறிக்கோட்பாட்டின் முக்கியத்துவத்தினை உணர்தல்

## அலகின் வடிவமைப்பு (Unit Structure)

அடிப்படை உரிமைகளின் தன்மைகள்
அடிப்படை உரிமைகளின் வகைகள்
அரசியலமைப்பு பரிகாரத்திற்கான உரிமை
அடிப்படை கடமைகள்
அரசுநெறிக் கோட்பாடுகள்
அடிப்படை உரிமை மற்றும் அரசு நெறிக்கோட்பாடிற்கு இடையேயுள்ள வேற்றுமைகள்
அரசியலமைப்பு 42 விதியின்படி சில புதிய நெறிமுறைகள்
அரசு நெறிக் கோட்பாட்டின் வகைகள்
அரசியலமைப்பின் 31வது உறுப்பின் சிறப்புப் பண்புகள்
அரசிலமைப்பு 42வது உறுப்பின் சிறப்புத்தன்மை
M.A. பல்ரி வாலா அவர்களின் கருத்து
H.M. சீர்வாய் அவர்களின் கருத்து

### 3.1. அடிப்படை உரிமைகளின் தன்மைகள்: (Features of the fundamental Right)

இந்திய அரசியலமைப்பின் மூன்றாவது பகுதியில் அடிப்படை உரிமைகளின் நீண்ட பட்டியலொன்று கொடுக்கப்பட்டுள்ளது. உலகிலுள்ள அரசியலமைப்பு பெரும்பாலானவற்றில் அடிப்படை உரிமைகள் பற்றிய பட்டியல் காணப்படுகிறது. ஆனால் அவற்றிடையே பல வேறுபாடுகளைக் காண இயலும். எழுதப்பட்ட அரசியலமைப்புக்களில் கொடுக்கப்பட்டடுள்ளவை போன்ற அடிப்படை உரிமைகளின் பட்டியலை இங்கிலாந்தின் எழுதப்படாத அரசியலமைப்பில் காணமுடியாது. இதனால் இங்கிலாந்தில் அடிப்படை உரிமைகளே கிடையாது என்று கூறிவிட முடியாது. தான் விரும்புகிற எந்த செயலையும் செய்வதற்குள்ள உரிமை ஒரு பிரிட்டிஷ் குடிமகனுக்கு உண்டு. ஆனால் அந்தச் செயல் நாட்டின் சாதாரணச் சட்டத்திற்குப் புறம்பானதாக இருக்கக்கூடாது என்ற நிபந்தனை மட்டும் உண்டு. அந்நாட்டு மக்களது உரிமைகள் நீதித்துறையின் தீர்ப்புக்களாலும் நிர்ணயிக்கப்படுகின்றன. இங்கிலாந்தின் பாராளுமன்றம் சர்வ வல்லமை படைத்த ஒன்றாகும். ஆதலால் அந்நாட்டின் நீதிமன்றத்தை மக்களது உரிமைகளின் பாதுகாவலன் என்று கருத முடியாது. மக்களது உரிமைகளை மாற்றவும் அந்நாட்டு பாராளுமன்றத்திற்கு வலிமையுண்டு. சட்டத்தை நீதிப்புனராய்வுக்குட்படுத்தும் அதிகாரம் இங்கிலாந்தின் நீதி மன்றங்களுக்கு கிடையாது.

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பு மக்களது உரிமைகளைச் சட்டமன்றத்துறை மற்றும் ஆட்சித்துறைகளின் எதேச்சதிகாரத்தினின்று காக்க முயலுகின்றது. அதில் கொடுக்கப்பட்டுள்ள உரிமைகள் சாசனம் ஆட்சித்துறையையும், சட்டத்துறையையும் கட்டுப்படுத்துகிறது. அரசியலமைப்பின் பாதுகாவலனாகத் திகழும் நீதித்துறை அரசியலமைப்பிற்குப் புறம்பான சட்டங்களைச் செல்லாதவை எனக்கூறும் அதிகாரம் பெற்றுள்ளது. அடிப்படை உரிமைகளை மாற்றக்கூடிய அதிகாரம் அமெரிக்க நாடுகளின் காங்கிரசிற்குக் கிடையாது.

ஆட்சித்துறை, சட்டத்துறை ஆகியவற்றின் அதிகாரங்களைக் கட்டுப்படுத்துவதற்கெனவே நமது அரசியலமைப்பில் அடிப்படை உரிமைகள் கொடுக்கப்பட்டுள்ளன. இவ்வுரிமைகள், அமெரிக்க அரசியலமைப்பில் கொடுக்கப்பட்டுள்ள உரிமைகளை ஒத்துக் காணப்படுகின்றன. எனினும் பாராளுமன்றத்தின் இறைமைக்கும் நீதித்துறையின் மாட்சிமைக்கும் இடையே ஓர் உடன்பாட்டைக் கொண்டு வர நமது அரசியலமைப்பு முயன்றது. ஆனால் 42வது அரசியல் திருத்ததச் சட்டத்தின் மூலம் நீதிமன்றங்களின் அதிகாரங்கள் ஓரளவு

வரையறுக்கப்பட்டன. அதன்படி பாராளுமன்றத்தின் இறைமையைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் நீதிமன்றங்களிடமிருந்து பறிக்கப்பட்டது. 1967ஆம் ஆண்ட கோலக்நாத் என்பவருக்கும் பஞ்சாப் அரசிற்குமிடையே நம் நாட்டின் தலைமை நீதிமன்றத்தில் நடந்த வழக்கில் "அடிப்படை உரிமைகளைத் திருத்தி அமைக்கும் அதிகாரம் பாராளுமன்றம் உட்பட யாருக்கும் கிடையாது" என்று தீர்ப்பு வழங்கப்பட்டது எனினும் 1971ஆம் ஆண்டு கொண்டு வரப்பட்ட 24வது அரசியல் திருத்தச் சட்டம் இத்தீர்பபைப் புறம்பே தள்ளியது. 1973ஆம் ஆண்டு கேசவானந்த பாரதி வழக்கில் இத்திருத்தம் ஏற்கப்பட்டது. எனினும் இவ்வழக்கை விசாரித்த நீதிபதிகளில் பெரும்பான்மையினர் "அரசியலமைப்பின் சில அடிப்படைத் தன்மைகளை மாற்றியமைக்கப் பாராளுமன்றத்திற்கு அதிகாரம் இல்லை" என்ற கருத்தைக் கொண்டிருந்தாலும் "அடிப்படை உரிமைகளை மாற்றியமைக்கும் அதிகாரம் பாராளுமன்றத்திற்கு உண்டு" என்ற கருத்தை அவர்கள் அனைவரும் ஏகமனதாக ஒப்புக்கொண்டனர். 42வது அரசியல் திருத்தச் சட்டத்தின் படி பாராளுமன்ற விதி 368ன் கீழ் ஒரு சட்டத்தை இயற்றுவதன் மூலம் நமது அடிப்படை உரிமைகளை நீக்கவோ கட்டுப்படுத்தவோ முடியும். ஆனால் திருத்தப்படாத உரிமைகளைப் பாதிக்கும்விதத்தில் பாராளுமன்றமோ, மாநிலச் சட்டமன்றங்களோ இயற்றும் சட்டங்கள், விதிகள் 3i—C மற்றும் 9ஆம் இணைப்பு ஆகியவற்றால் பாதுகாக்கப்படாமலிருந்தால் அவை செல்லாமல் போகும் என்று அறிவிக்கும் ஒரு தீர்மானமும் அத்திருத்தத்தில் மேற்கொள்ளப்பட்டிருந்தது.

### 3.1.1. நமது அரசியலமைப்பு அடிப்படை உரிமைகளை ஆறு வகைகளாக பிரித்துள்ளது அவை பின்வருமாறு:

1. சமத்துவ உரிமை (விதிகள் 14 முதல் 18 வரை)
2. குறிப்பிட்ட விடுதலைகள் உரிமை (விதிகள் 19 முதல் 22 வரை)
3. சுரண்டலுக்கெதிரான உரிமை (விதிகள் 23 மற்றும் 24)
4. சமயச் சுதந்திரம் (விதிகள் 25 முதல் 28 வரை)
5. பண்பாடு மற்றும் கல்வி உரிமைகள் (விதிகள் 29 மற்றும் 30)
6. அரசியலமைப்புத் தீர்வுமுறை உரிமை (விதிகள் 32 முதல் 35 வரை)

சில அடிப்படை உரிமைகள் இந்தியக் குடிமக்களுக்கு மட்டுமே அளிக்கப்பட்டுள்ளன. சில உரிமைகள் இந்தியாவில் வாழும் யாவருக்கும் கிட்டுபவையாகம். சில உரிமைகள் அரசாங்கத்தின் நடவடிக்கைகளைத் தடை செய்பவை. சில உரிமைகள் சட்டமன்றத்துறையின் அதிகாரத்தைக் கட்டுப்படுத்துபவையாகும். இவ்வுரிமைகளைப் பயன்படுத்துவதில்

நியாயமான கட்டப்பாடுகளை விதிக்கச் சில உரிமைகள் சட்டமன்றத்திற்கு அதிகாரமளிக்கின்றன. இவ்வுரிமைகள் யாவும் அரசிற்கெதிராக மக்களுக்குக் கிடைப்பவையாகும்.

**1. சமத்துவ உரிமை**

சட்டத்தின் முன் சமத்துவமும், சட்டத்தின் சரியான பாதுகாப்பையும் நமது அரசியலமைப்பு அளிக்கின்றது. சட்டத்திற்கு உயர்வானவர் எவரும் இல்லையென்பதையும், நாட்டின் சாதாரணச் சட்டத்திற்கு எல்லோரும் கட்டுப்பட்டவர்கள் என்பதையும் தான் "சட்டத்திற்கு முன் சமத்துவம்" என்பது குறிக்கின்றது. சமயம், இனம், ஜாதி, பால், பிறந்த இடம் போன்றவற்றின் அடிப்படையில் இந்தியர் எவரையும் வேற்றுமைப்படுத்தக்கூடாது; பொது வேலை அளிப்பதில் அதனை எம்முறையிலும் கடைபிடிக்கக் கூடாது என்றும் அரசியலமைப்பு கூறுகின்றது. இராணுவ தகுதி மற்றும் கல்வித் தகுதியில்லாத பிற பட்டங்கள் அரசியலமைப்பில் ஒழிக்கப்பட்டுள்ளன.

**கட்டுபாடுகள்**

சட்டத்தின் முன் எல்லோரும் சமம் என்ற நியதி இந்தியக் குடியரசுத் தலைவரையும், மாநில ஆளுநரையும் பாதிப்பதல்ல. மாறுபட்ட சில சூழ்நிலைகளில் சட்டத்தின் சம பாதுகாப்பினைக் காண்பதற்கில்லை. உதாரணமாக எல்லோரும் ஒரே அளவு வரி செலுத்த வேண்டும் என்பதில்லை. நாட்டு நலனுக்காக விசேடச் சலுகைகளும, விசேடப் பராமரிப்பும் அளிக்கப்படலாம். சமயம், இனம், ஜாதி, பால், பிறந்த இடம் ஆகியவற்றின் அடிப்படையில் வேற்றுமை காட்டக்கூடாதென்று அரசியலமைப்பு கூறியிருப்பினும், பெண்களுக்கும், குழந்தைகட்கும் சமுதாயத்தில் பின்தங்கியவர்க்கும் கல்வி அறிவற்றோர்க்கும் விசேட நிதி முறைகளை அரசு உருவாக்கலாம். வாய்ப்புக்களில் சமத்துவமும் எல்லோருக்கும் ஒன்று போலச் செயல்படுவதில்லை. பொது வேலைகளில் ஆட்களை நியமிக்கும் பொழுது இருப்பிடம் குறித்து விதிகள் வகுக்கலாம். பின்தங்கிய வகுப்பினருக்குப் பதவி ஒதுக்கப்படலாம். ஒரு குறிப்பிட்ட சமயத்தையோ அல்லது சுய சார்புடையதாகவோ காணப்படும் நிறுவனங்களில் உள்ள பதவிகள் அச்சமயத்தைச் சார்ந்தவர்களுக்காக ஒதுக்கப்படலாம்.

**1. குறிப்பிட்ட விடுதலைகள் உரிமை**

ஆறு முக்கியச் சுதந்திரங்களை இவ்வுரிமையினால் அளிக்கப்பட்டுள்ளன. அவை பின்வருமாறு

1. பேச்சுரிமை
2. கூடுவதற்கு உரிமை
3. சங்கம் அமைக்கும் உரிமை
4. நடமாடுவதற்குள்ள உரிமை
5. உறைவிடம், குடியேறுதல் பற்றிய உரிமை
6. வாழ்வுத் தொழில், வணிகம் பற்றிய உரிமை

கட்டுப்பாடுகள்

மேற்கூறிய உரிமைகளிலொன்றும் முழுமையானதல்ல. இவ்வாறு வெவ்வேறு கட்டுபாடுகளுக்கு உட்படுபவையாகும். சமுதாய நலனைக் கருதித்தான் இக்கட்டுபாடுகள் விதிக்கப்பட்டுள்ளன. இக்கட்டுப்பாடுகளை விதிப்பதனால் தனியார் உரிமைக்கும், சமுதாய கட்டுப்பாட்டிற்கும் இடையே ஓரளவு உடன்பாடு ஏற்படுத்த அரசியலமைப்பு முயற்சிக்கிறது.

பேச்சுரிமையைப் பயன்படுத்துவதை அரசு கட்டுப்படுத்த முடியும். இவ்வுரிமையைப் பயன்படுத்தியதின் விளைவாக அவதுாறு நீதிமன்ற அவமதிப்பு போன்றவை எழுந்தாலும் ஒழுக்கம் பாதிக்கப்பட்டாலும் உரிய தண்டனை வழங்கப்படலாம். இவ்வுரிமைகளைப் பயன்படுத்துதல் நாட்டின் பாதுகாப்பைப் பாதிப்பதாகவோ, அயல்நாடுகளுடன் நம் நாடு கொண்டுள்ள சுமுகமான உறவைப் பாதிப்பதாகவோ, வன்முறையைத் துாண்டுவதாகவோ இருத்தல் கூடாது. பேச்சுரிமை எனப்படுவது கட்டுப்பாடற்ற பேச்சுரிமையல்ல.

மக்கள் கூடுவதற்கு அளிக்கப்பட்டுள்ள உரிமையும் கட்டுப்பாடுகட்குட்பட்டதே. மக்கள் அமைதியைக் குலைப்பதாகவோ இந்தியாவின் இறைமையையும் ஒருமைப்பாட்டையும் பாதிப்பதாகவோ இருக்கக்கூடாது. சங்கங்கள் அமைப்பதற்குள்ள உரிமையும் கட்டுப்பாடுகளைக் கொண்டுள்ளது. குற்றச்சதிக்காகவோ, அமைதியைக் குலைப்பதற்காகவோ, இந்தியாவின் இறைமையையும் ஒருமைப்பாட்டையும் பாதிப்பதற்காகவோ சங்கங்கள் அமைக்கக்கூடாது. உறைவிடம், குடியேறுதல் பற்றிய உரிமையும் கட்டுப்பாடுகட்குட்பட்டதே. பொதுநலனைக் கருதியோ அல்லது பிற்பட்ட வகுப்பினரைப் பாதுகாப்பதற்கென்றோ இவ்வுரிமையைச் செயல்படுத்துவதற்கு நியாயமான கட்டுப்பாடுகள் அரசாங்கத்தால் விதிக்கப்படலாம். 358வது விதியின்படி, அவசர நிலைப் பிரகடனம் அமலிருக்கையில், அரசு 19வது விதியில் அளிக்கப்பட்டிருக்கும் உரிமைகளுக்கு எதிராக வேண்டமாயினும் சட்டங்கள் இயற்றலாம். தமக்குகந்த வ்ாழ்வுத்தொழிலையும் தொழில் வணிகத்தையும் புரியும் உரிமை இந்தியக் குடிமக்கள் எல்லோருக்கும் உண்டெனினும் பொது நலனைக் கருதி இவ்வுரிமைக்கும் கட்டுப்பாடுகள் விதிக்கப்படலாம். ஒரு வாழ்வுத் தொழில் புரிவதற்குள்ள தகுதிகளை நிர்ணயித்து

அரசாங்கம் சட்டங்களை இயற்றலாம். எந்த ஒரு தொழிலையும் வாணிகத்தையும் அரசாங்கமே ஏற்று நடத்தவும் முடியும்.

3. சுரண்டலுக்கெதிரான உரிமை

தனிநபர்களோ அல்லது அரசாங்கமோ தீயமுறைகளில் வலிமையற்றோரைப் பயன்படுத்திச் சுரண்டுவதை அரசியலமைப்பு தடை செய்கின்றது. இழிதொழிற் புரியச் செய்தல், கட்டாய இலவசப் பணி, அடிமைத் தொழில், கட்டாய உழைப்பு போன்றவை அரசியலமைப்பால் தடைசெய்யப்பட்டுள்ளன. பதினான்கு வயதிற்கும் குறைவான சிறுவர் சிறுமிகளைத் தொழிற்சாலைகள், சுரங்கங்கள் போன்றவற்றில் பணிபுரியச் செய்வதும் அரசியலமைப்பால் தடை செய்யப்பட்டுள்ளது. (மக்களை இழி தொழில் புரியச் செய்வது என்பதில் அடிமை முறையும், பெண்கள் சிறுவர்கள் மற்றும் ஊனமுற்றோர்கள் ஆகியோரைப் பரத்தமை மற்றும் பிற தீய தொழில்கள் புரியச் செய்வதம் அடங்கும்.)

கட்டுப்பாடுகள்

பொது நலன்களுக்காக அரசாங்கம் கட்டாயப்பணியைக் கொண்டு வரலாம் குற்றங்கட்குத் தண்டனையாகக் கட்டாயப் பணியை அளிக்கலாம்.

4. சமய சுதந்திர உரிமை

இந்தியா சமயச் சார்பற்ற நாடாகும். மனச்சாட்சிப்படி நடக்கும் உரிமை, எச்சமயத்தையும் ஏற்றுக் கொள்ளவும், பரப்பவும் உள்ள சுதந்திரம் ஆகியவை அரசியலமைப்பால் அளிக்கப்பட்டுள்ளன. அரசாங்கத்தின் முழு நிதி உதவியுடன் நடத்தப்படும் கல்விக் கூடங்களில் சமயக்கல்வி புகட்டக் கூடாது. அங்கீகரிக்கப்பட்ட கல்விக் கூடங்களிலும், சமயக் கல்வியைக் கட்டாயமாக்கக் கூடாது. ஒவ்வொரு சமயத்தினரும் தன் சமயத்திற்காகவும், தர்ம காரியங்கட்காகவும் நிறுவனங்களை அமைத்து நடத்த உரிமை அளிக்கப்பட்டுள்ளது.

கட்டுப்பாடுகள்

எந்த ஒரு சமயத்தையும் ஏற்றுக் கொள்ளவும் பின்பற்றவும், பரப்பவும் உள்ள சுதந்திரம் கட்டுப்பாடுகட்குட்பட்டது. சமயச் சுதந்திரத்தைக் குற்றங்கள் புரிவதற்கும், சமூக விரோத நடவடிக்கைகட்கும் பயன்படுத்தக் கூடாது. சமயச்சார்பற்ற நடவடிக்கைகட்கும் சமயத்திற்கும் தொடர்பிருக்கக் கூடாது. இந்து சமயத்தின் பொது நிறுவனங்களில் இந்து சமயத்தைச் சார்ந்த எல்லா வகுப்பினர்களும் பிரிவினர்களும் அனுமதிக்கப்படல் வேண்டும். குறிப்பிட்ட சடங்குகள் சமயவிதிகட்கொத்தவைதானா என நிருணயிக்கும் அதிகாரம் நீதிமன்றத்திற்குண்டு.

**5. பண்பாடு மற்றும் கல்வி உரிமைகள்**

அரசால் நேரிடையாக நடத்தப்படும் அல்லது அதன் உதவியுடன் நடத்தப்படும் கல்விக் கூடங்களில் கல்வி பயிலச் சேர்தலில் சமயத்தின் அடிப்படையில் வேற்றுமை காட்டக் கூடாது என்று அரசியலமைப்பு கூறுகின்றது. சிறுபான்மையாக இருக்கும் சமய இனத்தின் மீது அதனுடையதல்லாத பண்பாட்டை அரசாங்கம் சுமத்தக் கூடாது. ஒரு சிறுபான்மைச் சமய இனம் தனக்கு விருப்பமுள்ள கல்விக் கூடங்களை நிறுவி நடத்தலாம். அங்ஙனம் நடத்தப்படும் கல்விக் கூடங்களை அரசாங்கம் புறக்கணிக்கக் கூடாது.

**சொத்துரிமை**

44வது திருத்தம் இயற்றப்படும் வரையில் சொத்துரிமை ஒரு அடிப்படை உரிமையாக விளங்கியது. ஆனால் 1979ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் அமலுக்கு வந்த 44வது அரசியலமைப்புத் திருத்தம் அதை சாதாரணச் சட்ட உரிமையாக மாற்றிவிட்டது. சொத்துரிமை இன்று ஒரு அடிப்படை உரிமையல்ல.

## 3.1.2. அரசியல் அமைப்பு பரிகாரத்திற்கான உரிமை

அடிப்படை உரிமைகளை அரசியலமைப்பில் சேர்த்துவிட்டால் மட்டும் அவற்றை மக்களுக்களித்தாகக் கொள்ள முடியாது. அவற்றைச் செயலாக்குவதற்குள்ள வழிமுறைகளையும் அளித்தல் வேண்டும். அடிப்படை உரிமைகளை அகற்றும் அல்லது குறைக்கும் சட்டங்களையும், அடிப்படை உரிமைகளைப் பாதிக்கும் வண்ணம் எடுக்கப்படும் ஆட்சித்துறை நடவடிக்கைகளையும் செல்லாது எனக் கூறுவதற்குள்ள அதிகாரத்தை அரசியலமைப்பானது நீதிமன்றங்கட்கு அளித்திருக்கின்றது. தலைமை நீதிமன்றமும் மாநில உயர் நீதிமன்றங்களும் ஆட்கொணர் நீதிப்பேரணை, செயலுறுத்தும் நீதிப்பேராணை, தடைநீதிப்பேராணை, ஆவணக்கேட்பு நீதிப் பேராணை, உரிமையேது வினா போன்ற நீதிப்பேராணைகள் வழங்க அதிகாரம் பெற்றுள்ள அரசியலமைப்பின் 32வது விதியிற் கொடுக்கப்பட்டுள்ள தீர்முறை உரிமையும் அடிப்படை உரிமைகளிலொன்றாகும். அரசியலமைப்பின் 226வது விதியின்படி மாநில உயர்நீதிமன்றங்கள் மேற்கூறிய நீதிப் பேரணைகளைப் பிறப்பிக்கலாம். மேற்கூறிய நீதிப் பேராணைகளது விளக்கங்களைக் கீழே காணலாம்.

**ஆட்கொணர் நீதிப் பேராணை (Habeas Corpus)**

காவலில் வைக்கப்பட்டுள்ள ஒருவர் எக்காரணத்திற்காக அங்ஙனம் வைக்கப்பட்டிருக்கிறார் என அறிவதற்காகவும் காவலில் வைத்தது சட்ட விரோதமெனக் கண்டால் அவரை விடுதலை செய்வதற்காகவும் அவரை

நீதி மன்றத்தில் ஆஜர்படுத்துமாறு காவலில் வைத்தவருக்கு நீதிமன்றத்தால் இடப்படும் கட்டளை தான் ஆட்கொணர் நீதிப் பேராணை எனப்படுவது தனிநபருக்கொதிராவோ, அல்லது அரசாங்கத்தின் அதிகாரிக்கொதிராகவோ இந்நீதிப் அவமதிப்பாகக் கருதப்படும் தனிநபர்கள் மற்றும் ஆட்சித்துறையைச் சார்ந்தவர்களின் எதோச்சதிகார நடவடிக்கையினின்று மக்களுக்கு பாதுகாப்பளிக்க இந்நீதிப் பேராணை பயன் படுகிறது. அடிப்படை உரிமைகளைச் செயல்படுத்துவதற்காகவும் சட்டவிரோதமாகக் காவலில் வைக்கப்பட்டிருப்பவரை மீட்பதற்காகவும் இந்நீதிப் பேராணை பயன்படுத்தப்படுகிறது.

1. காவலில் வைத்தவரும் வைக்கப்பட்டவரும் நீதிமன்றத்தில் அதிகார வரம்பிற்கு அப்பாற்பட்டிருந்தாலோ,
2. கிரிமினல் குற்றத்திற்காக நீதிமன்றத்தால் காவலில் வைக்கப்பட்டிருப்பவரை விடுவிக்கவோ,
3. நீதிமன்றத்தாலோ அல்லது பாராளுமன்றத்தாலோ அவமதிப்பிற்காகத் தொடரப்பட்டுள்ள நடவடிக்கைகளிலிருந்து விடுபடவோ, ஆட்கொணர் நீதிப்பேராணை பிறப்பிக்கப்படுவதில்லை.

## செயலுறுத்தும் நீதிப்பேராணை (Mandamus)

உயர்நீதிமன்றத்தால் அதன் கீழுள்ள நீதிமன்றங்களையோ அல்லது கழகங்களையோ அல்லது தனிநபர்களையோ அவரது அதிகார வரம்பிற்குட்பட்ட ஏதாவது சட்டப்பூர்வமான பொதுப்பணியை செய்ய விதிக்கப்படும் கட்டளைதான் செயலுறுத்தும் நீதிப்பேராணை எனப்படுவது. அரசாங்கத்தின் அதிகாரி ஒருவர் செய்யவேண்டிய ஆனால் செய்யத்தவறிய பணியை இந்தப் பேராணை கட்டளை இடுகிறது. செயலாற்றப்படுவதற்கு தெளிவான சட்டப்பூர்வமான உரிமையை மனுதாரர் உடையவராய் இருந்தால்தான் இந்த நீதிப்பேராணை அளிக்கப்படும். இந்நீதிப்பேராணையின் தேவையில்லாமலேயே காரியம் முடிக்கக்கூடுமாயின் நீதிமன்றம் அதனை வழங்க மறுக்கும். பொதுப்பணிகளை புரிய கடமைப்பட்டவருக்கு எதிராகவும் அரசுக்கெதிராகவும் நீதிமன்றங்கற்கு எதிராகவும் இந்நீதிப்பேராணையை அவர்களது அதிகார வரம்பிற்குட்பட்ட பணிகளை அவர்கள் ஆற்ற மறுக்கும் பொழுது பிறப்பிக்கலாம்.

கீழ்காணும் நோக்கங்களுக்காக செயலுறுத்தும் நீதிப்பேராணையை பிறப்பிக்கலாம்.

1. அடிப்படை கடமைககளை செயலாற்றல்;
2. சட்டப்பூர்வமான பணிகளை செய்யும்படி ஒருவரை கட்டாயப்படுத்துதல்;

3. ஒருவருடைய பொதுப்பணியை செய்யும்படி அவரை கட்டாயப்படுத்துதல்;
4. ஒருநீதிமன்றத்தையோ, அல்லது தீர்ப்பாயத்தையோ அதன் அதிகார வரம்பிற்குட்பட்ட பணியை புரிய கட்டாயப்படுத்துதல்;
5. அரசியல் அமைப்பிற்கு புரம்பான சட்டத்தை செயலாற்ற கூடாதென்று பொது அதிகாரிக்கோ அல்லது அரசாங்கத்திற்கோ உத்தரவிடல்;

தனிநபருக்கெதிராகவோ, தனியார் நிறுவனங்கற் கெதிராகவோ, குடியரசுத்தலைவருக் கொதிராகவோ, மாநில ஆளுநர்க்கெதிராகவோ செயலுறுத்தும் நீதிப்பேராணை அளிக்கப்படுவதில்லை.

## தடைநீதிப்பேராணை (Prohibition)

இது கீழ்நிலையில் உள்ள நீதிமன்றங்களை அவற்றின் அதிகார வரம்பிற்குட்பட்டு செயல்பட உத்தரவிடும் நீதிப்பேராணையாகும். செயலுறுத்தும் நீதிப்பேராணை செயல்படத்தூண்டுகின்றது. ஆனால் தடை நீதிப்பேராணையோ செயல்படக்கூடாதென்று தடை செய்கின்றது. நீதிமன்றங்கட்கெதிராகவோ, அல்லது நீதிமன்றம் போன்ற நிறுவனங்களுக்கெதிராகவோ, மட்டும் இந்நீதிப்பேராணையானது பிறப்பிக்கப்படுகின்றது. நீதிமன்றங்கள் முன்பும், நீதிமன்றங்கள் போன்ற நிறுவனங்கள் முன்பும் இந்நீதிப்பேராணையானது பிறப்பிக்கப்படுகின்றது. நீதி சம்பந்தப்பட்ட பணிகள் புரியாத அதிகாரிகட்கெதிராகவோ இந்நீதிப்பேராணை அளிக்கப்படுவதில்லை.

## ஆவணக்கேட்பு நீதிப்பேராணை (Certiorari)

எக்காரணங்களுக்காக தடை நீதிப்பேராணை வழங்கப்படுகின்றதோ, அதே காரணங்கட்காக ஆவணக்கேட்பு நீதிப்பேராணையும் வழங்கப்படுகின்றது. கீழ்நிலையில் உள்ள நீதிமன்றம் அல்லது தீர்பபாயம் தனது அதிகார வரம்பிற்குட்பட்டுச் செய்யப்படுகின்றதா எனப்பார்க்கவும் அவை தம் அதிகார வரம்பை மீறி செயல்படாமல் பார்த்துக்கொள்ளவும் தான் நீதிப்பேராணையை பிறப்பிக்கப்படுகின்றது. ஆட்சித்துறையின் நடவடிக்கைக்கெதிராக இதனை வழங்க முடியாது. 'அத்தாட்சி அளித்தல்' அல்லது 'உறுதிப்படுத்துதல்' என்பது தான் இந்நீதிப்பேராணையின் பொருள். ஒரு வழக்கு சட்டப்பூர்வமாக விசாரிக்கப்படுகின்றதா என அறிவதற்கோ அல்லது அவ்வழக்கைச் சரியான முறையில் விசாரிப்பதற்கோ அவ்வழக்கு சம்பந்தப்பட்ட பதிவேடுகளைக் கீழ் நீதிமன்றங்களினின்று உயர் நீதிமன்றத்திற்கு மாற்றம் செய்ய

இந்நீதிப்பேராணை அளிக்கப்படுகின்றது. இந்நீதிப்பேராணை வழங்கப்படுவதன் மூலம் கீழ் நீதிமன்றத்தின் தீர்ப்பை மேல் நீதிமன்றம் தள்ளுபடி செய்யலாம்.

## உரிமையேது வினா (Quo-Warranto)

'என்ன அதிகாரம்' என்பது தான் இந்நீதிப் பேராணையின் பொருள். இப்பேராணையைப் பயன்படுத்தி ஒருவருக்கு ஒரு பொதுப் பதவியின் மேலுள்ள உரிமை சரியானதா என்று நீதிமன்றம் புனராய்வு செய்து, அவர் தகுதியற்றவர் எனக் கண்டால் அவரை அப்பதவியினின்றும் நீக்குகின்றது. கீழ்காணும் சூழ்நிலைகளில் இந்நீதிப் பேராணை வழங்கப்படுகிறது.

1. சர்ச்சைக்குட்பட்ட பதவி பொதுப் பதவியாக இருக்க வேண்டும். அப்பதவி சட்டத்தினாலோ, அல்லது அரசியலமைப்பினாலோ உருவாக்கப்பட்டதாக இருக்க வேண்டும்.
2. பதவி நிலையானதாக இருக்க வேண்டும்.
3. யார் மீது வழக்கு தொடரப்படுகின்றதோ, அவர் அப்பொழுது அப்பதவி வகிப்பவராக இருக்க வேண்டும்.

பொதுப் பதவிகளைத் தகுதியற்றோர் வகிக்காமல் காப்பதற்குப் பயன்படுத்தப்படும் ஒரு முக்கிய கருவி இந்நீதிப் பேராணையாகும்.

## அடிப்படை உரிமைகள் மீதுள்ள கட்டுப்பாடுகள் (Restrictions on fundamental Rights)

அடிப்படை உரிமைகளைச் செயலாற்றுவதற்குச் சில கட்டுப்பாடுகளை அரசியலமைப்பே விதித்துள்ளது. படைவீரர்கட்கென அடிப்படை உரிமைகளை மாற்றியமைக்க அரசியலமைப்பின் 33—வது பாராளுமன்றத்திற்கு அதிகாரம் அளித்துள்ளது. இராணுவச் சட்டத்தின் கீழுள்ள பகுதிகளில் அடிப்படை உரிமைகளை வரையறைப்படுத்த பாராளுமன்றத்திற்கு 34வது விதியால் அதிகாரம் அளிக்கப்பட்டுள்ளது.

அரசியலமைப்பின் 352வது விதியின்படி குடியரசுத் தலைவர் நெருக்கடி நிலைப் பிரகடனம் செய்யும் பொழுது அடிப்படை உரிமைகளும் தீர்முறை உரிமைகளும் ரத்து செய்யப்படலாம் தடுப்புக் காவல் சட்டத்தின் படி உரிமைகள் வரையறுக்கப்படலாம். 44வது அரசியலமைப்புத் திருத்தத்தின் படி நெருக்கடி காலங்களிலும் வாழ்க்கை உரிமை. விடுதலை உரிமை ஆகிய இரண்டையும் ரத்து செய்ய முடியாது.

## அடிப்படைக் கடமைகள்

42வது அரசியல் திருத்தச் சட்டம் 1976 டிசம்பர் 18ல் பாகம் IV-A—ல் அடிப்படை கடமைகள் கொண்டு வரப்பட்டது. ஆனால் 2000ம் ஆண்டு கொண்டு வரப்பட்ட 86வது அரசியல் அமைப்புத் திருத்தம் 11வது அடிப்படைக் கடமைகளை வழங்கியுள்ளது. அரசியலமைப்பின் விதி எண்: 51—A அடிப்படை கடமைகளைப் பற்றி கூறுகிறது.

1. அரசியலமைப்பிற்குக் கீழ்ப்படிதலும், அரசியலமைப்பின் உயர்ந்த நோக்கங்கள், அதன் நிறுவனங்கள், தேசிய கொடி, தேசிய கீதம் போன்றவற்றிற்கு மரியாதை செலுத்துதலும்;

2. நம்முடைய சுதந்திரப் போராட்டத்திற்கு உணர்ச்சியூட்டிய உயர்ந்த கருத்துக்களைப் பேணுதலும், பின்பற்றுதலும் ;

3. இந்தியாவின் இறைமை, ஐக்கியம், ஒருமைப்பாடு ஆகியவற்றை நிலைநாட்டலும், பாதுகாத்தலும்,

4. நாட்டை பாதுகாத்தலும், தேவைப்படுகின்றபொழுது நாட்டுச் சேவை செய்தலும் ;

5. சமயம், மொழி மற்றும் பிராந்தியம், பிரிவுகளினால் உண்டாகின்ற வேற்றுமைகளை மறந்து, இந்திய மக்களிடையே ஒரு சுமுகமான சூழ்நிலை மற்றும் உறவாண்மையினை வளர்த்தல், பெண்களது கவுரவத்திற்கு இழுக்கு விளைவிக்கக் கூடிய செய்கைகளைத் தவிர்த்தல் ;

6. சிறப்பு மிக்க நம்முடைய கூட்டுக்கலாச்சாரத்தை மதித்தலும், பாதுகாத்தலும் ;

7. வனங்கள், ஏரிகள், ஆறுகள் போன்ற இயற்கை வளங்களையும் வனவிலங்குகளையும் பாதுகாத்தலும், பேணுதலும், மற்றும் உயிரினங்கள் மீது இரக்கங்காட்டுதலும் ;

8. விஞ்ஞான நோக்கு, மனிதத் தன்மை, ஆய்வு மனப்பான்மை மற்றும் சீர்திருத்த எண்ணங்கள் ஆகியவற்றை வளர்த்துக் கொள்ளல் ;

9. பொதுச் சொத்தைப் பாதுகாத்தலும், வன்முறையைக் கைவிடுதலும் ;

10. அனைத்து துறைகளிலும் தனியாக மற்றும் கூட்டாகச் செய்யக் கூடிய செயல்களில் மேம்பாடு அடைவதற்கு முயற்சிப்பதன் மூலம் நாட்டை நிரந்தரமான ஒரு உன்னத நிலைக்கு உயர்த்துதல், இக்கடமைகளுக்கெதிரான அடிப்படை உரிமைகள் இருக்க முடியாது.

11. 6வயது முதல் 14 வயது வரை கட்டாய கல்வி அளித்தல்.

## 3.2. அரசு நெறிமுறைக் கோட்பாடுகள்

இந்திய அரசியலமைப்பின் நான்காவது பகுதியில் காணப்படும் பதினாறு விதிகள் (36 முதல் 51) அரசு நெறிமுறைக் கோட்பாடுகளைக் கொண்டுள்ளன. சில பொருளாதாரக் குறிக்கோள்கள், சட்டமன்றத் துறைக்கும் ஆட்சித்துறைக்கும் அளிக்கப்பட்டுள்ள சில வழிமுறைகள், நீதிமன்றங்களால் நிலை நாட்ட முடியாத சில உரிமைகள் போன்றவை அடங்கியவை தான் இந்நெறிமுறைக் கோட்பாடுகள், சட்டங்களை இயற்றும் பொழுதும், நிர்வாகம் நடத்தும் பொழுதும் இந்நெறிமுறைக் கோட்பாடுகளை, அரசாங்கம் பின்பற்றக் கடமைப்பட்டுள்ளது. மக்கள் நல அரசை உருவாக்குவதற்கென்றே இந்நெறிமுறைக் கோட்பாடுகள் நமது அரசியலமைப்பில் கொடுக்கப்பட்டுள்ளன. இந்நெறி முறைகளை நாம் அயர்லாந்து குடியரசின் அரசியலமைப்பில் இருந்து எடுத்துள்ளோம். அவர்கள் ஸ்பெயின் நாட்டின் அரசியலமைப்பில் இருந்து இந்நெறிமுறைகளை எடுத்தாண்டனர்.

### 3.2.1 அடிப்படை உரிமைகட்கும் நெறிமுறைக்கோட்பாடுகளுக்கும் உள்ள வேற்றுமைகள் (Difference between Fundamental Rights and Directive Principles)

- அடிப்படை உரிமைகள் என்பவை அரசாங்கத்தின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்துபவையாகும். ஆனால் நெறிமுறைக் கோட்பாடுகள் எனப்படுபவை அரசாங்கத்திற்குக் கட்டளையிடும் கருவியாகும். அரசாங்கம் உரிய சட்டங்களை இயற்றி நெறிமுறைக் கோட்பாடுகளைச் செயலாற்ற வேண்டும். நீதி மன்றத்தால் நிலை நாட்டப்படக் கூடிய உரிமைகள் எதையும் உருவாக்காத இந்நெறிமுறைக் கோட்பாடுகளைச் செயலாற்ற நீதிமன்றங்களால் இயலாது. ஆனால் 42—வது அரசியலமைப்புத் திருத்தச் சட்டம், அரசுநெறிமுறைக் கோட்பாடுகளுக்கும் அடிப்படை உரிமைகளுக்கும் மேலான முக்கியத்துவத்தைக் கொடுத்திருக்கிறது. மேலும், இத்திருத்தம் அரசியலமைப்பின் நான்காவது பகுதியில் குறிக்கப்பட்டுள்ள அனைத்து அரசு நெறிமுறைக் கோட்பாடுகளுக்கும் முக்கியத்துவம் கொடுக்குமுகமாக விதி 3i—C-யின் நோக்கத்தை விரிவுபடுத்தியுள்ளது. துவக்கத்தில் நெறிமுறைக் கோட்பாடுகளைச் செயலாற்ற வேண்டும் என்று அரசாங்கத்திற்கு உத்தரவிட எந்த நீதிமன்றத்திற்கும் அதிகாரம் கிடையாது. அரசியலைப் பின்னனியாகக் கொண்டுதான் இந்நெறிமுறைக் கோட்பாடுகளைச் செயலாற்ற வேண்டும் அரசாங்கம் இந்நெறிமுறைக் கோட்பாடுகளைப் புறக்கணித்தால், அது தேர்தலின் போது மக்களுக்குப் பதிலளிக்க வேண்டியிருக்கும் என்று டாக்டர் அம்பேத்கார் கூறினார். இந்நெறிமுறைக் கோட்பாடுகள் நாட்டின் நிர்வாகத்திற்குத் தேவையான



அடிப்படைகள் எனக் கருதப்படுவதால் ஒரு அரசாங்கம் தனது கொள்கையை உருவாக்கும் பொழுது இவற்றைப் புறக்கணிக்கக் கூடாது.

அடிப்படை உரிமைகள் அரசைத் தடை செய்யும் தன்மையுடையவை. அரசு மக்கள் உரிமைகளைப் பறிக்கக் கூடாது என்று இவை கூறுகின்றன. ஆனால் நெறிமுறைக் கோட்பாடுகள் அரசின் கடமைகளைக் குறிப்பிடுகின்றன. சில சமூக பொருளாதாரக் குறிக்கோள்களை வளர்ப்பது அரசின் கடமையாகும் என்று நெறிமுறைக் கோட்பாடுகள் சொல்லுகின்றன. அடிப்படை உரிமைகள் என்பவை சில பணிகளைப் புரிவதற்கு அரசாங்கத்திற்க அளிக்கப்படும் கருத்துறைகளாகுமென்றும் A.கிளெட்ஹில் என்ற ஆசிரியர் கூறுகின்றார்.

பின்வருபவை நமது அரசியலமைப்பில் கொடுக்கப்பட்டுள்ள நெறிமுறைக் கோட்பாடுகளாகும். வேலை உரிமை, கல்வியுரிமை, வேலையில்லாத பொழுது பொது உதவி முதிர்ந்த வயதிலும், நோய்வாய்ப்பட்டிருக்கும் போதும் பொது உதவி, வேலை செய்வதற்குச் சாதகமான சூழ்நிலைகள், மகப்பேற்றுச் சலுகை, வாழ்க்கைக் கேற்ற ஊதியம், ஓய்வு, எல்லாத் தொழிலாளிகட்கும் சமூக, கலாச்சார வசதிகள் அளித்தல், ஒரே சீரான உரிமை இயல் சட்டத்தை நாடு முழுவதிலும் செயல்படுத்தல், பதினான்கு வயதிற்குக் குறைவான குழந்தைகள் அனைவருக்கும் கட்டாய இலவசக் கல்வியளித்தல், நவீன முறையில் வேளாண்மையையும் கால்நடை பராமரிப்பையும் கொண்டு வருதல், பொது சுகாதாரத்தின் தரத்தை உயர்த்தல், மதுவிலக்கு பசுவதையைத் தடை செய்தல், கலாச்சார வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பண்டைய நினைவுச் சின்னங்களைப் பாதுகாத்தல், கிராமப் பஞ்சாயத்துகளை அமைத்து வளர்த்தல், நீதித்துறையை ஆட்சித்துறையினின்று பிரித்தல், பன்னாட்டு அமைதியையும் பாதுகாப்பையும் வளர்த்தல் ஆகியவையாகும்.

### 3.2.2. 42வது திருத்தச் சட்டத்தின்படி சில புதிய நெறிமுறைகள்

1. பொருளாதார அடிப்படையில் பின்தங்கிய வகுப்பினருக்கு இலவச சட்டஉதவி.

2. எல்லாவகைத் தொழில்களிலும் நிர்வாக மேலாண்மையில் பணியாளர்களின் பங்கீடு.

3. வனம் மற்றும் வனவிலங்குகளைப் பாதுகாத்தல், வாழ்க்கைச் சூழ்நிலைகளின் பாதுகாப்பும் முன்னேற்றமும்.

அரசியமைப்பின் நான்காவது பகுதியில் காணப்படுபவை மட்டுமின்றி அதன் வேறு பகுதிகளிலும் சில நெறிமுறைக் கோட்பாடுகள் கொடுக்கப்பட்டுள்ளன. இவையும் நீதிமன்றத்தால் செயல்படுத்த முடியாதவையே. அரசியலமைப்பின் 350—A விதியின்படி நாட்டில் காணப்படும் மொழிவாரிச் சிறுபான்மையினரது குழந்தைகட்கு ஆரம்பக் கல்வியைத் தாய்மொழியில் அளிப்பதற்குத் தேவையான வசதிகளை அரசாங்கமும் உள்ளாட்சி நிறுவனங்களும் ஏற்படுத்த முயற்சிக்க வேண்டும். ஹிந்தி மொழியை வளர்த்து பரப்ப வேண்டுமென்ற 351வது விதி கூறுகின்றது. நியமனங்கள் செய்யும் பொழுது பின்தங்கிய வகுப்பினரது தேவைகளையும் மனதிற்கொள்ள வேண்டுமென்று 335—வது விதி கூறுகின்றது.

### 3.2.3. அரசு-நெறி முறைக் கோட்பாட்டின் வகைகள்

மேற்கூறிய நெறிமுறைக் கோட்பாடுகளை நான்கு தலைப்புகளின் கீழ் வகைபடுத்தலாம். சமத்துவத் தன்மையுடையவை. காந்தீயக் கோட்பாடுடையவை. முற்போக்கான ஆய்வறிவு சார்ந்தவை. பொதுப்படையானவை என்பவைதான் இந்நான்கு தலைப்புகளும்.

நெறிமுறைக் கோட்பாடுகளில் பெரும்பான்மையானவை மக்கள் நல அரசை நிறுவுவதைத் தமது குறிக்கோளாக கொண்டுள்ளமையால் அவை சமத்துவத் தன்மையுடையனவாகக் கருதப்படுகின்றன. சிட்னி வெப், பியட்ரிஸ் வெப் ஆகியோருடைய ஆவிகள் அரசியலமைப்பின் நான்காவது பகுதியில் நடமாடுகின்றன என்று சர் ஐவர் ஜென்னிங்ஸ் குறிப்பிடுகின்றனார்.

கிராமப் பஞ்சாயத்துக்கள், அரிசனங்களின் வாழ்வுரிமை, குடிசைத் தொழில்கள், பசு-வதைத்தடை மதுவிலக்கு போன்றவை சம்பந்தப்பட்ட கோட்பாடுகளில் காந்தியத் தத்துவத்தைக் காணலாம்.

நாடு முழுமைக்கும் ஒரே சீரான உரிமை இயல்விதி, கட்டாயக் கல்வி, நவீன விஞ்ஞான முறைகளிலான வேளாண்மை, கால்நடைப் பராமரிப்பு, பிற துறைகளினின்றும், நீதித்துறையைப் பிரித்தல், பன்னாட்டு அமைதியையும், பாதுகாப்பையும் வளர்த்தல் போன்றவை சம்பந்தப்பட்ட கோட்பாடுகளை முற்போக்கான ஆய்வறிவு சார்ந்தவை எனலாம். பிறகோட்பாடுகள் யாவும் பொதுப்படையானவையே.

**திறனாய்வு**

அரசு நெறிமுறைக் கோட்பாடுகளை அரசியலமைப்பு வல்லுநர்கள் மிக வன்மையாகக் கண்டித்துள்ளனர். இந்நெறிமுறைக் கோட்பாடுகள்

புனித விழைவுகள் என்று சர் ஐவர் ஜென்னிங்ஸ் கூறுகின்றார். இவற்றை நமது அரசியலமைப்பில் சேர்த்ததன் மூலம் இங்கிலாந்தில் பத்தொன்பதாவது நூற்றாண்டில் நிலவிவந்த ஃபேபியன் பொதுநலத்துவம் இங்கு இறக்குமதி செய்யப்பட்டுள்ளது என்றும் இவர் கூறுகின்றார். இந்நெறிமுறைக் கோட்பாடுகளை அரசியலமைப்பில் சேர்த்தது முட்டாள்தனமான நடவடிக்கையென்றும் இவை அரசியலமைப்பிற்கு இழிவு தேடித்தருமென்றும் பேராசிரியர் K.C. வியர் கூறுகின்றார்.

சட்டத்தின் வலிமையற்ற இந்நெறிமுறைக் கோட்பாடுகட்கு அரசியலமைப்பு சார்ந்த முக்கியத்துவம் இல்லை எனச் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. அரசியல் நிர்ணய சபையின் அங்கத்தினரில் ஒருவரான நசுருதீன் இக்கோட்பாடுகளைப் புதுவருடத் தீர்மானங்கள் என அழைக்கின்றார். உணர்ச்சிகளின் குப்பைத் தொட்டி என்று டி.டி.கிருஷ்ணமாச்சாரி இவற்றை வர்ணித்தார்.

இக்கோட்பாடுகளை நல்லொழுக்க விதிகளாகக் கொண்டால் என டாக்டர் ஜென்னிங்ஸ் குறிப்பிடுகின்றார். இவை பொதுப்படையானவை என்று டாக்டர் K.C.வியர் கூறுகின்றார். முக்கியமானவையும் முக்கியமற்றவையும் இக் கோட்பாடுகளில் விருப்பு வெறுப்புகளையும் மட்டும் அடிப்படையாகக் கொண்ட பல கோட்பாடுகள் இங்கு காணப்படுகின்றன. மதுவிலக்கு போன்ற சில கோட்பாடுகள் நல்லொழுக்கத்தைச் செயலாற்ற முயற்சி செய்கின்றன. நல்லொழுக்கம் என்பது சட்டத்தால் செயலாற்றப்படக் கூடியதல்ல.

மக்கள் நல அரசை எய்துவதைக் குறிக்கோளாகக் கொண்டுள்ள நெறிமுறைக் கோட்பாடுகளில் இதனை எய்தும் முறைகள் கொடுக்கப்படவில்லை. காலப்போக்கில் இந்நெறிமுறைக் கோட்பாடுகள் முன்னேற்றத்தைத் தடை செய்யும் என்று டாக்டர் ஜென்னிங்ஸ் அஞ்சுகின்றார்.

இந்நெறிமுறைக் கோட்பாடுகள் பொருளற்றவை என்று நாம் அறவே புறக்கணிக்க முடியாது. ஆட்சித்துறைக்கும் வழிகாட்டியாக இவை செயல்பட்டு வருகின்றன. பொது நல அரசை உருவாக்குவதில் அந்நெறிமுறைக் கோட்பாடுகள் ஆற்றியுள்ள தொண்டினை இத்தருணத்தில் சரியாக அளவிட இயலாது எனினும் பொதுநல அரசை உருவாக்குவதில் இந்தியா பெருமளவு முன்னேற்றம் கண்டுள்ளது. என்பதனை நாம் மறுக்க முடியாது. குறிப்பாக 42வது அரசியல் திருத்தத்தில் அரசு வழிகாட்டு நெறிமுறைக்கு அடிப்படை உரிமையைவிட அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டிருந்தது.

சட்டத்தின் வலிமையற்ற நெறிமுறைக் கோட்பாடுகட்குப் பொதுமக்கட்கருத்து வலிமையளிக்கலாம். நாட்டின் நிர்வாகத்திற்கு அடிப்படையானவை இக்கோட்பாடுகள் என்று கூறியதின் மூலம் இவற்றிற்கு அரசியலமைப்பு புனிதத் தன்மை அளித்துள்ளது என்று முன்னாள் தலைமை நீதிபதி கன்னா கூறியுள்ளார். வரம்பு மீறுதல்களைக் கட்டுப்படுத்த இக்கோட்பாடுகளால் இயலும். அதிகாரத்தை ஏற்கும் எவரும் இக்கோட்பாடுகளைப் புறக்கணிக்க முடியாது. நெறிமுறைக் கோட்பாடுகளைச் செயலுறுத்துவதற்காக அடிப்படை உரிமைகள் மீது கட்டுப்பாடு விதிக்கப்பட்டால் மன்றங்கட்கும் இவை வழிகாட்டியாகத் திகழ்கின்றன. திட்டக் குழுவில் இக்கோட்பாடுகளினுடைய செல்வாக்கு வளர்ந்து கொண்டே வருகிறது.

## 3.3. அரசியலமைப்பு 31—வது விதியின் சிறப்புப் பண்புகள்

அரசியலமைப்பு 44வது திருத்தச் சட்டத்திற்கு முன்னர் விதி 34(1)ன்படி சட்டப்பூர்வமான அதிகாரத்தினாலன்றி எந்த ஒரு நபருடைய சொத்துரிமையையும் பறிக்க முடியாது. இந்திய குடிமக்கள் ஒவ்வொருவருக்கும் சொத்துரிமையையும் அதை அனுபவிக்கவோ அல்லது விற்கவோ உள்ள உரிமையையும் இதன் மூலம் அரசியலமைப்பு அளித்து பாதுகாத்து வந்தது. ஆனால் பொதுநலம் கருதி அரசாங்கம் இவற்றின் மீது சில கட்டுப்பாடுகளை விதிக்கலாம். இருப்பினும் சட்டத்தின் துணையின்றி ஆட்சித்துறையின் ஒரு நடவடிக்கை மூலம் ஒரு நபருடைய சொத்துரிமையைச் சாதாரணமாகப் பறிக்க முடியாது. எனவே இவ்வுரிமையைப் பறிக்க விழையும் எந்த ஒரு சட்டத்தையும் நீதிமன்றம் செல்லாது எனக் கூறலாம். அரசியலமைப்பின் அடிப்படை அமைப்பில் 31 வது விதியின் கீழ் கொடுக்கப்பட்டிருந்த சொத்துரிமை அரசியலமைப்பின் முதாலாவது நான்காவது, பதினேழாவது, இருபத்தி நான்காவது மற்றம் இருபத்து ஐந்தாவது திருத்தச்சட்டங்களால் திருத்தி அமைக்கப்பட்டுள்ளது. மனிதனை மனிதன் சுரண்டுவதை ஒரு முடிவுக்கு கொண்டு வருவதற்காகவே அரசாங்கம் சொத்துரிமை மீது சில கட்டுப்பாடுகளைக் கொணர்ந்தது. இதன் விளைவாகத் தான் ஜமீன்தாரி ஒழிப்புச் சட்டம், நிலச் சீர்திருத்தச் சட்டம், (நில உச்சவரம்புச் சட்டம்) மற்றும் வங்கிகளைத் தேசியமயமாக்கும் சட்டம், மன்னர் மானிய ஒழிப்புச் சட்டம் மற்றும் கிராமியக் கடன்கள் தள்ளிவைப்புச் சட்டங்கள் ஆகியன இயற்றப்பட்டன. ஆனால் கோகுல்நாத் வழக்கு மற்றும் வங்கிகள் தேசியமயமாக்கியதை எதிர்த்துத் தொடரப்பட்ட வழக்கு ஆகியவற்றில் இச்சட்டங்கள் அடிப்படை உரிமைகளை மிகவும் பாதிப்பதாகக் கருதி இந்த அடிப்படை உரிமைகளைத் திருத்தி அமைக்கப் பாராளுமன்றத்திற்கு அதிகாரம் கிடையாது என்று நீதித்துறை தீர்ப்பு வழங்கியது. இதனை அடுத்து 42—வது அரசியலமைப்புத் திருத்தம் கொண்டு வரப்பட்டு 31—

C—வது விதி திருத்தி அமைக்கப்பட்டது. இத்திருத்தம் வழிகாட்டு நெறிமுறைக் கோட்பாட்டின் முதன்மைத்துவத்தை நிறுவியதோடு, இக்கோட்பாடுகளின் அடிப்படையில் பாராளுமன்றத்தில் இயற்றப்படும் சட்டங்கள் விதிகள் 14, 19 அல்லது 31—ல் கொடுக்கப்பட்டுள்ள அடிப்படை உரிமைகளைப் பறிப்பதாகவோ அல்லது அவைகளுக்கு முரணானதாக உள்ளதாகவோ சுட்டிக் காட்டி அச்சட்டங்களை செல்லாது என அறிவிக்க நீதி மன்றங்களுக்கு அதிகாரம் கிடையாது என்பதையும் வலியுறுத்தியது.

இத்திருத்தங்களின் விளைவாக குடிமக்களின் சொத்துரிமை, ஆட்சித்துறையின் எதேச்சதிகார நடவடிக்கைகளின்றும் பாதுகாக்கப்பட்டதேயொழிய சட்டத்துறையின் பிடியிலிருந்து மீட்கப்படவில்லை. தலைமை நீதிமன்றங்களின் நீதிப்புனராய்வினால் மட்டுமே இவ்வதிகாரத்தை ஓரளவு கட்டுப்படுத்த முடியும். ஆனால் துரதிர்ஷ்டவசமாக நீதித்துறையின் இந்நீதிப்புனராய்வு அதிகாரம் அரசியலமைப்பின் தொடக்ககாலம் தொட்டு கொஞ்சம் கொஞ்சமாகச் சுருங்கி வருவதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

### 3.3.1. அரசியலமைப்பு 44வது உறுப்பின் சிறப்புத் தன்மைகள்

மேலும் 44வது அரசியலமைப்புத் திருத்தம் சொத்துரிமையை அடிப்படைஉரிமைகளிலிருந்து நீக்கி, அதனை ஒரு சாதாரணச் சட்டபூர்வ உரிமை ஆக்கியது.

42 வது அரசியலமைப்புத் திருத்தம் மேற்கொள்ளப்படுமுன், நெறிமுறைக் கோட்பாடுகளின் விதிகள் 39(b) மற்றும் (c) ஆகியவற்றில் காணப்பட்ட கொள்கைகளை அரசு நடைமுறைப்படுத்துவதற்கு விதி 31(c) வழிவகை செய்திருந்தது. அத்துடன் அவ்வாறு இயற்றப்படும் சட்டங்கள் விதிகள் 14, 19 மற்றும் 31ல் கொடுக்கப்பட்டிருக்கும் அடிப்படை உரிமைகளுக்கு முரண்பாடாக உள்ளன. என்ற காரணத்தால் நிராகரிக்கப்படுவதிலிருந்தும் விதி 31(c) பாதுகாத்து வந்தது. மேலும் செல்வங்களும் உற்பத்திக் காரணிகளும் நாட்டின் பொது நலனுக்குத் தீங்கு விளைவிக்கும் வண்ணம் ஓரிடத்தில் குவிவதைத் தடுக்கும் முறையில் அரசு சட்டங்களை இயற்றி, அதன் மூலம் பொருளாதார முறை அமைப்பைக் கட்டுப்படுத்துவதற்கு விதி 39 வழிவகைகள் செய்தது. இவ்வாறு இவ்விரு நெறிமுறைகளை மட்டும் நடைமுறைப்படுத்துவதற்கென்று கொடுக்கப்பட்டிருந்த சட்டப்பாதுகாப்பு, 42வது அரசியல் அமைப்புத்திருத்தத்தின் மூலம் எல்லா நெறிமுறைக் கோட்பாடுகளும் வழங்கப்பட்டது. இதன் மூலம் நம் அரசியலமைப்பின் அடிப்படை அமைப்பின் ஒரு பகுதியாக விளங்கும் விதிகள் 14, 19

மற்றும் 31—ஐ பாராளுமன்றமும் மாநிலச் சட்டமன்றங்களும் சுருக்கி விடக்கூடும்.

1973ல் நடந்த கேசவானந்த பாரதி வழக்கில் விதி 368ன் கீழ் பாராளுமன்றம் அரசியலமைப்பின் எப்பகுதியையும் திருத்தி அமைக்க அதிகாரம் பெற்றிருப்பினும், அரசியலமைப்பின் அடிப்படை அமைப்பையோ அல்லது அதன் அடிப்படைப் பண்புகளையோ திருத்தி அமைக்க அதற்கு அதிகாரம் கிடையாது என்று உச்ச நீதிமன்றம் தீர்ப்பு வழங்கியது.

## 3.3.2. N.A. பல்கிவாலா கருத்து

N.A. பல்கிவாலா கருத்துத் தெரிவிக்கையில் "கேசவானந்த பாரதி வழக்கில் தலைமை நீதிமன்றம் வழங்கிய தீர்ப்பின் பின்னனியில் காணப்படும் அடிப்படைக் கோட்பாடு மிகவும் எளிமையாகவும் ஒத்துக் கொள்ளக் கூடியதாகவும் உள்ளது". மேலும் பாராளுமன்றமானது நம் அரசியலமைப்பினால் உருவாக்கப்பட்ட ஒரு அமைப்பே ஆகும். எனவே பாராளுமன்றத்திற்கு அடிப்படை அரசியலமைப்பை அழிக்கும் அதிகாரம் இருக்குமேயானால் அங்கு அரசியலமைப்பினால் உருவாக்கப்பட்ட ஒரு அமைப்பு என்ற நிலை நீங்கி அதனுடைய எசமானராக மாறிவிடக் கூடும் என்று கூறினார். அத்துடன் 42வது திருத்தத்தின் கீழ் விதி 31 (C) யினால் நேரக்கூடும் தீய விளைவுகளையும் அவர் சுட்டிக் காட்டினார். அவை பின் வருமாறு:

1. விதி 31 (C) நம் அரசியலமைப்பைத் தலைகீழாக மாற்றுகிறது. இவ்விதி சட்டப்பூர்வமாக நடைமுறைப்படுத்த வேண்டிய அடிப்படை உரிமைகளைச் செயற்படுத்த முடியாத வண்ணம் செய்திருப்பதுடன் இதுவரை குடிமக்களின் அடிப்படை உரிமைகளுக்கொதிராகச் சட்டப்பூர்வமாக நடைமுறைப்படுத்தப்பட்ட முடியாமலிருந்த நெறிமுறைக் கோட்பாடுகளைச் செயற்படுத்த வழிவகைகள் செய்துள்ளது.
2. அரசியல் நிர்ணய சபை எந்த ஒரு திட்டத்தை நிராகரித்ததோ அதனை இவ்விதி புதுப்பிக்கிறது.
3. அடிப்படை உரிமைகளுக்கும் நெறிமுறைக் கோட்பாடுகளுக்குமிடையே தோற்றுவிக்கப்பட்ட ஓர் ஆற்றல் மிக்க, உருவாக்கும் திறன் படைத்த உடன்பாட்டை இவ்விதி அழித்துவிட்டது.
4. நீதித் துறைக்கும் சட்டத் துறைக்குமிடையே உருவாக்கப்பட்ட உடன்பாட்டையும் இவ்விதி குலைக்கிறது. விதிகள் 14 மற்றும் 19 ஆகியவற்றின் பாதுகாப்பிற்காகக் கொடுக்கப்பட்டுள்ள விதிகளை அர்த்தமற்றவையாக்குகிறது.

5. இந்த வழிகாட்டி நெறிமுறைகள் மிகவும் பரந்த நோக்குடையவை. விதி 31(C) மூலம் இவற்றிற்காக விதிக்கப்படும் கட்டுப்பாடுகள் உண்மையில் கட்டுப்பாடுகளே அல்ல. எனினும் குறிப்பிட்ட ஒரு அடிப்படை உரிமையைத் திருத்த வேண்டுமெனில் பாராளுமன்றத்தில் விசேடப் பெரும்பான்மை தேவைப்படுகிறது. ஆனால் அதே சமயத்தில் 31—C அளிக்கும் பாதுகாப்பின் பேரில் பல அடிப்படை உரிமைகளைப் பாதிக்கும் வகையில் எந்த ஒரு விசேட முறையோ அல்லது பெரும்பான்மையோ இல்லாமல் சாதாரணச் சட்டங்கள் இயற்றப்பட்டுவிடலாம். இது மாநிலச் சட்டமன்றங்களுக்கும் பொருந்தும். ஆகவே மாநிலங்களின் அரசாங்கப் போக்கினை ஒட்டிச்சில மாநிலங்களில் சில அடிப்படை உரிமைகள் இருக்கக்கூடும் சிலவற்றில் இல்லாமற் போகக்கூடும்.

விதி 31, 42வது திருத்தச் சட்டத்திற்குப் பின் இவ்விதி கீழ்க்காணுமாறு உள்ளது.

“13வது விதியில் கூறப்பட்டிருப்பது யாதாயிருப்பினும் 4—ஆம் பகுதியில் இடம் பெற்றுள்ள நெறிகாட்டுநியதி ஒன்றையோ, அனைத்தையுமோ அடையும் பொருட்டு இயற்றப்படும் சட்டத்தினை அச்சட்டமானது விதி 14, விதி 19, விதி 31 ஆகியவை அளிக்கும் உரிமைகளை மீறுவதாகவோ பறிப்பதற்காகவோ எண்ணி, செல்லாது என்று கருதக்கூடாது. மேலும் இத்தகைய நெறிகாட்டு நியதியை நடைமுறைப்படுத்துவதற்காக என்ற அடிப்படையில் எந்த நீதிமன்றத்திலும் எழுப்பக்கூடாது.

ஆயினும் இத்தகைய ஒரு சட்டத்தினை மாநில அரசின் சட்டமன்றம் இயற்றியிருந்தால், அச்சட்டமானது குடியரசுத் தலைவரின் பார்வைக்காக அனுப்பப்பட்டு அவரது இசைவினைப் பெற்றிருந்தாலன்றி இவ்விதி அங்கு பொருந்தாது” முதன் முதலாக விதி 31 C 1972ல் அரசியலமைப்பில் ஏற்றப்பட்டது. இதன் நோக்கம் விதி 39(b) (c) ஆகியவற்றிலுள்ள நெறிகாட்டு நியதிகளைக் காப்பதாகும் 42வது திருத்தச் சட்டமானது இத்தகைய காப்பினை 4—ஆம் பகுதியிலுள்ள எல்லா நியதிகளுக்கும் எட்டுமாறு செய்தது. இதனால் எந்த நியதியையும் நிறைவேற்றுவதற்காக இயற்றப்படும் சட்டத்தினை அது அடிப்படை உரிமைகளைப் பாதிக்கின்றது என்று சொல்லி வழக்காடி, செல்லாது என்று கூறமுடியாது. ஆனால் 1973ல் கேசவானந்த பாரதி வழக்கில் உச்சநீதிமன்றம் தனது பெரும்பான்மைத் தீர்ப்பு மூலம் இவ்விதியின் ஒரு பகுதியை (மேலும்... எழுப்பக்கூடாது) செல்லாது என்று கூறிவிட்டது. ஏனெனில் இப்பகுதி நீதிமன்றத்துக்க உள்ள நீதிப்புனராய்வு அதிகாரத்தைக் குறைப்பதாகும் என்றும், பாராளுமன்றத்தின் திருத்த

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக் கேள்விகள்

1. சொத்துரிமை நீக்கம் பற்றி விவாதி.

2. ஆட்கொணர் நீதி பேராணை பற்றி குறிப்பு எழுதுக.

3. அடிப்படை உரிமை மீது விதிக்கப்பட்டுள்ள கட்டுப்பாடுகளை ஆய்க.

அதிகார வரம்பினை மீறியதாகும் என்றும் நீதிமன்றம் கருதியது. 41ஆவது திருத்தச் சட்ம் (1976ல்) இத்தீர்ப்பினால் ஏற்பட்ட விளைவைக் கருத்தில் கொள்ளவில்லை. ஆகவே இன்றும் உச்சநீதிமன்றமானது விதி 31(c)-இன் ஒரு பகுதியைப் புறக்கணித்து நெறிகாட்டு நியதிச் சட்டங்களை நீதிப்புனராய்வு செய்ய முடியும்.

“முன்னுரையில் சொல்லப்பட்ட அரசியலமைப்பின் குறிக்கோள்கள் பெரும்பாலும் அடிப்படை உரிமைகள் மூலமே எய்தப்படுகின்றன ... உரிமைகள் தனிமனிதனால் மட்டுமே அனுபவிக்கக் கூடியவை. இவை சுதந்திர மக்களாட்சிச் சமுதாயத்தின் பரந்த, உயரிய தேசீய மற்றும் சமூக நலனுக்காக தனிமனிதனுக்கு அளிக்கப்படுகின்றன. ஆகவே தான் தமது அரசியலமைப்பு அடிப்படை உரிமைகளுக்கு ஏற்றம் தந்தது. “ என்று H.M. சீர்வாய் என்பவர் கருத்துத் தெரிவித்துள்ளார்.

குடிமக்களின் அடிப்படை உரிமைகளை மீறி அரசு நெறிமுறைக் கோட்பாடுகளுக்கு முதன்மைத்துவம் அளிக்கும் வகையில் 42வது அரசியலமைப்புச் திருத்தத்தின் மூலம் விதி 31 (C)யில் கொண்டு வரப்பட்ட மாற்றங்கள் செல்லாது என்று நம் தலைமை நீதிமன்றம் 1980ஆம் வருடம் மே மாத் தான் வழங்கிய தீர்ப்பு ஒன்றில் அறிவித்தது. இவ்வாறு அரசியலமைப்பில் மேற்கொள்ளப்பட்ட திருத்தங்கள் அரசியலமைப்பின் அடிப்படைப் பண்புகளைத் தகர்ப்பதாகவும், கேசவானந்த பாரதி வழக்கில் நீதிமன்றம் வழங்கிய தீர்ப்பை மீறுவதாகவும் உள்ளதாக நீதிமன்றம் சுட்டிக்காட்டியது. இதன் விளைவாக பாராளுமன்றத்திற்கு நெறிமுறைக் கோட்பாடுகளின் கீழ் சட்டமியற்றும் அதிகாரம் விதிகள் 39 (டி) மற்றும் (உ) ஆகிய இரு பிரிவுகளுக்கு மட்டும் தான் உண்டு எனக் குறைக்கப்பட்டது. அத்துடன் நம் அரசியலமைப்பு அது 42வது அரசியலமைப்புத் திருத்தத்திற்கு முன்பிருந்த உயரிய நிலையைத் திரும்பப்பெற்றது.

தலைமை நீதிமன்றத்தின் இத்தீர்ப்பு நம் அரசியலமைப்பின் வரலாற்றில் ஒரு குறிப்பிடத்தக்க அம்சமாகும் ஏனெனில்

1. இது அரசியலமைப்பில் மேற்கொள்ளப்படும் திருத்தங்களை நீதிமன்றம் புனராய்வு செய்ய குறிப்பிடத்தக்க அம்சமாகும் ஏனெனில்
2. பாராளுமன்றத்தின் அரசியலமைப்புத் திருத்த அதிகாரத்தைக் கட்டுப்படுத்துகிறது.
3. நெறிமுறைக் கோட்பாட்டிற்கு மேலாக அடிப்படை உரிமைகளுக்கு அளிக்கப்பட்டடிருந்த முன்னுரிமைகளை அவற்றிற்கு மீட்டுத் தருகிறது.

## 3.4. தொகுப்புரை

இந்த அலகில் மாணவர்கள் உரிமையும், கடமையும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள் என்பதினை அறிய முடிந்தது. அரசியலமைப்பில் அடிப்படை உரிமைகளுக்கு அடுத்தாற்போல் வழிகாட்டு நெறிக்கொள்கைகள் வகுக்கப்பட்டுள்ளன. இந்தியாவில் அடிப்படை உரிமைகளுக்கு முன்னுரிமை கொடுக்கலாமா என்ற பிரச்சனை நீண்ட காலமாக விவாதிக்கப்பட்டு வந்தது. இதற்கு 44வது அரசியலமைப்பு திருத்தம் ஒரு முற்றுப்புள்ளி வைத்து அதாவது இவ்விதி சொத்துரிமையை நீக்கி உள்ளத. அதன்படி அடிப்படை உரிமைகளைக்காட்டிலும் வழிகாட்டு நெறிக்கொள்கைகள் மேலானதென்று முடிவுசெய்து, சில அடிப்படை கடமைகளையும் மக்கள் மீது சுமத்தப்பட்டுள்ளன.

## 3.5. முக்கிய வார்த்தைகள்

1. அடிப்படை உரிமைகள் : ஜனநாயக நாடுகளில் ஜனநாயக பரவிற்கு ஏற்ப மக்களுக்கு பேச்சுரிமை, சமத்துவஉரிமை, சுதந்திர உரிமை, கல்வி உரிமை அரசியலமைப்பின் மூலம் பெறுதல்

2. அடிப்படைக் கடமைகள் : தேசிய கீதம், கொடி, சுற்றுக்சூழல், பொதுச் சொத்து போன்றவற்றை பேணி பாதுகாத்தல்

3. அரசு நெறிக்கோட்பாடுகள்: மக்கள் சமூக, அரசியல் மற்றும் பொருளாதார மேம்பாட்டிற்கும் சமூக நீதியை நிலை நாட்டுவதற்கும் அரசு விதித்து நெறிமுறையாகும்.

4. அரசியலமைப்பு 40வது விதி: கிராம பஞ்சாயத்துக்களை அமைக்க வழிவகை செய்தல்

5. அரசியலமைப்பு 44 விதி : சொத்துரிமையை நீக்கியது

## 3.6. முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக் கேள்விக்கான பதில்கள்:

கேள்வி எண்: 1 : இந்த கேள்விக்கான விடைகள் பகுதி எண்: 3.1.1.(5)ல் அறிக

கேள்வி எண்: 2 : இந்தக்கேள்விக்கான விடையை பகுதி எண்: 3.1.2.ல் அறிக

கேள்வி எண்: 3 : இந்தக் கேள்விக்கான விடையை பகுதி எண்: 3.1.2ல் அறிக

## 3.7. இந்த அலகு சம்பந்தப்பட்ட மேலும் படிக்க வேண்டிய நூல்கள்

1. Gnanaprakasam.C : and Alagumalai..A : Modern Governments; rivuchuderagam, Madurai,1991.
2. Bakshi.P.M., The constitution of India, Universal Law Publishing, New Delhi,2002
3. Duley.S.N; Modern Governments, Varain's Seeries,2002.
4. Kashyap, Subhas, Our constitution; An introduction to India's constitution and Law; National Book Trust, India; 2008.

## 3.8. வினாக்கள் / செயல்முறைப் பயிற்சிகள்

1. இந்திய அரசியலமைப்புச் சட்டத்தினால் உத்திரவாதம் அளிக்கப்படும் உரிமைகள் யாவை? அவை எங்ஙனம் பாதுகாக்கப்படுகின்றன.
2. இந்திய அரசியலமைப்பில் கூறப்பட்டுள்ள அடிப்படை கடமைகளை விவரி.
3. டாக்டர்.அம்பேத்கார் அவர்கள் விதி எண்: 32—ஐ இந்திய அரசியலமைப்பின் "இதயம் மற்றும் உயிர்" என கூறுகிறார் — ஏன்?
4. இந்திய அரசியல் சாசனத்தில் கூறப்பட்டுள்ள அரசு வழிகாட்டி நெறிகள் யாவை? அவற்றை அச்சிடப்பட்டுள்ள காகிதத்தின் மதிப்புக் கூட இல்லை என்பது உண்மையா?
5. வழிகாட்டி நெறிகளுக்கும் அடிப்படை உரிமைகளுக்கும் இடையேயுள்ள வேறுபாட்டை ஆராய்க.

# அலகு — 4

## கூட்டாட்சி — இந்தியாவில் மத்திய – மாநில உறவுகள்

### முன்னுரை

இந்திய அரசியலமைப்பு ஒரு கூட்டாட்சி தன்மைக்கு வழிவகுத்துள்ளது. பல அரசியல் வல்லுநர்கள் இந்தியாவில் மத்திய அரசாங்கத்திற்கு அதிக அதிகாரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன என்று குற்றம் சாட்டியுள்ளனர். இதற்கான காரணம் அரசியல்அமைப்பு உருவாக்கப்பட்ட சூழ்நிலையில் ஓர் வலிமையான மத்திய அரசு தேவைப்பட்டது. எனவே அரசியல் அமைப்பு உருவாக்கியவர்கள் மத்திய அரசுக்கு அதிக அதிகாரங்கள் தந்துள்ளனர். இருந்த போதிலும் இந்தியா ஒரு கூட்டாட்சி நாடாகும். இந்திய கூட்டாட்சியில் 28 மாநிலங்கள், 7 யூனியன் பகுதிகளும் இடம்பெற்றுள்ளன. இந்தியக் கூட்டாட்சி தோன்றிய விதத்திலும், இயங்குகின்ற விதத்திலும் கனடாவின் கூட்டாட்சிய பண்புகளே அதிகமாக தென்படுகின்றன. ஆனால் இந்தியாவை கூட்டாட்சி என்றோ, தூய ஒற்றையாட்சி என்றோ கூறுவதற்கில்லை. அது இரண்டும் கலந்த புதுக்கலவை ஒன்று துர்க்கா பாஸ் கூறுகிறார்.

### நோக்கங்கள்: (Objectives)

இந்திய அரசியலமைப்பால் காணப்படும் கூட்டாட்சி பண்புகளை புரிந்து கொள்ளுதல்.
இந்திய அரசியலமைப்பில் காணப்படும் ஒற்றையாட்சி தன்மைகளை கற்றறிதல்.
இந்திய அரசியலமைப்பில் நிலவும் மத்திய—மாநில உறவுகளை தெரிந்து கொள்ளுதல்.
மத்திய—மாநில உறவுகளை வலுப்படுத்துதல் மண்டலக்குழுக்களின் பங்கினை அறிதல்.

### அலகின் வடிவமைப்பு (Unit Structure)

இந்திய அரசியலமைப்பில் காணப்படும் கூட்டாட்சி பண்புகள்
ஒற்றையாட்சியின் தன்மைகள்
மத்திய—மாநில உறவுகள்
ராஜமன்னார் குழு பரிந்துரை
மத்திய—மாநில உறவுகளை வலுப்படுத்துவதில் மண்டலக்குழுக்களின் பங்கு.

காஷ்மீரின் நிலை
தொகுப்புரை
முக்கிய வார்த்தைகள்
முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக் கேள்விகளுக்கான பதில்கள்
இந்த அலகு சம்பந்தப்பட்ட மேலும் படிக்க வேண்டிய நூல்கள்
வினாக்களும் / செய்முறை பயிற்சிகள்.

## 4.1. இந்திய அரசியலமைப்பில் காணப்படும் கூட்டாட்சி பண்புகள்:

**1. எழுதப்பட்ட அரசியலமைப்பு**

இந்திய அரசியலமைப்பு ஓர் எழுதப்பட்ட ஒன்றாகும். இதில் 395 விதிகளும் 12 அட்டவணைகளும் மற்றும் 24 பகுதிகளாக உள்ளன. உலகிலேயே மிகப்பெரிய அரசியலமைப்பாக இந்திய அரசியலமைப்பு திகழ்கிறது. மத்திய அரசுக்கும் மாநில அரசுக்கும் எழுந்தால் அரசியல் அமைப்பே சான்றாகத் திகழ்கிறது. எழுதப்பட்ட அரசியலமைப்ப மிக முக்கிய அம்சமாகக் கருதப்படுவதற்குக் காரணம் அது நீதிமன்றத் தீர்ப்புகளுக்கு ஆதாரமாகக் கருதப்படுகிறது. இந்திய அரசியலமைப்ப மிக நீளமானதாக இருப்பதற்குக் காரணம் அரசியல் நிர்ணய சபையில் பங்கு பெற்றவர்களில் பெரும்பான்மையானோர் சட்ட வல்லுநர்கள் ஆவர். அதனால் பலருடைய கருத்துக்களின்படி பற்பல சட்டங்கள் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. இந்தியாவில் அரசியலமைப்பே உயர்வானதாகக் கருதப்படுகிறது. எல்லா மத்திய மாநில அரச நிறுவனங்களும் அரசியலமைப்பிலிருந்தே அதிகாரங்களைப் பெறுகின்றன. மத்திய மாநில அரசாங்கங்கள் அரசியலமைப்பிற்குட்பட்டே செயல்படுகின்றன.

**2. இரண்டு வித அரசாங்கங்கள்**

இந்தியக் கூட்டாட்சியில் தற்போது ஒரு மத்திய அரசாங்கமும் 28 மாநில அரசாங்கங்களும் இருக்கின்றன. இவை தவிர மத்திய அரசின் நேரடிப் பார்வையிலுள்ள 6 ஒன்றியப் பிரதேசங்களும் 1 தேசியத்தலைநகர் பகுதி அரசாங்கமும் செயல்பட்டு வருகின்றன. ஒன்று மற்றொன்றின் அதிகாரத்தில் தலையிடாமல் செயல்படுகின்றன.

**3. பிரிந்து செல்லும் உரிமையில்லை**

எந்த ஒரு மாநிலமோ அல்லது சில மாநிலங்கள் சேர்ந்தோ மத்திய அரசின் கட்டுப்பாட்டிலிருந்து பிரிந்து செல்ல முடியாது. இது உள்நாட்டுப் போர் வராமல் தடுக்கப்பயன்படுகிறது. சோவியத் யூனியன் கூட்டமைப்பில் மாநிலங்களுக்குப் பிரிந்து செல்லும் அதிகாரம்

கொடுக்கப்பட்டுள்ளது. ஆனால் இந்தியாவில் அத்தகைய உரிமை இல்லை. உண்மையான கூட்டாட்சியில் பிரிந்து செல்லும் உரிமை எந்த மாநில அரசுக்கும் கிடையாது. எனவே இந்தியா பிரிக்கப்பட முடியாத மாநில அரசுகளையும், அழிக்கப்பட முடியாத அரசையும் கொண்டுள்ளது.

4. நெகிழா அரசியலமைப்பு

ஒவ்வொரு கூட்டாட்சியும் ஏறத்தாழ நெகிழா அரசியலமைப்பைக் கொண்டிருக்கும். அரசியலமைப்பு அடிக்கடி திருத்தப்பட்டால் முடிவில் அதிகாரங்கள் மைய அரசிடம் குவிய வாய்ப்பிருக்கிறது. எனவே திருத்த முறை கடினமாக்கப்பட்டுள்ளது. கூட்டாட்சித் தன்மையில் மாற்றம் ஏற்படுத்த வேண்டுமென்றால் அதற்குரிய தீர்மானம் பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்டு பாதிக்கு மேற்பட்ட மாநில அரசுகளால் உறுதி செய்யப்பட வேண்டும்.

5. சுய ஆட்சி உரிமை

வரி விதிப்பதிலும் வசூலிப்பதிலும் மாநிலங்களுக்கும், உள் ஆட்சிகளுக்கும் (Local Self Government) அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது. ஒற்றையாட்சி முறையிலும் இத்தன்மை உண்டு. ஆனால் கூட்டாட்சிக்கு இது மிக முக்கியமானதாகும்.

6. சுதந்திரமான மத்திய அரசு

மத்திய அரசு அரசியல் நோக்குடனோ பொருளாதார ரீதியிலோ மாநில அரசாங்கங்களை முழுமையாகச் சார்ந்திருந்தால் அது கூட்டாட்சி அல்ல. எனவே இந்திய அரசியலமைப்பு மத்திய அரசு மாநில அரசுகளின் கட்டுப்பாட்டிலிருந்து விடுபட்டுச் சுதந்திரமாக உள்ளது. மத்திய அரசுக்குரிய அதிகாரப் பட்டியலில் (Union List) மாநில அரசுகள் எக்காரணத்தைக் கொண்டும் தலையிட முடியாது. வரி விதிப்பதிலும், வசூலிப்பதிலும் மத்திய அரசுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டுள்ளது. நாடு தழுவிய முக்கிய இலாகாக்கள் யாவும் மத்திய அரசிடமே உள்ளன.

7. ஈரங்க சபை

பாராளுமன்றத்தில் மாநிலங்களைப் பிரதிநிதித்துவப் படுத்தும் வகையில் இரண்டாவது சபை மிக முக்கியமானதாகும். இந்தியாவின் அரசியலமைப்ப இதற்க வழிவகுத்துள்ளது. இந்தியப் பாராளுமன்றம் மக்களவை (Lok sabha) மற்றும் மாநிலங்களவை (Rajya Sabha) ஆகிய ஈரவைகளைக் கொண்டுள்ளது. மக்களவை மக்களால் நேரடியாகத்

தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக் கொண்டுள்ளது. மாநிலங்களின் சட்டமன்ற உறுப்பினர்களால் தோந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைக் கொண்டதே மாநிலங்களவையாகும். இருப்பினும் மாநிலங்களைவையில் 12 உறுப்பினர்களைக் குடியரசுத் தலைவர் நியமிக்கிறார்.

8. இரண்டு விதமான நீதிமன்றங்கள்

நாடு முழுவதற்கும் ஒரு நீதிமன்றமும் பிராந்திய அளவில் பல நீதிமன்றங்களும் கூட்டாட்சிக்குத் தேவை. சில கூட்டாட்சிகளே இத்தகைய தன்மையைக் கொண்டுள்ளன. (உம்) அமெரிக்கா மெக்ஸிகோ மற்றும் பிரேசில். இந்தியாவில் மத்தியில் ஒரு உச்ச நீதிமன்றமும் (Supreme Court) மாநிலங்களில் உயர்நீதி மன்றங்களும் (High Court) அமைக்கப்பட்டுச் செயல்பட்டு வருகின்றன.

9. நீதிப்புனராய்வு

கூட்டாட்சி அரசியலமைப்பில் சுதந்திரமான நீதித்துறை தேவை. இந்தியாவில் உச்ச நீதிமன்றம் அரசியலமைப்பின் காவலனாக (Guardian) உள்ளது. மக்களின் அடிப்படை உரிமைகளைப் பாதுகாக்கிறது. மத்திய மாநில அரசுகளுக்கிடையே எழும் சச்சரவுகளையும் மாநிலங்களுக்கிடையே உள்ள பிரச்சனைகளையும் உச்ச நீதிமன்றம் தீர்த்து வைக்கிறது. நிர்வாகத் துறையோ, பாராளுமன்றமோ உச்ச நீதிமன்றத் தீர்ப்பில் தலையிட முடியாது. பாராளுமன்றம் அல்லது மாநிலச் சட்டமன்றங்கள் இயற்றிய சட்டங்களில் எவையேனும் அரசியலமைப்பிற்க எதிராக இருப்பின் அச்சட்டத்தைச் செல்லாது என அறிவித்துத்தடை செய்யும் அதிகாரம் நீதித்துறைக்க உண்டு. இதுவே நீதிப்புணராய்வு எனப்படும். இவ்வாறு இந்தியாவில் நீதித்துறை சுதந்திரமாகவும் எவ்விதத் தலையீடுமின்றியும் செயல்பட்டு வருகிறது.

10. தெளிவான அதிகாரப் பங்கீடு

மத்திய மாநில அரசுகளுக்கிடையே அதிகாரங்கள் தெளிவாக வரையறுக்கப்பட்டிருப்பது கூட்டாட்சி முறைக்குத் தேவையான பண்பாகும். அதிகாரப்பங்கீடு கூட்டாட்சியின் இருதயம் எனக் கூறலாம். இந்திய அரசியலமைப்பு மத்திய, மாநில அரசுகளின் அதிகார வரம்பைக் குறிப்பிட்ட மூன்று வகையான பட்டியல்களைக் கொண்டுள்ளது. அவை:

1. மத்தியப் பட்டியல் — 97 அதிகாரங்கள்
   (Union List)
2. மாநிலப் பட்டியல் — 66 அதிகாரங்கள்

(State List)

3. பொதுப்பட்டியல் — 47 அதிகாரங்கள்

பாதுகாப்பு, வெளியுறவு, ரயில்வே, ரிசர்வ் வங்கி, கப்பல் போக்குவரத்து, விமானப் போக்குவரத்து, மத்தியப் புலனாய்வு, தபால். தேசிய நெடுஞ்சாலை, உலக வர்த்தகம், மக்கள் தொகைக் கணக்கெடுப்பு, வரலாற்றுச் சின்னங்கள் போன்ற முக்கியத் துறைகள் ஒன்றியப் பட்டியலில் இடம் பெற்றுள்ளன. உள்ளாட்சி நிர்வாகம், பொது சுகாதாரம், உள்நாட்டு யாத்திரிகர்கள், எரிசாராயம், சிறைக் கைதிகள் நலன், விவசாயம், மீன்பிடிப்பு, சாலைப் பராமரிப்பு, கேளிக்கை வரிகள், மாநிலச் சட்டமன்ற உறுப்பினர்கள் மற்றும் மந்திரிகளின் சம்பளம், வீட்டு வரி, நிலவரி, போன்ற அம்சங்கள் மாநிலப் பட்டியலில் இடம் பெற்றுள்ளன.

கல்வி, தொழிலாளர் நலம், தர்ம நிலையங்களின் நிர்வாகம் விலை நிர்ணயம், காடுகள், சமூகநலம், வேலை வாய்ப்பு திருமணம் மற்றும் குற்றவியல் நடவடிக்கை போன்றவை பொதுப்பட்டியலில் சில.

### 4.1.1. ஒற்றையாட்சியின் தன்மைக்கான சில சான்றுகள்

1. இந்திய அரசிலமைப்பில் மைய அரசைக் குறிக்க ஒன்றியம் (Union) என்ற சொல்லே பயன்படுத்தப்பட்டுள்ளது. கூட்டாட்சி என்ற சொல்லே காணப்படவில்லை.

2. கூட்டாட்சி அரசுக்கு இரட்டைக் குடியுரிமை (Dual Citizenship) ஒரு அணிகலன். ஆனால் இந்தியாவில் ஒற்றைக் குடியுரிமை (Single citizenship) மட்டுமே வழங்கப்பட்டுள்ளது. காரணம் வலிமைமிக்க தேசியப்பற்றை வளர்க்கவே நமது தலைவர்கள் இத்தகைய ஏற்பாட்டைச் செய்துள்ளனர்.

3. இந்திய அரசியலமைப்பில் நெகிழாத்தன்மையை விட நெகிழும் தன்மையே அதிகம் உள்ளது. இதுவரை அரசியலமைப்பு 84க்கும் மேற்பட்ட தடவைகள் திருப்பட்டுள்ளன.

4. அதிகாரப் பங்கீடு மாநில அரசுக்குச் சாதமாக இருக்க வேண்டும். ஆனால் இந்திய அரசியலமைப்பு ஜம்மு—காஷ்மீர் தவிர எந்த மாநிலமும் தனியான அரசியலமைப்பை வைத்துக் கொள்ள அனுமதிக்கப்படவில்லை. பொதுப்பட்டியலில் மத்திய அரசும் மாநில அரசுகளும் சட்டமியற்ற முடியும் என்றாலும் இரு அரசுகளுக்கும் சச்சரவு ஏற்படும் பட்சத்தில் மைய அரசின் சட்டமே செல்லுபடியாகும். எஞ்சிய அதிகாரங்கள் (Residuary powers) யாவும் மத்திய அரசாங்கத்திடமே உள்ளன.

5. நெருக்கடி காலங்களில் இந்தியா ஓர் ஒற்றையாட்சி போல் செயல்படுகிறது.

6. மாநிலங்களில் முக்கிய ஆட்சித்துறைப் பொறுப்பை வகிக்கும் இந்திய ஆட்சித்துறைப் பணி (I.A.S) மற்றும் இந்திய காவல் துறைப் பணி (I.P.S.) அதிகாரகள் மத்திய அரசால் தெரிவு செய்யப்படுகிறார்கள்.

7. நாடு முழுவதும் ஒரே குற்றவியல் மற்றும் உரிமையியல் சட்டங்கள் பின்பற்றப்படுகின்றன.

8. 356 வது பிரிவின்படி மத்திய அரசு மாநில அரசுகளைக் கலைக்கும் அதிகாரம் பெற்றுள்ளது. இது அதிகாரத்தைப் பயன்படுத்தி கிட்டத்தட்ட 47 ஆண்டுகளில் 100க்கும் மேற்பட்ட தடவைகள் மாநில அரசுகள் கலைக்கப்பட்டள்ளன.

9. மாநிலங்களவையில் எல்லா மாநிலங்களுக்கும் சமநிலையில் பிரதிநிதித்துவம் வழங்கப்படவில்லை.

## 4.1.2. மத்திய மாநில உறவுகள்

இந்திய அரசியலமைப்பானது ஒரு கூட்டாட்சியின் சாயலைவிட ஒரு முக ஆட்சியின் சாயலையே அதிகம் பெற்றிருக்கிறது என்பதை முன்பே கண்டோம். ஆகவே மத்திய, மாநில உறவுகளைப் பொறுத்தவரையில் சட்டம், ஆட்சி, நீதி மற்றும் நிர்வாகத்துறைகளில் மாநிலங்களின் மீது மத்திய அரசானது ஆதிக்கம் செலுத்தும் வகையிலேயே அமைந்துள்ளது.

### I. சட்டத்துறை உறவுகள்

சட்டத்துறை அதிகாரங்களை அரசியலமைப்பானது மூன்று பட்டியல்களில், மத்திய, மாநில மற்றும் பொது விஷயங்களாகப் பிரித்து ஒதுக்கீடு செய்துள்ள போதிலும், சில சூழ்நிலைகளில் இவ்வொதுக்கீடு முறை நிறுத்தி வைக்கப்படலாம் அல்லது பாராளுமன்றத்தின் அதிகாரமானது மாநிலப்பட்டியல் மீதும் செல்லத்தக்கதாக விரிவுபடுத்தப்படலாம். ராஜ்ய சபையில் வந்திருந்து வாக்களிக்கும் உறுப்பினர்களில் 3ல் 2பங்கினர் மாநிலப் பட்டியலில் உள்ள ஒரு விஷயத்தில் நாட்டின் நலன் கருதி மத்தியப் பாராளுமன்றமே தற்காலிகமாகச் சட்டம் இயற்ற வேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றலாம். இத்தகைய தீர்மானங்கள் ஆண்டிற்கொருமுறை ஒவ்வொரு ஆண்டிற்கென புதுப்பிக்கப்படலாம். அவசரகால நிலை பிரகடனப்படுத்தப் பட்டிருக்கும் பொழுது, பாராளுமன்றம் மாநிலப்பட்டியலில் உள்ள விஷயங்கள் மீது சட்டமியற்றுவதற்கு அதிகாரம் பெற்றுள்ளது. மேலும் மாநிலப் பட்டியலில் உள்ள ஒரு சில விஷயங்களில், இரண்டு அல்லது அதற்க மேற்பட்ட மாநிலங்களின் சட்டமன்றங்கள் பாராளுமன்றத்தைச் சட்டமியற்றக் கோரினால் அத்தகைய சட்டங்களை

இயற்றுவதற்கு பாராளுமன்றம் அதிகாரம் பெற்றிருக்கிறது. சில உடன்படிக்கைகள் நிறைவேற்றப்படுவதற்கு மாநில விஷயங்களில் சட்டமியற்றப்படுவது அவசியமாக்கப்பட்டால் பாராளுமன்றம் அச்சட்டங்களை இயற்றுவதற்கேற்ற அதிகாரங்களையும் கொண்டுள்ளது. மாநிலங்களில் அரசு இயந்திரங்கள் அரசியலமைப்பிற்கொப்பச் செயல்பட முடியாமல் போகும் பொழுது குடியரசுத்தலைவர் அம்மாநில ஆட்சியை மேற்கொண்டால் அம்மாநிலத்தைப் பொறுத்தவரையில் விதி 356இன் படி பாராளுமன்றத்தின் அதிகாரத்தின் கீழ் அவர் சட்டங்கள் இயற்றலாம். மேலும், பொதுப்பட்டியலில் ஒரு விஷயத்தில் இயற்றப்பட்டுள்ள மத்திய, மாநிலச் சட்டங்கள் ஒன்றிற்கொன்று முரண்பட்டால் மத்தியச் சட்டமே செல்லுபடியாகும் (விதி 254இன் படி) இது தவிர பிற எஞ்சியுள்ள அதிகாரங்கள் அனைத்தும் மத்திய அரசிடமே காணப்படுகின்றன.

## II.நிர்வாக உறவுகள்

விதி 256இன் கீழ் பாராளுமன்றம் இயற்றும் சட்டத்திற்கு ஒப்பவே மாநில ஆட்சி அதிகாரம் செலுத்தப்படல் வேண்டும். மத்திய அரசின் ஆட்சித்துறை அதிகாரம் அதற்கென அவ்வப்போது அளிக்கும் நெறிமுறைகளை ஒட்டியே மாநில நிர்வாகம் நடைபெற வேண்டும் என்று உள்ள விதிகள் மத்திய மாநில நிர்வாக உறவுகளுக்கு அடிப்படையாகும். தேசிய மற்றும் இராணுவ முக்கியத்துவம் வாய்ந்த செய்தித் தொடர்புகளை நிர்மாணிப்பதிலும், பாதுகாப்பதிலும் மத்திய அரசு, மாநில அரசுகளுக்குக் கட்டளைகள் இடலாம். இரயில், தேசியப் பெருஞ்சாலை, நீர்வழித்துறை ஆகியவற்றைப் பாதுகாப்பதிலும் இத்தகைய கட்டளைகளை விடுவிக்கப்படலாம்.

விதி 258ன் படி குறிப்பிட்ட சில விஷயங்களில் ஆட்சித்துறைப் பொறுப்பானது மத்திய அரசு மற்றும் மாநிலங்களுக்கிடையே ஒன்றிற்கொன்று விஸ்தரிக்கப்படலாம். இப்பொறுப்புகள் மத்திய அல்லது மாநில அரசு அலுவலர்களிடம் நிபந்தனையுடனோ, இல்லாமலோ ஒப்புவிக்கப்படலாம். விதி 262இன் படி மாநிலங்களுக்கிடையேயான நதி அல்லது நதிப்பள்ளத்தாக்கு இவற்றைப் பொருத்தமட்டில் நீரை உபயோகப்படுத்துதல், பங்கிடுதல், கட்டுப்படுத்துதல் போன்றவற்றில் ஏற்படும் சச்சரவுகளையும், புகார்களையும் விசாரித்து முடிவு கட்ட வழிவகுக்கும் அதிகாரம் பாராளுமன்றத்துக்கு உண்டு. மாநிலங்களுக்கிடையே ஏற்படும் சச்சரவுகளை விசாரிப்பதற்காகப் பொதுநலம் கருதி ஒரு குழுவை அமைக்கும் அதிகாரம் விதி 263ன் கீழ் குடியரசுத் தலைவருக்கு அளிக்கப்பட்டுள்ளது.

## III. நிதித்துறை உறவுகள்

அரசியலமைப்பானது சில வரிகளை மத்திய அரசாங்கத்திற்கும், சில வரிகளை மாநில அரசாங்கத்திற்கும் முழுமையாக வழங்கியுள்ளது. சில வரிகள் மத்திய அரசாங்கத்தால் விதிக்கப்பட்டு மாநிலங்களால் வசூலிக்கப்படுகின்றன. சில வரிகள் மத்திய அரசாங்கத்தால் விதிக்கப்பட்டு, வசூலிக்கப்பட்டு மாநிலங்களுக்கு வழங்கப்படுகின்றன. சில வேளையில் மத்திய அரசு மாநிலங்களுக்கு மானிய உதவித் தொகையும் வழங்குகிறது.

### மத்திய அரசுக்கென அளிக்கப்பட்டுள்ள வரிகள்

சுரங்கம், கார்ப்பரேசன் வரிகள், சொத்துக்களின் முதலீடு மதிப்பின் மீதுள்ள வரிகள், வருமான வரியின் மீதுள்ள மேல்வரி, மத்தியப் பட்டியலில் உள்ள விஷயங்களின் மீது கட்டப்படும் கட்டணங்கள், புகையிலை மற்றும் இந்தியாவில் உற்பத்தி செய்யப்படும் பிற பொருட்களின் மீதான ஏற்றுமதி வரி (மனித உபயோகத்திற்காக உள்ள சாராயம் கலந்த திரவங்கள் மற்றும் ஓபியம், இதர மருந்துப் பொருட்கள் ஆகிய இதிலடங்கா)

### மாநிலங்களுக்கான பிரத்யேக வரிகள்

நிலவரி, விளைபொருட்கள், வருமானவரி, விளை வரி, கட்டடம் மற்றும் வீட்டுமனை வரி, சுரங்கப்பொருள் உரிமைகள் மீதான வரி, ஓபியம் மீதான வரி, மின்சார உபயோகம் மற்றும் விற்பனை மீதான வரி, வாகன வரி, உத்தியோக வரி, வணிக வரி முதலியன.

### மத்திய அரசால் விதிக்கப்பட்டு, வசூலிக்கப்பட்டு மாநிலங்களுக்கென ஒதுக்கப்படும் வரிகள்

விவசாய நிலங்கள் தவிர்த்த பிற சொத்துக்களின் வாரிசு உரிமை மீதான வரி, மரண வரி, பிரயாணிகள் மற்றும் பொருட்களின் மீதான போக்குவரத்து இறுதி இலக்கு வரிகள் மற்றும் இரயில் பிரயாணக் கட்டணங்களின் மீதான வரிகள்.

### மத்திய அரசாங்கத்தால் விதிக்கப்பட்டு, வசூலிக்கப்பட்டு மாநிலங்களுடன் பகிர்ந்து கொள்ளப்படும் வரிகள்

விளைபொருட்கள் சாராத வருமான வரிகள், மத்தியப் பட்டியலில் கண்டுள்ள சில பொருட்களின் மீதான ஆயத் தீர்வைகள்.

வரிசாராத வருமானத்தைப் பொறுத்த அளவில் மத்திய அரசாங்கம் இரயில் போக்குவரத்து, தபால் தந்தி, ஒலிபரப்பு, ஓபியம், நாணச் செலவாணி, தனதாதிக்கத்திலுள்ள தொழில் மற்றும் வியாபார நிறுவனங்கள் ஆகியவற்றை நம்பியுள்ளது.

மாநிலங்களின் வரிசாராத வருமானமானது காடுகள், நீர்ப்பாசனம் மற்றும் மாநில அரசாங்கத்தின் தொழில் வணிக நிறுவனங்களிடமிருந்து கிடைக்கின்றது.

அரசியலமைப்பானது மத்திய அரசு மாநிலங்களுக்கு உதவித்தொகை வழங்கவும் வழி வகுத்துள்ளது. மத்திய—மாநில உறவுகளைப் பற்றிக் குடியரசுத் தலைவருக்கு ஆலோசனை வழங்க சீரான இடைவெளிகளில் நிதிக் கமிஷன்கள் அமைக்க அரசியலமைப்பு வகை செய்துள்ளது. இவை தவிர அரசியலமைப்பில் மத்திய—மாநில நிதி உறவுகளைப் பாதிக்கும் வேறு சில விதிகளும் உள்ளன. நெருக்கடி நிலைக் காலங்களில் இந்திய அரசாங்கமானது ஒருமுக அரசாங்கத்தைப் போலவே செயல்படுகிறது. சாதாரண காலங்களில் கூட மத்திய அரசாங்கமானது மாநிலங்களின் மீது பல வகைகளில் நிதிக் கட்டுப்பாட்டினைச் செலுத்துகிறது. மத்தியிலிருந்து மாநிலங்களுக்கு அளிக்கப்படும் கட்டளைகளையும், வேலைகளையும், பொறுப்புக்களையும் மாற்றி ஒப்படைத்தல், மாநிலங்களுக்கிடையேயான குழுக்கள், திட்டக்குழு, மாநிலங்களுக்கிடையேயான வணிகக்குழு, தேசிய முன்னேற்றக் குழுக்கள், போன்றவை மூலம் இந்நிதிக் கட்டுப்பாடுகள் செலுத்தப்படுகின்றன. மாநிலங்களுக்கும் மத்திய அரசாங்கத்திற்குமிடையேயான உறவு ஒருவருக்கொருவர் வேலைப் பொறுப்பினை மாற்றிக் கொள்வதன் மூலமும் ஒரே வரியினை இருவரும் விதிக்காமலிருப்பதன் மூலமும் சீர்படுத்தப்படுகிறது. மாநிலங்களுகக்கிடையேயான உறவுகளைச் சீரமைக்க மாநிலங்களுக்கிடையேயான குழுவும், மண்டலக் குழுக்களும், நிதி வாரியங்களும், நதிநீர்ப் பிரச்சனைத் தீர்ப்புக் குழுக்களும் அமைக்கப்பட்டுள்ளன. வணிக வியாபாரச் சுதந்திரம் போன்ற ஒரு சில சுதந்திரங்களும் மாநிலங்களுக்கு வழங்கப்பட்டுள்ளன.

மேற்கூறிய சட்டத்துறை, நிர்வாகத்துறை மற்றும் நிதித்துறை உறவுகளைப் பாதிக்கும் அரசியலமைப்பு விதிகள் மத்திய அரசாங்கத்தையே வலுவுள்ளதாக்குகின்றன என்பது வெள்ளிடை மலை. இவற்றைத் தவிர வேறு சில காரணங்களும் மத்திய மாநில உறவுகளைப் பாதிக்கக் கூடும்.

மத்திய அரசாங்கமும், மாநில அரசாங்கமும் ஒரே அரசியல் கட்சியினால் அமைக்கப்படலாம். அவ்வாறு அமையும் போது கட்சியின்

பொது நலத்தை மனத்தில் வைத்து அதற்கிணங்க மத்திய, மாநில உறவுகள் சுமூகமாக இருக்க வாய்ப்பு அதிகம் உள்ளது. ஆனால் மத்திய, மாநில அரசாங்கங்கள் வெவ்வேறு அரசியற் கட்சியின் வசமிருந்தால் மத்திய—மாநில அல்லது மாநிலங்களுக்கிடையேயான உறவுகள் சுமூகமாயிருப்பதற்கு வாய்ப்புகள் மிகவும் குறைவு. இத்தகைய சூழ்நிலைகளில் ஆளுநரின் பதவி மிகவும் முக்கியத்துவம் பெற்றுள்ளது. ஆளுநர் கட்சியடிப்படையில், மத்திய அரசை ஆளும் கட்சியினரால் உண்மையில் நியமிக்கப்படுவதாலும், அவருக்குப் பல சிறப்பு அதிகாரங்கள் இருப்பதாலும், மாநில அரசாங்கத்தை கலைத்து விடுமாறு குடியரசுத் தலைவருக்கு ஆலோசனை வழங்கும் அதிகாரத்தை அவர் பெற்றிருப்பதாலும், மத்திய— மாநில உறவுகளை, கட்சி அமைப்பு செயல்படும் விதமும் ஓரளவு தீர்மானிக்கிறது எனலாம். அரசியலமைப்புத் திருத்தங்களிலும், மாநிலங்களுக்கு அதிக பங்கு இல்லை. அமெரிக்கா, சுவிட்சர்லாந்து மற்றும் ஆஸ்திரேலியா ஆகிய கூட்டாட்சிகளுடன் ஒப்பிடுகையில் இந்திய அரசியலமைப்பு மாநிலங்களை வலுவற்றதாகவே செய்துள்ளது என்பது விளங்கும்.

நம் அரசியலமைப்பில் மத்திய—மாநில உறவுகள் பற்றிக் காணப்படும் விதிகள் அனைத்தும் பலவாறாக விமரிசிக்கப்படுகின்றன. அயல் நாடுகளுடன் மேற்கொள்ளப்பட்ட உடன்பாடுகள் மற்றும் தீர்மானங்கள், அல்லது பன்னாட்டுக் கருத்தரங்குகள், கூட்டங்கள் அல்லது நிறுவனங்களில் மேற்கொள்ளப்படும் தீர்மானங்கள் ஆகியவற்றை வழங்கும் விதி 253 இல் பல ஆபத்துக்கள் புதைந்து கிடக்கிறது என்று டாக்டர் ஜென்னிங்ஸ் கூறியுள்ளார். இவ்விதியை துணைக் கொண்டு ஓரிரு அயல் நாட்டினரை அங்கத்தினராக கொண்டுள்ள ஒரு சில அமைப்புகள், அரசாங்கத்துடன் தொடர்பற்றோ அல்லது வேறு சில அரசியல் கட்சிகளுடன் தொடர்பு வைத்திருந்தாலோ மேற்குறிப்பிட்ட அங்கத்துவத்தைச் சுட்டிக்காட்டி பாராளுமன்றம் மாநிலங்களின் அலுவலகங்களில் தேவையில்லாமல் குறுக்கிட முடியும்.

மேலும் மத்தியிலும் மாநிலத்திலும் வெவ்வேறு கட்சிகள் ஆட்சிபுரியும் போது மத்திய அரசிடமிருந்து வரும் கட்டளைகளை மாநில அரசுகள் நிறைவேற்றவில்லை என்ற காரணத்திற்காகவே மாநில அரசுகளுக்கெதிராகச் செயலுறுத்தும் நீதிப்பேராணை வழங்குவதற்கு வழிவகைகள் செய்யும் விதிகள் 256 மற்றும் 257 ஆகியவற்றை ஜென்னிங்ஸ் கடுமையாக விமரிசித்துள்ளார். (மாநிலங்களுக்கு ஆட்சித்துறை கட்டளைகள் வழங்க மத்திய அரசிற்கு உள்ள அதிகாரத்தை இவ்விதிகள் குறிப்பிடுகின்றன)

கீழே கொடுக்கப்பட்டுள்ள அட்டவணையில் வலிமை வாய்ந்த அமெரிக்கக் கூட்டாட்சிக்கும் வலிமையற்ற இந்தியக் கூட்டாட்சிக்கும் உள்ள முக்கிய வித்தியாசங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

மேலும், மாநிலங்களுக்கிடையிலான குழுவை நிறுவுவதற்குக் குடியரசுத்தலைவருக்கு அதிகாரம் வழங்கும் விதி 264ன் பயன்களைப் பற்றியும் அவர் ஐயப்பாடு கொள்கிறார். அது பற்றி அவர் கருத்து தெரிவிக்கையில் "நாட்டின் தலைமை அமைச்சருக்கும், மாநிலங்களின் முதல்வர்களுக்குமிடையே கூட்டப்படும் மாநாடுகள் ஒரு சில சமயங்களில் நன்மை பயக்கும் சிலசமயங்களில் பயனில்லாமல் போகும். எனவே, இவ்வாறு இணைந்து செயல்படுவதற்கென்று தனியான விதிகள் எதுவும் தேவை் இல்லை" என்று கூறியுள்ளார்.

விதி 263ன் படி மாநிலங்களின் குழுவை நிறுவுவதன் மூலம் பொது நலம் பேணப்படும் என்று குடியரசுத்தலைவர் கருதுவாரேயானால், பின்வரும் கடமைகளை நிறைவேற்றுவதற்காக அவர் ஒரு குழுவை நிறுவலாம். அக்குழுவின் கடமைகள் பின்வருமாறு:

1. மாநிலங்களுக்கிடையே தோன்றக்கூடிய பிரச்னைகளை ஆராய்தலும் ஆலோசனை வழங்குதலும்;
2. மத்திய – மாநில அரசுகளுக்கிடையே பல பொதுவான விஷயங்கள் காணப்படலாம். அத்தகைய விஷயங்களை விசாரித்தலும், அது பற்றி விவாதித்தலும்;
3. அவ்வாறு காணப்படும் விஷயங்கள் பற்றி ஆலோசனை வழங்குதல்; அதிலும் குறிப்பாக அவ்விஷயங்கள் பற்றிய கொள்கைகள் மற்றும் அதனை நடைமுறைப்படுத்தும முறைகள் ஆகியவற்றை ஒருங்கிணைத்து செயல்படச் செய்யுமுகமாக ஆலோசனைகள் வழங்குதல்.

மேற்குறிப்பிட்ட கடமைகளை நிறைவேற்றுவதற்காக குடியரசுத்தலைவர் ஒரு ஆணையின் மூலம் ஒரு குழுவை நிறுவுவது நியாயமான செயலே ஆகும். அதற்குச் சட்டத்தின் துணையுமுண்டு. அதே சமயத்தில் அவர் அவ்வாறு தோற்றுவிக்கப்படும் குழுவின் அமைப்பு மற்றும் அதன் பணிகள் எத்தகையது அதன் செயல்முறை எவ்வாறிருக்கும் என்பவற்றை தெளிவுற விளக்க வேண்டும்.

1967ஆம் ஆண்டுக்கு முற்பட்ட காலத்தில் மத்தியிலும், மாநிலங்களிலும் ஒரே கட்சி (காங்கிரஸ்) ஆட்சி காணப்பட்டதால் மத்திய மாநில உறவுகள் கட்சியின் வாயிலாகவும் தலைமை அமைச்சரின் மூலமாகவும் நிர்ணயிக்கப்பட்டன. மேலும், மாநில

அரசுகளுக்கிடையேயும் மாநிலங்களுக்கிடையேயும் காணப்பட்ட கருத்து வேறுபாடுகளை எளிதில் அகற்றவும், மத்திய அரசின் கொள்கைகளுக்கு மாநிலங்களின் ஒப்புதலைப் பெறவும் உதவின. இத்தகைய மாநாடுகள் மத்திய, மாநில அரசுகள் ஒருங்கிணைந்து செயல்பட வழிவகைகள் செய்தன. இவ்வழக்கம் இன்னும் தொடர்ந்து கொண்டிருக்கிறது. மத்தியிலும் மாநிலங்களிலும் ஒரே கட்சியினுடைய ஆட்சி நடைபெறும் காலங்களில் இவ்விதி பயனில்லாதவையாகத் தோன்றினாலும், வருங்காலங்களில் நாட்டில் வேற்றுமைகள் மிகுந்து காணப்படலாம் என்று நம் அரசியலமைப்பை உருவாக்குகியவர்கள். எண்ணிய காரணத்தால் அத்தகைய சூழ்நிலைகளில், கூட்டாட்சிப் பண்புகளுக்கொப்ப கொள்கைகளையும் செயல்களையும் ஒருங்கிணைத்துச் செயல்படுத்துவதற்கு ஒரு அமைப்பு தேவை என்று கருதினர். உண்மையில் விதி 263 எந்த ஒரு எதிர்ப்புமின்றி அரசியல் நிர்ணய சபையில் ஏற்கப்பட்டது. இதற்கு முற்பட்ட காலங்களில் கூட அத்தகைய அமைப்புகளின் அவசியம் பற்றியும், அதனால் விளையும் நன்மைகள் பற்றியும் அவ்வப்போது விவாதங்கள் பல மேற்கொள்ளப்பட்டன. 1931ஆம் ஆண்டு நடத்தப்பட்ட வட்டமேஜை மாநாடும், 1935 ஆம் ஆண்டைய இந்திய அரசுச் சட்டமும், 1966ஆம் ஆண்டு நியமிக்கப்பட்ட நிர்வாகச் சீர்திருத்தக் குழுவின் கீழ் மத்திய மாநில உறவுகளை ஆராய்ந்த அதன் உட்குழுவும் இத்தகைய ஒரு அமைப்பை உருவாக்குவதன் அவசியத்தை எடுத்துரைத்தன. தன் உட்குழுவின் கருத்தைப் பின்னர் நிர்வாகச் சீர்திருத்தக் குழுவும் அங்கீகரித்தது. ஆனால் இருக்கக் கூடிய அமைப்புகளே போதுமானதாக இருக்கின்றன எனக் கருதிய மத்திய அரசாங்கம் இந்த ஆலோசனைகளை நிராகரித்தது. நிதிக்குழுக்கள் பற்றி ஜென்னிங்ஸ் கருத்து தெரிவிக்கையில் ‘வழக்கமாக இந்த குழுக்கள் எந்த ஒரு விஷயத்திலும் முடிவெடுப்பதில்லை. இத்தகைய குழுக்கள் ஆலோசனைகள் மட்டுமே வழங்குகின்றன. உண்மையிலேயே முடிவுகளை மேற்கொள்பவர்கள் அரசியல்வாதிகளும், முடிவில் பொதுமக்களுமே” என்று கூறினார்.

திட்டக் குழுவையும் ஒரு சில அறிஞர்கள் விமரிசித்துள்ளனர். இவ்வமைப்பு அரசியலமைப்பே எதிர்பாராத வண்ணம் மாநிலங்களை கட்டுப்படுத்தி வருகிறது என்றும், இக்குழு அமைச்சர் குழுவுக்கும் மேம்பட்ட ஒரு அமைப்பாகத் திகழ்கிறது என்றும் பலர் கருத்து தெரிவித்துள்ளனர். எனவே அது “எல்லாவற்றையும்” ஒருங்கிணைத்துச் செயல்படத் தூண்டும் ஒரு அமைப்பாக மட்டும் விளங்க வேண்டும். திட்டமிடுதலின் பூர்வாங்க வேலைகளை, அது மாநிலங்களிடமே விட்டுவிட வேண்டும்.” என்பது பலரின் விருப்பமாக உள்ளது.

மாநிலங்களின் அரசு இயந்திரங்கள் அரசியலமைப்புக்குட்பட்டுச் செயல்பட முடியாமல் போகும் பட்சத்தில் அம்மாநிலங்களில் குடியரசுத்தலைவர் ஆட்சியைக் கொணர வழி செய்யும் விதி 356ஐயும் பல விமரிசகர்கள் ஐயப்பாட்டுடன் நோக்குகிறார்கள். இவ்விதி மத்தியில் ஆட்சிபுரியும் கட்சியின் அரசியல் நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக உள்ளதா அல்லது மாநிலங்களில் சட்டம், ஒழுங்கு, ஸ்திரத்தன்மை ஆகியவற்றை மீட்பதற்கான கடைசி ஆயுதமாகப் பயன்படுத்துவதற்காக உள்ளதா என்பதே இச்சந்தேகத்திற்கு அடிப்படைக் காரணமாகும். இந்தியாவின் மாநிலங்கள் உள்நாட்டு காலனிகளாகவே காணப்படுகின்றன. எனவே உண்மையான கூட்டாட்சி அமைப்புகளுக்கொப்பவும் மாநிலங்களுக்கு முழுசுயாட்சி வழங்கும் வகையில் மத்திய அரசு அரசியல் அமைப்பில் உடனடியாக பல திருத்தங்களை கொணரவேண்டும் என்று சில மாநிலங்களில் கருத்து கொண்டன. காங்கிரஸ் கட்சி தவிர்த்த பிற கட்சிகள் ஆட்சிபுரியும் மாநிலங்கள், மாநிலங்களுக்கு ஓரளவேனும் சுயஆட்சி கிடைக்க செய்ய விளைந்தாலும் அவைகளுக்கு அரசியல் அமைப்பில் திருத்தங்கள் கொண்டுவர அதிகாரம் கிடையாததால் அவைகள் அனுகூலமற்ற நிலையில் உள்ளன. மாநில சுயஆட்சி குரல் எழுப்பிய மாநிலங்களுள் தமிழ்நாடு, கேரளா, மேற்கு வங்கம் ஆகிய குறிப்பிடத்தக்கன. மத்திய மாநில உறவுகளில் குறிப்பிடத்தக்க அளவில் மாற்றம் கொண்டுவரப்பட வேண்டியதன் அவசியத்தை பெரும்பாலோர் உணர்ந்துள்ளார்கள். முன்னால் தலைமை நீதிபதி ஹிதயத்துல்லா இதுபற்றி கூறுகையில் மாநிலங்கள் மறைந்து அவர்கள் சாதாரண நிர்வாக பகுதிகளாக மாற வேண்டும் அல்லது மத்திய அரசாங்கம் இன்னும் வலுவுள்ளதாக ஆக்கப்படல் வேண்டும்'' என்று கூறியுள்ளார். கொள்கையை அவர் எதிர்க்கிறார். ஏனெனில் பல மொழிப் பிரிவுகளைத் தன்னகத்தே கொண்டுள்ள இவ்வலுவற்ற கூட்டாட்சி முறை இரட்டை, விசுவாகப் பணியை உருவாக்கியுள்ளது. அத்துடன், மக்களிடையே நாடு முழுமைக்கான விசுவாசம் குறைந்து கொண்டு வருவதுடன் அந்தந்த மாநிலங்களின் மீது அங்குள்ள மக்களின் விசுவாசம் நாளுக்குள் வளர்ந்து கொண்டே வருகிறது. எனவே, இப்பிரச்சனைகளைச் சமாளிக்க ஒரு வலுவான மத்திய அரசு தேவை என்பதே அவரின் கூற்று. இக்கருத்தில் மற்றுமொரு முன்னாளய தலைமை நீதிபதியான டாக்டர் கஜேந்திரகட்கர் என்பவரும் உடன்பாடு கொண்டுள்ளார். மாநிலங்களுக்கு மிகுந்த சுயாட்சி வழங்கப்படுமேயானால் நாடு கிதறுண்ட விடக்கூடும் என்று அவர் அஞ்சுகிறார்.

### 4.1.3. ராஜமன்னார் குழு

மத்திய—மாநில உறவுகளை ஆராயவும், மாநிலங்களுக்கு மிகுந்த சுயாட்சி கிடைக்கும் வகையில் அரசியலமைப்பில் என்னென்ன

திருத்தங்கள் மேற்கொள்ளப்படல் வேண்டும் என்பது பற்றி பரிந்துரைகள் வழங்கவும் தமிழக அரசு 1969—ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 22ஆம் நாள் டாக்டர் ஏ.ராஜமன்னார் என்பவரது தலைமையின் கீழ் ஒரு குழுவை நியமித்தது. டாக்டர் லட்சமணசாமி முதலியார் P.C.சந்திராரெட்டி ஆகியோர் அக்குழுவின் பிற உறுப்பினர்கள் ஆவர். இக்குழு தனது அறிக்கையை 1971ஆம் ஆண்டு மே மாதம் சமர்ப்பித்து நடைமுறையில் காணப்படும் ஒரு முக ஆட்சிப் பண்புகளுக்கு பின்வரும் காரணங்களைச் சுட்டிக்காட்டியது அவையாவன:

1. அரசியலமைப்பினால் மத்திய அரசுக்கு வழங்கப்பட்டிருக்கும் விசேட அதிகாரங்கள்
2. ஒரு கட்சி ஆட்சி (மத்தியிலும், மாநிலங்களிலும்)
3. மாநிலங்களிடையே காணப்படும் நிதிப் பற்றாக்குறையும் அதற்காக அவைகள் மத்திய அரசைச் சார்ந்து நிற்கும் நிலையும்.
4. திட்டங்கள் மத்திய அரசாலேயே தீட்டப்படுவதும், திட்டக் குழுவின் செயல்பாட்டு முறையும்.

நாட்டின் ஒருமைப்பாட்டிற்குப் பங்கம் விளையா வண்ணமும் மாநிலங்களின் சுயாட்சியை விரிவுபடுத்து முகமாகவும் இக்குழு ஒரு சில பரிந்துரைகளை வழங்கியது. அவை பின்வருமாறு.

1. விதி 356 உடனடியாக நீக்கப்படல் வேண்டும்.
2. அந்தந்த மாநிலங்களின் அமைச்சர் குழுவையோ அல்லது அதற்கென நியமிக்கப்பட்ட விசேட அதிகாரங்கள் கொண்ட ஒரு குழுவையோ கலந்தாலோசித்த பின்னரே மாநிலங்களுக்கு ஆளுநர்கள் நியமிக்கப்படல் வேண்டும்.
3. ஒரு முறை பதவி வகித்த ஒரு ஆளுநர் மறு முறையும் நியமிக்கப்படல் கூடாது.
4. நிரூபிக்கப்பட்ட குற்றங்கள் மற்றும் இயலாமை ஆகியவற்றின் அடிப்படையிலன்றி, ஆளுநர்களைப் பதவி நீக்கம் செய்தல் கூடாது. அத்துடன் அதுபற்றி தலைமை நீதிமன்றம் ஆராய்ந்தறிந்த பின்னரே முடிவுகள் மேற்கொள்ளப்படல் வேண்டும்.
5. மாநில ஆளுநர்களுக்கும் மத்திய அரசிற்குமிடையே உள்ள உறவுகளைச் சீரமைக்கும் வகையில் புதிய வழிகாட்டு வரைவுகள் மேற்கொள்ளப்படல் வேண்டும்.
6. அவசரகால நிலை பற்றிய விதிகள் 356—ம், 357—ம் கைவிடப்பட்டு மாநிலங்களில் தன்னிச்சையாகக்

குடியரசுத்தலைவர் ஆட்சி திணிக்கப்படுவதைத் தவிர்க்கு வண்ணம் விதிகள் திருத்தி அமைக்கப்படல் வேண்டும்.

7. தலைமை அமைச்சரையும் மாநில முதல்வர்களையும் அங்கத்தினர்களாகக் கொண்ட மாநிலங்களிடையிலான குழு ஒன்று அமைக்கப்படல் வேண்டும். பொதுவாக இக்குழுவில் எடுக்கப்படும் முடிவுகளுக்கு மைய அரசும், மாநிலங்களுக்கு கட்டுப்பட வேண்டும்.
8. கூட்டாட்சி சாராத அல்லது அரசியலமைப்பு முக்கியத்துவம் பெறாத வழக்குகளைத் தலைமை நீதிமன்றம் விசாரிப்பது நிறுத்தப்பட்டு அம்மன்றத்திலன் சுமைகள் குறைக்கப்படல் வேண்டும்.
9. நிதிக்குழு ஒரு நிரந்தரமான அமைப்பாக விளங்க வேண்டும். அத்துடன் மாநிலங்களின் திட்டமிடும் பணிகளில் காணப்படும் மத்திய அரசின் கண்காணிப்பு குறைக்கப்படல் வேண்டும்.

இக்குழு நடுநிலையுடனோ அல்லது திறந்த மனதுடனோ, செயல்பட்டதாகக் கூற முடியாது என்று சிலர் கருத்து தெரிவித்துள்ளார்கள். இக்குழுவின் அறிக்கையை மத்திய அரசு புறக்கணித்தது. ஆனால் அதே வேளையில் மத்திய—மாநில உறவுகளைச் சீரமைத்துச் சிறப்புறச் செயல்படச் செய்வதற்கு அரசியலமைப்பில் எந்த ஒரு மாற்றமும் மேற்கொள்ளப்பட வேண்டிய அவசியமில்லை என்ற நிர்வாகச் சீர்திருத்தக் குழுவின் கருத்தை மத்திய அரசு ஏற்றுக் கொண்டது. இதே போல, சர்க்காரியாவின் தலைமையில் அமைக்கப்பட்ட குழுவும் பல பரிந்துரைகளைக் கூறியுள்ளது.

### 4.1.4. மண்டலக் குழுக்கள்

மத்திய—மாநில உறவுகளை வலுப்படுத்துவதில் இம்மண்டலக் குழுக்கள் ஒரு முக்கியப் பங்காற்றி வருகின்றன. 1957ஆம் ஆண்டு நடைமுறைக்க வந்த மாநிலங்களின் சீரமைப்புச் சட்டம் மாநிலங்களையும் பிரதேசங்களையும் ஐந்து மண்டலங்களாகப் பிரித்து அவை ஒவ்வொன்றிலும் ஒரு நிரந்தரமான மண்டலக் குழுவை நிறுவியது.

1. மத்திய மண்டலம் : (பஞ்சாப், ராஜஸ்தான், ஜம்மு மற்றும் காஷ்மீர் ஹிமாசலப்பிரதேசம்)
2. வடக்கு மண்டலம் : (உத்தரப்பிரதேசம், மத்தியபிரதேசம்)
3. கிழக்கு மண்டலம் : (பீகார், மே.வங்காளம், ஒரிஸ்ஸா, அஸ்ஸாம், மணிப்பூர், திரிபுரா)
4. மேற்கு மண்டலம் : (பம்பாய், மைசூர்)

5. தெற்கு மண்டலம் : (ஆந்திரப்பிரதேசம், தமிழ்நாடு, கேரளா) இதில் மைசூரும் ஒரு நிரந்தர விருந்தாளியாகக் கருதப்பட்டது.

ஆனால், தற்பொழுது பின்வருமாறு மண்டலங்கள் பிரிக்கப்பட்டள்ளன.

1. வடக்கு மண்டலம் : (ஹரியானா, ஹிமாச்சலப்பிரதேசம், ஜம்மு, மற்றும் காஷ்மீர், பஞ்சாப், ராஜஸ்தான், சண்டிகார், டில்லி)

2. மத்திய மண்டலம் : (மத்தியப்பிரதேசம், உத்திரப்பிரதேசம்)

3. கிழக்கு மண்டலம் : (பீகார், ஒரிஸ்ஸா, மே.வங்காளம்)

4. மேற்கு மண்டலம் : (குஜராத், மகாரஷ்டிரா, கோவா, டாமன், மற்றும் டையூ, தாத்ரா, மற்றும் நாஹர், ஹாவேலி)

5. தெற்கு மண்டலம் : (ஆந்திரப்பிரதேசம், கர்நாடகா, கேரளா, தமிழ்நாடு, பாண்டிச்சேரி)

இக்குழுக்களின் முக்கிய குறிக்கோள்கள் பின்வருமாறு:

1. நாட்டில் மனவெழுச்சியுள்ள ஒருமைப்பாட்டினை உருவாக்குதல்
2. தீவிரமான மாநில உணர்வுகள், பிராந்திய மனப்பான்மை, மொழி வெறி மற்றும் பிரிவினைவாதக் கருத்துக்களின் வளர்ச்சியைத் தடுத்தல்.
3. மாநிலங்களின் சீரமைப்பினால் தோன்றிய அதன் பின் விளைவுகள், நாட்டின் ஒருமைப்பாடு மற்றும் பொருளாதார முன்னேற்றம் ஆகியவற்றிற்கு முட்டுக்கட்டை போடாவண்ணம் தடுத்தல்; அவ்வாறு இருந்தால் அவைகளைக் களைதல்;
4. மத்திய, மாநில அரசுகள் நாளுக்கு நாள் அதிகமாக பங்கேற்றுச் செயல்படும் சில பொருளாதார மற்றும் சமுதாய விஷயங்களில், அவைகளின் ஒத்துழைப்பைப் பெறவும், கருத்துப் பரிமாற்றங்கள் நிகழவும் தங்களுக்கேற்படும் அனுபவங்களைப் பகிர்ந்து கொள்ளவும் வழிவகைகள் செய்தல், அத்துடன் இவைகளை அடைவதன் மூலம் இக்குறிப்பிட்ட விஷயங்களிலாவது சமுதாயத்தின் பொது நலம் கருதி ஒரே மாதிரியான கொள்கைகள்

ஏற்படச் செய்தல்; அத்துடன், இத்தகைய பணிகளில் ஈடுபடுவதன் மூலம், நம் நாட்டில் ஒரு சமுதாயம் மலர வழி வகுத்தல்.

5. முக்கியமான வளர்ச்சித் திட்டங்கள் வெற்றிகரமாக விரைவில் நிறைவேற்றப்படுவதற்கு உதவுதல்;
6. நாட்டின் பல வேறுபட்ட பிராந்தியங்களிடையே ஓரளவேனும் சமநிலை உருவாக்குதல்.

மண்டலக் குழுக்களின் அமைப்பு, அதிகாரங்கள் மற்றும் பணிகள்

ஒவ்வொரு மண்டலத்திலுமுள்ள மண்டலக் குழுக்கள், குடியரசுத் தலைவரால் நியமிக்கப்பட்ட ஒரு மத்திய அமைச்சரை அதன் தலைவராகக் கொண்டுள்ளன. அம்மண்டலத்திலுள்ள மாநிலங்களின் முதல்வர்களுள் ஒருவர் துணைத் தலைவராகச் செயல்படுவார். ஒருவர் ஓராண்டு காலமே துணைத் தலைவர் பதவி வகிக்க முடியும். இப்பதவி வகிப்பதற்கு எல்லோருக்கும் வாய்ப்புக்கள் கிடைக்கச் செய்வதற்காக 'சுற்றுமுறை' பின்பற்றப்படுகிறது. ஒவ்வொரு மண்டலக் குழுவும் அதற்கெனத் தனிக்காரியதரிசிகள் ஓராண்டு காலத்திற்கு, சுற்றுமுறையைப் பின்பற்றி தேர்ந்தெடுக்கப்படுவர். ஒரு மண்டலத்தில் ஏதாவது யூனியன் பிரதேசங்கள் இடம் பெற்றிருப்பின் அவைகள் ஒவ்வொன்றிலுமிருந்து ஒவ்வொரு பிரதிநிதியைக் குடியரசுத் தலைவர் அம்மண்டலக் குழுவிற்கென நியமனம் செய்வார். மேலும், திட்டக் குழு ஒவ்வொரு குழுவிற்கென ஒரு உறுப்பினரை நியமித்கிறது. அத்துடன் மாநிலங்களிலுள்ள அபிவிருத்தி ஆணையாளர்களும் அதன் அங்கத்தினராகச் சேர்த்துக் கொள்ளப்படுகின்றனர்.

பெரும்பான்மை வாக்குகளின் அடிப்படையிலேயே இக்குழுவில் தீர்மானங்கள் மேற்கொள்ளப்படுகின்றன. ஆதரவும், எதிர்ப்பும் சமநிலையில் இருக்கம் பட்சத்தில் அவ்விஷயங்களில் முடிவெடுக்கும் பொருட்டு, அதன் தலைருக்குத் தீர்மான வாக்கு அளிக்கப்பட்டுள்ளது. குழுக் கூட்டங்களின் நடவடிக்கைகள் பற்றிய குறிப்பு அந்தந்த மாநில அரசாங்கங்களுக்கும் மத்திய அரசாங்கத்திற்கும் தாக்கல் செய்யப்படுகிறது.

இக்குழுக்களில் பின்வரும் விஷயங்களை விவாதங்களின் அடிப்படையில் தீர்மானிக்கப்டுகின்றன.

1. சமூகப் பொருளாதாரத் திட்டங்களில் வரக்கூடிய பொது நலம் மிக்க விஷயங்கள்.
2. எல்லைத் தகராறுகள், மொழிச் சிறுபான்மையோர், மாநிலங்களுக்கிடையிலான போக்குவரத்து சம்பந்தப்பட்ட விஷயங்கள்.

3. மாநிலங்கள் சீரமைக்கப்பட்டதை ஒட்டிய விஷயங்கள் அல்லது அதனால் ஏற்பட்ட விளைவுகள் பற்றிய விஷயங்கள்.

இம்மண்டலக் குழுக்கள், விவாத அரங்குகளாகவும், ஆலோசனை வழங்கும் அமைப்பகளாகவுமே காணப்படுகின்றன. மாநிலங்களிடையே பொருளாதார ஒத்துழைப்பை ஏற்படுத்தி அவைகள் ஒருங்கிணைந்து செயல்படுத்துவதற்கேற்ற வகையில் நிறுவனங்களையும் பழக்க வழக்கங்களையும் ஏற்படுத்துவதே இதனுடைய முக்கியக் குறிக்கோள் ஆகும்.

இம்மண்டலக் குழுக்களுக்கு அதிகாரங்கள் எதுவும் கொடுக்கப்படாததால் நடைமுறையில் இவைகளால் எந்த அளவிற்குக் கூட்டாட்சி, கொள்கைகளை இந்தியாவில் வேரூன்றச் செய்ய முடியும் என்பது சந்தேகத்திற்கிடமாகவே உள்ளது. அத்துடன் இக்குழுக்கள் பிராந்திய மனப்பான்மையை முழுமையாகக் கட்டுப்படுத்தும் என்பதற்க எந்தவித உறுதியும் கிடையாது.

## 4.1.5. காஷ்மீரின் நிலை (Status of Kashmir)

1) அரசியலமைப்பின் 370—வது விதிப்படி பாராளுமன்றம் மத்திய அரசுக்கென்று ஒதுக்கப்பட்ட பட்டியலிலும், மத்திய அரச மாநில அரசுகளுக்கான பொதுவான பட்டியலிலுமுள்ள பொருள்கள் பற்றியும், அத்தகைய பட்டியல்களிலுள்ள வேறு விவகாரங்கள் பற்றியும் மாநில அரசைக் கலந்து ஆலோசித்த பின்னரே சட்டம் இயற்ற வேண்டும்.

2) மத்திய அரசு, மாநில அரசு, இரண்டுக்கும் பொதுவானவை ஆகிய மூன்று பட்டியல்களிலுமுள்ள அதிகாரங்கள் போக எஞ்சியுள்ள அதிகாரங்கள் ஜம்மு காஷ்மீரைப் பொறுத்தமட்டில் மாநில அரசுக்கே கொடுக்கப்பட்டுள்ளது. மத்திய அரசுக்கு கொடுக்கப்படவில்லை.

4) நிலம், சொத்து வாங்குவது, வேலைவாய்ப்பு, இருப்பிடம் ஆகியவைபற்றி ஜம்மு—காஷ்மீரில் நிரந்தரமாக வசித்து வரும் மக்களுக்கே சிறப்புரிமைகள் கொடுக்கப்பட்டுள்ளன.

5) சொத்துகளுக்கான அடிப்படை உரிமை ஜம்மு—காஷ்மீர் மாநிலத்தில் தொடர்ந்து வழங்கப்பட்டு வருகிறது.

6) மத்திய அரசாங்கம் ஜம்மு—காஷ்மீர் மாநிலத்தின் பெயரையோ எல்லைகளையோ மாற்ற முடியாது.

7) மாநில சட்டமன்றத்தின் சம்மதம் இல்லாமல், அந்த மாநிலம் சம்பந்தப்பட்ட எந்த பன்னாட்டு உடன்படிக்கைகளையும் மத்திய அரசு செய்யக்கூடாது.

8) 1957 –ஜனவரி 26—ல் ஜம்மு—காஷ்மீர் மாநிலத்திற்கு மாத்திரம் தனியாக அரசியலமைப்பு உருவாக்கப்பட்டு நடைமுறைக்கு வந்தது.

9) இந்திய பாராளுமன்றத்தில் மக்கள் சபையில் / ஆறு இடங்களும், மாநிலங்களவையில் நான்கு இடங்களும் ஜம்ம—காஷ்மீர் மாநிலத்திற்கு ஒதுக்கப்பட்டுள்ளன.

10) மாநில கீழ்சபையான சட்டப்பேரவையில் 76 எம்.எல்.ஏக்கள் உள்ளனர். அதில் 6 SC/ST வகுப்பினருக்கு ஒதுக்கப்பட்டுள்ளது. மேல்சபையில் 36 எம்.எல்.ஏக்கள் உள்ளனர்.

இந்திய அரசியலமைப்பின் 370—ம் விதியின்படி ஜம்மு—காஷ்மீர் மாநிலத்திற்கு கொடுக்கப்பட்டுள்ள சிறப்பு நிலையை (Special Status) ரத்து செய்ய வேண்டும் என்று சில அரசியல் கட்சிகள் கோரிக்கை விடுவிக்கின்றன. இந்தப் பிரிவினால்தான் ஜம்மு—காஷ்மீரில் தீவிரவாதமும், பிரிவினை வாதமும் தலைதூக்கியுள்ளதாக அவர்கள் கருதுகிறார்கள். மேலும் இந்த 370—வது பிரிவு தற்காலிகமானது தான் என்று அரசியலமைப்பு உருவாக்கும் போது உறுதி கூறப்பட்டதாக கருதுகிறார்கள். மேலும் இந்த பிரிவு இருப்பதால் இன்னும் காஷ்மீர் இந்தியாவுடன் இணைய வில்லையோ என்ற எண்ணம் ஜம்மு—காஷ்மீர் மக்கள் மனதிலும் பிற மக்கள் மனதிலும் தோன்ற வாய்ப்புள்ளதாக கருதுகின்றனர்.

## 4.2. தொகுப்புரை:

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக்கான கேள்விகள்

1. கூட்டாட்சியின் பண்புகளை எடுத்துரைக்கவும்

2. அதிகார பங்கீடுபற்றி சிறுகுறிப்பு வரைக.

3. ராஜமன்னார் குழு அறிக்கையின் பரிந்துரையினை ஆராய்க.

இந்தியக் கூட்டாட்சி அரசு பற்றி இரு கருத்துக்கள் உள்ளன. இந்திய அரசியலமைப்பு முறை ஒற்றையாட்சி என வாதாடுபவர்கள் உண்டு. இவர்கள் தங்கள் விமரிசனத்திற்கு ஆதரவாக அரசியலமைப்பின் 3ம் விதியை மேற்கோள் காட்டுகின்றனர். ஏனெனில் இவ்விதிப்படி மாநிலங்களின் எல்லைகளைக் கூட்டவோ, குறைக்கவோ மாற்றியமைக்கவோ மத்திய அரசுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டுள்ளது. அரசியல் நிர்ணய சபை உறுப்பினர்களில் ஒருவரான K.சந்தானம் அவர்கள் "இந்தியக் கூட்டாட்சித் தத்துவத்தை இந்த விதி மறுக்கிறது." என்கிறார். நீதிபதி முகர்ஜி என்பவர். அரசியலமைப்பின் முதல் விதியே கூட்டாட்சியை மறுக்கிறது என்று குறிப்பிடுகிறார். ஏனெனில் இந்தியா மாநிலங்களின் ஐக்கியம். மாநிலங்களின் பரிவு, அதிகாரப் பகிர்வு

ஆகியன நிர்வாக வசதிக்காகவே உள்ளது. அவை கூட்டாட்சிக்காக அல்ல என வாதிடுகின்றனர்.

ஆனால் மேற்குறிப்பிட்ட மதிப்பீட்டை முழுவதுவமாக ஏற்றுக் கொள்ள இயலாது. சிலர் இந்தியா ஒரு முழுமையான கூட்டாட்சி என வாதிடுகின்றனர். ஆனால் இரண்டு கருத்துக்களும் அப்படியே ஏற்றுக் கொள்ளக்கூடியவை அல்ல. இந்தியா "வலிமையான மைய அரசைக் கொண்ட ஒரு கூட்டாட்சி" என முடிவு செய்யலாம். இக்கூற்று மேற்கு வங்காள அரசுக்கும் மைய அரசிற்கும் ஏற்பட்ட வழக்கில் (1964) உச்ச நீதிமன்ற தீர்ப்பால் உறுதி செய்யப்பட்டுள்ளது. ஐக்கியம் (Union) என்ற வார்த்தை மாநிலங்களின் உண்மைத் தன்மையை நிலைநாட்டவும் கூட்டாட்சியின் மேன்மையை நிலைநாட்டவும் இந்திய அரசியலமைப்பில் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்திய அரசியல்மைப்பில் கூறுப்பட்டுள்ள வார்த்தைகளைக் கொண்டு மட்டும் இந்தியா கூட்டாட்சி அல்ல என மறுக்கமுடியாது. இந்தியா சிறப்பு அம்சங்களைக் கொண்ட தனிச்சிறப்பு வாய்ந்த ஒரு கூட்டாட்சி அரசு என்று கூறுவதே சரியானது என முன்னாள் அட்டர்னி ஜெனரல் ஆ.ஊ. செட்டல்வாட் (Setalvad) கூறுகிறார்.

## 4.3. முக்கிய வார்த்தைகள்:

1. கூட்டாட்சி : அரசாங்கத்தின் அதிகாரங்களை மத்திய மற்றும் மாநிலங்களுக்கு சமமாக பிரித்து எஞ்சிய அதிகாரத்தை மாநில அரசுக்கு வழங்குதல்.
2. ராஜமன்னர் குழு அறிக்கை : மத்திய – மாநில உறவுகளை ஆராயும், மாநிலங்களுக்கு மிகுந்த சுயாட்சி வழங்கவும் மற்றும் விதி 356 நீக்கப்படுதலும் ஆகும்.
3. மண்டலக் குழுக்கள் : மத்திய மாநில உறவுகளை வலுப்படுத்துவதற்கு 1957ம் ஆண்ட உருவாக்கப்பட்டதாகும்.
4. விதி எண் 370 : ஜம்மு & காஷ்மீர் மாநிலத்திற்கு கொடுக்கப்பட்ட சிறப்பு நிலை (Special Status) ஆகும்.

## 4.4. முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக்கான கேள்விகள்

கேள்வி எண்.1 — இந்த கேள்விக்கான விடை பகுதி எண். 4.1.ல்அறிக.

கேள்வி எண்.2 — இந்த கேள்விக்கான விடை பகுதி எண். 4.(10).ல்அறிக.

கேள்வி எண்.3 — இந்த கேள்விக்கான விடை பகுதி எண். 4.1.3.ல்அறிக.

## 4.5. இந்த அலகு சம்பந்தப்பட்ட மேலும் படிக்க வேண்டிய நூல்கள்


1. Chand.A; Federalism in India ; A Study of Union – State Relations, London, George Allen of Unwin; 1965.
2. Bowbwell, The Foundations of Indian Fedaralism, Bomlay, Asia Publishing House, 1967
3. Bakshi, P.M., The Constitution of India; Universal Law Publishing, Co.Pvt.Ltd., 2001.


## 4.6. கேள்விகளும் / செய்முறைப்பயிற்சிகள்

1. இந்தியாவில் காணப்படும் மத்திய—மாநில உறவுகளை ஆராய்க.
2. இந்திய அரசியலமைப்பில் காணப்படும் கூட்டாட்சியின் பலன்களை விளக்குக.
3. இந்தியாவில் அரைகுறை கூட்டாட்சி முறை காணப்படுகிறது என்பதை விவாதிக்க.
4. மத்திய—மாநில உறவுகளை வலுப்படுத்துவதில் மண்டலக்குழுக்களின் பங்கினை விவாதி.

# அலகு — 5

## பாராளுமன்றம் — ஜனாதிபதி — பிரதம மந்திரி — அமைச்சரவை

### முன்னுரை

சுதந்திரம் அடைவதற்கு முன்பாகவே பாராளுமன்ற முறை இந்திய மக்களுக்கு ஏற்றதாக இருக்கும் என்ற நம்பிக்கை மக்களுக்கு இருந்தது. எனவே பாராளுமன்ற அரசாங்க முறையை இந்திய அரசியல் நிர்ணய சபை ஏற்படுத்தியது. அரசியலமைப்பின் 79—வது விதி இந்தியப் பாராளுமன்றம் ஜனாதிபதியையும், மாநிலங்களவை மற்றும் மக்களவை ஆகிய இரு அவைகளையும் கொண்ட அமைப்பு என்று கூறுகிறது. இந்தியாவில் ஆட்சித்துறை அதிகாரம் ஜனாதிபதிக்கு வழங்கப்பட்டிருந்தாலும், பாராளுமன்ற முறை அரசாங்கத்தின் பண்பிற்கேற்ப அவர் ஒரு அரசியலமைப்புத் தலைவராக திகழ்கிறார். உண்மையான ஆட்சித்துறை அதிகாரம் அமைச்சரவையிடம் காணப்படுகிறது. பிரதம அமைச்சரைத் தலைவராய் கொண்ட ஒரு அமைச்சரவை ஜனாதிபதிக்கு நிர்வாகப் பணிகளில் ஆலோசனை கூறுகிறது. என்று அரசியலமைப்பின் 74—வது விதி கூறுகிறது.

### நோக்கங்கள்:

இந்திய பாராளுமன்றத்தின் அமைப்பு மற்றும் அதன் அதிகாரங்களை கற்றறிதல்.
இந்திய ஜனாதிபதி தேர்ந்தெடுக்கம் முறை மற்றும் அவரது நெருக்கடி நிலை அதிகாரங்களை தெரிந்து கொள்ளுதல்.
இந்திய பிரதம மந்திரி மற்றும் அமைச்சரவையின் பணிகளை புரிந்து கொள்ளுதல்.
இந்திய அரசியலமைப்பு திருத்த முறையினை கற்றறிதல்.

### அலகின் வடிவமைப்பு (Unit Structure)

லோக் சபாவின் அமைப்பு மற்றும் பணிகள்
சபாநாகரின் அதிகாரங்கள்
மாநிலங்களவையின் அமைப்பு மற்றும் அதிகாரங்கள்
அமைச்சரவையின் அமைப்பு
அமைச்சரவையின் அதிகாரங்கள்
அரசியலமைப்பின் அட்டவனை
அரசியலமைப்பு திருத்தங்கள்

குடியரசுத்தலைவரின் தேர்தல் முறை
குடியரசுத்தலைவரின் நெருக்கடி நிலை அதிகாரங்கள்
துணை குடியரசுத்தலைவரின் நிலை
தொகுப்புரை
முக்கிய வார்த்தைகள்
முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனை
இந்த அலகு சம்பந்தப்பட்ட மேலும் படிக்க வேண்டிய நூல்கள்
வினாக்கள்/ செயல்முறைபயிற்சிகள்.

## 5.1. லோக்சபாவின் அமைப்பு மற்றும் பணிகள்:

இச்சபை மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைக் கொண்டது. மாநிலங்களின் பிரதிநிதிகளாக 530 பேரும் யூனியன் பிரேதங்களிலிருந்து 20 பேரும் மக்களவைக்குத் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். விதி 331—ன்படி மக்களவையில் ஆங்கிலோ — இந்தியருக்குச் சரியான பிரதி நிதித்துவம் இல்லையெனக் குடியரசுத் தலைவர் நினைத்தால் அவர் இவ்வினத்தைச் சேர்ந்த இருநபர்களை லோக்சபாவிற்குப் பிரதிநிதிகளாக நியமிக்கலாம். அதிக பட்சமாக 552 உறுப்பினர்கள் இருக்கலாம். ஆனால் 1999 ஆம் ஆண்டு நிலவரப்படி 545 உறுப்பினர்கள் இருந்தனர். லோக் சபாவின் பதவிக்காலம் ஐந்தாண்டுகள் 42 வது அரசியலமைப்புத் திருத்தச் சட்டப்படி லோக்சபாவின் பதவிக்காலம் 6 ஆண்டுகளாக நீடிக்கப்பட்டு, பின்பு மீண்டும் 44வது திருத்தத்தின்படி முந்தைய நிலைப்படி 5 ஆண்டுகளாக மாற்றப்பட்டது.

### உறுப்பினராவதற்கான தகுதிகள்

மக்களவை உறுப்பினராவதற்கு ஒருவர் பின்வரும் தகுதிகளைப் பெற்றிருக்க வேண்டும்.

1. இந்தியக் குடிமகனாக இருக்க வேண்டும்
2. 25 வயது நிரம்பியவராக இருக்க வேண்டும்.
3. அரசுப் பணிகளில் பணிபுரிபவராக இருக்கக்கூடாது.

### உறுப்பினராகத் தகுதியற்றவர்கள்

1. வெளிநாட்டவர்
2. திவாலானவர் மற்றும் மனநிலை சரியில்லாதவர்
3. தேர்தல் குற்றங்களில் தண்டனை பெற்றவர்கள்
4. துரோகம் மற்றும் ஊழல் ஆகியவற்றினால் அரசுப் பணிகளிலிருந்து நீக்கப்பட்டவர்கள்.

5. நீதிமன்றத்தால் தண்டனை பெற்றவர் (இரண்டாண்டுகளுக்கு மேல் தண்டனை பெற்றவர்கள்)

**அதிகாரங்கள்**

இந்தியா ஒரு கூட்டாட்சி அரசைப் பெற்றுள்ளதால் மைய, மாநில அரசுகளுக்கு இடையே அதிகாரங்கள் பங்கிடப்பட்டுள்ளன. மக்களவை மைய, மற்றும் பொதுப்பட்டியலில் காணப்படும் துறைகளில் சட்டமியற்றலாம். மக்களவையின் பணிகள் மற்றும் அதிகாரங்கள் கீழ்கண்டவாறு விவரிக்கப்பட்டுள்ளது.

**சட்டமியற்றும் அதிகாரங்கள்**

மத்திய அரசுப் பட்டியல் மற்றும் பொதுப்பட்டியலில் குறிப்பிட்டுள்ள துறைகளில் சட்டமியற்றுவதற்கு மக்களவைக்கு அதிகாரம் உள்ளது. மாநிலங்கள் கேட்டுக்கொண்டால் மாநிலப் பட்டியலில் உள்ள துறைகளிலும் சட்டங்களை இயற்றுவதற்கு பாராளுமன்றத்திற்கு அதிகாரம் உள்ளது. சாதாரண மசோதாக்களை இரு சபைகளிலும் அறிமுகப்படுத்தலாம். மக்களவையில் நிறைவேறிய மசோதாவிற்கு, மாநிலங்களவை ஆறு மாதத்திற்குள் தனது முடிவைத் தெரிவிக்க வேண்டும். இரு சபைகளுக்கும் ஏதாவது முட்டுக்கட்டை (dead lock) ஏற்பட்டால் குடியரசுத் தலைவர் கூட்டுத்தொடரைக் கூட்டித் தீர்த்து வைப்பார். இவ்வாறான இணைப்புக் கூட்டத்தில் மக்களவையில் பெரும்பான்மை ஆதரவுடன் மசோதா நிறைவேற்றப்படும். ஏனெனில் மக்களவையில் உறுப்பினர்களின் எண்ணிக்கை அதிகமாகும்.

**நிதி அதிகாரங்கள்**

“யாரிடம் பணப்பை உள்ளதோ அவரிடம், அதிகாரங்கள் உள்ளன” என்று கூட்டாட்சித் தத்துவ அறிஞர் மாடிசன் (Madison) கூறுகிறார். நாட்டின் பணப்பை மக்களவையால் கட்டுப்படுத்தப்படுகிறது, எனவே, மாநிலங்களவையை விட, மக்களவை நிதியதிகாரங்களில் மேலாண்மை பெற்றுள்ளது. பண மசோதா மக்களவையில் மட்டும் தான் அறிமுகப்படுத்த முடியும். மக்களவையில் அறிமுகப்படுத்தப்படும் பண மசோதா (Money Bill) அதில் நிறைவேறிய பிறகு அது மாநிலங்களவைக்கு அனுப்பி வைக்கப்படும். மாநிலங்களவை தனது முடிவை 14 நாட்களுக்குள் தெரிவிக்க வேண்டும். அவ்வாறு பதினான்கு நாட்களுக்குள் அனுப்பி வைக்கப்படவில்லையெனில், அது இரு சபைகளாலும் நிறைவேற்றப்பட்டதாகக் கருதப்படும். மாநிலங்களவையின் பரிந்துரைகளை ஏற்றுக்கொள்ளவும் ஏற்றுக்கொள்ளாமல் இருக்கவும் மக்களவைக்கு உரிமையுண்டு. செலவுகளை அங்கீகரிக்கும் அதிகாரம் மக்களவைக்கு மட்டும் தான் உள்ளது. பாராளுமன்றத்தின் தேர்ந்தெடுக்கப்பட்ட இரு அவை உறுப்பினர்கள் தேர்தல் குழுவின் ஒரு

பகுதியாக உள்ளனர். இக்குழு குடியரசுத் தலைவரையும் துணைக் குடியரசுத் தலைவரையும் தேர்ந்தெடுக்கிறது.

**நிர்வாகத்துறை அதிகாரங்கள்**

மக்களவையின் மிக முக்கியப்பணி நிர்வாகத்துறையைக் கட்டுப்படுத்துவதாகும். இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின படி அமைச்சர்கள் மக்களவைக்கு கூட்டுப் பொறுப்பாவர்கள். அரசின் கொள்கைகளைப் பாராளுமன்றம் ஏற்றுக் கொள்ளவில்லையெனில் அமைச்சரவை பதவி விலக நேரிடும். அரசின் கொள்கைகள், மற்றும் முடிவுகளைக் குறித்து உறுப்பினர்கள் கேள்வி எழுப்பலாம். மக்களவை உறுப்பினர்களின் கேள்விகளுக்கு அமைச்சர்கள் பதிலளிக்க வேண்டும். அரசின் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் மக்களவை பெரும்பான்மையான உறுப்பினர்களால் கொண்டு வரப்பட்டால், அமைச்சரவை பதவி விலக வேண்டும். பிரதமர் உள்ளிட்ட அமைச்சரவையைக் கட்டுப்படுத்தும் ஓர் ஆயுதமாக நம்பிக்கையில்லாத் தீர்மானம் (vote of No confidence motion) இருக்கிறது. அரசின் கொள்கைகள் மற்றும் செயல்களை மக்களவை விமர்சனம் செய்யலாம்.

**நீதித்துறை அதிகாரங்கள்**

குடியரசுத் தலைவர் மீதான குற்ற விசாரணை ஏதேனும் ஒரு சபையில் அறிமுகப்படுத்தலாம். மற்றொரு சபை புலன் விசாரணை செய்கிறது. உச்ச நீதிமன்ற நீதிபதிகள், உயர்நீதிமன்ற நீதிபதிகள் மீதான தீர்மானம் இச்சபையால் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும். உச்ச நீதிமன்ற நீதிபதிகளின் எண்ணிக்கையை நிர்ணயிப்பது பாராளுமன்றமே. அவர்களின் ஊதியமும், அவ்வப்போது பாராளுமன்ற சட்டங்களின் மூலமே நிர்ணயிக்கப்படுகிறது.

**அரசியலமைப்பு சார்ந்த அதிகாரங்கள்**

குடியரசுத்தலைவரின் தேர்தல் முறை, மைய நிர்வாகத்துறை அதிகாரங்களை உயர்த்துதல், மாநில நிர்வாகத்துறை அதிகாரங்களை விரிவுபடுத்துதல், உச்ச நீதிமன்ற அதிகாரங்கள், உயர்நீதி மன்றங்கள், மைய—மாநில உறவுகள், 7வது அட்டவணையிலுள்ள பட்டியல்கள் ஆகியவற்றில் திருத்தங்கள் கொண்டு வர அவைகள் இரு அவைகளிலும் பெரும்பான்மை ஆதரவுடன் நிறைவேற்றப்பட வேண்டும். எனவே மக்களவை அரசியலமைப்பைத் திருத்துவதிலும் அதிகாரம் பெற்றுள்ளது.

**இதர அதிகாரங்கள்**

உச்ச நீதிமன்ற நீதிபதிகள், தலைமைத் தேர்தல் அதிகாரி, தணிக்கை அதிகாரி, அரசு வழக்கறிஞர் போன்றவர்கள் மீது குற்ற விசாரணை தீர்மானம் கொண்டு வரலாம். துணைக்குடியரசுத் தலைவரைப் பதவி நீக்கம் செய்யும் அதிகாரம் மக்களவைக்கு உள்ளது. நெருக்கடி நிலைப் பிரகடனத்தை ஆறுமாத காலத்திற்கு மேல் நீடிக்க வேண்டுமெனில் பாராளுமன்றத்தின் ஒப்புதலைப் பெறவேண்டும். வெவ்வேறு துறைகள் மற்றும் அமைச்சகங்கள் ஆகியவற்றின் விதிகள் ஒழுங்கு முறைகள் மாற்றப்பட்டால் மக்களவை அதற்கு ஒப்புதல் அளிக்க வேண்டும். மையத் தேர்வாணையம், தலைமைத் தணிக்கை அதிகாரி, தாழ்த்தப்பட்டோர் மற்றும் பழங்குடி ஆணையம், நிதி ஆணையம் போன்றவற்றின் அறிக்கைகளை இரு அவைகளிடமும் சமர்ப்பிக்கப்பட வேண்டும். ஏதேனும் புதிய அனைத்திந்திய பணிகள் ஏற்படுத்தப்பட்டால் அதற்கு பாராளுமன்றத்தின் ஒப்புதல் பெறவேண்டும்.

**மதிப்பீடு**

மக்களவையின் அதிகாரங்கள் மாநிலங்களவை அதிகாரங்களை விட அதிகமானது. பண மசோதா மீதும், அரசாங்கத்தின் மானியங்கள் மீதும் மக்களவைக்கு மிகுந்த அதிகாரமுள்ளது. முதாலவதாக, நாட்டின் வரவு செலவுத் திட்டத்தை (Budget) அங்கீகரிப்பதால் நாட்டின் பணப்பை மக்களவைதான் எனத் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. ஆனால், பாராளுமன்ற இறையாண்மை என்பது கட்டுப்படுத்தப்பட்டுள்ளது. ஏனெனில், ஒப்படைக்கப்பட்ட அதிகாரங்கள் (Delegated legislation) அமைச்சரவையின் அதிகாரத்தை அதிகரித்துள்ளது. இரண்டாவதாக கட்சி முறையும் பாராளுமன்றத்தை கட்டுப்படுத்துகிறது. ஏனெனில், பெரும்பான்மைக் கட்சி உறுப்பினர்கள் கட்சியின் கொள்கைகளை ஆதரிப்பார்கள். அவர்கள் கட்சிக் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டுத்தான் செயல்பட இயலும். ஆனாலும், பெரும்பான்மைக் கட்சி இல்லாத பொழுது கூட்டணி அரசு ஏற்படுத்தப்படும். அப்பொழுது பாராளுமன்றம் நிர்வாகத்துறையைக் கட்டுப்படுத்துகிறது. மக்களவையானது குடிமக்களின் கருத்துக்களை பிரதிபலிக்கும் சபையாகும்.

## 5.1.1. சபாநாயகர்

சபாநாயகர், துணை சபாநாயகர் என இரு அலுவலர்கள் மக்களவையில் உள்ளனர் மக்கள் சபை உறுப்பினர்களில் ஒருவர் சபாநாயகராகவும் மற்றவர் துணை சபாநாயகராகவும் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். சபாநாயகர் பெரும்பான்மைக் கட்சியைச் சார்ந்தவராக இருப்பது மரபாகும். அரசியலமைப்பின் 93வது விதி சபாநாயகர், துணைச் சபாநாயகர் ஆகியோரின் பதவிக் காலம் மற்றும்

தேர்தலுக்கு வழி வகை செய்துள்ளது. சபாநாயகரது பதவிக்காலம் ஐந்தாண்டுகளாகும். எனினும், மொத்த உறுப்பினர்களின் பெரும்பான்மை ஆதரவுடன் நம்பிக்கை இல்லாதத் தீர்மானத்தின் மூலம் அவரைப் பதவி நீக்கம் செய்யலாம். சபாநாயகர் தனது பதவியை இராஜினாமாவும் செய்யலாம்.

## சபாநாயகரின் அதிகாரங்கள்

- மக்களவையின் தீர்மானங்களையும் உத்தரவுகளையும் நிறைவேற்றும் பொழுது சபையின் தனி உரிமைகளைப் பாதுகாக்கிறார். சபையை அவமதித்தவர்களுக்குத் தண்டனை வழங்கலாம்.
- மக்களவைக் கூட்டங்களுக்கு தலைமை தாங்குகிறார். சபையின் உறுப்பினர்கள் என்ன, எவ்வளவு நேரம் பேச வேண்டும் என்பதை முடிவு செய்கிறார். சபையின் ஒழுங்கையும், அமைதியையும் கண்ணியத்தையும், நிலை நாட்டுகிறார்கள். எனவே, விவாதங்களின் நாயகர் என்று அழைக்கப்படுகிறார்.
- சபை நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்துகிறார். சபையை ஒத்தி வைக்கும் அதிகாரம் உள்ளது.
- எவை பண மசோதா என்பதை முடிவு செய்வார். மசோதா, தீர்மானங்கள் ஆகியவற்றை அனுமதிப்பதோ, மறுப்பதோ சபாநாயகரின் அதிகாரமாகும்.
- மசோதா வாக்கெடுப்பில் சமநிலை ஏற்பட்டால், சபாநாயகர் தனது முடிவுறு வாக்கைப் (Casting Vote) பயன்படுத்துகிறார்.
- உறுப்பினர்கள் நடைமுறைக்கு ஒவ்வாத தவறான சொற்களைப் பயன்படுத்தினால் அதைச் சபைக் குறிப்புகளிலிருந்து நீக்குகிறார்.
- சபையில் ஏதாவதொரு நபர் தவறாக நடக்கும் பட்சத்தில் அவரை வெளியேறும்படி உத்தரவிடலாம். மறுக்கும் பட்சத்தில், சபையின் மார்ஷல் மூலம் அந்த நபரை வெளியேற்றலாம்
- மக்களவையில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களுக்குக் கையொப்பம் இட்டு மேலவைக்கு அனுப்புவார்.
- சபையின் சார்பில் அளிக்கப்படும் மனுக்களை ஏற்றுக்கொள்வார்.
- சில நேரங்களில் பாராளுமன்ற குழுக்களுக்குத் தலைவராகச் செயல்படுகிறார்.
- சபை விதிகளில் எழும் தகராறுகளுக்குச் சபாநாயகர் முடிவே இறுதியானதாகும்.
- உறுப்பினர்கள் எழுப்பும் உரிமைப் பிரச்சனைகள் மீது சபாநாயகர் தீர்ப்பளிக்கிறார்.

சபையின் உள்ள எல்லா அரசியல் கட்சிகளுக்கும் அனைத்திற்கும் அப்பாற்பட்டு பாரபட்சமின்றி செயல்படுவார். சபையின் உரிமைகளைப் பாதுகாக்கிறவர் சபாநாயகரே. இவரே சபையின் எல்லா நடவடிக்கைகளுக்கும் பொறுப்பேற்கிறார். எனவே இந்திய அரசியலமைப்பில் இவரது அதிகாரம் சிறப்பான இடத்தைப் பெறுகிறது.

**சபாநாயகரின் பணிகள்**

1. சபை நடவடிக்கைகளின் வரிசையைப் பிரதம மந்திரியுடன் கலந்தாலோசித்த பின் முடிவெடுக்கிறார்.
2. கேள்விகளை அனுமதிப்பதும், சட்டத்திற்குப் புறம்பான கேள்விகளுக்கு அனுமதி மறுப்பதும் இவரது பணியாகும்.
3. ஒரு மசோதாவின் கருத்துக்கள் அரசின் அதிகாரப்பூர்வ இதழில் (Gage Hee) வெளியிடுவதற்கு உத்தரவிடுகிறார்.
4. ஒரு மசோதா மீதான விவாதம் நடைபெற்றுக்கொண்டிருக்கும் போது, அதை ஒத்தி வைக்க இவரது சம்மதம் தேவை.
5. எந்த ஒரு தீர்மானமும் சபாநாயகரின் அனுமதியின்றி சபைக்குள் கொண்டு வர முடியாது.
6. குடியரசுத் தலைவருக்கும், பாராளுமன்றத்திற்குமிடையான செய்தித் தொடர்புகள் ஏற்படுத்துவது இவரே.
7. வாக்கெடுப்பிற்கு உத்தரவிடுவதும், முடிவை அறிவிப்பதும் இவரே.
8. உறுப்பினர்களைத் தவிர வெளியிலிருந்து வரும் நபர்களை அவையினுள்ளே அனுமதிப்பதும் எந்த நேரமும் வெளியேற்றவும் இவருக்கு அதிகாரமுண்டு.
9. இரு சபைகளின் கூட்டுக் கூட்டத்திற்குத் தலைமை தாங்கி வேற்றுமைகளைக் களைய உதவுகிறார்.
10. சபாநாயகர் பேசிக் கொண்டிருக்கும்பொழுது யாரும் வெளி நடப்புச் செய்ய முடியாது. அவர் எழுந்து உரையாற்றும் பொழுது உறுப்பினர்கள் அனைவரும் இருக்கையில் அமர்ந்திருக்க வேண்டும்.

மக்களவையின் நடுநாயகராக வீற்றிருப்பவர் சபாநாயகர் ஆவார். மக்களவையை அனுதினமும் நடத்திச் செல்வது அவ்வளவு எளிதான காரியமல்ல. அது ஒரு சவாலாகவே உள்ளது. பாராளுமன்ற நடவடிக்கை ஒழுங்கற்றுக் காணப்படும் சமயங்களில், ஒழுங்கை நிலைநாட்டுவது மிகக் கடினமான காரியமாகும். பல உறுப்பினர்கள் பல நேரங்களில் கூச்சல் குழப்பத்தை ஏற்படுத்துவர். அச்சமயங்களில் சபையை ஒத்தி வைக்க வேண்டிய சூழ்நிலைகளில் சபாநாயகர் உள்ளார். அமைதியை நிலைநாட்டும்படி உறுப்பினர்களைப் பலமுறை கெஞ்ச வேண்டியதாய் இருக்கிறது. பல உறுப்பினர்கள் சபைக்குப் பல நாட்கள் வராமலிருந்து

விட்டு சபைக்கு வந்தவுடன் பேசுவதற்கு அனுமதி கோருவார்கள். அவர்களைச் சபாநாயகர் சரிப்படுத்த வேண்டும். சபைகாரியங்களைச் சீராகவும், கண்ணியமாகவும் நடத்துவது சபாநாயகரின் தனித் திறமையைக் காட்டுகிறது. பத்திரிக்கையாளர்களுக்குச் சபை நடவடிக்கை பற்றிக் கூற வேண்டிய நிலையில், சபாநாகயர் விமர்சனம் செய்யப்படுகிறார். சபாநாயகர் தனது பணியை திறம்படச் செய்ய சில மரபு விதிகளை உருவாக்கலாம். சபாநாயகர் பதவி ஏற்றவுடன் தான் சார்ந்துள்ள அரசயில் கட்சி பதவியை ராஜினாமா செய்ய வேண்டும் அப்பொழுதுதான் சபையின் எல்லா உறுப்பினர்களின் நம்பிக்கையையும் இவர் பெற இயலும். சபாநாயகர் பதவிக்கு, ஆளும் கட்சி மற்றும் எதிர்கட்சி உறுப்பினர்களுக்கு வாய்ப்புக்கள் தரப்படவேண்டும். நல்ல தகுதிகளைப் பெற்ற, விசுவாசமுள்ள ஆழந்த அறிவும், அனுபவமுமுள்ள, ஜனநாயகத்தின் மீது நம்பிக்கையுள்ள நபரைச் சபாநாகராக நியமிக்க வேண்டும். வெளி நடப்பு என்பது சபையின அலுவல்களைப் பாதிக்கும். அடிக்கடி வெளிநடப்புச் செய்யும் உறுப்பினர்களை உறுப்பினர் தகுதியை இழக்கும் படி செய்ய வேண்டும். இந்த மாற்றங்களை செய்யும் பொழுது மக்களவையின் தலைமை தாங்கும் தெய்வமாக (Presiding deity) சபாநாயகர் இந்தியப் பாராளுமன்றத்தில் திகழ இயலும்.

இதுவரை கலைக்கப்பட்ட மக்களவைகள் ஒரு கண்ணோட்டம்.

1. காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த ஜவகர்லால் நேரு நாட்டின் முதல் பிரதமராகப் பதவி ஏற்றுக் கொண்டதிலிருந்து 1971ம் ஆண்டு வரை எந்த லோக் சபாவும் கலைக்கப்படவில்லை.
2. திருமதி. இந்திராகாந்தி பிரதமர் பதவி ஏற்ற பிறகு, கம்யூனிஸ்ட் கட்சி ஆதரவை வாபஸ் பெற்றதால், ஐந்து ஆண்டு காலமுடிவடைய ஒரு வருடம இருக்கும் போது 1971ம் ஆண்டு மக்களவை கலைக்கப்பட்டது. மீண்டும் ஆட்சியைக் கைப்பற்றி ஐந்து ஆண்டு கால ஆட்சியை முடித்த பிறகு அசவர நிலையைப் பயன்படுத்தி ஓராண்டு காலம் பதவியை நீடித்துக் கொண்டார்
3. 1977ம் ஆண்டு நடந்த பொதுத் தேர்தலில் வெற்றி பெற்ற ஜனதா கட்சியின் மொரார்ஜி தேசாயின் அரசு 1979ம் ஆண்டு கவிழ்ந்தது. காரணம் கடசி உறுப்பினர்களிடையே ஏற்பட்ட கருத்து வேறுபாடேயாகும்.
4. 1984ம் ஆண்டு திருமதி. இந்திரா காந்தியின் மறைவுக்குப் பிறகு ராஜிவ் காந்தி பிரதமராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.
5. 1989ம் ஆண்டு நடந்த தேர்தலில் வெற்றி பெற்ற தேசீய முன்னனயின் தலைவர் வி.பி.சிங். அவர்களுக்குப் பாரதீய ஜனதா கட்சி ஆதரவளித்தது. எனினும், ஓராண்டுக்குள் தனது ஆதரவைப் பாரதீய ஜனதா கட்சி விலக்கிக் கொண்டதால், 1990 நவம்பரில் மக்களவை கலைக்கப்பட்டது.

6. சிறுபான்மை அரசு அமைத்த சந்திர சேகரின் அரசு 1991 மார்ச் மாதம் கவிழ்ந்தது.
7. 1991ம் ஆண்டு பொதுத் தேர்தல் நடக்கவிருந்த சமயம், ராஜிவ் காந்தி கொலை செய்யப்பட்டார். காங்கிரஸ் அமோக வெற்றி பெற்று, நரசிம்மராவ் தலைமையிலான அரசு 5 ஆண்டகளைப் பூர்த்தி செய்தது.
8. 1996ம் ஆண்டு நடந்த பொதுத் தேர்தலில் எந்தக் கட்சிக்கும் பெரும்பான்மை கிடைக்காமல் போகவே பாரதீய, ஜனதாகட்சி ஆட்சி அமைத்தது. வாஜ்பாய் பிரதமராகப் பொறுப்பேற்றார். எனினும் 13 நாட்களே அவரின் ஆட்சி நீடித்தது.
9. தேசிய முன்னனித் தலைவர் தேவ கவுடாவின் அரச ஏப்ரல் 21, 1997ல் வீழ்ந்தது.
10. 10.ஐ.கே. குஜ்ரால் ஆட்சி அமைத்து 18.03.1998 ஆம் தேதி வரை நீடித்தார்.
11. 1998ம் ஆண்டு நடந்த பொதுத் தேர்தலிலும் யாருக்கும் கிட்டவில்லை. பாரதிய ஜனதா கட்சி மற்ற கட்சிகளின் ஆதரவுடன் பெரும்பான்மை ஆட்சி அமைத்தது. துணைக் கட்சிகள் வாபஸ் பெற்றதால் நம்பிக்கை வாக்கெடுப்பில் ஒரு வாக்கு வித்தியாசத்தில் 13 மாதங்கள் ஆட்சியிலிருந்த வாஜ்பாய் அரசு பதவி இழந்து 1999 ஏப்ரல் 26ல் மக்களவை கலைக்கப்பட்டது.
12. 1999 பொதுத் தேர்தலில் வாஜ்பாய் தலைமையில் தேசிய ஜனநாயகக் கூட்டணி அரசு அமைந்தது.

இந்தியப் பாராளுமன்றத்தில் இட ஒதுக்கீட்டுப் பட்டியல்

| வ. எண். | மாநிலங்கள் மற்றும் யூனியன் பிரதேசங்கள் | மாநிலங்களவை | மக்களவை |
|---|---|---|---|
| 1. | ஆந்திரப் பிரதேசம் | 18 | 42 |
| 2. | அருணாச்சலபிரதேசம் | 1 | 2 |
| 3. | அஸ்ஸாம் | 7 | 14 |
| 4. | பீகார் | 16 | 40 |
| 5. | கோவா | 1 | 2 |
| 6. | குஜராத் | 11 | 26 |
| 7. | அரியானா | 5 | 10 |
| 8. | இமாச்சலபிரதேசம் | 3 | 4 |
| 9. | ஜம்மு—காஷ்மீர் | 4 | 6 |
| 10. | கர்நாடகா | 12 | 28 |
| 11. | கேரளா | 9 | 20 |
| 12. | மத்தியப்பிரதேசம் | 11 | 29 |
| 13. | மகாராஷ்டிரம் | 11 | 29 |
| 14. | மணிப்பூர் | 1 | 2 |
| 15. | மேகாலயா | 1 | 2 |
| 16. | மிஜோரம் | 1 | 1 |

| | | | |
|---|---|---|---|
| 17. | நாகலாந்து | 1 | 1 |
| 18. | ஒரிஸ்ஸா | 10 | 21 |
| 19. | பஞ்சாப் | 7 | 13 |
| 20. | ராஜஸ்தான் | 10 | 25 |
| 21. | சிக்கிம் | 1 | 2 |
| 22. | தமிழ்நாடு | 18 | 39 |
| 23. | திரிபுரா | 1 | 2 |
| 24. | உத்திர பிரதேசம் | 31 | 80 |
| 25. | மேற்க வங்காளம் | 16 | 42 |
| 26. | உத்தரஞ்சல் | 3 | 5 |
| 27. | ஜார்க்கண்ட் | 6 | 14 |
| 28. | சட்டிஸ்கர் | 5 | 11 |

யூனியன் பிரதேசங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1 | அந்தமான் நிகோபார் தீவுகள் | *** | 1 |
| 2. | சண்டிகர் | *** | 1 |
| 3. | தத்ரா & நாகர்ஹவேலி | *** | 1 |
| 4. | டாமன் & டயூ | *** | 1 |
| 5. | லட்சத்தீவு | *** | 1 |
| 6. | டெல்லி | 1 | 7 |
| 7. | பாண்டிச்சேரி | 1 | 1 |
| | நியமன உறுப்பினர்கள் | 12 | 2 |
| | மொத்தம் | 245 | 545 |

அரசியலமைப்பின் படி ராஜ்ய சபை உறுப்பினர்களின் எண்ணிக்கை 250 என நிர்ணயிக்கப்பட்டுள்ளது. ஆனால் 5 யூனியன் பிரதேசங்களிலிருந்து மாநிலங்களவைக்க உறுப்பினர்கள் அனுப்பபடவில்லை. எனவே உறுப்பினர்களின் எண்ணிக்கை 245 ஆக மட்டுமே உள்ளது.

## 5.1.2. மாநிலங்களவை

பாராளுமன்ற அரசாங்கத்தை இந்தியா ஏற்றுக் கொண்டு உள்ளது. பாராளுமன்ற முறையின் தூண் போன்று விளங்கும் பின் வரும் பண்புகளுக்கு நம் அரசியலமைப்பு வழி வகைகள் செய்துள்ளது.

1. வயது வந்தோர் வாக்குரிமை
2. ஏற்றத் தாழ்வுகளைக் களைதல்
3. அடிப்படை உரிமைகள்
4. குறிப்பிட்ட இடைவெளியில் நியாயமான, சுதந்திரமான தேர்தல்
5. பிரதிநிதித்துவ அரசாங்கம்

இந்தியப் பாராளுமன்றம் என்பது குடியரசுத் தலைவரையும், இரு சபைகளையும் (Two houses of Parliament) கொண்டுள்ளது. மக்களவை கீழவையாகும். இராஜ்ய சபை மேலவையாகும். பாராளுமன்றத்தின் மிக

முக்கிய பணி சட்டமியற்றுவதாகும். பொதுப்பு பணத்தை வசூலிக்கவும், அதனைச் செலவு செய்வும் அரசாங்கத்திற்கு அதிகாரமளிக்கக் கூடிய உரிமை பாராளுமன்றத்திற்கு உள்ளது. இந்திய அரசியலமைப்பின் 80 வது விதி ராஜ்ய சபை பற்றிக் கூறுகிறது.

### இராஜ்ய சபையின் அமைப்பு

இராஜ்ய சபா உறுப்பினர்கள், விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ அடிப்படையில் ஒற்றை மாற்று வாக்கு (single transferable vote) மூலம் மாநிலச் சட்டமன்ற உறுப்பினர்களால் தோந்தெடுக்கப்படுகிறார்கள். இராஜ்ய சபை, மாநிலங்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கிறது என்றாலும் அமெரிக்க நாட்டின் செனட் சபையைப் போல, இது சம பிரதிநிதித்துவம் அளிக்கவில்லை. உதாரணமாக உத்திரப்பிரதேசத்திற்கு அதிக பட்டசமாக 31 இடங்கள் ஒதுக்கப்பட்டுள்ளது. சிக்கிம், மணிப்பூர், திரிபுரா, நாகலாந்து, கோவா, மிஜோரம், மேகாலயா போன்ற மாநிலங்களுக்குத் தலா 1 இடம் ஒதுக்கப்பட்டுள்ளது. இராஜ்ய சபையின் மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கை 250—க்கு மேற்படக்கூடாது. இதில் 238 பேர் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் ஆவார். இலக்கியம், விஞ்ஞானம், கலை, பொதுப்பணி ஆகியவற்றில் தேர்ச்சியும், அனுபவமும் மிக்க பனிரெண்டு நபர்களைக் குடியரசுத் தலைவர் இராஜ்ய சபையின் உறுப்பினர்களாக நியமனம் செய்கிறார். (Nomitation)

### பதவிக்காலம்

இராஜ்ய சபையைக் கலைக்க முடியாது. இது ஒரு நிலையான அவையாகும். இதன் உறுப்பினர்கள் 6 ஆண்டு காலத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். மொத்த அங்கத்தினரில் மூன்றில் ஒரு பகுதியினர், இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை பதவியிலிருந்து ஓய்வு பெறுகிறார்கள்

### உறுப்பினராவதற்கான தகுதிகள்

- இந்தியக் குடிமகனாக இருக்க வேண்டும்.
- முப்பது வயது அடைந்தவராக இருக்க வேண்டும்.

### உறுப்பினர்களின் சிறப்புரிமைகள்

நாடாளுமன்றத்தின் இரு அவைகளுக்கும், மாநிலச் சட்டமன்றங்களுக்கும் ஒரே மாதிரியான சிறப்புரிமைகள் அரசியலமைப்பால் வழங்கப்பட்டுள்ளன. சில சிறப்புரிமைகள் தனிப்பட்ட உறுப்பினர்களுக்கும், சில சிறப்புரிமைகள் அவைக்கு மொத்தமாகவும் அளிக்கப்பட்டுள்ளன.

- ❖ மன்றத்தின் உறுப்பினர்களுக்கு முழுமையான பேச்சச் சுதந்திரம் கொடுக்கப்பட்டுள்ளது.

- ❖ மன்றக் கூட்டங்கள் நடக்கும் பொழுது உறுப்பினர்களைக் கைது செய்யமுடியாது
- ❖ கூட்டங்கள் நடப்பதற்கு 14 நாட்களுக்கு முன்பும் கூட்டங்கள் முடிந்த பின்னர் 14 நாட்களுக்குள்ளும் இவர்களைக் கைது செய்ய இயலாது.
- ❖ உரிமையியல் (Civil case) வழக்குகளுக்கு மட்டும் தான் இவ்வாறான காப்புரிமை அளிக்கப்பட்டுள்ளது. குற்றவியல் வழக்குகளுக்கு இவ்வுரிமை அளிக்கப்படவில்லை.
- ❖ சான்றாய்வு அங்கத்தினராக (Juror) நாடாளுமன்ற உறுப்பினர்கள் பணிபுரிய வேண்டியதில்லை.
- ❖ கூட்டங்கள் நடக்கும் பொழுது ஒரு உறுப்பினரைச் சான்றாளராக (witness) ஆக அழைக்க முடியாது.
- ❖ ஒரு உறுப்பினர் அவையில் பேசியதற்கெதிரான நடவடிக்கை எடுக்க முடியாது. ஆனால் இந்த உரிமை அவையின் விதிகளுக்கு உட்பட்டு இருக்க வேண்டும்.
- ❖ அன்னியர்களை அவையிலிருந்து அகற்ற இரு அவைகளுக்கும் உரிமை உள்ளது.
- ❖ தனது நடவடிக்கைகளை தானே வரையறுத்தக் கொள்ளும் உரிமையுள்ளது.
- ❖ அவையின் நடவடிக்கைகளில் தலையிட எந்த நீதிமன்றத்திற்கும் உரிமையில்லை.
- ❖ தனது சிறப்புரிமைகளை மீறும் உறுப்பினர்களையும், அன்னியர்களையும் தண்டிக்கும் அதிகாரம் உள்ளது.
- ❖ கண்டித்துவிடல் (admonition) கண்டனம் தெரிவித்தல் (reprimand) அல்லது சிறை வைத்தல் (imprisonment) போன்றவற்றைத் தண்டனையாக வழங்கலாம்.
- ❖ அவையின் குறைவெண் (quorum) வரம்பு இந்த அவையினாலேயே முடிவு செய்யப்படும்.

**இராஜ்ய சபையின் தலைவர்**
(Ex-officio chairman of Rajya sabha)

இச்சபையின் தலைவராக இந்திய துணைக் குடியரசுத் தலைவர் இருப்பார். சபை உறுப்பினர்களில் ஒருவர் துணைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படுகிறார். துணைக் குடியரசுத் தலைவர் சபைக் கூட்டங்களுக்குத் தலைமை தாங்குவார். மாநிலங்களவையின் பணிகள் சரியான படி நடைபெற உதவி செய்கிறார். சபையில் ஒழுங்கையும், அமைதியையும் நிலைநாட்டுவார். வாக்கெடுப்பு நடத்தி முடிவை அறிவிப்பார். தலைவர் இல்லாத சமயங்களில் துணைத் தலைவர் சபையின் அலுவல்களைக் கவனிப்பார். தலைவரையும், துணைத்

தலைவரையும் பதவி நீக்கம் செய்ய, இராஜ்ய சபையில் பெரும்பான்மையோர் தீர்மானம் இயற்றலாம். கீழவை அதனை ஏற்றுக் கொண்டால் இருவரையும் பதவி நீக்கம் செய்யலாம்.

## இராஜ்ய சபையின் அதிகாரங்கள்

### சட்டத்துறை அதிகாரங்கள்

பண மசோதா தவிர, பிற மசோதாக்கள் மாநிலங்களவையில் அறிமுகப்படுத்தப்படலாம். எல்லாச் சட்ட மசோதாக்களுக்கும் மாநிலங்களவையின் ஒப்புதல் அவசியமாகிறது. மக்கள் சபையினால் நிறைவேற்றப்பட்ட ஒரு மசோதாவை மாநிலங்களவை நிராகரிக்கலாம் அல்லது சில பரிந்துரைகளுடன் மக்களவைக்குத் திருப்பி அனுப்பலாம். இரு சபைகளுக்குமிடையே முரண்பாடுகள் ஏற்பட்டால், குடியரசுத் தலைவர் இரு சபையின் கூட்டுக் கூட்டத்தைக் (Joint Session) கூட்டுவார். இக்கூட்டத்தில் மசோதா வாக்கெடுப்பிற்கு விடப்பட்டுப் பெரும்பான்மை வாக்குகளின் படி முடிவு செய்யப்படுகிறது. பண மசோதாவை இராஜ்ய சபா பெற்ற நாளிலிருந்து பதினான்கு நாட்களுக்குள் கீழவைக்குத் திருப்பி அனுப்பாவிட்டால், அது மக்கள் சபையால் நிறைவேற்றப்பட்டதாகக் கருதப்படும். அரசு மானியங்கள் (Grants) மக்கள் சபையால் மட்டுமே அங்கீகாரம் செய்யப்படுகிறது. ஆதலால் நிதிச்சட்டம் இயற்றுவதில் மாநிலங்களவை சக்தியற்றது எனலாம்.

### நிர்வாகத்துறை அதிகாரங்கள்

மாநிலங்களவை நிர்வாகத்துறையை ஓரளவு மட்டுமே கட்டுப்படுத்த இயலும். அமைச்சர்கள் கீழவைக்கு மட்டுமே பொறுப்புள்ளவர்கள் ஆவார்கள். அமைச்சர்கள் மேலவைக் கூட்டங்களிலும் பங்கு பெறலாம். மேலவை இரண்டு விதங்களில் நிர்வாகத்துறை மீது செல்வாக்குச் செலுத்தலாம். அவை

- அரசின் கொள்கைகள், செயல்பாடுகள் பற்றி கேள்விகள் கேட்கலாம்.
- அரசின் கொள்கைகள், நடவடிக்கைகள் பற்றி விமர்சனங்களைக் கூறலாம். அமைச்சர்கள் இதற்குப் பதிலளிக்க வேண்டும். நாட்டின் முக்கிய பிரச்சனைகளைப் பற்றி விவாதிக்க மாநிலங்களவை ஒத்தி வைப்பத் தீர்மானம் கொண்டு வரலாம். மேலவை உறுப்பினர்களும் அமைச்சர்களாக நியமிக்கப் படலாம்.

மேலவையும், கீழவையும் போன்று அரசியலமைப்புத் திருத்தங்களை நிறைவேற்றுவதில் முக்கியப் பங்கு வகிக்கிறது. எல்லா அரசியலமைப்பத் திருத்த மசோதாக்களும் மேலவையின் ஒப்புதலைப் பெற வேண்டும். எடுத்துக்காட்டாக, 1970—ல் கீழவையால் நிறைவேற்றப்பட்ட

மன்னர் மானிய ஒழிப்புக்கான 24வது அரசியல் அமைப்புத் திருத்த மசோதாவை மேலவை நிராகரித்தது. ஆனால் கீழ்கண்ட அரசியலமைப்பின் விதிகளை மாற்ற வேண்டுமானால், அது மாநிலங்களின் சட்டமன்றங்களின் ஒப்புதலைப் பெற வேண்டும்.

- குடியரசுத் தலைவரின் தேர்தல் விதி —54
- குடியரசுத் தலைவருக்கான தேர்தல் நடக்கும விதம் — விதி 75
- நிர்வாகத்துறையின் அதிகாரங்களை விரிவுபடுத்தல் — விதி 73
- மாநில நிர்வாகத்துறையின் அதிகாரங்களை விரிவுபடுத்துதல் —விதி 162
- யூனியன் பிரதேசங்களின் உயர்நீதிமன்றங்கள் — விதி 241
- பகுதி 5 ல் அத்தியாயம் ஐந்து (5) (உயர்நீதிமன்றங்கள்)
- பகுதி 11ல் அத்தியாயம் ஒன்று மைய மாநிலச் சட்டத்துறை உறவுகள்.

இராஜ்ய சபையின் சிறப்பதிகாரங்கள்

மேலவையான இராஜ்ய சபைக்குக் கீழ்கண்ட சிறப்பதிகாரங்கள் உள்ளன அவை:

- குடியரசுத் தலைவர், துணைக் குடியரசுத் தலைவர் தேர்தலில் பங்கு பெறுகிறது.
- குடியரசுத்தலைவர் மீதான குற்ற விசாரணைத் தீர்மானம் கீழ் சபையில் நிறைவேற்றப்பட்டால், மேலவை புலன் விசாரணை செய்கிறது.
- உச்ச நீதிமன்ற நீதிபதியை இரு அவைகளின் பெரும்பான்மைத் தீர்மானத்தின் படி பதவி நீக்கம் செய்யலாம்.
- மையத் தேர்வு ஆணையம், தலைமைத் தணிக்கை அதிகாரி, தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடியினர் ஆணையம், நிதி ஆணையம் போன்றவைகளின் அறிக்கை இரு சபைகள் முன்பாக ஆலோசிக்கப்படும்.
- மையத் தேர்வாணயத்தின் கட்டுப்பாட்டிலிருந்து ஒரு நியமனத்தை எடுக்க அரசு பாராளுமன்றத்தில் இரு அவையின் ஒப்புதலைப் பெற வேண்டும்.
- தேசிய நலன் கருதி, மாநிலப் பட்டியலில் உள்ள அதிகாரத்தில், பாராளுமன்றம் சட்டம் இயற்ற வேண்டுமெனில், இராஜ்ய சபை 2/3 பங்கு பெரும்பான்மை உறுப்பினர்களின் தீர்மானத்தை நிறைவேற்ற வேண்டும்.

- ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட அனைத்திந்தியப் பணிகளை உருவாக்க, இராஜ்ய சபைக்கு அதிகாரம் உள்ளது. (I.A.S. பணிகள்) –விதி 312.
- அவசர நிலைப் பிரகடணம் இரண்டு மாதங்களுக்கு மேல் நீடிக்க வேண்டுமெனில் இரு சபையின் ஒப்புதல் பெற வேண்டும்.
- அமைச்சகங்கள் உருவாக்கிய விதிகள், இரு சபையின் ஒப்பதலைப் பெற வேண்டும்.

**நிலை (Position)**

பண மசோதாவை நிறைவேற்றுவதில் மேலவைக்கு அதிகாரம் இல்லை. பண மசோதாவை நிராகரிக்க அல்லது திருத்த மேலவைக்கு அதிகாரம் கிடையாது. அமைச்சர்கள் மீது இராஜ்ய சபை அதிகக் கட்டுப்பாடுகளைக் கொண்டிருக்க முடியாது. இராஜ்ய சபை நம்பிக்கையில்லத் தீர்மனத்தைக் கொண்டு வர இயலாது. இரண்டு சபைகளுக்கும் கருத்து வேறுபாடுகள் ஏற்பட்டால், கூட்டுக் கூட்டத்தைக் குடியரசுத் தலைவர் கூட்டுவார். ஆனால் மக்களவைக்குத்தான் இக்கூட்டத் தொடர் சாதகமாக இருக்கும். ஏனெனில் மக்களவை உறுப்பினர்களின் எண்ணிக்கை அதிகமாக உள்ளது. இங்கிலாந்திலுள்ள மேலவை போல, இராஜ்ய சபை முற்றிலும் அதிகாரமற்ற சபை அல்ல. அமெரிக்க செனட் சபை போல அதிக அதிகாரங்களைப் பெற்ற சபையும் அல்ல. கூட்டாட்சி அரசு முறையில் மாநிலங்களுக்கு அதிகாரங்கள் மற்றும் பிரதிநிதித்துவம் அவசியமாகிறது. மேலவை மாநிலங்களின் பிரதிநிதிகளைக் கொண்டது. மாநிலங்களின் எண்ணங்களைப் பிரதிபலிக்க மாநிலங்களவை அவசியமாகும். மேலும் குறிப்பிட்ட துறைகளின் நிபுணர்கள் 12 பேர் இச்சபை உறுப்பினர்களாக உள்ளதால், மேன்மை பொருந்திய நிலையை மேலவை பெறுகிறது. இவர்களது ஆலோசனைகள் நிர்வாகத்துறைக்கும் பயன்படுகிறது. மேலும் நமது அரசியலமைப்பு கீழவைக்கு வழங்காத சில சிறப்பதிகாரங்களை இராஜ்ய சபைக்கு அளித்துள்ளது. அவையாவன:

ஏழாவது அட்டவணையிலுள்ள மாநிலப் பட்டியலில் பாராளுமன்றத்திற்குச் சட்டம் பணிகளை (IAS, IPS etc.) உருவாக்க இராஜ்ய சபைக்கு அதிகாரம் உள்ளது.

இராஜ்ய சபை இந்த அதிகாரத்தைப் பயன்படுத்தி 1961—ல் இந்தியப் பொறியாளர் பணி, இந்திய வனப்பணி, இந்திய மருத்துவப்பணி ஆகியவற்றையும் 1965—ல் இந்திய வேளாண்பணி மற்றும் இந்திய கல்விப் பணி ஆகியவற்றையும் உருவாக்கியது. எனவே

நிதியதிகாரங்களைத் தவிர மற்ற எல்லா வகையிலும் மக்களவை போன்று சமமான அதிகாரங்களைப் மேலவை பெற்றுள்ளது.

**மதிப்பீடு**

பண மசோதா மற்றும் நிதி அதிகாரங்கள் போன்ற அதிகமான அதிகாரங்கள் இல்லை என்பதால், சில விமர்சகர்கள், மேலவை நாட்டிற்கு தேவையில்லை என்றும், தாமதப்படுத்தும் அவை (Delaying chamber) என்றும் இராஜ்ய சபை குறித்துக் கருத்துக் கொள்ள முடியாது. மக்களவையில் உறுப்பினர்களின் எண்ணிக்கை அதிகமாக இருப்பதால் அனைத்து உறுப்பினர்களும் விரிவான விவாதங்களில் பங்கு பெற முடியாது. மேலும் மக்களவைக்குப் பணிச்சுமைகள் அதிகமாகவுள்ளதால், ஒவ்வொரு பிரிவாக மசோதாக்களை விவாதிக்க இயலாது. இந்தச் சமயங்களில் இராஜ்ய சபை மசோதாக்களை விரிவாக விவாதித்து, நல்ல முடிவுகளை மக்களவைக்கு வழங்கலாம்.

மாநிலங்களவையின் மதிப்பைப் மறைந்த பிரதமர் நேரு அவர்கள் பின் வருமாறு விளக்கியுள்ளார். 'மேலவை கீழவை என்ற பாகுபாடு சரியானதல்ல. இரண்டு அவைகளும் சம அதிகாரங்களைப் பெற்றுள்ளது. ஒவ்வொரு சபையும் தனது அதிகார எல்லைக்குள் பணியாற்றுகிறது. எந்த ஒரு சபையும் தனித்துப் பாராளுமன்றமாக இயங்க முடியாது. இரண்டு அவைகளும் சேர்ந்தது தான் பாராளுமன்றம் ஆகும். இரண்டு அவைகளும் இணைந்து பாகுபாடின்றிச் செயல்பட்டால்தான், உண்மையான மக்களாட்சியை நிலைநாட்ட முடியும்'' என்று கூறியுள்ளார். நேருவின் கூற்றுப்படி அரசியலமைப்பும், அரசாங்கமும் நல்ல முறையில் செயலாற்ற இரண்டாவது சபை அவசியமாகிறது என்பது தெள்ளத் தெளிவாகச் சுட்டிக் காட்டப் பட்டுள்ளது. அரசியலமைப்பின் விதி108ன் படி குடியரசுத் தலைவர், இரு சபைகளின் கூட்டுக் கூட்டத்தை நடத்தலாம். இந்தக் கூட்டுக் கூட்டத்தில் மக்களவையின் கருத்துக்களை மீறி மாநிலங்களவை தனது கருத்துக்களுக்கு முக்கியத்துவம் கொடுக்க வாய்ப்புண்டு. இதுவரை மூன்று முறைகள் பாராளுமன்றத்தின் இரு அவைகளின் கூட்டுக் கூட்டங்கள் நடைபெற்றுள்ளன. வரதட்சணைத்தடுப்பு மசோதா 1961, வங்கிப் பணியாளர் ஆணையம் (ரத்து) மசோதா 1988, தீவரவாதத் தடுப்புச் சட்டம் (POTA) 2002 ஆகியவை இயற்றப்படும் போது, மாநிலங்கள் அவை முக்கியப் பங்கு வகித்துள்ளது.

## 5.2. அமைச்சரவையின் அமைப்பு:

குடியரசுத் தலைவர் தனது அதிகாரத்தைச் செலுத்தும் போது அவருக்கு அறிவுரை கூறி துணை செய்வதற்கு தலைமை அமைச்சரின் கீழ் உள்ள அமைச்சரவை இருக்க வேண்டும் என்று அரசியலமைப்பின்

74ம் விதி கூறுகிறது. 75ம் விதியின்படி குடியரசுத் தலைவர், தலைமை அமைச்சரை நியமித்து, அவரது அறிவுரையின் பேரில் பிற அமைச்சர்களை நியமிப்பார். அமைச்சர்கள் குடியரசு தலைவர் விரும்பும் காலம் வரை பதவியிலிருப்பர்.

பாராளுமன்றத்திற்குத் தேர்தல் முடிந்ததும் லோக்சபாவில் எந்தக்கட்சி பெரும்பான்மை இடங்களைப் பிடித்து கட்சியாக வருகிறதோ, அந்தக் கட்சியின் தலைவரை மந்திரி சபை அமைக்குமாறு குடியரசு தலைவர் கேட்டுக்கொள்வார். எந்த ஒரு கட்சியும் லோக்சபாவில் பெரும்பான்மை பலம் பெறாமல் போகுமானால், எந்தக்கட்சியின் தலைவர் தனக்கு பெரும்பான்மை உறுப்பினர்களின் ஆதரவு இருக்கிறது என்கிறாரோ தனக்கு சரியென்று தோன்றும் வகையில் அவரை பிரதமந்திரியாக குடியரசுத்தலைவர் நியமிப்பதற்கு இடம் இருக்கிறது. ஆனால் மற்ற அமைச்சர்களை நியமிக்கும் விஷயத்தில் குடியரசுத் தலைவர் பிரமத மந்திரியின் பரிந்துரையைப் புறக்கணிக்க முடியாது.

**அமைச்சர் குழு அல்லது கேபினட்**

அரசியலமைப்பில் கேபினட் என்ற வார்த்தையே சொல்லப்பட வில்லையென்றாலும், இங்கிலாந்து அரசியலமைப்பிலுள்ள மரபைப் பின்பற்றுவதால், இந்தியாவிலும் அமைச்சரவை என்றும், கேபினட் என்றும் பாகுபாடு செய்யப்பட்டுள்ளது. இப்போது இந்திய அமைச்சரவையில் மூன்று வகையான அமைச்சர்கள் உள்ளனர்.

1) கேபினட் அமைச்சர்கள் (Cabinet Ministers)
2) இணை அமைச்சர்கள் (Ministers of State)
3) துணை அமைச்சர்கள் (Deputy Ministers)

கேபினட் தகுதியுடைய அமைச்சர்கள் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட துறைகளின் தலைவர் ஆவார். கேபினட் அமைச்சர்களே நாட்டின் கொள்கைகளை உருவாக்குகிறார்கள். கேபினட் தகுதி பெறாத இணை அமைச்சர்களுக்கும், துணை அமைச்சர்களுக்கும் அதில் பங்கு கிடையாது. அவர்கள் அழைக்கப்படாலன்றி அமைச்சரவைக் கூட்டங்களில் கலந்து கொள்ள முடியாது.

இணை அமைச்சர்கள் என்பவர் கேபினட் அமைச்சருக்குக் கீழும், துணை அமைச்சருக்கு மேலானதுமான தரத்தைப் பெறுகிறார். இவர்களுடன் பாராளுமன்ற செயலாளர்கள் என்ற மற்றொரு வகையினரும் உள்ளனர். இவர்கள் அமைச்சர்களும் அல்ல, துறைத்தலைவர்களும் அல்ல. ஆனால் அமைச்சர்களுக்கு அரசாங்க அலுவல்களில் உதவி செய்பவர்களாக இருக்கிறார்கள். அலவன்ஸ்

மற்றும் சிறப்பு சலுகைகள் அவ்வப்போது பாராளுமன்றம் நிர்ணயம் செய்கிறது.

அமைச்சரவையின் இயல்புகள்:

1) அமைச்சர் பாராளுமன்றத்தின் இரண்டு சபைகளுள் ஒன்றின் உறுப்பினராக இருத்தல் வேண்டும் இல்லையென்றால் பதவியேற்று ஆறுமாத காலத்திற்குள் பாராளுமன்ற சபை ஒன்றில் தேர்தல் மூலமோ அல்லது நியமனம் மூலமோ உறுப்பினராக வேண்டும். அப்படி உறுப்பினராக முடியவில்லையென்றால் 75(5)வது பிரிவின்படி பதவி இழப்பார்.

2) அமைச்சரவை உறுப்பினர்கள் பாராளுமன்றத்தின் எந்த ஒரு சபையிலும் போய் பேசுவதற்கும், சபை நடவடிக்கைளில் கலந்து கொள்வற்கு அரசியலமைப்பின் 88ம் விதியின்படி உரிமை உண்டு. ஆனால் தாங்கள் உறுப்பினராக இல்லாத சபையில் வாக்களிக்க உரிமை கிடையாது.

3) அமைச்சர்கள் பாராளுமன்ற பெரும்பான்மைக் கட்சியிலிருந்துதான் நியமிக்கப்படுகிறார்கள். சில சமயங்களில் சிறுபான்மைக் கட்சிகளிலிருந்து சிலர் நியமிக்கப்பட்டாலும், அனைவரும் ஒரே குழுவாக செயல்படுவதால், அமைச்சர்கள் பெரும்பான்மை கட்சியின் பிரதிவாதிகளாகவே இருக்கிறார்கள்.

4) அமைச்சர்கள் பாராளுமன்றத்தின் கீழ்சபையான லோக் சபாவுக்கு பொறுப்புடையவர்கள். பாராளுமன்றத்தின் பெரும்பான்மைக் கட்சியின் நம்பிக்கையை எந்த நாள் வரையில் பெற்றிருக்கிறார்களோ, அந்த நாள் வரை தான் ஆட்சியல் நிலைத்திருக்க முடியும்.

5) அமைச்சர்கள் லோக்சபாவிற்குக் கூட்டுப் பொறுப்பு உடையவர்கள். கூட்டுப் பொறுப்பு என்பது பிரதம மந்திரியால் தான் நிலைநாட்ட முடியும். அமைச்சரவை உறுப்பினர்கள், பிரதம மந்திரியால் நியமிக்கப்பட்டு, நீக்கப்பட்டால் தான் கூட்டுப் பொறுப்பு என்ற குறிக்கோளை அடைய முடியும் என்று டாக்டர். அம்பேத்கர் சொல்லியுள்ளார். அதாவது அமைச்சர்களிடம் ஒற்றுமை இருக்க வேண்டும். பிரதம மந்திரிக்கு பணிந்து நடக்க வேண்டும். தலைமை அமைச்சரின் கீழ் கூடி, கொள்கைகளை ஒரு மனதாக முடிவு செய்ய வேண்டும். குறிப்பிட்ட அமைச்சர் மாறுபட்ட கருத்தைக் கொண்டிருந்தால், உடனே அமைச்சர் குழுவிலிருந்து விலகிக் கொள்ளவேண்டும்.

6) அமைச்சரவை மக்களவைக்கு கூட்டுப் பொறுப்புள்ளதாக இருப்பதால், மக்கள் சபையில் பெரும்பான்மை ஆதரவு பெற்றுள்ள தலைமை அமைச்சரின் விருப்பப்படியே குடியரசுத் தலைவர் நடந்து கொள்வார்.

7) ஒவ்வொரு மந்திரியும் நடைமுறையில் தன் சகாக்களின் குறைகளுக்கும் பொறுப்புடையவர் ஆகிறார். ஒரு அமைச்சர் மீது கொண்டு வரப்படும் குற்றச்சாட்டு இதர அமைச்சர்கள் மீதும் கொண்டு வரப்படும் குற்றச்சாட்டாக கருதப்படவேண்டும். ஒரு அமைச்சர் மீது கொண்டு வரப்படும் நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேற்றப்படுமானால் அது இதர அமைச்சர்கள் மீதும் நம்பிக்கையில்லாததாக கருதப்படும்.

8) பதவியேற்கும் பொழுது ஒவ்வொரு அமைச்சரும் ரகசியக்காப்பு உறுதியொன்றை எடுத்துக்கொள்வார். அதன்படி அமைச்சர்கள் அமைச்சரவை ரகசியங்களை வெளியில் சொல்லாதிருக்க வேண்டும்.

9) பிரதம மந்திரியே அமைச்சரவையின் தலைவராதலால், மற்ற அமைச்சர்கள் அவர் தலைமையை ஏற்று நடக்க வேண்டும். அமைச்சரவைக் கூட்டங்களுக்கு பிரதம மந்திரியே தலைமை வகிக்கிறார். அவர்தான் அமைச்சர்களுக்குத் துறைப் பொறுப்புக்களைப் பகிர்ந்தளிக்கிறார்.

**கேபினட் கமிட்டிகள்**

அமைச்சர் குழுவின் பணிகள் மேலும், மேலும் வளர்ந்து கொண்டேயிருக்கிறது. அமைச்சர்களிடையே வேலைப்பளுவைக் குறைப்பதற்கும் முக்கியமான பொருள்களைப் பற்றி ஆய்ந்து அறிக்கை சமர்ப்பிப்பதற்கும் அமைச்சர் குழுவில் சில துணைக் குழுக்கள் அல்லது உட்குழுக்கள் (கேபினட் கமிட்டிக்ள) நிறுவப்பட்டு இருக்கின்றன. இவைகளை நிரந்தரக் குழுக்கள் என்று அழைக்கலாம். இந்த நிரந்தரக் குழுக்களில் மூன்று அல்லது அதற்கு மேற்பட்ட அமைச்சர்கள் உறுப்பினர்களாயிருந்து குறிப்பிட்ட பொருள்களைப் பற்றி ஆராய்ந்து அறிக்கை சமர்ப்பிப்பார்கள். பெரும்பாலான உட்குழுக்களுக்கு பிரதமமந்திரியே தலைமை வகிக்கிறார். கீழ்க்கண்ட முக்கியமான உட்குழுக்கள் அமைச்சர் குழுவிற்கு துணை புரிகின்றன.

ய) பொருளாதாரக்குழு (Economic Committee)

டி) பாதுகாப்புக்குழு (Defence Committee)

உ) வெளி உறவுக்குழு (Foreign Affairs Committee)

ன) பாராளுமன்ற சட்ட நடவடிக்கைகள் குழு (Parliamentary and Legal affairs Committee)

ந) நியமனங்கள் பற்றிய குழு (Appointments Committee)

க) அறிவியல் குழு (Scientific Committee)

ப) புனர்வாழ்வுக் குழு (Rehabilitation Committee)

## 5.2.1. அமைச்சரவையின் அதிகாரங்கள்

**1. அரசாங்கத்தின் கொள்கையை உருவாக்குதல்:**

அமைச்சரவையின் பணிகளில் முக்கியமான பணி அரசாங்கம் பின்பற்ற வேண்டிய கொள்கைகளை உருவாக்குவதாகும். வெளிநாட்டுக் கொள்கையையும் அமைச்சரவையே முடிவு செய்கிறது. கொள்கைகளை வகுப்பதுடன் அதனை செயல்படுத்தும் வழிகளையும் தீட்டுகிறது. எல்லா முக்கியமான முடிவுகளும் அமைச்சரவைக் கூட்டங்களில்தான் முடிவு செய்யப்படுகின்றன. உதாரணமாக, கூட்டுச் சேராக் கொள்கை, காலனி ஆதிக்க எதிர்ப்புக் கொள்கை, இனவெறி எதிர்ப்புக்கொள்கை, புதிய கல்விக் கொள்கை, புதிய பொருளாதாரக் கொள்கை ஆகியவை யாவும் அமைச்சரவை உருவாக்கிய கொள்கைகளேயாகும்.

**2. நாட்டின் நிர்வாகப் பொறுப்பை கவனித்தல்:**

அமைச்சரவைதான் அரசாங்கத்தின் அச்சாணி போன்றது. ஆட்சித்துறை அலுவல்கள் அனைத்தும் அதன் மேற்பார்வையிலும், கட்டுப்பாட்டிலும் நடைபெறுகிறது. நாட்டின் வரவு செலவு திட்டத்தை அதுவே வகுக்கிறது. உள்நாட்டிலும், வெளி நாட்டிலும் முக்கியமான அதிகாரிகளை நியமிப்பதும் அதன் அலுவலாகும். பல துறைகளையும் சார்ந்த அமைச்சர்கள் செயல் திறன் மிக்கவர்களாக இருந்து, அரசாங்க நிர்வாகம் திறமையாக நடக்க உதவி செய்து வருகிறார்கள்.

**3. குடியரசுத் தலைவரின் பாராளுமன்ற உரையைத் தயாரித்தல்:**

பாராளுமன்றத்தின் முதல் கூட்டத்தொடரின் தொடக்கத்திலும், அதற்குப் பிறகு வருடா வருடம் கூடும் முதல் கூட்டத்தொடரின் தொடக்கத்திலும், குடியரசுத் தலைவர் பாராளுமன்றத்தில் உரை நிகழ்த்துவார். அரசாங்கக் கொள்கைகளை விளக்கும் அந்த உரை உண்மையில் அமைச்சாவையால் தயாரிக்கப்படுகிறது. பாராளுமன்ற உறுப்பினர்கள் அந்த உரையை ஏற்கும் வகையில் குடியரசுத் தலைவருக்கு நன்றி தெரிவித்து தீர்மானம் ஒன்றை நிறைவேற்றுவார்கள். அந்த தீர்மானம் பாராளுமன்றமானது அமைச்சரவையின் கொள்கைகளை ஏற்றுக்கொள்வதற்கு அடையாளமாக கருதப்படுகிறது.

**4 பாராளுமன்ற நடவடிக்கைகளில் கலந்து கொள்ளுதல்**

அமைச்சர்கள் அனைவருக்கும் பாராளுமன்றத்தின் இரு சபைகளிலும் கலந்து கொள்ளும் உரிமை உண்டு. ஆனால் அவர்கள் எந்த சபையின் உறுப்பினர்களாக இருக்கிறார்களோ, அந்த சபையில் மட்டுமே வாக்களிக்க முடியும்.

**5. மசோதாக்களை தயார் செய்து தோற்றுவித்தல்:**

மசோதாக்களை வரைந்து அஃவற்றை முன்மொழிவதற்கு, மற்றவர்களைக் காட்டிலும் அமைச்சர்களுக்கு வசதிகளும், வாய்ப்புகளும் அதிகம். பாராளுமன்றத்தில் தோற்றுவிக்கப்படும் மசோதாக்களில் பெரும்பாலானவை அமைச்சர்களால் தோற்றுவிக்கப்படுகின்றன. பாராளுமன்றத்தில் தோற்றுவித்தபின் அதனை வெற்றிகரமாக நடத்திச் சென்று, சட்டமாக்குவதும் அமைச்சர்களின் பொறுப்பாகும்.

இவை தவிர, அரசியல், வணிக, பொருளாதார, இராணுவ ஒப்பந்தங்கள் பலவும் அமைச்சரவையின் ஆமோதிப்பிற்கிணங்கவே செய்து கொள்ளப்படுகின்றன. சுருக்கமாக கூறினால், இந்திய அமைச்சரவை இங்கிலாந்து அமைச்சரவையைப் போன்று செயலாற்றுகிறது.

## 5.2.2. பிரதம மந்திரியின் அதிகாரங்கள்:

இந்திய அரசியல் சூழ்நிலையில் பிரதம மந்திரியின் பதவி மாண்புமிக்க பதவியாகக் கருதப்படுகிறது. குடியரசுத் தலைவர் பிரதம மந்திரியை நியமிப்பார் என்று அரசியலமைப்பு கூறினாலும் அவரை எவ்வாறு நியமிப்பது என்பது பற்றி ஒன்றும் கூறவில்லை. மரபுப்படி பாராளுமன்றத்தின் பெரும்பான்மைக் கட்சித் தலைவரையே குடியரசுத் தலைவர் பிரதம மந்திரியாக நியமனம் செய்கிறார். ஆகவே பிரம மந்திரியை நாட்டு மக்கள் தேர்ந்தெடுகின்றனரே தவிர குடியரசுத் தலைவர் தெரிந்தெடுப்பதில்லை.

ஆனால் பொதுத் தேர்தலில் மக்கள் சபையில் எந்தக் கட்சியும் பெரும்பான்மைப் பலம் பெறவில்லையென்றால், எந்தக் கட்சியின் தலைவர் உறுதியான அரசாங்கத்தை அமைக்க முடியுமெனக் குடியரசுத் தலைவர் நம்புகிறாரோ, அவரையே பிரதம மந்தியாக நியமிக்கலாம். பிரதம மந்தியாக நியமிக்கப்பட்டவர் மக்களவையில் பெரும்பான்மை ஆதரவு இருக்கும் வரையில் தான் பிரதமராக நீடிக்க முடியும். பிரதம மந்திரி அல்லது அவரது அமைச்சரவை மீது மக்களவையில் நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டால் பிரதம மந்திரி பதவி இழக்க வேண்டும்.

பிரதம மந்திரியின் அதிகாரங்கள்

1) அமைச்சரவையை உருவாக்கி ஆட்சி அமைத்தல்:

பிரதம மந்திரியே ஆட்சி அமைக்கிறார். தனது அமைச்சரவையின் அமைச்சர்களை முடிவு செய்வது பிரதம மந்திரியின் சிறப்புரிமையாகும். பிரதமரின் அறிவுரையின் பேரில்தான், குடியரசுத் தலைவர் அமைச்சர்களை நியமிக்க வேண்டுமென்று அரசியலமைப்பு தெளிவாகக் கூறுகிறது. ஆகவே பிரதமர் விரும்பாத ஒருவரை குடியரசு தலைவர் அமைச்சராக நியமிக்க முடியாது. பிரதம மந்திரியின் பேச்சுக்கும், முடிவுக்கும் இவ்விஷயத்தில் அளவு கடந்த மதிப்பு தரப்படுகிறது. அமைச்சர்கள், பிரதம மந்திரியின் தலைமையை ஏற்று அவர் நல்லெண்ணத்தைப் பெற்றிருக்கும் வரைதான் பதவியிலிருக்க முடியும். தனது இஷ்டப்படி எந்த அமைச்சரையும் பதவி விலக்கலாம். பிரதமர் பதவி விலகினால் எல்லா அமைச்சர்களும் பதவி துறப்பர்.

மேலும் அமைச்சர்களிடம் பல்வேறு துறைகளை ஒதுக்கி கொடுப்பதும் பிரமதரின் தனி உரிமையாகும். இவ்வாறு அமைச்சரவையை ஆக்கவும் அழிக்கவும் பிரதமர் அதிகாரம் பெற்றிருக்கிறார்.

2) அமைச்சரவைக் கூட்டங்களுக்குத் தலைமை தாங்குதல்:

அமைச்சரவை கூட்டத்திற்குத் தலைமை தாங்கி நடத்துபவர் பிரதமரே ஆவார். பிரச்சனைக்குரிய கொள்கைகள் குறித்து மற்ற அமைச்சர்களிடையே நிலவும் கருத்து வேறுபாடுகளை நீக்கி, ஒருமனதாக முடிவு செய்ய பிரதமர் உதவி செய்கிறார். அரசாங்கத்தின் முக்கியமான கொள்கைகளைப் பாராளுமன்றத்தில் அறிவிக்கிறார். இதனால் பிரதமரை கொள்கைகளின் பிறப்பிடம் என்றும் கூறலாம்.

3) உயர் அரசாங்க நியமனங்களை முடிவு செய்தல்:

மத்திய அரசாங்கம் சம்பந்தப்பட்ட அரசியல் தன்மை வாய்ந்த எல்லா உத்தியோக நியமனங்களும் குடியரசுத் தலைவரால் செய்யப்பட்டாலும், அவற்றைப் பின்னிருந்து முடிவு செய்வது பிரதமரே ஆவார். உதாரணமாக, மாநில ஆளுநர்கள் தூதுவர்கள் போன்றவர்களின் நியமனம் பிரதமரின் முடிவுப்படியே நடைபெறுகிறது.

4. பாராளுமன்ற நடவடிக்கைகளில் கலந்து கொள்ளுதல்:

பொதுவாக பிரதமர் தான் கீழ்ச்சபையான மக்கள் சபையில் பெரும்பான்மைக் கட்சியின் தலைவராகப் பணியாற்றுகிறார். மேலும், தான் செய்யும் காரியங்களுக்கு மக்கள் சபையில் பதில் சொல்ல வேண்டியவராவார். அரசாங்கதிற்கு முழுப்பொறுப்பேற்று பாராளுமன்றத்தில் கேட்கப்படும் முக்கிய கேள்விகளுக்கும், சபையில் கொண்டுவரப்படும் ஒத்திவைப்பு அல்லது வெட்டுப் பிரேரணைகளுக்கும் பிரதமர் தகுந்த

பதில்களைத் தரவேண்டியவராவர். ஒருவர் தவறான விடையளிக்கும் போது விவாதங்களில் குறுக்கிட்டு திருத்தவும் செய்கிறார். பாராளுமன்றத்தில் அரசாங்கத்தின் கொள்கைகள் பற்றி அறிக்கைகளை வெளியிட வேண்டியதும் அவர் பொறுப்பாகும். வரவுசெலவுத் திட்டம் தயாரிக்கப்படுவதில் பிரமதருக்கு முக்கிய பங்குண்டு. அதில் பிரதமரின் சம்மதம் இல்லாமல் எந்த மாற்றங்களையும் செய்ய முடியாது.

5. பாராளுமன்றத்திற்கும், குடியரசுத் தலைவருக்கும் தொடர்பு பாலமாக செயல்படுதல்:

பாராளுமன்றத்திற்கும், குடியரசுத் தலைவருக்கும் ஒரு தொடர்புப் பாலம் போன்று பிரதமர் செயல்படுகிறார். பாராளுமன்றம் கூட்டப்படும் தேதியை குடியரசுத் தலைவருக்குத் தெரிவிக்கிறார். பாராளுமன்ற இணைப்புக் கூட்டத்தில் குடியரசு தலைவர் ஆற்றும் உரையை பிரதமரே தயாரிக்கிறார். அமைச்சரவையின் முக்கியமான முடிவுகளை குடியரசு தலைவரிடம் தெரிவிக்கிறார். அமைச்சரவையின் முடிவுகளில் எதையாவது மறு பரிசீலனை செய்யுமாறு குடியரசு தலைவர் கேட்டுக் கொண்டால், அதுகுறித்து விவாதித்து முடிவு செய்கிறார். இவ்வாறு பிரதமர் குடியரசு தலைவருக்கும் பாராளுமன்றத்திற்குமிடையே ஒரு தொடர்புப் பாலமாக செயல்படுகிறார்.

6. மக்கள் சபையை கலைக்கும் அதிகாரம்

பாராளுமன்றத்தின் உறுப்பினராகவும், பெரும்பான்மைக் கட்சியின் ஆதரவுடனும் ஆட்சியை அமைக்கும் பிரதமருக்கு மக்கள் சபையையே கலைத்துவிடும் அதிகாரம் உண்டு. அரசாங்கம் தோற்கடிக்கப்பட்டு, வேறெந்தக் கட்சியாலும் ஆட்சியை அமைக்க முடியவில்லையென்றால் பதவியிலிருந்து விலகும். பிரதமர் மக்கள் சபையை (லோக் சபா) கலைத்து விடும்படி குடியரசு தலைவருக்கு பரிந்துரை செய்ய அதிகாரம் பிரதமருக்கு உண்டு.

7. திட்டக்குழுவின் தலைவர் பிரதமரே:

தேசிய திட்டக்குழுவிற்கு (Planning Commission) பிரதம மந்திரியே தலைமை தாங்குகிறார். நாட்டின் பொருளாதாரக் கொள்கைகளைப் பற்றியும், திட்டங்களைப் பற்றியும் விரிவான அதிகாரங்கள் தேசிய திட்டக்குழுவுக்குக் கொடுக்கப்பட்டுள்ளன.

8. தேசிய வளர்ச்சிக்குழுவின் தலைவர் பிரதமரே:

இந்திய மாநிலங்களின் முதலமைச்சர்களை உறுப்பினர்களாகக் கொண்ட தேசிய வளர்ச்சிக் குழுவிற்கு (National Development Council)

பிரதமரே தலைமை வகிக்கிறார். பிரதமரே தேசிய வளர்ச்சித் திட்டங்களை முன்னணியிலிருந்து உருவாக்குகிறார்.

### 5.2.3. பிரதம மந்திரியின் நிலை:

பிரதம மந்திரி ஈடு இணையற்ற செல்வாக்கும், அதிகாரமும் உடையவராக இருக்கிறார். நாட்டின் பல முக்கியமான பொறுப்பு உடையவராக இருக்கிறார். உள்நாட்டு, வெளிநாட்டுக் கொள்கைகளை உருவாக்கும் சிற்பி பிரதமரே ஆவார். அமைச்சரவையை ஆக்குவதும், அழிப்பதும் அவரே. பாராளுமன்றத்தையே கலைத்துவிடும் அதிகாரம் பெற்றுள்ளார். ஒரு சர்வாதிகாரிக்குள்ள எல்லா அதிகாரங்களையும் பெற்றுள்ள பிரதமரை, சூரியனுக்கு இணையாக ஒப்பிடுகிறார்கள். எப்படி சூரியனை மற்ற கோளங்கள் சுற்றி வருகின்றனவோ, அவ்வாறே நாட்டிலுள்ள மற்ற நிறுவனங்கள் பிரதமர் என்ற மையத்தைச் சுற்றியே வந்து செயலாற்றுகின்றன.

இவ்வளவு அதிகாரங்களைச் செலுத்தி வந்த போதிலும், பிரதமர் ஒரு வல்லாட்சியாளர் அல்ல. ஏனெனில் தமது அமைச்சரவைத் தோழர்களின் ஒத்துழைப்பு இல்லாமல், அவர் தமது அதிகாரங்களைச் செலுத்த முடியாது. மேலும், அவரது வலிமை, கட்சியில் எந்த அளவுக்கு அவர் செல்வாக்கைப் பெற்றுள்ளார் என்பதையும் பொறுத்து அமைகிறது. மேலும், பிரதமர் பதவியிலிருக்கும் தலைவரின் தனித்தன்மையும், சிறந்த பண்புகளும் பிரமர் பதவிக்கு மேலும் முக்கியத்துவத்தையும், புகழையும் தருகின்றன. இதற்கு உதாரணமாக மாபெரும் தலைவராக இருந்த நேரு பிரதமர் பதவியிலிருந்த போது அப்பதவிக்கு புகழும் செல்வாக்கும் அதிகமிருந்தன. ஆனால் நரசிம்மராவ் பிரதமராக இருந்த போது, அப்பதவியின் மதிப்பும், தரமும் மிகவும் குறைந்து காணப்பட்டது என்பது இங்கு சுட்டிக் காட்டத்தக்கது.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக்கான கேள்விகள்

1. லோக் சபாவின் அமைப்பினை விவரி.

2. லோக் சபாவின் சபாநாயகரின் அதிகாரங்களை பட்டியல் எழுதுக.

3. ராஜ்ஜிய சபாவின் அதிகாரம் மற்றும் பணியினை விளக்குக.

## 5.3. அரசியல் அமைப்பு அட்டவணை

அரசியலமைப்பின் ஒரு பகுதியாக பன்னிரெண்டு அட்டவணைகள் இணைக்கப்பட்டுள்ளன அவையாவன:

முதலாவது அட்டவணை: இந்திய யூனியன் மாநிலங்கள் மற்றும் மத்திய அரசின் ஆட்சிப் பகுதிகள் அடங்கியது.

இரண்டாவது அட்டவணை: இந்திய குடியரசுத் தலைவர், துணைத் தலைவர், பாராளுமன்றம், சபாநாயகர், சட்டசபைத் தலைவர், ஐகோர்ட்

நீதிபதிகள், ஆடிட்டர் ஜெனரல் ஆகியோரின் சம்பளம் மற்றும் இதர சலுகை, வசதிகள் பற்றிய விபரங்கள் அடங்கியது.

மூன்றாவது அட்டவணை: எடுக்கப்பட வேண்டிய உறுதிமொழி வாசகங்கள் அடங்கியது.

நான்காவது அட்டவணை: ராஜ்ய சபாவில், மாநிலங்கள் மற்றும் மைய ஆட்சிப்பகுதிகளுக்கான உறுப்பினர் எண்ணிக்கை அடங்கியது.

ஐந்தாவது அட்டவணை: சிறப்புப் பகுதிகளின் நிர்வாகம் பற்றியது.

ஆறாவது அட்டவணை: அசாம், மேகாலயா, மிசோரம் போன்ற பழங்குடியினர் வாழும் பிரதேசங்களின் நிர்வாக முறை பற்றியது.

ஏழாவது அட்டவணை: மத்திய மாநில அரசுகளின் அதிகாரப் பட்டியல்களைக் கொண்டது.

எட்டாவது அட்டவணை: அரசியல் அமைப்பினால் அங்கீகரிக்கப்பட்டுள்ள 15 மொழிகளைக் கொண்டது. அவை அசாமி, வங்காளி, குஜராத்தி, இந்தி, கன்னடம், காஷ்மீரி, மலையாளம், மராத்தி, ஒரியா, பஞ்சாபி, சமஸ்கிருதம், சிந்தி, தமிழ், தெலுங்கு, உருது, கொங்கனி, நேப்பாளி, மணிப்பூரி ஆகியவையாகும். (இதில் 1967—ல் 21வது அரசியல் திருத்தத்தின்படி சிந்தி சேர்க்கப்பட்டது. 71வது அரசியலமைப்புத் திருத்தத்தின்படி கொங்கனி, மணிப்பூரி, நேப்பாளி ஆகிய மொழிகள் சேர்க்கப்பட்டன.

ஒன்பதாவது அட்டவணை: இது முதலாவது அரசியல் அமைப்பு திருத்தச் சட்டப்படி (1951) இணைக்கப்பட்டது. உரிமையியல் நீதிமன்றம் விசாரணைக்கு அப்பாற்பட்ட, நிலச் சீர்திருததங்கள், ரயில்வே, தொழிற்கூடங்களைக் கொண்டது.

பத்தாவது அட்டவணை: இது 52 வது திருத்தச் சட்டப்படி (1985) இணைக்கப்பட்டது. கட்சித் தாவல் தடைச் சட்டம் பற்றிய விபரங்கள் அடங்கியது.

பதினொன்றாவது அட்டவணை: இது 1993ஆம் ஆண்டு 73வது அரசியலமைப்பு திருத்தத்தின்படி இணைக்கப்பட்டுள்ளது. கிராம பஞ்சாயத்துக்கள் நல்லமுறையில் செயல்பட தேவையான அதிகாரங்கள் பற்றிய பட்டியலைக் கொண்டுள்ளது. இவை 243 (ஜீ) உட்பிரிவின் படி சேர்க்கப்பட்டுள்ளது.

பன்னிரெண்டாவது அட்டவணை: இது 1993ஆம் ஆண்டு 74வது அரசியலமைப்பு திருத்தத்தின்படி இணைக்கப்பட்டுள்ளது. டவுண் பஞ்சாய்த்துக்கள் நகரசபை நிறுவனங்கள் மாநகராட்சி நிறுவனங்கள் ஆகிய மூவகை நகர சபை குழுக்களின் அதிகாரத் தொகுப்புகள் அடங்கியது.

## 5.3.1. அரசியல் அமைப்பு சட்டத்தின் திருத்தங்கள்

இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின் திருத்தத்திற்கு மூன்று விதி முறைகள் வகுக்கப்பட்டுள்ளன.

1) பாராளுமன்றத்தின் இரு சபைகளிலும் சாதாரணப் பெரும்பான்மை பெற்று திருத்துதல், புதிய மாநிலங்களை உருவாக்குதல், அவற்றின் எல்லையை மாற்றுதல், பெயர் மாற்றுதல், மாநிலங்களில் இரண்டாவது அவை அமைத்தல், அகற்றுதல் ஆகியவைகள் இம்முறையில் திருத்தப்படலாம்.

2) பாராளுமன்றத்தின் இரு சபைகளிலும் மூன்றில் ஒரு பங்கு பெரும்பான்மையுடன் திருத்துதல்.

3) பாராளுமன்றத்தின் இரு சபைளிலும் மூன்றில் இரு பங்கு பெரும்பான்மையுடனும், பாதிக்கு மேற்பட்ட மாநில சட்டசபைகளின் சம்மதத்துடனும் திருத்துதல், ஜனாதிபதி தேர்தல் முறை, மத்திய, மாநில அரசுகளிடையே அதிகாரப் பிரிவினை போன்றவை சார்ந்த திருத்தங்கள் இம்முறையில் நிறைவேற்றப்படவேண்டும்.

முதல் அரசியல் அமைப்புச் திருத்தச் சட்டம் (1951 ஜீன்) சமூகம் மற்றும் கல்வி நிலையில் பின் தங்கியிருப்பவர்களின் முன்னேற்றத்திற்கான சிறப்பு நடவடிக்கைகள் எடுப்பதை 39—வது சட்டப்பிரிவு தடை செய்யாது. வன்முறையைத் தூண்டுதல், வெளிநாடுகளுடனான நட்புறவைப் பாதித்தல் போன்ற வகையில் பேசுவது குற்றமாக்கப்படும் வகையில் பேச்சுரிமையின் 19—வது பிரிவு மாற்றப்பட்டது. தனியார் நிலங்களை அரசு கையகப்படுத்தும் வகையில் 31ஏ பிரிவு திருத்தப்பட்டது. பார்லிமெண்ட் மற்றும் சட்டசபை கூட்டங்களுக்கான இடைவெளி ஆறு மாத காலத்திற்கு அதிகமாகக் கூடாது. அதே போல் ஒவ்வொரு ஆண்டின் முதல் பாராளுமன்றக் கூட்டத்தொடரில் ஜனாதிபதி உரை நிகழ்த்துவார் என இவ்வரசியலமைப்பத் திருத்தம் கூறுகிறது.

2 வது அரசியல் அமைப்புத் திருத்தச் சட்டம்: (1953ம் மே) 1951—ம் ஆண்டின் மக்கள் தொகை அடிப்படையில் மாநிலங்களின் பாராளுமன்ற உறுப்பினர்கள் எண்ணிக்கை திருத்தி அமைக்கப்பட்டது.

3 வது திருத்தம் (1955 பிப்ரவரி) : வாணிபம் மற்றும் உணவுப்பொருள் விநியோகம் போன்றவை மத்திய, மாநில அரசுகள் கூட்டு அதிகாரத்தினுள் கொண்டு வரப்பட்டது.

4 வது திருத்தம் (1955 ஏப்ரல்): அரசு பொதுக் காரியத்திற்கு என்று வாங்கும் நிலத்திற்கு அளிக்கப்படும் இழப்பீடு போதாது என்று கோர்ட்டுக்கு செல்வதைத் தடை செய்யும் வண்ணம் 31வது பிரிவு திருத்தப்பட்டது.

5 வது திருத்தம் (1955 டிசம்பர்): மாநிலங்களின் நிலப்பரப்பு, எல்லை ஆகியவற்றைப் பாதிக்கும் சட்டத்தை பாராளுமன்றம் இயற்றுவதற்கு முன்பாக சம்மந்தப்பட்ட மாநில சட்ட சபையில் அதுபற்றி விவாதிக்க போதிய காலம் அவகாசம் அளிக்கப்பட வகை செய்யப்பட்டது.

6 வது திருத்தம் (1956 செப்டம்பர்): மாநிலங்களுக்கு இடையிலான வார்த்தகத்தின் மீது மைய அரசு வரி விதிக்க வகை செய்யப்பட்டது.

7 வது திருத்தம் (1956 அக்டோபர்) : மொழி வாரி மாநிலங்கள் பிரிக்கப்பட வகை செய்யப்பட்டது.

8 வது திருத்தம் (1960 ஜனவரி) பழங்குடியினர் தாழ்த்தப்பட்டோர் ஆங்கிலோ இந்தியர் ஆகியோருக்கான இட ஒதுக்கீடு மேலும் 20 ஆண்டுகளுக்கு நீட்டிக்கப்பட்டது.

9 வது திருத்தம் (1960 டிசம்பர்) : சில பிரதேசங்களை பாகிஸ்தானுக்கு: அளிப்பதை அனுமதிக்கும் திருத்தம்.

10 வது திருத்தம் (1961 ஆகஸ்ட்): இந்திய யூனியனுடன் தாத்ரா நாஹர் ஹவேலி பகுதிகள் இணைப்பிற்கு வகை செய்யப்பட்டது.

11 வது திருத்தம் (1961 டிசம்பர்) துணை ஜனாதிபதியை தேர்ந்தெடுக்கும் உரிமை பாராளுமன்றத்தின் இரு சபை உறுப்பினர்கள் அடங்கிய தேர்தல் குழுவிற்கு வழங்கப்பட்டது.

12 வது திருத்தம் (1962 மார்ச்) : கோவா, டையு, டாமன் ஆகியவை இந்திய யூனியனுடன் இணைக்கப்பட வகை செய்தது.

13 வது திருத்தம் (1962 டிசம்பர்): நாகாலாந்து, இந்தியாவின் 16 வது மாநிலமாக உருவாக்கப்பட வகை செய்தது.

14 வது திருத்தம் (1962 டிசம்பர்) : யூனியன் பிரதசேங்களுக்கு பாராளுமன்றத்தில் பிரதிநிதித்துவம் மொத்த உறுப்பினர்கள் இருக்க வகை செய்யப்பட்டது.

15 வது திருத்தம் (1963 அக்டோபர்) : உயர்நீதிமன்ற நீதிபதிகள் ஓய்வு பெறும் வயதை 60 லிருந்து 62 ஆக உயர்த்தியது.

16 வது திருத்தம் (1963 அக்டோபர்) : பொது நன்மைக்காக அடிப்படை உரிமைகளில் சில கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டது. பார்லிமெண்ட், சட்டசபை உறுப்பினர்கள் நாட்டின் ஒருமைப்பாட்டை மதிப்பதாக உறுதிமொழி எடுக்க வகை செய்யப்படடது.

17 வது திருத்தம் (1964 ஜீன்) : தனியார் சொத்துக்களை அரசு எடுக்கும் போது அப்போதைய சந்தை நிலவரப்படி இழப்பீடு அளிக்க வேண்டும்.

18 வது திருத்தம் (1966 ஆகஸ்ட்) : பஞ்சாப், அரியானா மாநிலப் பிரிவினையை அனுமதித்தல்.

19 வது திருத்தம் (1966 டிசம்பர்) : தேர்தல் வழக்குகளை விசாரிக்க நிறுவப்பட்ட தனிமன்றங்கள் அகற்றப்பட்டு, அந்த விசாரணை அதிகாரம் உயர்நீதிமன்றங்களக்கு அளிக்கப்பட்டது.

20 வது திருத்தம் (1966 டிசம்பர்) மாவட்ட நீதிபதி நியமனத்தை முறைப்படுத்தியது.

21 வது திருத்தம் (1967 ஏப்ரல்) : எட்டாவது அட்டவணையில் சிந்தி மொழி சேர்க்கப்பட்டது.

22 வது திருத்தம் (1969 செப்டம்பர்) : மேகாலயா மாநிலம் உருவாக்க வகை செய்தது.

23 வது திருத்தம் (1970 ஜனவரி) பழங்குடியினர், தாழ்த்தப்பட்ட வகுப்பினர், ஆங்கிலோ இந்தியருக்கு மேலும் 10 ஆண்டுகளுக்கு இட ஒதக்கீடு சலுகை அளிக்க வகை செய்தது.

24 வது திருத்தம் (1971 நவம்பர்) : கோலக்நாத் வழக்கின் மீது எழுந்த பிரச்சனைக்கு முடிவு காணப்பட்டது. பாராளுமன்றத்திற்கு அரசியல் அமைப்பின் எந்தப் பகுதியையும் திருத்தும் உரிமை இருப்பதாக அறிவித்தது. மேலும், இந்த திருத்தத்தின்படி குடியரசுத் தலைவர் அரசியலமைப்பு சட்டதிருத்த மசோதாவிற்கு கையெழுததிட்டே ஆக வேண்டும் என்று வகை செய்தது.

25 வது திருத்தம் (1972 ஏப்ரல்): பொதுக்காரியங்களுக்காக அரசு கையகப்படுத்தும் நிலங்களுக்கு அளிக்கப்படும் இழப்பீட்டுத் தொகை பற்றிய வழக்குகள் நீதிமன்றத்தின் விசாரணைக்கு அப்பாற்பட்டவை ஆக்கப்பட்டது.

26 வது திருத்தம் (1972 ஏப்ரல்) பொதுக்காரியங்களுக்காக அரசு கையகப்படுத்தும் நிலங்களுக்கு அளிக்கப்படும் இழப்பீட்டுத் தொகை பற்றிய வழக்குகள் நீதிமன்றத்தின் விசாரணைக்கு அப்பாற்பட்டவை ஆக்கப்பட்டது.

27 வது திருத்தம் (1971 டிசம்பர்) : இந்தியாவின் வடகிழக்குப் பகுதியில் மிசோரம், அருணாசலப் பிரதேசம் என்ற இரு மத்திய அரசின் நேரடி ஆட்சிப் பகுதிகள் உருவாக்கப்பட வகை செய்தது.

28 வது திருத்தம் (1972 ஆகஸ்ட்) : ஐ.சி.எஸ். அதிகாரிகளின் இறப்புச் சலுகைகள் அகற்றப்பட்டன.

29 வது திருத்தம் (1972 ஜீன்) : கேரள மாநில நிலச்சீர்திருத்தச் சட்டம், நீதிமன்ற விசாரணைக்கு அப்பாற்பட்டவை என அறிவிக்கப்பட்டது.

30 வது திருத்தம் (1972 பிப்ரவரி) : ஐகோர்ட்டிற்கு மேல்முறையீடு செய்யும் தகுதி வரையறுக்கப்பட்டது.

31 வது திருத்தம் (1973 அக்டோபர்) : லோக்சபா உறுப்பினர்களின் எண்ணிக்கை 525—லிருந்து 545 ஆக உயர்த்தப்பட்டது.

32 வது திருத்தம் (1974 ஏப்ரல்) : மத்திய அரசு பல்கலைக் கழகங்களுக்கு சில விதிமுறைகள் வகுக்கப்பட்டது.

33 வது திருத்தம் (1974 ஏப்ரல்) : பாராளுமன்ற உறுப்பினர்களின் நிர்பந்த ராஜினாமா செல்லாது என அறிவித்தது.

34 வது திருத்தம் (1974 செப்டம்பர்) : 9—வது அட்டவணையின் மாநிலங்களின் நிலச் சீர்திருத்தச் சட்டங்கள் சேர்க்கப்பட்டு அவை நீதிமன்ற விசாரணைக்கு அப்பாற்பட்டதாக்கப்பட்டன.

35 வது திருத்தம் (1975 பிப்ரவரி) : சிக்கிம் மாநில அந்தஸ்தைப் பெற்றது.

36 வது திருத்தம் (1975 மே) : சிக்கிம் இந்தியாவின் 22வது மாநிலமாக உருவானது.

37 வது திருத்தம் (1975 மே) : அருணாசலப் பிரதேசத்திற்கு சட்டசபையும், அமைச்சரவையும் அனுமதிக்கப்பட்டது.

38 வது திருத்தம் (1975) அவசரச் சட்டம், நெருக்கடி பிரகடனம் ஆகியவைகள் நீதிமன்றத்தின் விசாரணைக்கு அப்பாற்பட்டதாக்கப்பட்டது.

39 வது திருத்தம் (1975 ஆகஸ்ட்) : ஜனாதிபதி, துணை ஜனாதிபதி, பிரதமர், லோக்சபா சபாநாயகர் தேர்தல் வழக்குகள் ஐகோர்ட் தலைமை நீதிமன்ற அதிகார வரையறைக்கு அப்பாற்பட்டதாக்கப்பட்டது. தனியொரு விசாரணைக்குழு விசாரிக்கும் 9—வது அட்டவணையில் மேலும் சில சட்டங்கள் இணைக்கப்பட்டன.

40 வது திருத்தம் (1976 மே) : 9—வது அட்டவணையில் மேலும் சில சட்டங்கள், சொத்து, உச்சவரம்பு, கடத்தல்காரர்களின் சொத்துகள் பறிமுதல், தவறான விஷயங்கள் பிரசுரமாவதைத் தடுத்தல், கடல் பரப்பின் எல்லைகள், ஆழ்கடல் கனிவளங்கள் பற்றியவை.

41 வது திருத்தம் (1976 செப்டம்பர்) பொதுப்பணியாளர் தேர்வணைக்குழு உறுப்பினர்களின் ஓய்வு வயது 60 லிருந்து 62 ஆக உயர்த்தப்பட்டது.

42 வது திருத்தம் (1976 டிசம்பர்) ஒரு மினி அரசியல் அமைப்பு என்று கூறும் அளவிற்கு ஏராளமான அடிப்படை மாற்றங்கள் செய்யப்பட்டன.

1) சமயச் சார்பற்ற சோஷசலிசம் என்ற சொற்கள் அரசியலமைப்பின் முகப்புரையில் இணைக்கப்பட்டது.
2) அடிப்படைக் கடமைகள் இணைக்கப்பட்டது.
3) அரசியல் அமைப்புச் சட்டத் திருத்தத்தில் பாராளுமன்றத்தின் ஆதிக்கம் நிலை நாட்டப்பட்டது. திருத்தங்கள் நீதிமன்ற அதிகாரத்திற்கு அப்பாற்பட்டதாக்கப்பட்டது.

4) அரசின் வழிகாட்டும் நெறிகள், அடிப்படை உரிமைகளைவிட சக்தி வாய்ந்ததாக்கப்பட்டன.
5) குடியரசுத் தலைவர் அமைச்சரவைகள் ஆலோசனைப்படிதான் செயல்பட வேண்டும்.
6) கல்வித்துறை, மத்திய மாநில அரசுகளின் இணைப்பட்டியலில் சேர்க்கப்பட்டது.
7) மத்திய அரசின் சட்டங்களை செல்லாது என்று கூறும் உயர்நீதிமன்றத்தின் அதிகாரம் உட்பட மற்றும் சில அதிகாரங்கள் குறைக்கப்பட்டது.
8) ஆட்சித்துறை விசாரணை மன்றங்களை நிறுவியது.
9) தேசத்துரோகச் செயல்கள் பிரிக்கப்பட்டு, அவற்றை ஒடுக்க பாராளுமன்றம் சட்டம் இயற்றலாம்.

43 வது திருத்தம் (1978 ஏப்ரல்) : உயர்நீதிமன்றம் மற்றும் உச்ச நீதிமன்றத்தின் அதிகாரங்கள் மீண்டும் அளிக்கப்பட்டது. தேச துரோக செயல்கள் பற்றி பாராளுமன்றம் சட்டமியற்றலாம் என்ற 42வது திருத்தப்பிரிவு ரத்து செய்யப்பட்டது.

44 வது திருத்தம் (1979 ஏப்ரல்) : உள்நாட்டு நெருக்கடி நிலை பிரகடனம் சம்பந்தமான அரசு அதிகாரங்கள் மட்டுப்படுத்தப்பட்டது. பல திருத்தப்பட்ட அரசியல் அமைப்புகள் நெருக்கடி காலத்தில் நீக்கப்பட்டது. சொத்துரிமை, அடிப்படை உரிமைப் பட்டியலிருந்து நீக்கப்பட்டது.

45 வது திருத்தம் (1980 ஏப்ரல்) : பழங்குடியினர், தாழ்த்தப்பட்டோர், ஆங்கிலோ இந்தியர் இட ஒதுக்கீடு மேலும் 10 ஆண்டுகளுக்கு நீடிக்கப்பட்டது.

46 வது திருத்தம் (1983 பிப்ரவரி): மாநில அரசுகளின் விற்பனை வரி வசூல் சம்பந்தமான குறைபாடுகள் நீக்கப்பட்டது.

47 வது திருத்தம் (1984 ஆகஸ்ட்) 9 வது அட்டவணையில் மேலும் 14 சட்டங்கள் இணைக்கப்பட்டு, நிலச் சீர்திருத்தச் சட்டங்கள் நீதிமன்ற விசாரணைக்கு அப்பாற்பட்டதாக்கப்பட்டது.

48 வது திருத்தம் (1984 ஆகஸ்ட்) : பஞ்சாபில் ஜனாதிபதி ஆட்சியை மேலும் ஓராண்டிற்கு நீடிக்கப்பட்ட வகை செய்தது.

49 வது திருத்தம் (1984 செப்டம்பர்) : திரிபுரா மாநிலத்தில் மாவட்ட சுய ஆட்சி கவுன்சில்கள் செயல்பட அனுமதித்தது. 6 வது அட்டவணை அம்மாநிலத்தில் அமல் செய்யப்பட்டது.

50 வது திருத்தம் (1984 செப்டம்பர்) : ஆயுதப்படை, பாதுகாப்பு படை மற்றும் சி.பி.ஐ. அதிகார செயல்பாடுகளை கட்டுப்படுத்த பாராளுமன்றம் சட்டம் இயற்ற அனுமதித்தது.

51 வது திருத்தம் (1984) : வடகிழக்கு மாநில சட்ட சபைகளில் பழங்குடியினருக்கு இட ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது.

52 வது திருத்தம் (1985 பிப்ரவரி) : சட்ட மன்ற உறுப்பினர்களின் கட்சித் தாவல் தடை செய்யப்பட்டது.

53 வது திருத்தம் (1986 ஆகஸ்ட்) : மிசோரம் மாநிலத்தின் தனி அந்தஸ்து உறுதி செய்யப்பட்டு அதன் சட்டசபை உறுப்பினர்களின் எண்ணிக்கை நாற்பது ஆக்கப்பட்டது.

54 வது திருத்தம் (1986) : உச்ச நீதிமன்ற, உயர்நீதிமன்ற நீதிபதிகளின் ஊதியம் உயர்த்தப்பட்டது.

55 வது திருத்தம் (1986) : அருணாசல பிரதேசம், 24 வது மாநிலமாக்கப்பட்டது. அதன் கவர்னருக்கு சட்டம், ஒழுங்கை நிலை நாட்ட விசேஷ அதிகாரங்கள் வழங்கப்பட்டது.

56 வது திருத்தம் (1987) : கோவா 25 வது மாநிலமாக்கப்பட்டது. டையு, டாமன், மேகாலயா ஆகிய மாநிலங்களில் பழங்குடியினருக்கு இட ஒதுக்கீடு வழங்கப்பட்டது.

58 வது திருத்தம் (1987) : இந்திய அரசியல் அமைப்பிற்கு அதிகாரப்பூர்வமான இந்தி மொழி பெயர்ப்பு வெளியிட ஜனாதிபதிக்கு அதிகாரம் அளிக்கப்பட்டது.

59 வது திருத்தம் (1988) : உள்நாட்டுக் குழப்பம் காரணமாக, பஞ்சாபில் நெருக்கடி நிலை அறிவிக்க அரசிற்கு அதிகாரம் அளித்தது.

60 வது திருத்தம் (1988) : நபர் ஒருவருக்கு ஆண்டு ஒன்றுக்கு தொழில்வரி ரூபாய் 250 லிருந்து 2,500 வரை உயர்த்தப்பட வகை செய்யப்பட்டது.

61 வது திருத்தம் (1989 மார்ச்) : வாக்களிக்கும் வயது 21 லிருந்து 18 ஆக குறைக்கப்பட்டது.

62 வது திருத்தம் (1988) : மேலும் பத்து ஆண்டுகளுக்கு தாழ்த்தப்பட்ட பழங்குடியினருக்கும் மற்றும் ஆங்கிலோ இந்தியர்களுக்கும் இட ஒதுக்கீடு நீட்டிக்கப்பட்டது.

63 வது திருத்தம் (1988) : 59 வது திருத்தத்தை (பஞ்சாபில் நெருக்கடி நிலை) ரத்து செய்தது.

64 வது திருத்தம் (1990) : பஞ்சாபில் ஜனாதிபதி ஆட்சியை மேலும் ஆறு மாதங்களுக்கு நீடிக்க வகை செய்யும், இத்திருத்தம் நிறைவேற்றப்படவில்லை.

65 வது திருத்தம் (1990): பழங்குடியினர் மற்றும் மலை ஜாதியினர் நலனுக்கு ஒரு தனி தேசியக் கமிஷன் உருவாக்க தீர்மானிக்கப்பட்டது.

66 வது திருத்தம் (1990): நிலச்சீர்திருத்தச் சட்டங்கள் அரசியலமைப்பில் ஒன்பதாவது அட்டவணையின் கீழ் கொண்டு வரப்பட்டன.

67 வது திருத்தம் (1990) : பஞ்சாபில் குடியரசுத் தலைவர் ஆட்சி நீட்டிக்கப்பட்டது.

68 வது திருத்தம் (1990) : பஞ்சாபில் குடியரசுத் தலைவர் ஆட்சி மேலும் நீட்டிக்கப்பட்டது.

69 வது திருத்தம் (1991) : டில்லி, தேசிய தலைநகரின் ஆட்சிப் பகுதியாக அறிவித்து.

70 வது திருத்தம் (1992) : டில்லி தேசிய தலைநகர் ஆட்சிப்பகுதி அறிவிப்பில் சில மாற்றங்களை ஏற்படுத்தியது.

71 வது திருத்தம் (1992) : நேரடியான பஞ்சாயத்து தேர்தல்களில் பழங்குடியினர் மற்றும் மலை ஜாதியினரின் எண்ணிக்கையின் அடிப்படையில், அவர்களுக்கு ரிசர்வ் தொகுதியை ஒதுக்குவது, பெண்களுக்குத் தனித் தொகுதி ஒதுக்கீடு மற்றும் பஞ்சாயத்துக்களின் பதவிக்காலம குறித்தது.

73 வது திருத்தம் (1993) : கிராம பஞ்சாயத்து, பிளாக் அளவில் பஞ்சாயத்து மற்றும் மாவட்ட அளவில் பஞ்சாயத்து

74 வது திருத்தம் (1993) : நகரப்பஞ்சாயத்து, முனிசிபல் கவுன்சில் மற்றும் முன்சிபல் கார்ப்பரேசன் குறித்தது.

75 வது திருத்தம் (1994) : மாநில அளவில் வாடகைக் குழுக்களை நியமித்தல் தொடர்பானது.

76 வது திருத்தம் (1994) : பிற்படுத்தப்பட்டோர் மலை ஜாதியினர் மற்றும் பழங்குடியினருக்கு கல்வி நிலையங்களிலும், பணி இடங்களிலும் இட ஒதுக்கீடு குறித்தது.

77 வது திருத்தம் (1995) : மலை ஜாதியினர் மற்றும் பழங்குடியினருக்கு பதவி உயர்வில் முன்னுரிமை அளிப்பது சம்பந்தமானது.

78 வது திருத்தம் (1995) : ஒன்பதாம் அட்டவணைக்குள் இடப்பட்ட சட்ட திருத்தங்கள் செயல் முறைப்படுத்தப்படும் போது, நீதிமன்றங்களின் இடையூறுகளுக்கு உட்படுகின்றன. இதைத் தவிர்ப்பதற்காக, வழக்குகளின் பாதிப்பிற்கு உட்படாத வகையில், பல சட்டத்திருத்தங்கள் ஒன்பதாம் அட்டவணைக்குள் சேர்க்கப்பட்டன.

79 வது திருததம் (1996) : இதன்படி ஆறாவது அட்டவணையில் அசாமிலுள்ள இரண்டு மலைப்பிரதேச மாவட்டங்கள் அதிக சுயாட்சி கொடுக்கும்படியாக இணைக்கப்பட்டன. கார்பி, அங்லாங் மற்றும் வடக்கு கச்சார் மலைப்பகுதி (Karibi, Anglong and North Cachar Hills) ஆகிய சுயாட்சி கவுன்சில்களுக்கு கூடுதலான நிர்வாக சட்டமியற்றும் அதிகாரங்கள் கொடுக்கப்பட்டன. இந்த மலைப்பகுதி சுயாட்சி கவுன்சில்களுடன் கலந்து மேலும் சில சுய முடிவு (Discretionary Power) அதிகாரங்களை செயல்படுத்த அசாம் ஆளுநருக்கு அதிகாரம் வழங்கப்படடது.

80 வது திருத்தம்: (2000) இதன்படி அரசியலமைப்பின் 269, 270—ம் விதிகளின்படி மத்திய மாநில அரசுகளுக்கிடையே வரி பங்கீடு செய்து கொள்வதில் மாற்றங்கள் செய்யப்பட்டன.

81 வது திருத்தம் : (2000) இந்தத் திருத்தத்தின் படி தாழ்த்தப்பட்டவர்களுக்கும் பழங்குடி இனத்தவர்களுக்கும் தலைமை நீதிமன்றம் உறுதிப்படுத்திய வேலைவாய்ப்பில் 50 சதவீத இட ஒதுக்கீடு என்ற கட்டுப்பாடு விலக்கப்பட்டது. இதனால் முந்திய வருடம் நிரப்பப்படாமல் இருக்கும் இட ஒதுக்கீடுகளும் அடுத்த வருடம் கணக்கில் எடுத்துக்கொண்டு இடங்கள் நிரப்பப்படும்.

82 வது திருத்தம்: (2000) இந்தத் திருத்தத்தின் படி தாழ்த்தப்பட்டவர்களுக்கும், பழங்குடியினர்களுக்கும் தேர்வு, வேலை வாய்ப்பு, பணி மேம்பாடு ஆகியவற்றில் மதிப்பெண் தகுதியினை தளர்த்துவதற்கு மாநிலங்களுக்கு 355 ம் விதியின்படி எந்த இடையூறும் ஏற்படாமல் செய்யப்பட்டது.

83 வது திருத்தம்: (2000)இதன்படி அரசியலமைப்பின் 243வது விதி திருத்தப்பட்டது. அருணாசலப் பிரதேசத்தின் பஞ்சாயத்துக்களில் தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடியினருக்கான இட ஒதுக்கீடு தேவையில்லை என்று முடிவு செய்யப்பட்டது. காரணம், அருணாசலப்பிரதேச மொத்த மக்கள் தொகையும் தாழ்த்தப்பட்ட பழங்குடி இனத்தைச் சேர்ந்தவர்களே ஆவர்.

84 வது திருத்தம்: (2001) எம்.பி., எம்.எல்.ஏ., தொகுதிகளில் இந்தியா முழுவதும் மக்கள் தொகை சமநிலை இல்லாமல் வளர்ச்சியடைந்துள்ளது. இதனைப் போக்க, 84வது திருத்தம் வகை செய்துள்ளது. இதன்படி 1991ல் மக்கள் தொகைக் கணக்கு அடிப்படையில் ஒவ்வொரு மாநிலத்திலும் எம்.பி. மற்றும் எம்.எல்.ஏ. தொகுதிகளின் எண்ணிக்கை மாறாமலும், தாழ்த்தப்பட்ட பழங்குடியினருக்கு ஒதுக்கப்பட்ட தொகுதிகளின் எண்ணிக்கை மாறாமலும், தொகுதி எல்லைகளைத் திருத்தவும் மாற்றியமைக்கவும் (to readjust) இத்திருத்தம் வகை செய்கிறது.

85 வது திருத்தம் : (2001) அரசு ஊழியர்களாகப் பணிபுரியும் தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடி இனத்தவர்களுக்கு, அரசு இட ஒதுக்கீட்டின் சட்டமுறைப்படி பணி மூப்பு (Seniority) அடிப்படையில் பதவி உயர்வு கொடுக்க இந்த திருத்தம் வகை செய்கிறது. இது 1995ம் வருடம் 17ம் தேதியிலிருந்து அமுல்படுத்தப்படும்.

86 வது திருத்தம் : (2002) இந்த திருத்தம் குழந்தைகளின் கல்வி கற்கும் உரிமையை (Right to Education) அரசியலமைப்பில் சேர்த்துள்ளது. இதற்காக அரசியலமைப்பின் 21வது பிரிவல் புதிய 21—A, என்ற பிரிவில் சேர்க்கப்பட்டுள்ளது. இதன்படி ஒவ்வொரு மாநிலமும் 6 முதல் 14 வயது வரையிலான குழந்தைகளுக்கு இலவசக் கல்வி அளிக்க வேண்டும். மேலும் 45 வது பிரிவும் மாற்றப்பட்டது. இதன்படி ஒவ்வொரு மாநிலமும் ஒவ்வொரு குழந்தைக்கும் 6—வது வயது முடியும் வரை பராமரிப்பும் கல்வியும் அளிக்க வேண்டும்.

87 வது திருத்தம்: (2003) இதன்படி அரசியலமைப்பின் 81, 82, 170, 330 ஆகிய விதிகளில் காணப்படும் 1991ம் வருடம் என்பதற்குப் பதிலாக 2001 என்பது சேர்க்கப்படவேண்டும்.

88 வது திருத்தம் : (2003) இந்த திருத்தம் சேவை வரி தொடர்பாக செய்யப்பட்டது ஆகும். அரசியலமைப்பின் 268 பிரிவுக்குப் பிறகு, 268(A) என்ற பிரிவு சேர்க்கப்பட்டது. இதன்படி, மத்திய அரசு சேவை வரி (Taxes on service) விதிக்கும் பாராளுமன்ற சட்டத்தின்படி மத்திய அரசும், மாநில அரசும் அதை வசூல் செய்து தங்களுக்குள் பிரித்துக்கொள்ள வேண்டும், ஏழாவது அட்டவணையில் மத்திய அரசுக்கு ஒதுக்கப்பட்ட அதிகாரங்களில் 92—C என்ற பிரிவில் சேவை வரி சேர்த்துக் கொள்ளப்படும். மத்திய அரசு கெசட்டில் வெளியிட்ட நாள் முதல் இது நடைமுறைக்கு வரும்.

89 வது திருத்தம் (2003) இது தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடியினருக்கான தேசிய ஆணையம் தனித்தனியே அமைப்பது பற்றிய திருத்தமாகும்.இதன்படி அரசியலமைப்பின் 338ம் பிரிவின்படி தாழ்த்தப்பட்ட மக்களுக்கான தேசிய ஆணையம் என்பது அமைக்கப்படும். இதில் ஒரு தலைவர், உப—தலைவர் மற்றும் மூன்று உறுப்பினர்கள் இருப்பர். இவர்கள் குடியரசுத்தலைவரால் நியமனம் செய்யப்படுவர். மேலும் 338 (A) விதியின்படி பழங்குடியினருக்கான தேசிய ஆணையம் ஒன்றும் அமைக்கப்படும். இதிலும் குடியரசுத தலைவரால் நியமிக்கப்பட்ட ஒரு தலைவர், உப—தலைவர் மற்றும் மூன்று உறுப்பினர்கள் இருப்பர். இந்த இரண்டு ஆணையங்களும் தங்களுக்கு உண்டான செயல்முறைகளை ஒழுங்குபடுத்திக்கொள்ளும் அதிகாரம் பெற்றுள்ளன.

90 வது திருத்தம் : 2003 இதன்படி அரசியலமைப்பின் 332 வது பிரிவில் சில அம்சங்கள் சேர்க்கப்பட்டது. அஸ்ஸாம் மாநில சட்டமன்ற தேர்தலில் தாழ்த்தப்ட்ட மற்றும் பழங்குடியினர் அல்லாதவர்களுக்கும் போடோ மாவட்ட நிலப்பகுதியில் அளிக்கப்பட்ட தொகுதிப்பிரதிநிதித்துவம் தொடர்ந்து நீடிக்க இத்திருத்தம் வகை செய்கிறது.

91 வது திருத்தம் : 2003 இது அமைச்சரவையின் உறுப்பினர்கள் எண்ணிக்கை பற்றியதாகும். இதன்படி 75 வது விதியில் இத்திருத்தம் சேர்க்கப்பட்டது. இதன்படி மத்திய அமைச்சரவையில் பிரதமர் உட்பட அமைச்சர்களின் எண்ணிக்கை லோக்சபா மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கையில் 15 சதவீதத்திற்கு மேல் போகக்கூடாது. இதே போல 164 வது விதியிலும் இந்த குறிப்பு சேர்க்கப்பட்டது. இதன்படி மாநில

அமைச்சரவையும் சட்டப்பேரவை உறுப்பினர்களின் (கீழ்சபை) மொத்த எண்ணிக்கையில் 15 சதவீதத்திற்கு மேல் போகக்கூடாது.

92 வது திருத்தம் : (2003) அரசியலமைப்பின் எட்டாவது அட்டவணையில் 3 எண்ணுக்குப் பதில் அந்த இடத்தில் 5 என்ற எண்ணைப் போட வேண்டும். இதற்கு முன்பாக போடோ, டொஹரி என்பதைச் சேர்க்க வேண்டும்.

### 5.3.2. குடியரசுத்தலைவர்

நூற்றிரண்டு கோடி (102) மக்களைக் கொண்ட இந்தியக் குடியரசின் முதற்குடிமகனாக (First Citizen) விளங்கும் சிறப்பைப் பெறுகிறவர் குடியரசுத்தலைவர் ஆவார். இந்திய அரசியலமைப்பின்படி அவர் மதிப்பிற்கும், மரியாதைக்கும் உரிய தலைவராக கருதப்படுகிறார். அவர் நடைமுறையில் பெயரளவுக்கு மட்டுமே நாட்டின் தலைவராக விளங்குகிறார். இந்தியா ஒரு பாராளுமன்ற காபினட் முறை அரசாங்கத்தைக் கொண்டுள்ளதால் பிரதம மந்திரியும், அதன் அமைச்சர்களுமே உண்மையான நிர்வாக அதிகாரம் பெற்றுள்ளனர். இந்தியக் குடியரசுத் தலைவர் இங்கிலாந்து அரசியைப் போன்று அதிகாரங்களைப் பெற்று அரசியலமைப்பில் இடம் பெற்றுள்ளார். அவர் இந்தியாவின் சட்டபூர்வமான அரசு தலைவரும், தலைமை நிர்வாகியும் ஆவார். தற்போது இந்தியாவின் குடியரசுத்தலைவராக இருப்பவர் திருமதி. பிரதீபா பாட்டீல் ஆவார். அரசியலமைப்பின் 53—வது பிரிவு நாட்டின் நிர்வாகப் பொறுப்பை குடியரசுத்தலைவரிடம் ஒப்படைத்துள்ளது.

### பதவிக்காலம், தகுதி, ஊதியம்:

குடியரசுத்தலைவர் ஐந்தாண்டு காலத்திற்கு தேர்ந்தெடுக்கப்படுகிறார். ஒருவரே எத்தனை முறை வேண்டுமானாலும் தேர்ந்தெடுக்கப்படலாம். மத்திய பாராளுமன்றத்தின் இரு சபைகளின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களும், மாநில சட்ட சபைகளின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களும் அடங்கிய தேர்தல் குழுவினால் விகிதாச்சார பிரதிநிதித்துவ முறைப்படி இந்திய குடியரசுத்தலைவர் தேர்ந்தெடுக்க்ப்படுகிறார்.

குடியரசுத்தலைவர் மற்றும் துணைக் குடியரசுத்தலைவர் தேர்தல் (அரசியலமைப்பு இரண்டாம் சட்ட திருத்தம்) மசோதா, மக்களவையில் 1997ம் ஆண்டு ஆகஸ்ட் 13ம் தேதி நிறைவேற்றப்பட்டது. இதன்படி குடியரசுத் தலைவர் மற்றும் துணைக் குடியரசுத்தலைவர் தேர்தலுக்கான டெபாசிட் தொகை 15,000 ரூபாய் ஆக உயர்த்தப்பட்டுள்ளது.

அதுபோலவே, குடியரசுத்தலைவர் பெயரை முன்மொழியும் மற்றும் வழி மொழியும் பாராளுமன்ற உறுப்பினர் எண்ணிக்கை தலா 50 ஆகவும், துணைக்குடியரசுத்தலைவர் பெயரை முன்மொழிவோர் மற்றும் வழிமொழிவோர் எண்ணிக்கை தலா 20 ஆகவும் இருக்க வேண்டும் என்று நிர்ணயம் செய்யப்பட்டது.

குடியரசுத்தலைவர் ஆக விரும்புகிறவர்கள் இந்தியக் குடிமகனாகவும், 35 வயது நிரம்பியவராகவும், மக்கள் சபைக்குத் தேர்ந்தெடுப்பதற்கு வேண்டிய தகுதிகள் உடையவராகவும் இருக்க வேண்டும். அதே நேரத்தில் அவர் பாராளுமன்ற மற்றும் மாநில சட்டசபைகளின் உறுப்பினராக இருக்கக் கூடாது. ஆனாலும் அவர் அவ்வாறு உறுப்பினராக இருக்கும்போது தேர்ந்தெடுக்கப்பட்டால் உறுப்பினர் பதவியை ராஜினாமா செய்ய வேண்டும். மேலும் அவர் மத்திய, மாநில, அரசாங்கங்களின் கீழ் ஊதியம் பெறும் பணியில் இருக்கக் கூடாது. குடியரசுத் தலைவர் தேர்தலை இந்திய தேர்தல் ஆணையம் நடத்துகிறது. குடியரசுத்தலைவரின் தேர்தல் பற்றிய வழக்குகள் உச்ச நீதிமன்றத்தில் தான் விசாரிக்கப்பட முடியும். உச்ச நீதி மன்றத்தின் தீர்ப்பே முடிவானதாகும்.

குடியரசுத்தலைவர் தற்போது மாத ஊதியமாக ரூ.50,000 பெறுகிறார். இவரின் பதவிக்காலத்தில் இவரது ஊதியத்தைக் குறைக்க கூடாது. இது தவிர, குடியரசுத்தலைவருக்கு சிறப்பு சலுகைகளும், செலவுப் படிகளும் உண்டு. புதுடெல்லியிலுள்ள 'ராஷ்டிரபதி பவனில்' அவர் இலவசமாகக் குடியிருப்பார். பதவியிலிருந்து ஓய்வு பெற்ற பிறகு ஆண்டுக்கு மூன்று லட்சம் ரூபாய் ஓய்வூதியம் வழங்கப்படும். இவர் இறந்தால் அவரது மனைவிக்கு ஓய்வூதியம் வழங்கப்படும். குடியரசுத்தலைவர் அவருடைய அதிகாரங்களைச் செயல்படுத்திய வகையிலும், பொறுப்புகளை நிறைவேற்றிய வகையிலும் செய்த காரியங்களுக்கு எந்த நீதிமன்றத்துக்கும் பதில் கூறக் கடமைப்பட்டவர் அல்ல. அவர் பதவியிலிருக்கும் வரை அவருக்கெதிராக எந்த குற்றவழக்குகளும் தொடரவோ, அவரைக் கைது செய்யவோ முடியாது.

## பதவி நீக்கம் செய்யப்படுதல்

குடியரசுத் தலைவராகப் பதவி ஏற்கும் ஒவ்வொருவரும் "தலைவரின் பொறுப்புகளை உண்மையாகச் செயலாற்றுவதாகவும், இயன்றவரை இந்திய அரசியலமைப்பையும், சட்டங்களையும் பேணுவதாகவும், இந்திய மக்களின் நலனுக்காகவும் சேவைக்காகவும் தன்னை ஈடுபடுத்திக் கொள்வதாகவும்" உச்ச நீதி மன்றத்தின் தலைமை நீதிபதி முன்பாக உறுதிமொழி எடுத்துக் கொள்ள வேண்டும்.

அரசியலமைப்பை மீறும் குற்றத்திற்காக குடியரசுத் தலைவர், பாராளுமன்றத்தால் குற்றம் சாட்டப்பட்டு பதவியிலிருந்து விலக்கப்படலாம். இரு சபைகளில் எந்தச் சபையில் வேண்டுமானாலும் குற்றச்சாட்டுகளைத் தொடங்கலாம். பாராளுமன்றத்தின் நான்கின் ஒரு பங்கிற்குக் குறையாத உறுப்பினர்கள் கையெழுத்திட்டு, பதினான்கு நாட்களுக்கு முன்னதாக குடியரசு தலைவர் மீது குற்றச்சாட்டுகளை தீர்மான வடிவமாகச் சமர்ப்பிக்க வேண்டும். குற்றச்சாட்டைத் தொடங்கும் சபையின் மொத்த உறுப்பினர்களில் மூன்றின் இருபங்கு உறுப்பினர்கள் அவற்றை ஏற்றுக் கொண்டால் மறு சபையில் அக்குற்றச்சாட்டுகள் ஆராயப்படும். அந்த சபையும் மூன்றில் இரு பங்கு பெரும்பான்மையினர் குற்றசாட்டுகளை ஏற்றுக் கொண்டால், குடியரசுத்தலைவர் பதவியிலிருந்து நீக்கப்படுவார். குடியரசுத்தலைவரின் பதவி நீக்கம் பற்றி அரசியலமைப்பின் 61 வது பிரிவு விளக்குகிறது.

குடியரசுத்தலைவர் பதவியில் இருக்கும் போது இறந்து விட்டாலோ, அல்லது ராஜினாமா செய்து விட்டாலோ அல்லது குற்ற விசாரணை செய்து விலக்கப்பட்டு விட்டாலோ அல்லது வேறெந்த காரணத்திற்காகவோ தலைவர் பதவி வெற்றிடமானால், துணைக் குடியரசுத்தலைவர் குடியரசுத்தலைவராக பதவி ஏற்றுக் கொள்வார். ஆனால், ஆறு மாதகாலத்திற்குள் புதிய தலைவர் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். 1969 ஆம் வருடச்சட்டப்படி குடியரசுத்தலைவர், துணை குடியரசுத்தலைவர் ஆகிய இரு பதவிகளும் ஒரே நேரம் வெற்றிடமானால் உச்சநீதிமன்றத் தலைமை நீதிபதி (அவரும் இல்லாத போது மூப்பில் அடுத்த நீதிபதி) புதிய குடியரசுத்தலைவர் தேர்ந்தெடுக்கப்படும் வரை குடியரசுத்தலைவரின் பணிகளை ஏற்று நிறைவேற்றுவார்.

### குடியரசுத்தலைவர் தேர்ந்தெடுக்கப்படும் முறை: (Election)

இந்திய குடியரசுத் தலைவர் தேர்தல் ஒரு மறைமுகத் தேர்தல் ஆகும். இதில் மக்கள் நேரடியாக ஓட்டளித்து அவரைத் தேர்ந்தெடுப்பதில்லை. மக்களின் பிரதிநிதிகளான எம்.எல்.ஏ.க்கள் மற்றும் எம்.பி.க்கள் மட்டுமே ஓட்டளித்து அவரைத் தேர்ந்தெடுக்கிறார்கள். இவ்வாறான வாக்காளர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளாக இருக்க வேண்டும். அரசியலமைப்பின் 54 வது பிரிவின்படி இந்தியாவில் உள்ள 26 மாநில எம்.எல்.ஏக்கள், யூனியன் பிரதேச எம்.எல்.ஏக்கள், லோக்சபா மற்றும் ராஜ்யசபா எம்.பிக்கள் ஆகியோர் ஓட்டளிக்கும் தகுதி பெற்றுள்ளனர்.

1952—ம் வருட ‘குடியரசுத்தலைவர் மற்றும் துணைக் குடியரசுத் தலைவர்’ சட்டத்தின்படியும், அரசியலமைப்புச்சட்டம் 62 வது பிரிவின் படியும் குடியரசுத்தலைவரின் பதவிக்காலம் முடிவதற்கு அறுபது நாட்களுக்கு முன்பே இது குறித்த அறிவிப்பை தேர்தல் கமிஷன் வெளியிட்டாக வேண்டும்.

## எம்.எல்.ஏ. ஓட்டு மதிப்பு

அரசியலமைப்புச்சட்டத்தின் 55ம் விதிப்படி, குடியரசுத்தலைவர் தேர்தலில் ஒவ்வொரு மாநிலத்தின் பங்கும் சமச்சீரானதாக இருக்க வேண்டும். இந்த சமச்சீரான பங்களிப்புக்கென குறிப்பிட்ட விகிதத்தின் படி எம்.பிக்கள் மற்றும் ஒவ்வொரு மாநிலத்தின் எம்.எல்.ஏ.க்களின் ஓட்டு மதிப்பு நிர்ணயிக்கப்படும். எம்.எல்.ஏ.வின் ஓட்டு மதிப்பு அந்தந்த மாநிலத்தின் மொத்த மக்கள் தொகை மற்றும் மொத்த எம்.எல்.ஏ.க்களின் எண்ணிக்கையை அடிப்படையாகக் கொண்டது. மாநிலத்தின் மக்கள் தொகையை மொத்த எம்.எல்.ஏ.க்களின் எண்ணிக்கையால் வகுத்து, மீண்டும் ஆயிரத்தால் வகுத்தால் ஒரு எம்.எல்.ஏ.யின் ஓட்டு மதிப்பு கிடைக்கிறது.

உதாரணமாக, 1997 ஜூலை 14—ஆம் தேதி நடைபெற்ற இந்தியாவின் 11 வது குடியரசுத் தலைவருக்கான தேர்தலை எடுத்துக் கொள்வோம். திரு. K.R. நாராயணன் அவர்களும், முன்னாள் தலைமை தேர்தல் அதிகாரி திரு. T.N. சேஷன் அவர்களும் போட்டியிட்டார்கள். இந்த தேர்தலில் 1971—ம் வருட மக்கள் தொகை அடிப்படையில் எம்.எல்.ஏ.க்கள், எம்.பி.க்களின் ஓட்டு மதிப்பு கணக்கிடப்பட்டது.

(உ—ம்) ஆந்திரப்பிரதேச மாநிலத்தின் மக்கள் தொகை = 4,35,62,708 (1971ஆம் வருடசென்சஸ்படி)

ஆந்திரப்பிரதேச மாநிலத்தின் எம்.எல்.ஏக்களின் எண்ணிக்கை } = 294

ஒரு ஆந்திரப்பிரதேச எம்.எல்.ஏ.யின் ஓட்டு மதிப்பு } = $\frac{4,35,62708}{294}$

= 147.96

= 148

ஆந்திரப்பிரதேச எம்.எல்.ஏ.க்களின்
மொத்த ஓட்டு மதிப்பு = 148 x 294
= 43,512

இதே போல் ஒவ்வொரு மாநிலங்களிலும் அந்தந்த மாநிலங்களின் மக்கள் தொகையின் அடிப்படையில் எம்.எல்.ஏ.க்களின் ஓட்டு மதிப்பு கணக்கிடப்பட்டது. அதன்படி இந்தியாவிலுள்ள 28 சட்டசபைகளில் உள்ள உறுப்பினர்களின் மொத்த ஓட்டு மதிப்பு 5,49,511 ஆகும்.

## ஒரு எம்.பியின் ஓட்டு மதிப்பு

இதே போல் ஒரு எம்.பி.யின் ஓட்டு மதிப்பு கீழ்க்கண்டவாறு கணக்கிடப்படுகிறது. நியமன எம்.பி.க்களுக்கு குடியரசுத் தலைவர் தேர்தலில் ஓட்டளிக்க உரிமையில்லை. இதேபோல், தொகுதியில் தேர்ந்தெடுக்கப்பட்டதில் முறைகேடுகள் நடந்திருப்பதாலோ அல்லது செல்லாது என உயர்நீதிமன்றம் அறிவித்தாலோ, உச்ச நீதிமன்றத்தில் இது குறித்து அப்பீல் மனு இருந்தாலோ, அந்த உறுப்பினரும் குடியரசுத் தேர்தலில் போட்டியிட முடியாது. 1997—ம் வருடம் ஜூலையில் நடைபெற்ற குடியரசுத் தலைவர் தேர்தலில் கீழ்க்கண்டவாறு ஒரு எம்.பி.யின் ஓட்டு மதிப்பு கணக்கிடப்பட்டுள்ளது.

ராஜ்யசபை உறுப்பினர் = 233
லோக்சபை உறுப்பினர் = 543
———
= 776
———

ஒரு எம்.பி.யின் ஓட்டு மதிப்பு = மாநில சட்டசபைகளின் மொத்த உறுப்பினர்களின் ஓட்டுமதிப்பு / பாராளுமன்றத்தின் தேர்ந்தெடுக்கப்பட்ட மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கை

$$= \frac{5,49,511}{776}$$

ஒரு எம்.பி.யின் ஓட்டு மதிப்பு = 708

பாராளுமன்ற உறுப்பினர்களின்
மொத்த ஓட்டு மதிப்பு = பாராளுமன்றத்தின் தேர்ந்தெடுக்கப்பட்ட மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கை

* ஒரு எம்.பி.யின் ஓட்டு மதிப்பு

776 x 708

பாராளுமன்ற உறுப்பினர்களின் மொத்த ஓட்டு மதிப்பு = 5,49,408

பாராளுமன்ற மற்றும் மாநில சட்டமன்ற உறுப்பினர்களின் மொத்த வாக்கு } = 5,49,511 + 5,49,408

= 10,98,919

இதில் திரு. K.R.நாராயணன் 9,56,290 ஓட்டுக்களும்(94.67%) திரு.T.N. சேஷன் 50,631 ஓட்டுக்களும் (5.03%)பெற்றிருந்தனர். எனவே, திரு.K.R. நாராயணன் அமோக வெற்றியடைந்தார். T.N. சேஷன் டெபாசிட் இழந்தார்.

**ஒற்றை மாற்று ஓட்டெடுப்பு:**

அரசியல் சட்டம் 55 ம் பிரிவின்படி குடியரசுத்தலைவர் தேர்தல் ஒற்றை ரகசிய மாற்று ஓட்டெடுப்பின் மூலம் நடைபெறுகிறது. இதன்படி தேர்தலில் போட்டியிடும் வேட்பாளர்களின் பெயர்கள் அகர வரிசைப்படி ஓட்டுச் சீட்டில் இடம் பெறும். தேர்தல் சின்னம் எதுவும் இருக்காது. வாக்காள உறுப்பினருக்கு விருப்பமான முதல் வேட்பாளருக்கு நேரே '1' என்று எழுதுவார். உதாரணமாக தேர்தலில் ஐந்து பேர் போட்டியிட்டால் முதல் விருப்ப வேட்பாளர் ஒரு வேளை மூன்றாவது வரிசை எண்ணில் இருந்தால் அதற்கு நேரே '1' என்று எழுதி வாக்களிப்பார். மீதமுள்ள வேட்பாளர்களுக்கு வாக்காளர்கள் 2 வது, 3 வது, 4 வது, 5 வது, விருப்பப்படி வாக்களிப்பு விருப்ப எண்களைப் பூர்த்தி செய்வார். முதல் விருப்ப ஓட்டிலேயே 50 சதவீத ஓட்டு மதிப்பை ஒருவர் பெற்றால், அவர் வெற்றி பெற்றவராக அறிவிக்கப்படுவார். ஒரு வேளை அவர் பெரும்பான்மையான ஓட்டுக்கள் பெறாவிட்டால், 2 வது விருப்பத் தேர்வரிசையில் தேர்வு செய்யப்பட்டதும் அவர் கணக்கில் கொள்ளப்படும்.

## குடியரசுத் தலைவரின் அதிகாரங்கள்

**1.நிர்வாகத்துறை அதிகாரங்கள்**

இந்தியக் குடியரசுத் தலைவர் நிர்வாகத்துறை அதிகாரங்களில் முக்கியமாகத் திகழ்கிறார். நிர்வாகத் துறையின் அனைத்து செயல்களும் அவர் பெயராலேயே நடைபெற வேண்டுமென்று அரசியலமைப்பு கூறுகிறது. இவரது அதிகாரங்கள் இங்கிலாந்து அரசியின் அதிகாரங்களைப் போன்றது.

a. நியமனங்கள்: இந்தியாவில் குடியரசுத்தலைவரின் பெயரில் அரசாங்கத்தை அமைச்சர்களே நடத்துகிறார்கள். நாட்டின் முக்கியமான அரசியலமைப்பு சட்டப்படியான நியமனங்களைக் குடியரசுத் தலைவரே செய்கிறார். பிரதம அமைச்சர், மற்ற அமைச்சர்கள், தலைமை வழக்கறிஞர், தலைமைத் தணிக்கையாளர், (Controller and Auditor General) உச்ச நீதிமன்ற நீதிபதிகள், உயர்நீதிமன்றங்களின் நீதிபதிகள், மாநில ஆளுநர்கள், முப்படைத்துறை அதிகாரிகள், இந்தியாவிற்கான வெளிநாட்டுத் தூதர்கள், ஆகியோர்களை குடியரசுத்தலைவரே நியமிக்கிறார்.

மேலும், பொதுப்பணிக் கழகம், தேர்தல் ஆணையம், பல்கலைக் கழக மானியக் குழுக்களின் உறுப்பினர்களும், குடியரசுத் தலைவரால் நியமிக்கப்படுகின்றனர். மத்திய ஆட்சித் துறை பணிக்குழு, நிதிக்குழு, (Finance Commission), மொழிகளைப் பற்றிய குழு ஆகிய குழுக்களையும் நியமிக்கிறார். இது போன்ற நியமனங்களுக்கு அமெரிக்காவில் செனட் சபையின் அங்கீகாரம் தேவை. ஆனால் இந்தியாவில் அது போல் இல்லை. அமைச்சர்களையும், தலைமை வழக்கறிஞர்களையும் மாநில கவர்னர்களையும் நீக்கும் அதிகாரம் பெற்றுள்ளார். மத்திய அரசின் ஊழியர்கள் அனைவரும் குடியரசுத் தலைவரின் 'கீழ்ப் பணியாற்றும் பணியாளர்களாகவே' (Subordinates) கருதப்படுகின்றனர்.

b. அமைச்சரவை மீது கட்டுப்பாடு: நாட்டின் அரசியலமைப்பைப் பாதுகாக்கும் பொறுப்பு குடியரசுத் தலைவருக்கு இருக்கிறது. அரசாங்கத்தின் அலுவல்கள் தக்க வழிகளில் தடையின்றி நடைபெறவும், அவை அமைச்சர்களிடம் பகிர்ந்தளிக்கப்படவும், குடியரசுத் தலைவர் விதிகளைப் பிறப்பிப்பார். இந்தியாவின் நிர்வாகத்தைப் பற்றியும், சட்டமியற்றுவதற்கான பொருள்களைப் பற்றியும், அமைச்சரவை எடுக்கும் முடிவுகள், பிரதம மந்திரியால் குடியரசுத் தலைவருக்குத் தெரிவிக்கப்பட வேண்டும். நிர்வாகம், சட்டங்கள் ஆகியவை பற்றி எந்தச் செய்தியையும் குடியரசுத்தலைவர் பிரதம மந்திரியிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம். தனி ஒரு அமைச்சரால் ஆராயப்படாமல் எடுக்கப்பட்ட முடிவு, அமைச்சரவையின் ஆய்வுக்கு விடப்படவேண்டுமென்றும் குடியரசுத் தலைவர் கோரலாம்.

நிர்வாகத்தை இயக்கும் போது குடியரசுத் தலைவர் அமைச்சரவையின் ஆலோசனையைக் கேட்க வேண்டுமென்று அரசியலமைப்பின் 74(1) விதி கூறுகிறது. ஆனால், அவ்வாறு அமைச்சரவை கூறும் ஆலோசனைகளுக்கு கட்டுப்பட்டவரா என்பது பற்றி

அரசியலமைப்பு ஒன்றும் கூறவில்லை. எனினும், மரபின் அடிப்படையில் அமைச்சரவையின் ஆலோசனைகளை குடியரசுத்தலைவர் புறக்கணிப்பது இல்லை. 1997 அக்டோபர் 21—ம் தேதி, உத்திரப்பிரதேச மாநிலத்தின் அரசாங்கத்தை டிஸ்மிஸ் செய்ய மத்திய ஐக்கிய முன்னணி அரசு அமைச்சரவை எடுத்த முடிவை குடியரசுத் தலைவர் K.R. நாராயணன் அவர்கள் ஏற்க மறுத்து விட்டார். எனவே, மீண்டும் கூடிய மத்திய அமைச்சரவை, உத்திரபிரதேச அரசை டிஸ்மிஸ் செய்ய சிபாரிசு செய்ததை 22ம் தேதி வாபஸ் பெற்றது.

அதே போல் பீகாரில் ரப்ரிதேவி தலைமையிலான அரசைக் கலைப்பதற்கு வாஜ்பாய் தலைமையிலான பாரதீய ஜனதா அரசு 1998 செப்டம்பர் 22ம் தேதி பரிந்துரை செய்தது. அரசியல் சட்ட நிபுணர்களை கலந்து ஆலோசித்த குடியரசுத் தலைவர் K.R. நாராயணன், கலைப்பு முடிவை மறு பரிசீலனை செய்யும்படி அமைச்சரவைக்கு அந்த பரிந்துரையைத் திருப்பி அனுப்பினார். குடியரசுத் தலைவரின் கருத்துக்களுக்கு மதிப்பளித்து, பரிந்துரையை மீண்டும் அனுப்புவதில்லை என்று அப்போதைய மத்திய அமைச்சரவை முடிவு செய்தது. இது தொடர்பாக

அரசியலமைப்பின் 74(1) பிரிவில் 1978 ம் வருடத்தில் செய்யப்பட்ட 44 வது அரசியலமைப்புத் திருத்தத்தின்படி, குடியரசுத் தலைவரின் அதிகாரம் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது.

"பிரதம அமைச்சர் மற்றும் அவரது கேபினட் அமைச்சர்களின் ஆலோசனைப்படி குடியரசுத் தலைவர் செயல்படுவார். ஆனால், அந்த ஆலோசனையை மறுபரிசீலனை செய்யும்படி குடியரசுத்தலைவர் கேட்டுக்கொள்ளலாம். மறுபரிசீலனை செய்யப்பட்டு கொடுக்கப்படும் ஆலோசனையின்படியே, குடியரசுத் தலைவர் கட்டாயமாக செயல்பட வேண்டும்."

## 2. வெளி உறவுத்துறை அதிகாரங்கள்:

இந்தியாவின் வெளி உறவுகளில் இந்த நாட்டின் ஒப்பற்ற பிரதிநிதியாக இருக்கும் பெருமை உடையவர் நமது குடியரசுத்தலைவர் ஆவார். அயல்நாடுகளுக்குப் பயணம் செய்வதும் அந்த நாடுகளின் தலைவர்களை நம் நாட்டுகரு அழைப்பதும், அவர்களோடு நட்புடன் பழகி நல்லெண்ணத்தை வளர்ப்பதும், உலக நாடுகளிடையே இநதியாவின் நலன்களை வளர்ப்பதும் நம் குடியரசுத்தலைவரின் கடமையாகும். இந்திய தூதர்களை அயல்நாடுகளுக்கு அனுப்புவதும், அயல்நாட்டுத் தூதர்கள் கொண்டு வரும் அறிமுக சான்று கடிதங்களைப் (Credentials) பெற்று, அவர்களை வரவேற்பதும் குடியரசுத்தலைவரின் பொறுப்பாகும். வெளிநாடுகளுடன் உடன்படிக்கைகள், பன்னாட்டு ஒப்பந்தங்கள்

குடியரசுத்தலைவரின் பெயரில் செய்யப்பட்டாலும், பாராளுமன்றத்தின் அங்கீகாரத்துக்கு பிறகே அவைகள் அமுலுக்கு வர முடியும்.

3. சட்டத்துறை அதிகாரங்கள்

a) பாராளுமன்றத்தைக் கூட்டுதல்: இங்கிலாந்து அரசியார் பாராளுமன்றத்தின் ஓர் அங்கமாக விளங்குவது போல, இந்திய குடியரசுத்தலைவரும் பாராளுமன்றத்தின் ஓர் அங்கமாக விளங்குகிறார். எனவே, அவருக்கு கணிசமான சட்டத்துறை அதிகாரங்கள் உள்ளது. குடியரசுத்தலைவர் பாராளுமன்றத்தை கூட்டும் அதிகாரம் பெற்றுள்ளார். குறைந்தது ஆறு மாதங்களுக்கு ஒரு முறையாவது அவர் பாராளுமன்றத்தைக் கூட்ட வேண்டும். அரசியலமைப்பின்படி ஒரு கூட்ட காலத்தின் இறுதி அமர்வுக்கும், அடுத்த அமர்வுக்கும் இடையே ஆறுமாதத்திற்கு மேல் இடைவெளி இருக்கக் கூடாது. பாராளுமன்றக் கூட்டங்களை தள்ளி வைக்கவும் குடியரசுத்தலைவருக்கு உரிமை உண்டு.

b) உரை நிகழ்த்துதல்: புதிதாகத் தேர்ந்தெடுக்கப்படும் முதல் கூட்டத் தொடரின் தொடக்கத்திலும், ஒவ்வொரு ஆண்டும் கூடும் பாராளுமன்றத்தின் முதல் கூட்டத் தொடரின் தொடக்கத்திலும் இரு சபைகளின் உறுப்பினர்களை ஒன்றாக அமர்த்தி குடியரசுத்தலைவர் நேரில் செய்தி வழங்குவார். இது இங்கிலாந்தில் அரசி நிகழ்த்தும் அரியணை உரைக்குச் சமமானது. இந்த உரையானது அரசாங்கத்தின் கொள்கைகளைப் பற்றிய விளக்கங்களாக அமைவது வழக்கம்.

c) பாராளுமன்றத்துக்குச் செய்தி அனுப்புதல்: பாராளுமன்றத்தில் விவாதிக்கப்படும் மசோதா குறித்தோ அல்லது வேறு எந்தப் பொருள் குறித்தோ, இரு சபைகளுக்கும் சேர்த்தோ, அல்லது ஒரு சபைக்கு மட்டுமோ குடியரசுத்தலைவர் செய்திகள் (message) அனுப்பலாம். செய்திகளைப் பெறும் சபை அதை உடனடியாகக் கவனிக்க வேண்டுமென்று அரசியலமைப்பு வற்புறுத்துகிறது.

d) பாராளுமன்றத்தில் அறிக்கைகளை சமர்ப்பித்தல்: குடியரசுத் தலைவர் ஒவ்வொரு ஆண்டும் பாராளுமன்றத்திற்கு சில அறிக்கைகளைச் சமர்ப்பிக்க வேண்டுமென்று கோரப்படுகிறார். வருடாந்திர வரவு செலவு பட்டியல் (Annual Financial Statement) இந்திய அரசாங்கத்தின் கணக்குகளைப் பற்றிய தலைமைத் தணிக்கையாளரின் அறிக்கை, நிதிக் குழுவின் பரிந்துரைகள், மத்திய பொதுப்பணிகழகத்தின் ஆண்டறிக்கை, அட்டவணைச் சாதியினர், அட்டவணைக் குடிகள் ஆகியோருக்கான தனி அதிகாரியின் அறிக்கை, பிற்பட்ட வகுப்பினர்களின் குழுவின் அறிக்கை ஆகியவற்றை ஆண்டுதோறும்

பாராளுமன்றத்தின் பரிசீலனைக்கு வைக்க வேண்டியது குடியரசுத்தலைவரின் கடமையாகும்.

e) மசோதாக்களுக்கு ஒப்புதல் அளித்தல்: பாராளுமன்றத்தின் இரு சபைகளும் நிறைவேற்றிய மசோதா ஒவ்வொன்றும், குடியரசுத்தலைவரின் இசைவு பெற்ற பின்பே சட்டமாகும். குடியரசுத்தலைவர் ஏற்க மறுத்தால் அது சட்டமாகாது. மசோதாவை ஏற்கவும் செய்யாமல், மறுக்கவும் செய்யாமல் பாராளுமன்றத்தின் மறுபரிசீலனைக்கு அனுப்பலாம். ஆனால் அவ்வாறு அனுப்பப்படும் மசோதா மீண்டும் இரு சபைகளாலும் நிறைவேற்றப்பட்டு குடியரசுத்தலைவருக்கு அனுப்பப்பட்டால், இம்முறை அவர் மசோதாவை ஏற்றுக் கொள்ளக் கடமைப்பட்டவர் ஆவார்.

மாநில சட்டமன்றங்கள் அவற்றின் ஆளுநர்களுக்கு அனுப்பும் மசோதாக்கள் மீது ஆளுநர்கள் எந்தவிதமான முடிவும் எடுக்காமல், அவற்றை குடியரசுத்தலைவரின் முடிவுக்கு அனுப்பலாம். அவ்வகையான மசோதாக்களை குடியரசுத் தலைவர் ஏற்றுக் கொண்டால், அவை சட்டங்களாகும். ஏற்க மறுத்தால் அவை சட்டங்களாகாது. இரண்டில் எதையும் செய்யாமல், அவற்றை மீண்டும் மாநில சட்டமன்றங்களின் ஆய்வுக்கு அனுப்பலாம். மறு ஆய்விற்குப் பிறகும் மசோதாக்கள் மாநில சட்டசபைகளால் ஏற்றுக் கொள்ளப்பட்டால் அவை மீண்டும் குடியரசுத்தலைவருக்கு அவரின் இசைவிற்காக அனுப்பப்படும்.

f) அவசரச் சட்டங்களைப் பிறப்பித்தல்: (ordinances) பாராளுமன்றக் கூட்டத்தொடர் நடைபெறாத காலங்களில் அரசியல் அமைப்பின் 123—ம் விதிப்படி குடியரசுத்தலைவர் அவசரச் சட்டங்களைப் பிறப்பிக்கலாம். பாராளுமன்றம் எந்தெந்த இனங்கள் மீது சட்டங்கள் இயற்ற முடியுமோ, அவை அனைத்தின் மீதும் தலைவர் அவசரச் சட்டங்களைப் பிறப்பிக்கலாம். இந்த அவசரச் சட்டத்திற்கு பாராளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்திற்குள்ள ஆற்றலும், அதிகாரமும் உண்டு. பாராளுமன்றம் மீண்டும் கூடியவுடன், குடியரசுத்தலைவரால் பிறப்பிக்கப்பட்ட அவசரச் சட்டங்கள் அதன் இரு சபைகளிலும் வைக்கப்பட வேண்டும். பாராளுமன்றம் அதைச் சட்டமாக ஏற்கவில்லையென்றால், பாராளுமன்றம் கூடி ஆறு வாரங்கள் முடிவடைந்ததும், அது சட்டப்படி செல்லாது. அவசரச் சட்டங்களை இயற்றும் அதிகாரம் இந்தியக் குடியரசுத் தலைவரைத் தவிர வேறு எந்தத் தலைவருக்கும் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

g) பாராளுமன்ற நியமன உறுப்பினர்களை நியமித்தல்: கல்வி, கலை, இலக்கியம், விஞ்ஞானம், சமூக சேவை மற்றும் பல

துறைகளில் நாட்டுக்காகத் தொண்டாற்றிய 12 பெருமக்களை குடியரசுத்தலைவர் ராஜ்யசபாவுக்கு நியமிக்கிறார். மேலும், ஆங்கிலோ இந்திய சிறுபான்மையினருக்கு பிரதிநிதித்துவம் கொடுப்பதற்காக, இரண்டு நபர்பளை லோக்சபாவின் உறுப்பினர்களாக நியமிக்கிறார்.

**4) நீதித்துறை அதிகாரங்கள்:**

எல்லாக் குடிமக்களையும் விட, உயர்ந்தவராகக் கருதப்படும் குடியரசுத்தலைவருக்கு குற்றவாளிகளை மன்னிக்கக் கூடிய அதிகாரத்தை அரசியலமைப்புச் சட்டம் வழங்குகிறது. ராணுவ நீதிமன்றங்கள் வழங்கும் தண்டனைகளை மன்னிக்கவும், குறைக்கவும், அல்லது தள்ளுபடி செய்யவும் குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் உண்டு. மத்திய அரசாங்கத்தின் சட்டங்களுக்கெதிராக செய்த குற்றங்களுக்கான தண்டனைகளைத்தான் குடியரசுத்தலைவர் மன்னிக்க முடியும். குற்றவாளிகளின் மரண தண்டனையை மன்னிக்கும் உரிமை குடியரசுத்தலைவருக்கு உண்டு. பொது அலுவல்கள் குறித்து குடியரசுத்தலைவர் நீதிமன்றத்தின் அறிவுரையைக் கேட்டுப் பெறலாம்.

இந்த நீதி வழங்கும் அதிகாரத்தை, பொறுப்புள்ள அமைச்சர்களின் அறிவுரைப்படியேதான் குடியரசுத்தலைவர் உபயோகிக்கிறார். இந்தியாவில் தண்டனைக்குப் பிறகுதான் மன்னிப்பு வழங்கப்படும். ஆனால் அமெரிக்காவில் தண்டனைக்கு முன்பாகவோ, பின்னரோ குடியரசுத் தலைவரால் மன்னிப்பு அளிக்கப்படும்.

## 5.3.3. குடியரசுத் தலைவரின் நெருக்கடி நிலை அதிகாரங்கள் (Emergency Powers)

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைவர் ஆட்சி முறையில் உள்ளது போன்றும், பிரான்ஸ் நாட்டின் பாராளுமன்ற ஆட்சி முறையில் உள்ளது போன்றும் சாதாரண அதிகாரங்களைத் தவிர, இந்திய குடியரசுத்தலைவர் நாட்டின் நெருக்கடி நிலைமையைச் சமாளிப்பதற்கு சிறப்பு அதிகாரங்களைப் பெற்றுள்ளார். அரசியலமைப்பு மூன்று வகையான நெருக்கடி நிலைகளைக் குறிப்பிடுகின்றது. அவை, வெளிநாட்டுத் தாக்குதலாலோ, உள்நாட்டுக் குழப்பத்தாலோ ஏற்படும் நெருக்கடி, மாநிலத்தில் அரசியல் சீர்குலைவு மற்றும் நிதி நெருக்கடி ஆகியவையாகும்.

**1) தேச நெருக்கடி பிரகடனம்:** (Proclamation of National Emergency)

இந்திய அரசியலமைப்பின் 352—ம் பிரிவின்படி இந்தியா அல்லது இந்தியாவின் ஒரு பகுதியின் பாதுகாப்புக்கு போர் அல்லது அயல்நாட்டவரின் தாக்குதலால் அல்லது உள்நாட்டு கிளர்ச்சிகளால்

அபாயம் ஏற்படக்கூடிய நிலைமை உருவாகிறது என்று குடியரசுத்தலைவர் திருப்திகரமாக அறிந்தால், அவர் இந்தியா முழுமைக்கும் அல்லது குறிப்பிட்ட அந்த ஒரு பகுதிக்கு மட்டும் அவசர நிலை பிரகடனம் செய்யலாம். இந்த பிரகடனத்தை அமைச்சரவையின் ஆலோசனையின் பேரிலேயே குடியரசுத்தலைவர் வெளியிடுகிறார். குடியரசுத்தலைவரின் முடிவு உறுதியானதும், இறுதியானதும் ஆகும். அதைப் பற்றி எந்த நீதிமன்றத்திலும் எத்தகைய கேள்வியும் கேட்க முடியாது.

நெருக்கடி நிலைப் பிரகடனம் செய்த இரண்டு மாத கால முடிவிற்குள், அது பாராளுமன்றத்தின் ஒவ்வொரு சபை முன்பும் சமர்ப்பிக்கப்படவேண்டும். பாராளுமன்றத் தீர்மானத்தின்படி, மேலும் ஆறுமாத காலத்திற்கு நெருக்கடிநிலைப் பிரகடனம் நீட்டிக்கப்படலாம். அப்படி அதிக பட்சமாக மூன்று ஆண்டு காலம் நெருக்கடி நிலையை நடைமுறைப்படுத்தலாம். இரண்டு சபைகளிலும் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தின் மூலம் ஆதரவு தரப்படவில்லையென்றால், நெருக்கடி நிலை நிலவும் காலத்தில் கீழ்க்கண்ட விளைவுகளும் ஏற்படும்.

a) பாராளுமன்றம் மாநில அதிகாரப் பட்டியல் உட்பட, எந்த ஒரு பொருள் பற்றியும் சட்டம் இயற்றலாம். அதன் சட்டம் இயற்றும் அதிகாரம் பெரிய அளவில் விரிவடைகிறது. பாராளுமன்றம் தனது பதவிக்காலத்தை ஒரு தடவையில் ஓர் ஆண்டிற்கு மிகாமல் உயர்த்தலாம். பாராளுமன்றக் கூட்டம் இல்லாதபோது குடியரசுத்தலைவரே அவசரச் சட்டங்களை இயற்றலாம்.

b) நெருக்கடி காலத்தில் மாநில அரசு எந்தவிதமாக நடந்து கொள்ள வேண்டுமென்று மாநில அரசுக்கு மத்திய அரசு கட்டளையிடலாம்.

c) நெருக்கடி நிலை காலத்தில் மத்திய அரசாங்கத்திற்குத் தேவைப்படும் வருமானம் கிடைக்க வேண்டும் என்பதற்காக அரசியலமைப்பில் உள்ள அதிகாரப் பங்கீட்டை குடியரசுத் தலைவர் மாற்றவும் செய்யலாம். ஆனால், எந்த நிதியாண்டில் நெருக்கடிநிலை நீக்கப்படுகிறதோ, அதே ஆண்டில் இந்த உத்தரவும் முடிந்து விடும்.

d) நெருக்கடி நிலை இருக்கும் போது முக்கியமான ஏழு அடிப்படை உரிமைகள் தாமாகவே நீக்கி வைக்கப்படுகின்றன. மக்கள் நீதிமன்றங்களுக்குச் சென்று தங்கள் அடிப்படை உரிமைகளை நிலை நாட்டிக் கொள்ளும் உரிமையையும் குடியரசுத் தலைவர் ஒரு ஆணை மூலம் தள்ளி வைக்கலாம்.

முதலாவது தேச நெருக்கடிநிலைப் பிரகடனம் 1962 அக்டோபர் 26—ம் தேதி சீன ஆக்கிரமிப்பின் போது (External aggression)

பிரகடனப்படுத்தப்பட்டது. இது 1968 ஜனவரி 10—ல் குடியரசுத்தலைவரின் ஆணைப்படி விலக்கிக் கொள்ளப்பட்டது. இரண்டாவது தேச நெருக்கடிநிலைப் பிரகடனம் 1971 டிசம்பர் 3—ம் தேதி இந்தியா மீது பாகிஸ்தான் பிரகடனப் படுத்தாதப் போர் தொடுத்த போது நடைமுறைப்படுத்தப்பட்டது. இந்த இரண்டாவது தேச நெருக்கடிநிலை பிரகடனம் அமுலில் இருக்கும் போதே, உள் நாட்டுக் கிளர்ச்சிகளின் விளைவாக (Internal Disturbances) 1975, ஜுன் 25—ல் மூன்றாவது நெருக்கடி நிலைப் பிரகடனம் வெளியிடப்பபட்டது. இந்த இரண்டாவது, மூன்றாவது நெருக்கடிநிலை பிரகடனங்கள் 1977, மார்ச் 21—ல் விலக்கிக் கொள்ளப்பட்டன. 1978—ல் செய்யப்பட்ட 44—வது திருத்தத்தின் படி, உள்நாட்டுக் கிளர்ச்சிக்காக இனி அவசரநிலை பிரகடனப்படுத்த முடியாது. ஏனெனில், 'உள்நாட்டுக் கிளர்ச்சி என்ற வார்த்தை எடுக்கப்பட்டு அதற்குப் பதிலாக ஆயுதமேந்திய கிளர்ச்சி' (armed rebellion) என்ற வார்த்தை சேர்க்கப்பட்டுள்ளது.

2) மாநில அரசு தோல்வி பற்றிய பிரகடனம்: ( Proclamation of failure of State Government)

அரசியலமைப்பின் 356—வது விதிப்படி "ஒவ்வொரு மாநிலத்தையும் அயல்நாட்டுத் தாக்குதல் மற்றும் உள்நாட்டு ஆயதக் கிளர்ச்சி ஆகியவற்றிலிருந்து பாதுகாத்து, இந்திய அரசியல் சாசனத்தை அனுசரித்து அங்கே அரசாங்கம் நடத்தும் படி உறுதி செய்வதும் மத்திய அரசின் முக்கிய கடமையாக இருக்க வேண்டும்.

எனவே 356—ம் விதியின் படி 'அரசாங்கத்தை நடத்த இயலாத நிலை ஒரு மாநிலத்தில் உருவாகி இருக்கிறது என்ற அந்த மாநில ஆளுநரின் அறிக்கை மூலம் அல்லது வேறெந்த விதமாகவேனும் அறிகின்ற குடியரசுத்தலைவர், மாநில அரசு தோல்வி பிரகடனத்தை கொண்டு வரலாம். இதன் முக்கிய விளைவுகள் பின்வருமாறு:

a) மாநில அரசு கலைக்கப்பட்டு குடியரசுத்தலைவர் ஆட்சிப் பிரகடனப்படுத்தப்படும். குடியரசுத்தலைவரே மாநில அரசின் அதிகாரங்களை ஏற்றுக் கொள்கிறார்.

b) மாநில சட்டமன்றத்தின் அதிகாரங்கள், மத்திய பாராளுமன்றத்திற்கு சென்று விடுகிறது. மாநிலத்திற்குச் சட்டமியற்றும் இந்த அதிகாரத்தை பாராளுமன்றம் குடியரசுத் தலைவரிடம் கொடுக்கலாம். பாராளுமன்றக்கூட்டம் இல்லாத காலத்தில் மாநிலத்தின் செலவுகளைப் பற்றி குடியரசுத்தலைவர் உத்தரவுகளைப் பிறப்பிக்கலாம்.

இந்த பிரகடனம் அமுலில் இருக்கும் பொழுது மாநில உயர் நீதிமன்றம் எந்த விதத்திலும் பாதிக்கப்படாமல் தனித்தன்மையுடன் இயங்கிக் கொண்டிருக்கும். மேலும், இந்தப் பிரகடனம் இரண்டு மாத கால முடிவிற்குள் பாராளுமன்ற இரு சபைகளின் முன்பும் சமர்ப்பிக்கப்பட வேண்டும். அல்லது அதற்கு முன்பாகவே பிரகடனத்தை தள்ளியும் வைக்கலாம். பாராளுமன்றம் ஏற்றுக் கொண்டால், பிரகடனம் ஆறு மாதத்திற்கு ஒரு முறை புதுப்பிக்கப்பட்டு மொத்தம் மூன்று ஆறு மாத காலங்களுக்கு அமுலில் இருக்க முடியும். முதல் ஆறு மாத காலம் முடிந்ததும், அல்லது அதற்கு முன்பும் மாநிலத்தில் பொதுத் தேர்தல் நடத்தப்படலாம்.

இந்த பிரகடனத்தின்படி மாநில அரசின் சட்டமன்றமும் கலைக்கப்படும். 1967—க்குப் பிறகு புதிய வழி முறை ஒன்று கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. அதன்படி மாநில அமைச்சரவையை மட்டும் கலைத்து விட்டு, சட்டமன்றத்தைக் கலைக்காமல் நிறுத்தி வைத்து விட்டு நிலைமை சீரடைந்ததும் புதிய அரசாங்கம் அமைக்க வாய்ப்பு அளிக்கப்படலாம்.

3) நிதி நெருக்கடி பிரகடனம்: (Financial emergency)

அரசியலமைப்பின் 360—வது பிரிவின் படி இந்தியாவின் அல்லது அதன் ஏதாவது ஒரு பகுதியில் நிதிநிலையின் ஸ்திரத்தன்மைக்கு அல்லது இந்தியாவின் நாணயத்திற்கு ஆபத்து ஏற்படக்கூடிய சூழ்நிலை உருவாகியுள்ளது என்று குடியரசுத்தலைவர் உணர்ந்தால், நாட்டில் நிதி நெருக்கடி தோன்றியிருப்பதாக அவர் அறிவிக்கலாம்.

நாட்டில் நிதி நெருக்கடிப் பிரகடனம் அமுலில் இருக்கும் போது நிதிவசூலைப் பற்றியும், அரசாங்க செலவுகளைப் பற்றியும், விதிமுறைகளைக் கடைபிடிக்கும்படி மத்திய அரசு மாநிலங்களுக்கு கட்டளையிடலாம். மேலும், அரசாங்கச் செலவுகளில் சிக்கனம் செய்ய மாநில ஊழியர்களின் சம்பளங்களும் படிகளும் குறைக்கப்பட வேண்டும் என்று கோரலாம். மாநில சட்டசபைகளால் நிறைவேற்றப்படும் பண மசோதாக்களைக் குடியரசுத் தலைவரின் மேற்பார்வைக்கு அனுப்பி வைக்குமாறு மாநிலங்களுக்கு மத்திய அரசு கட்டளைகள் இடலாம். உச்ச நீதி மன்ற நீதிபதிகள், உயர்நீதிமன்ற நீதிபதிகள் உட்பட மத்திய அரசுப் பணியாளர்களின் சம்பளங்களையும் படிகளையும் கூட குடியரசுத்தலைவர் குறைத்து விடலாம். நிதி நெருக்கடி பிரகடனமும் இரண்டு மாதத்திற்குள் பாராளுமன்றத்தின் முன்பு சமர்ப்பிக்கப்பட்டு ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும். 2001 நவம்பர் வரை நிதி நெருக்கடி நிலை பிரகடனம் செய்யப்படவில்லை.

இந்திய குடியரசுத்தலைவரின் மேற்கண்ட அதிகாரங்களையெல்லாம் பார்க்கும் பொழுது, இந்திய அரசியலமைப்பு அவரை ஏராளமான அதிகாரங்களுக்கு உறைவிடமாக்குகிறது என்பது தெளிவாகிறது. அவர் அமைச்சரவையின் அறிவுரைகளை கட்டாயம் ஏற்று நடக்க வேண்டும் என்று அரசியலமைப்பு எந்த இடத்திலும் வற்புறுத்தாவிட்டாலும், அதன்படி நடப்பதே முறை என்ற மரபு நம் நாட்டில் வளர்ந்து விட்டது. ஆனால் அவர் அமைச்சர்கள் ஆட்டி வைக்கும் கைப்பாவையாக இருக்க வேண்டும் என்று அரசியலமைப்பை ஆக்கியோர் விரும்பியதாகத் தெரியவில்லை. அரசாங்கத்தின் வெறும் அலங்கார அங்கமாக மட்டும் இயங்காமல், பயனுள்ள வகையில் அவர் இயங்க அரசியலமைப்பு வகை செய்கிறது.

## 5.3.4. துணைக் குடியரசுத் தலைவரின் நிலை:

இந்திய அரசியலமைப்பின் 63—வது விதி குடியரசுத் தலைவருக்கு அடுத்தபடியாக ஒரு துணைக் குடியரசுத் தலைவர் இருக்கவேண்டும் என்று கூறுகிறது. குடியரசுத் தலைவரின் மரணம், பதவி விலகல், பதவி நீக்கம் அல்லது வேறு காரணங்களுக்காக அந்தப் பதவி காலியாக இருக்கும் போது, புதிய குடியரசுத் தலைவர் தேர்ந்தெடுக்கப்படும் வரை, துணைக்குடியரசுத் தலைவர், தலைவராகச் செயல்படுவார். அப்போது அவர் குடியரசுத் தலைவருக்குரிய கடமைகளை ஆற்றுகிறார். அப்போது குடியரசுத் தலைவருக்குரிய பாதுகாப்பு, ஊதியம், மற்ற எல்லாச் சலுகைகளையும் பெறுவதற்கு குடியரசுத் தலைவருக்கு உரிமை இருக்கிறது. தற்போது துணைக்குடியரசு தலைவராக இருப்பவர் டாக்டர். ஹமீத் அன்சாரி என்பவராவார்.

துணைக்குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படும் நபருக்கு இருக்க வேண்டிய தகுதிகள் பின்வருமாறு:

1. அவர் இந்தியக் குடிமகனாக இருக்க வேண்டும்.
2. முப்பத்தைந்து வயது முடிந்தவராக இருக்க வேண்டும்.
3. ராஜ்யசபாவிற்குத் தேர்ந்தெடுக்கப்படுவதற்கான தகுதிகள் உடையவராக இருத்தல் வேண்டும்.
4. அரசாங்கத்தில் லாபம் தரும் எந்தப் பதவியிலும் இருக்கக் கூடாது.
5. பாராளுமன்றத்தின் எந்த சபையிலும் உறுப்பினராக இருக்கக் கூடாது.

### துணைக் குடியரசுத் தலைவரின் தேர்தலும் பதவிக் காலமும்

துணைக் குடியரசுத் தலைவரை பாராளுமன்றத்தின் இரண்டு சபை உறுப்பினர்களும் ஒன்று கூடித் தேர்ந்தெடுப்பார்கள். அந்தத் தேர்தல்

விகிதாச்சார முறைப்படியும், ஒற்றை மாற்று வாக்கின் அடிப்படையிலும், இரகசியமாகவும் நடத்தப்பட வேண்டும். துணைக் குடியரசுத் தலைவர், தான் பதவி ஏற்ற நாளிலிருந்து ஐந்து ஆண்டுகளுக்கு பதவியில் இருந்து வருவார். அவரது பதவிக்காலம் முடிந்த பின்னரும், அவருக்குப் பிறகு அந்தப் பொறுப்புக்குத் தேர்ந்தெடுக்கப்படுபவர் பதவி ஏற்கும் வரையில், துணைக் குடியரசுத் தலைவர் அப்பதவியில் நீடிப்பார். துணைக் குடியரசு தலைவர் மாதம் 1,25,000 ரூபாய் சம்பளமாகப் பெறுகிறார்.

துணைக் குடியரசு தலைவர் பாராளுமன்றத்தின் எந்த சபையிலும் உறுப்பினராக இருக்கக் கூடாது. எந்த மாநில சட்டசபையிலும் உறுப்பினராக இருக்கக் கூடாது. எனினும், அத்தகைய உறுப்பினராக இருப்பவர் துணைக் குடியரசுத் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டால், அவர் அப்படித் தேர்ந்தெடுக்கப்பட்டு பதவியேற்ற நாளிலிருந்து தமது அவ்வாறான முந்தைய உறுப்பினர் பதவியை ராஜினாமா செய்ய வேண்டும்.

துணைக் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் பதவி ஏற்பதற்கு முன்பு குடியரசு தலைவர் அல்லது அவரால் அவருடைய சார்பில் அதற்கென நியமிக்கப்படும் ஒருவர் முன்பு கீழ் கண்டவாறு பதவிப் பிரமாணம் செய்து வைக்கப்படுகிறார். "........ஆகிய நான் சட்டப்பூர்வமாக உருவாக்கப்பட்டுள்ள இந்திய அரசியல் சாசனத்துக்கு நாணயத்துடனும், நம்பிக்கையுடனும் கட்டுப்பட்டு நடப்பேன் என்றும், நான் ஏற்றுள்ள பதவியில் நம்பிக்கையுடன் கடமையாற்றுவேன் என்றும் இறைவன் பெயரால் சத்தியம் செய்து உறுதி கூறுகிறேன்." என்று கூற வேண்டும்.

**பதவி விலகல்**

துணைக்குடியரசுத் தலைவர்கள் பதவிக்காலம் முடியும் முன்பே பதவியிலிருந்து விலகிக் கொள்ளலாம். தம் கைப்பட எழுதப்பட்ட ஒரு கடிதத்தை குடியரசுத் தலைவருக்கு எழுதிக் கொடுத்து விட்டு தம் பதவியிலிருந்து விலகிக் கொள்ளலாம். பதவியிலிருந்து இவர் விலகிக்கவும் படலாம். துணைக் குடியரசுத் தலைவரை விலக்குவதற்காகக் கொண்டு வரப்படும் தீர்மானம் ராஜ்யசபாவின் மொத்த உறுப்பினர்களின் பெரும்பான்மை ஆதரவுடன் நிறைவேற்றப்பட்டால் துணைக்குடியரசுத் தலைவர் பதவியிலிருந்து நீக்கப்படுவார். ஆனால், அத்தகைய தீர்மானம் முன்மொழியப்படுவதற்கு 14 நாட்களுக்கு முன்பே அது பற்றிய அறிக்கை தரப்பட வேண்டும். ராஜ்ய சபாவின் தீர்மானத்திற்கு மக்கள் சபையின் ஒப்புதல் வேண்டும்.

**முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக்கான கேள்விகள்**

4. இந்திய பிரதம மந்திரி எவ்வாறு தேர்ந்தெடுக்கப்டுகிறார் என்பதினை விவரி.

5. இந்திய அரசியலமைப்பு திருத்த முறையினை எடுத்துரைக்கவும்

6. ஜனாதிபதியின் நெருக்கடி நிலை அதிகாரங்களை எடுத்துரைக்கவும்.

துணைக் குடியரசுத் தலைவர் தேர்தலைப் பற்றிய வழக்குகள் உச்ச நீதிமன்றத்தில் விசாரிக்கப்பட்டு தீர்ப்புச் சொல்லப்படும். நீதிமன்றத்தின் தீர்ப்பே முடிவானது.

**துணைக் குடியரசுத் தலைவரின் பணிகள்**

a) துணைக் குடியரசு தலைவர் தான் வகிக்கும் பதவியின் காரணமாக மேல்சபையான இராஜ்யசபாவின் தலைவராகப் பணியாற்றுகிறார். ராஜ்யசபாவின் கூட்டங்களுக்குத் தலைமை தாங்குகிறார். ராஜ்யசபாவின் தலைவர் என்ற முறையில் அவரது அதிகாரங்களும், பணிகளும் லோக்சபாவின் சபாநாயகர் பதவிக்குச் சமமானவை. ராஜ்ய சபாவின் சுமூகமான பணிக்கு அவர் வகை செய்கிறார்.

b) குடியரசு தலைவர் இறந்து விட்டாலோ அல்லது ராஜினாமா செய்தாலோ அல்லது நோய் வாய்ப்பட்டிருந்தாலோ அல்லது வெளிநாடுகளுக்குச் சென்றாலோ குடியரசுத் தலைவரின் பணிகளை துணை குடியரசுத் தலைவர் செய்கிறார். குடியரசுத் தலைவராகப் பணியாற்றும் காலத்தில் குடியரசுத் தலைவரின் எல்லா அதிகாரங்களையும், தனி உரிமைகளையும், ஊதியம்மற்றும் செலவுப் படிகளையும் துணைக் குடியரசுத் தலைவர் பெறுவார். குடியரசுத் தலைவர் பதவி நிரந்தரமாகக் காலியாகும் போது, புதிய குடியரசுத் தலைவர் ஆறுமாத காலத்திற்குள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். எனவே துணைக்குடியரசு தலைவர் அதிக பட்சமாக ஆறுமாத காலத்திற்குள் தான் குடியரசுத் தலைவராகப் பணியாற்ற முடியும்.

c) இந்திய துணைக்குடியரசுத் தலைவருக்கு இன்னும் ஒரு சிறப்பு பணி கொடுக்கப்படுகிறது. இந்தியக் காலச்சாரத்தின் தூதுவராக உலக நாடுகளில் சுற்றுப்பயணம் செய்து, இந்தியாவிற்கும் மற்ற நாடுகளுக்குமிடையே நட்புறவை வளர்க்கிறார்.

## 5.4. தொகுப்புரை

இந்தியாவிலுள்ள அரசாங்கம் இங்கிலாந்து அரசாங்கத்தைப் போன்று பாராளுமன்ற முறை அரசாங்கமாகும். எனவே இங்கிலாந்தில் உள்ள அமைச்சரவையைப் போன்றே, இந்திய அமைச்சரவையும் அமைக்கப்பட்டிருக்கிறது. ஆனால், இங்கிலாந்து அமைச்சரவையோ வழக்காறுகளாலும், மரபுகளாலும் வளர்க்கப்பட்ட நிறுவனம் ஆகும். இந்திய அமைச்சரவையின் அமைப்பும், அதிகாரங்களும் ஓரளவு அரசியலமைப்பால் நிர்ணயிக்கப்பட்டிருந்தாலும், இங்கேயும் வழக்காறுகளும், மரபுகளும் ஓரளவு பின்பற்றப்படுகின்றன. பெயரளவுக்குத்தான் குடியரசுத் தலைவர் நாட்டின் தலைவராகக்

கருதப்படுகிறாரே தவிர நடைமுறையில் அமைச்சரவையே அரசாங்கத்தின் தலைமையை ஏற்று நடத்துகிறது. இந்திய அரசியலமைப்பில் அமைச்சரவை என்ற சொற்றொடர்தான் பயன்படுத்தப்படுகிறது. கேபினட் என்ற வார்த்தை எந்த இடத்திலும் பயன்படுத்தப்படவில்லை. ஆனால் கேபினட் என்ற நிறுவனம் இங்கிலாந்தைப் போன்று இந்தியாவிலும் இயங்குகிறது என்பதும், அமைச்சரவையின் முக்கியமான அங்கத்தினர்கள் கேபினட்டின் உறுப்பினர்களாக அமர்ந்து அரசின் கொள்கையை உருவாக்குகிறார்கள் என்பதும் உண்மை

## 5.5. முக்கிய வார்த்தைகள்

1. இந்திய யூனியன்: இந்தியா 28 மாநிலங்களையும், 7 யூனியன் பிரதேசங்களையும் கொண்ட ஒருங்கிணைக்கப்பட்ட பகுதியே இந்திய யூனியன் ஆகும்.
2. அவசரச் சட்டம்: பாராளுமன்ற கூட்டத் தொடர் இல்லாத நேரங்களில் விதி எண் 123—பயன்படுத்தி குடியரசுத் தலைவர் அவசரச் சட்டம் பிறப்பிக்கலாம். இவ்வகையான அவசரச்சட்டம் 6 மாத காலத்திற்குள் பாராளுமன்றத்தில் தாக்கல் செய்ய வேண்டும்.
3. அமைச்சரவை: கேபினட் அமைச்சர்கள், இராஜாங்க அமைச்சர்கள் மற்றும் துணை அமைச்சர்கள் என்ற மூவகையைச் சார்ந்தவர்களே அமைச்சரவை ஆகும்.
4. பணமசோதா: பாராளுமன்றத்தில் கீழ்சபையில் மட்டும் அமைச்சரால் அறிமுகப்படுத்தப்படும் மசோதா பணமசோதாவாகும்.
5. சட்ட முடக்கம்: மசோதாவை நிறைவேற்றும் பொழுது இரு அவைகளுக்கு இடையே கருத்து வேறுபாடு ஏற்பட்டால், குடியரசுத் தலைவர் பாராளுமன்ற கூட்டத் தொடரில் அம்மசோதாவுக்கு தீர்வு காணப்படுவதாகும்.

## 5.6. முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவுச் சோதனை கேள்விகளுக்கான பதில்கள்

கேள்வி எண் 1 — இந்த கேள்விக்கான விடையை பகுதி எண் 5.1.ல் அறிக.

கேள்வி எண் 2 — இந்த கேள்விக்கான விடையை பகுதி எண் 5.1.1.ல் அறிக.

கேள்வி எண் 3 — இந்த கேள்விக்கான விடையை பகுதி எண் 5.1.2.ல் அறிக.

கேள்வி எண் 4 — இந்த கேள்விக்கான விடையை பகுதி எண் 5.2.2.ல் அறிக.

கேள்வி எண் 5 — இந்த கேள்விக்கான விடையை பகுதி எண் 5.3.1.ல் அறிக.

கேள்வி எண் 6 — இந்த கேள்விக்கான விடையை பகுதி எண் 5.3.3.ல் அறிக.

## 5.7. இந்த அலகு சம்பந்தப்பட்ட மேலும் படிக்க வேண்டிய நூல்கள்:


1. 1.Alagumalai .A; Modern Government; J.JPublications: Madurai – 2005.
2. Jayal N.G. (ed) Democracy in India; Oxford University press; Delhi – 2001.
3. Harichand: Amending process in the Indian Constitution, Delhi -1972.
4. Nakade Shivarai, B. Emergency in Indian Constitution; New Delhi – 1990.


## 5.8. கேள்விகளும்/ செயல்முறைப்பயிற்சிகள்

1. லோக்சபை, இராஜ்ய சபை ஆகியவற்றின் அமைப்பு, அதிகாரம் மற்றும் பணிகள் விவரி.
2. இந்தியப் பாராளுமன்றத்தின் சட்ட ஆக்க முறையை ஆராய்க.
3. இந்தியப் பாராளுமன்றத்தில் அரசியலமைப்புத் திருத்தம் வழி முறை யாது?
4. இந்தியப் ஜனாதிபதியின்நிலை, அதிகாரங்கள் மற்றும் செயல்முறைகளை விவாதிக்கவும்?
5. இந்திய அமைச்சரவை மற்றும் பிரதமரின் பொறுப்புக்களை பற்றி விவாதிக்கவும்.

குறிப்பு

# அலகு—6

# குடிமைப்பணி, தல சுய ஆட்சி : கிராம உள்ளாட்சி அரசாங்கம் : நகர உள்ளாட்சி அரசாங்கம்

## முன்னுரை

தற்கால அரசாங்கஅமைப்பில் குடிமைப்பணி என்பது ஒரு மனிதனின் நரம்பும் முதுகெலும்பும் போன்றது. குடிமைப்பணி இல்லாவிட்டால் அரசாங்கம் செயல்பட இயலாது. அரசாங்கத்தினுடைய திட்டங்கள், கொள்கைகள் குடிமைப்பணியாளர்கள் மூலம் அரசால் அமுல்படுத்தப்படுகின்றன. குடிமைப்பணி என்பது ஆங்கிலேயர் நமக்கு விட்டுச்சென்ற ஒரு மிக்பெரிய பொக்கிஷமாகும். 1870ஆம்ஆண்டு சட்டம் இந்தியக் குடிமைப்பணியின் சரித்திரத்தில் ஒரு மைல்கல் என்றே கூறலாம்.

முதன்முதலாக இந்தியாவில் குடிமைப்பணியை அறிமுகப்படுத்தியவர் லார்டு காரன்வாலிஸ் அவர்கள் ஆவார். லார்டு வெல்லஸ்லி பிரபு குடிமைப்பணியை முழுமையாக அறிமுகப்படுத்தியதோடு மட்டுமில்லாமல், முறையான பயிற்சியும் வழங்கினார். மேலும், இப்பாடத்தில் பஞ்சாயத்து அமைப்புக்கள் பற்றியும், அதன் பணிகளைப் பற்றியும் மிக விரிவாக கூறப்பட்டிருக்கின்றன. புதிய பஞ்சயாத்துராஜ் அமைப்பு இந்தியாவில் 1993ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 23ஆம் நாள் நடைமுறைப்படுத்தப்பட்டன. புதிய பஞ்சாயத்துராஜ் அமைப்பு மூன்றடுக்கு முறை அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது. அதாவது 1) கிராமப்பஞ்சாயத்து, 2) பிளாக் பஞ்சாயத்து (மற்றும்) 3) மாவட்டப் பஞ்சாயத்து என்ற மூன்று அடுக்கில் அமைந்துள்ளது. இவ்வமைப்பு அரசியலமைப்புச் சட்டத்தின் 11வது அட்டவணையில் சேர்க்கப்பட்டுள்ளது. மேலும் வருவாய் தரக்கூடிய 29 அம்சங்களையும் இச்சட்டம் வழங்கியுள்ளது. இந்த 29 அம்சங்களிலும் மாநில அரசாங்கத்தின் தலையீடு இருக்காது. அதேபோன்று 74வது அரசியல் அமைப்பு திருத்தம் நகர உள்ளாட்சியைப் பற்றி வெகு விரிவாக விளக்ககிறது. இது 12—வது அட்டவணையின் கீழ், வருவாய் தரக்கூடிய 18 அம்சங்களையும் கொண்டுள்ளது.

## நோக்கங்கள் (OBJECTIVES)

எவ்வாறு குடிமைப்பணி தற்கால அரசாங்கத்தின் முதுகெலும்பாக செயல்படுகிறது என்பதை புரிந்துகொள்ளுதல்.

மாநிலத் பொதுப்பணியாளர் தேர்வாணையம், மத்திய தேர்வாணையம் ஆகியவைகள் எவ்வாறு அமையப் பெற்றிருக்கின்றன என்பதை கற்றுக்கொள்ளுதல்
உள்ளாட்சி அமைப்புக்களின் நோக்கங்களை, உணர்தல்
73வது அரசியல் அமைப்புத்திருத்தம் ஜனநாயகத்தின் ஆணி வேர் என்று ஏன் கூறப்படுகிறது என்பதைப் புரிந்துகொள்ளுதல்.
உள்ளாட்சி அமைப்புக்களின் தலைவர்களைத் தேர்ந்தெடுக்கும் முறைகளை கற்றுக்கொள்ளுதல்

## அலகின் வடிவமைப்பு: (Unit Structure)

மத்திய மாநில குடிமைப்பணி
இந்திய குடிமைப்பணி மூன்று விதமாக வகைப்படுத்தப்படுகின்றன
மத்திய பொதுப்பணியாளர் தேர்வாணையம்
மாநிலப் பொதுப்பணியாளர் தேர்வாணையம்
இந்தியாவில் பணியாளர் தேர்வு முறை
உள்ளாட்சி அரசாங்கத்தின் வளர்ச்சி
73வது, 74வது அரசியலமைப்பு திருத்தம்
தமிழ்நாடு புதிய பஞ்சாயத்து சட்டம் 1994ன் சிறப்பு பண்புகள்
நகர்புற உள்ளாட்சி அமைப்புகள்
தமிழகத்தில் நகர்புற உள்ளாட்சி அமைப்புகள்
மாநகராட்சியின் செயல்பாடுகள்
தமிழக பேரூராட்சிகள் நிர்வாகம்

## 6.1. மத்திய, மாநில குடிமைப்பணி

இந்தியாவின் குடிமைப்பணி அமைப்பானது பிரிட்டிஷ் நிர்வாகத்தால் ஏற்படுத்தப்பட்ட ஒன்றாகும். கிழக்கிந்திய கம்பெனி ஆட்சியின் கீழ் இந்தியாவின் அரசுத்துறை பணியாளர்கள் (ICS) பொறுப்பில் விடப்பட்டது. இந்தியாவின் எல்லைகைகளுக்குட்பட்ட அனைத்துப் பகுதிகளையும் நிர்வாகம் செய்வதை மிகவும் கடினமான ஒன்றாக கிழக்கிந்திய கம்பெனியாளர்கள் நினைத்தார்கள். இந்திய குடிமைப் பணியோடு ஆங்கிலேய அரசின் குடிமைப்பணிகளை ஒப்பிடுகின்ற போது, மிகக்குறைவான தன்மையை பெற்றிருந்தன. ஆனால் லார்டு காரன்வாலிஸ் அவர்கள் பெரும்முயற்சிகள் எடுத்து இந்தியாவின் குடிமைப்பணிகளில் பல சீர்திருத்தங்களைக் கொண்டு வந்தார். இக்காலகட்டத்தில் குடிமைப்பணியாளர்களுக்கு முறையான ஊதியம், பணி மூப்பு, பணி நிரந்தரம், முதலியவை அறிமுகப்படுத்தப்பட்டன. மேலும், அவர்களுக்கு முறையான பயிற்சியும் வழங்கப்பட்டது. 1912ம் ஆண்டு ஐலிங்டன் பிரபு தலைமையிலான ஆட்சிக்காலத்தில் அரசுரிமை

(imperial) அரசுப்பணி ஆணையம் நிறுவப்பட்டது. இதில் 25% பதவிகள் இந்தியர்களுக்க ஒதுக்கப்பட்டது. இப்பணிக்கான தேர்வுகள் இந்தியாவிலும், இங்கிலாந்திலும் ஒரே நேரத்தில் (ICS) தேர்வு நடத்தப்பட்டது.

மாண்டேகு செம்ஸ்போர்டு குழுவின் அறிக்கை 1919ஆம் ஆண்டு மாநிலத் தேர்வாணையம், மத்திய தேர்வாணையம் ஆகிய இரண்டு தேர்வாணையங்களையும் அறிமுகப்படுத்தின. ஆனால், 1935ஆம் ஆண்டு சட்டத்தின் அடிப்படையில், மத்திய தேர்வாணைக்குழு, மாநிலத் தேர்வாணைக்குழு ஆகியவை முறையான தேர்வுகளை வைத்து, இந்தியர்களை தேர்ந்தெடுத்து அவர்களுக்கு முறையான பயிற்சிகளை வழங்கி பணி நியமனம் செய்யப்பட்டும் ஆங்கிலேயர்களுக்கு சமமாக இந்திய பணியாளர்களின் தரம் உயர்த்தப்பட்டது. 1946ம் ஆண்டில் ICS என்ற பதவியை ஒழிக்க வேண்டும் என்றும், அதற்கு மாறாகச் I.A.S மற்றும் I.P.S. கொண்டு வரவேண்டும் என பட்டேல் கூறினார்.

1947ஆம் ஆண்டு இந்திய சுதந்திரம் அடைந்ததற்கு பின்பு மத்திய ஆட்சிப் பணியாளர் பயிற்சி பள்ளி டில்லியில் நிறுவப்பட்டது. பின்பு அப்பயிற்சி நிலையம் மறைந்த பாரதப்பிரதமர் லால்பகதூர் சாஸ்திரி நினைவாக, முசோரியில் இப்பொழுது செயல்பட்டு வருகிறது. இந்திய அரசியல் அமைப்பின் 309 விதி பாராளுமன்றத்திற்கும், மாநில சட்டமன்றத்திற்கும் புதிய அரசுப்பணிகளை உருவாக்கும் அதிகாரத்தை பெற்றிருக்கின்றன.

### 6.1.1.இந்திய குடிமைப்பணி மூன்று விதமாக வகைப்படுத்தப்படுகின்றன

அவைகளானவை

அ) அகில இந்திய அளவிலான பணிகள்

ஆ) மத்தியப் பணிகள்

இ) மாநிலப் பணிகள்

**அ) அகில இந்திய அளவிலா பணிகள்:**

இந்திய நிர்வாக முறையில், அகில இந்தியப் பணி என்பது மிகச் சிறப்பான ஒன்றாகும். இந்திய கூட்டாட்சி தன்மையுடைய நாடாக இருப்பதால், மத்தியம் மாநிலம் என்ற இரண்டு விதமான பணிகளும், அகில இந்திய அளவிலான பணிகள் என்று ஒரு பணியும் பிரிக்கப்பட்டு அவைகள் சிறப்பாக இயங்கி வருகின்றன. தற்போது அகில இந்தியப்பணியை இந்திய ஆட்சிப்பணி என்று அழைக்கின்றோம். இப்பணி அமைப்பு முறையானது 1854ஆம் ஆண்டு மெக்காலே பிரபுவின் அறிக்கையின் அடிப்படையில் உருவாக்கப்பட்ட பணியாகும்.

1919ஆம் ஆண்டு மாண்டேகு செம்ஸ்போர்டு சீர்திருத்தக் குழுவின் பரிந்துரையின் படி, அகில இந்திய குடிமைப்பணியை இந்திய ஆட்சிப்பணி, இந்தியக் காவல் பணி, இந்திய வனத்துறை பணி, இந்திய கல்விப்பணி, இந்திய வோளண்மைப் பணி, இந்திய பொறியியல் பணி என்று பல வகைகயில் உருவாக்கப்பட்டன. ஆனால், இந்தியாவில் இந்திய அரசியல் அமைப்பின் வரைவுக்குழு அகில இந்தியப் பணிக்கு எந்தவிதமான முகாந்திரமும் எடுக்கவில்லை. ஆனால், சர்தார் வல்லபாய் பட்டேல் அவர்களின் நிர்பந்தத்தின் காரணமாக, இந்தியாவின் அரசியல் அமைப்பில் ஆட்சிப்பணி கட்டாயமாக்கப்பட்டது. அரசியல் அமைப்பின் 312வது உறுப்பு அகில இந்தியப்பணிக்கான வகைமுறைகளை உருவாக்கின. அகில இந்தியப் பணியானது தேசிய ஒருமைப்பாட்டிற்கும், தேசிய ஒற்றுமைக்கும் ஒரு கருவியாக இருந்தது. அகில இந்தியப் பணிக்கான பணியாளர்கள் மத்திய அரசுப்பணியாளர் தேர்வாணையத்தால் தேர்ந்தெடுக்கப்பட்டும், அவற்றால் கட்டுப்படுத்தப்படவும் படுகிறார்கள். ஆனால், அவர்கள் மாநில அரசாலும் நியமனம் பெறுகிறார்கள்.

மத்திய, மற்றும் மாநில அரசுகளுக்கு உண்டான அகில இந்தியப் பணிகளை உருவாக்கும் அதிகாரம் பாராளுமன்றத்திற்கு வழங்கப்பட்டுள்ளன. பாராளுமன்றத்தின் ராஜ்ய சபை புதிய அகில இந்தியப் பணியை உருவாக்கும் அதிகாரம் பெற்றுள்ளது. இதற்கான தீர்மானம் சபையில் மூன்றில் இரண்டு பங்கு அறுதிப்பெரும்பான்மை வாக்குகளுடன் நிறைவேற்றப்பட வேண்டும். அதே நேரத்தில் ராஜ்ய சபையின் பரிந்துரையின்றி மக்களவை அவ்வாறன தீர்மானத்தை கொண்டு வரமுடியாது. இந்திய கூட்டாட்சி தத்துவத்தில் மாநிலங்களின் நலனை பாதுகாப்பதற்காக பாராளுமன்றத்தின் மேல் சபைக்கு இந்த அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது. அகில இந்தியப் பணியை உருவாக்க மைய மற்றும் மாநில அரசுகள் கூட்டாக சம்மதிக்க வேண்டும்.

அகில இந்தியப் பணிகள் கீழ்கண்டவாறு வகைபடுத்தப்படும்.

- இந்திய ஆட்சிப்பணி (I.A.S)
- இந்திய காவல்பணி (I.P.S.)
- இந்திய வனத்துறை பணி (I.F.S.)
- இந்திய பொறியியல் பணி (I.E.S)
- இந்திய மருத்துவ பணி (I.M.S.)
- இந்தியப் பொருளாதாரப் பணி (I.E.S.)
- இந்தியப் புள்ளியியல் பணி (I.S.S.)

கீழேகொடுக்கப்பட்டுள்ள மூன்று அகில இந்தியப் பணிகளும் மைய அரசின் மூன்று தனிப்பட்ட அமைச்சங்களின் நிர்வாகத்திலும் கட்டுப்பாட்டிலும் உள்ளன. அவையானவை

- இந்திய ஆட்சிப்பணியானது பணியாளர் அமைச்சகத்தாலும்;
- இந்திய காவல் பணியானது உள்துறையாலும்;
- இந்திய வனத்துறை பணியானது சுற்றுச்சூழல் மற்றும் வனத்துறை அமைச்சகத்தாலும் நிர்வகிக்கப்படுகின்றன.

**ஆ) மத்திய குடிமைப்பணிகள்** (Central Civil Service)

இந்திய அரசியல் அமைப்பின் உறுப்பு 309—ன் மூலம் மைய அரசுப் பணிகளுக்கான நபர்களை தேர்ந்தெடுத்தல், நியமித்தல் மற்றும் அவர்களது பணி நிபந்தனைகளை முறைப்படுத்தும் அதிகாரத்தை பாராளுமன்றம் பெற்றிருக்கிறது. அவைகள் செயல் ரீதியிலும், தொழில்நுட்ப ரீதியிலும், மைய அரசின் பல்வேறு துறைகளில் செயல்பட்டு மற்றும் தொழில்நுட்ப சிறப்பு நிலைகள் ஆகும். அவைகளில் அதிகமானவர்கள் அந்தந்த அமைச்சகங்கள் அல்லது துறைகளாலும் மற்றும் சில பணியாளர் துறையாலும் நிர்வகிக்கப்பட்டும், கட்டுப்படுத்தப்பட்டும் வருகின்றன.

மைய அரசுப் பணியாளர் அமைச்சகம் முடிவு செய்கிறது.

மைய அரசுப்பணிகள் என்றழைக்கப்படக்கூடிய மைய அரசு நிர்வாகத்துறையை உருவாக்கும் அதிகாரத்தை அரசு அமைப்புச் சட்டம் உறுப்பு 312ன் மூலம் பாராளுமன்றம் பெற்றுள்ளது. அவைகள்

மைய அரசின் முழுமையான கட்டுப்பாட்டில் வைத்தும், மேலும், பாதுகாப்பு, வெளியுறவு மற்றும் கலால்துறை போன்ற மையப்பட்டியலில் உள்ள துறைகள் மீது நிர்வாக அதிகாரத்தைப் பெற்றும் உள்ளது.

அவ்வாறன துறைகளின் பெயர்கள்:

- இந்திய வெளியுறவுப்பணி (I.F.S.)
- இந்திய அஞ்சல் பணி (I.P.S.)
- இந்திய தகவல் பணி (I.I.S.)
- இந்திய சுங்கம் மற்றும் கலால் பணி (I.C.C.E.S.)
- இந்திய பாதுகாப்புப் பணி ((I.D.S.)
- இந்திய தணிக்கை மற்றும் கணக்குப்பணி (I.A. & A.S.)
- இந்திய வருவாய் பணி (I.R.S.)

இந்த வகைப்பாட்டில் மேலேகண்ட நிர்வாகப் பணிகளைத் தவிர்த்து மைய அரசின் செயலகப் பணியும் உள்ளடங்குகிறது. அவை இரண்டு வகைகளில் அடங்கும்.

அ) செயலகப்பணி

1) சார்பு செயலாளர் (அல்லது) கிளை அலுவலர்
2) கண்காணிப்பாளர் (அல்லது) பிரிவு அலுவலர்
3) உதவியாளர் (அல்லது) கண்காணிப்பாளர்
4) உதவியாளர்கள்

ஆ) எழுத்தர் பணி

1) மேல்நிலை எழுத்தர்
2) கீழ்நிலை எழுத்தர்

இ) மாநிலப் பணிகள்

மாநிலங்கள் தங்களது பணிகளை உருவாக்குவதற்கும் பணியாளர்களை நியமனம் செய்வதற்கும் மற்றும் அவர்களின் பணி விதிகளை உருவாக்குவதற்கும் இந்திய அரசியலமைப்பு உறுப்பு 309 மாநிலங்களுக்கு அதிகாரம் வழங்கியுள்ளது. வருவாய், சுகாதாரம், கல்வி, காவல் துறை போன்ற மாநிலப்பணியாளர்கள் மாநில அரசின் முழுமையான கட்டுப்பாட்டிலும், மேலும், மாநில அரசின் நிர்வாகத்திலும் இயங்குகிறார்கள்.

மாநில அரசின் முக்கியமான துறைகளுள் மாநில குடிமைப்பணியும் ஒன்று. இந்த பணியிலிருக்கும் பணியாளர்கள் பணி மூப்பின் அடிப்படையில் காலப் போக்கில் இந்திய ஆட்சிப்பணிக்கு பதவி உயர்வு பெறுகிறார்கள். அதேபோன்று, மாநில காவல்துறை பணியாளர்கள் இந்திய காவல் பணிக்கு பணி மூப்பின் அடிப்படையில் காலப் போக்கில் பதவி உயர்வு பெறுகிறார்கள். குறைந்தபட்சம் ஏழாண்டுகாலம் பணியாற்றியவர்கள் இவ்வாறாக ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ்., பணிகளுக்கு பதவி உயர்வு பெறுகிறார்கள். இவ்விரண்டைத் தவிர்த்த மற்ற மாநிலப் பணிகள், அவைகளுக்கே உரிய பதவி உயர்விற்கான படிநிலைகளை கொண்டுள்ளன.

பணியாளர்களை நியமிக்கும் பொதுவான விதிமுறைகளை உருவாக்கும் அதிகார விதிகளை சம்மந்தப்பட்ட சட்டமன்றத்திற்கு வழங்கும் கருத்தை அரசியல் அமைப்பு சபை ஒத்துக்கொண்டது. சலுகை காட்டுதல், ஆதரவு காட்டுதல், செல்வாக்கு ஆகியவைகளைத் தவிர்க்கவும், மிகுந்த திறமையானவர்களை தேர்ந்தெடுக்கவும், இந்திய

அரசியலமைப்பு சட்டம் உறுப்புகள் 315 முதல் 321 வரையிலானவை, மத்திய மற்றும் மாநில பொதுப்பணியாளர்கள் தேர்வாணையத்தை அமைக்கும் வகைமுறையை கொண்டுள்ளன.

மைய பொதுப்பணியாளர் தேர்வாணையமானது அகில இந்தியப் பணிகள் மற்றும் மைய அரசு பணிகளுக்கு பணியாளர்களை தேர்ந்தெடுக்கும் தேர்வுகளை நடத்துகிறது. நிர்வாகத்தில் திறமையானவர்களை உட்புகுத்துவதற்கும், அவர்களின் திறமை, பாரபட்சமற்ற . தன்மை ஆகியவைகளை உயர்த்துவதற்கும், மேலும், அரசியல், சமூக, பொருளாதார பின்னணியின்றி நிர்வாகத்தில் பணியாளர்களின் திறமை மற்றும் பாரபட்சமற்ற தன்மையை உயர்த்துவதே இதன் நோக்கமாகும்.

அரசியல்வாதிகளின் அழுத்தத்திலிருந்து நியமனத்தை காப்பாற்றுவதற்காக, பொதுப்பணியாளர் தேர்வாணையமானது நிர்வாக கட்டுப்பாட்டிலிருந்து சுதந்திரமான தனி அமைப்பாக உருவாகி உள்ளது.

அரசமைப்புச் சட்டத்தின் பரிவு 14 ஒரு மைய பொதுப்பணியாளர் தேர்வாணையம் அமைப்பதற்கு வகை செய்துள்ளது. பொதுப்பணி தேர்வாணையத்தின் அதிகாரம் மற்றும் செயல்பாடு குறித்து அரசமைப்புச் சட்டத்தின் உறுப்பு எண்கள் 315 முதல் 323 வரை எடுத்துரைக்கிறன.

## 6.1.2. மத்திய பொதுப்பணியாளர் தேர்வாணையம் (UPSC)

அமைப்பு: இந்திய அரசியலமைப்பின் உறுப்பு 315 மத்தியப் பொதுப்பணியாளர்கள் தேர்வாணையம் அமைவதற்கு வகை செய்கிறது. மத்தியப் பொதுப்பணியாளர் தேர்வாணையத்தில் ஒரு தலைவரும், குடியரசுத்தலைவரால் நிர்ணயம் செய்யப்பட்ட அளவில் உறுப்பினர்களும் உள்ளனர். மத்தியப் பொதுப்பணியாளர் தேர்வாணையத்தின் சரிபாதி எண்ணிக்கையினர் அலுவலர்களாகவும், மறு சரிபாதி எண்ணிக்கையினர் அலுவலர்கள் அல்லாத பணியாளர்களாகவும் இருப்பதற்கு உறுப்பு 316 செய்து கூறுகிறது. பொதுவாக கல்வியாளர்கள், எழுத்துலகின் பிரபலங்கள், நிர்வாகிகள் மற்றும் மக்களின் பிரதிநிதிகள் ஆகியோர் மத்தியப் பொதுப்பணியாளர் தேர்வாணையத்தில் இருப்பார். மத்தியப் பொதுப்பணியாளர் தேர்வாணையத்தின் அதிகாரத்தையும், அதன் பணியாளர்களின் எண்ணிக்கையையும் அவ்வப்போது தீர்மானம் செய்வதற்கு குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் உள்ளது. பொதுவாக, பத்தாண்டுகளுக்கு குறையாமல் அரசுப்பணியில் இருப்பவர்களும், மாசற்ற குணாதிசியங்கள் உள்ளவர்களும், மத்தியப் பொதுப்பணியாளர்

தேர்வாணையத்தின் உறுப்பினர்களாக தேர்ந்தெடுக்கப்பட்டு நியமிக்கப்படுகிறார்கள்.

### ❖ நியமனம்

மத்தியப் பொதுப்பணியாளர் தேர்வாணையத்தின் தலைவர் மற்றும் உறுப்பினர்கள் குடியரசுத் தலைவரால் நியமனம் செய்யப்படுகிறார்கள். ஆனாலும், மத்திய அரசு பரிந்துரைத்துள்ள பட்டியலில் கண்டுள்ளவர்களில் தகுதி வாய்ந்த நபர்களையே தேர்ந்தெடுத்து, குடியரசுத் தலைவர் நியமிக்கிறார். எனவே, மைய பொதுப்பணியாளர் தேர்வாணையத்தின் உறுப்பினர்கள் அமைச்சரவையின் ஆலோசனையின் பெயரில் நியமிக்கப்படுகிறார்கள்.

### ❖ மத்திய அரசுப்பணி தேர்வாணையம் — சிறப்புக்கள்

- இது ஏழு முதல் எட்டு உறுப்பினர்களை கொண்டது.
- இந்திய குடியரசுத்தலைவரே நியமன அலுவலர் ஆவார்.
- அவர்களில் 50% சதவீதத்தினர் குறைந்த பட்சம் பத்தாண்டுகள் அரசுப்பணியில் இருந்திருக்க வேண்டும்.
- உறுப்பினர்கள் ஆறு ஆண்டுகளுக்கு அல்லது 65 வயது வரை பதவியில் இருப்பர்.
- இது சுதந்திரமாக செயல்படும்.
- மத்திய பொதுப்பணியாளர் தேர்வாணையத்தின் தலைவர் அப்பணியிலிருந்து ஓய்வு பெற்ற பின் அரசின் எந்தவொரு பதவியிலும் இருக்கக்கூடாது.
- அவர்களை குடியரசுத்தலைவர் விசாரணை செய்து உச்சநீதிமன்றத்தின் அறிக்கையின் பேரில் பதவி நீக்கம் செய்யலாம்.
- உடல் ரீதியாக தகுதியில்லாதவர்களையும், அல்லது மன ரீதியாக தகுதியில்லாதவர்களையும் குடியரசு தலைவர் பதவி நீக்கம் செய்யலாம்.

### ❖ பதவிக்காலம்

உறுப்பினர்கள் ஆறு ஆண்டுகளுக்கு அல்லது 65 வயது வரை பதவியில் இருப்பர். 65 வயதை எட்டியவர்கள் மீண்டும் நியமனம் பெறுவதற்கு தகுதியற்றவர் ஆவர். மேலும், மத்தியப் பொதுப்பணியாளர் தேர்வாணையத்தின் தலைவர் மற்றும் உறுப்பினர்கள் தங்களின் பதவிக்காலத்தை முடித்த பின்பு மத்திய அரசிலோ அல்லது வேறு எந்த மாநில அரசின் பதவிகளிலோ, மேலும் பதவி பெறுவதற்கு

தகுதியிழந்தவர்கள் ஆகிறார்கள் என்று அரசமைப்பு சட்டம் உறுப்பு எண்: 319 உறுதி செய்கிறது.

❖ ஊதியம்

தலைவர் மற்றும் உறுப்பினர்களின் ஊதியம் மத்தியப் பாராளுமன்றத்தால் அவ்வப்போது நிர்ணயம் செய்யப்படுகிறது. அவர்களுக்கு விரோதமாக அவர்களின் ஊதியங்கள் மாற்றப்பட முடியாது. மத்தியப் பணியாளர் தேர்வாணையத்தின் பணியாளர்களின் ஊதியம் மற்றும் படிகள் உட்பட்ட ஒட்டுமொத்தச் செலவினமும், இந்தியாவின் தொகுப்பு நிதிக் கணக்கில் சேர்க்கப்படும். எனவே, இந்த விஷயங்கள் மையப்பாராளுமன்றத்தின் விவாதப்பட்டியலில் வராது. இவ்வாறான வகைமுறைகள் அனைத்தும் மைய பொதுப்பணியாளர் தேர்வாணையம் ஒரு சுதந்திரமானதும், பாராபட்சமற்றதுமான ஒரு அமைப்பாக செயல்பட வேண்டும் என்ற நோக்கத்தில் இந்த வகைமுறைகள் உருவாக்கப்பட்டுள்ளன. இவ்வாறாக, மத்தியப் பொதுப்பணியாளர் தேர்வாணையம் தனது பொறுப்புக்களை யாதொரு பயமோ, பாரபட்சமோயின்றி செயல்படுவதற்கு உதவியாக உள்ளது. தற்பொழுது மத்திய அரசுப்பணி தேர்வ ஆணையத்தின் தலைவர் பிரதி மாதமும் ரூ.90,000/—மும் அதன் மத்திய உறுப்பினர்கள் ரூ.80,000/—யும் ஊதியமாக பெறுகிறார்கள்.

❖ பதவி நீக்கம்

தலைவர் மற்றும் உறுப்பினர்கள் அரசமைப்பு சட்டம் சொல்லியுள்ள வழிமுறைகளின் படி மட்டுமே பதவிநீக்கம் செய்யப்படலாம். இவர்கள் தங்களது பதவிகளிலிருந்து கீழ்க்கண்டமுறைகளில் விலகலாம்.

அ) குடியரசுத் தலைவருக்கு தங்கள் கைப்பட மனுச் செய்வதன் மூலமும்;

ஆ) வக்கற்றவர்கள், புத்தி சுவாதீனம் இல்லாதவர்கள் அல்லது மோசமான நடத்தை உள்ளவர்கள் என்பன போன்ற காரணங்களின் அடிப்படையில் குடியரசு தலைவர் அவர்களை பதவி நீக்கம் செய்யலாம். ஆனாலும், உச்சநீதிமன்றத்தின் விசாரணைக்குப்பின்பே அவர்கள் பதவி நீக்கம் செய்யப்படவேண்டும்.

❖ ஆணையத்தின் சுதந்திர செயல்பாடு

பல்வேறு தரப்பட்ட பணிகளுக்கு தகுதியான நபர்கள் நியமனம் செய்யப்படுதலை உறுதி செய்வதற்காக, மத்தியப் பொதுப்பணியாளர் தேர்வாணையம் சுதந்திரமாகவும், பாரபட்சமின்றியும் செயல்படுவதற்கு அரசமைப்புச் சட்டம் வகை செய்துள்ளது. மத்திய அரசுப் பணியாளர்

தேர்வாணையத்தின உறுப்பினர்கள் சுதந்திரமாக செயல்படுவது கீழ்கண்ட வகைமுறைகளின் படி உறுதி செய்யப்படுகிறது.

(I) மத்தியப் பொதுப்பணியாளர் தேர்வாணையம் சட்டப்பூர்வ அங்கீகாரம் உடையது. மத்தியப் பொதுப்பணியாளர் தேர்வாணையம் இந்திய அரசியலமைப்புச் சட்டத்தால் உருவாக்கப்பட்டுள்ளது. இது பெரிய அளவில் கௌரவத்தை உறுதிப்படுத்துவது மட்டுமின்றி, இதனை ஒழிப்பது என்பது, அரசியலமைப்பு சட்டத்தில் திருத்தங்கள் கொண்டுவராமல் செய்ய முடியாது என்ற அளவில் கடினமானதாகும்.

(II) தலைவர் மற்றும் உறுப்பினர்களின் ஊதியம், இந்திய தொகுப்பு நிதியில் கணக்கு வைக்கப்படுகிறது. இது பாராளுமன்றத்தின் வாக்கொடுப்பிற்கு உட்படாதது.

(III) தலைவர் மற்றும் உறுப்பினர்களின் ஊதியம், படிகள் மற்றும் அவர்களின் பணி நிபந்தனைகள், அவர்கள் நியமனம் செய்யப்பட்ட பிறகு அவர்களுக்கு விரோதமாக மாற்றம் செய்யப்பட முடியாது.

(IV) உறுப்பினர்களுக்கு பதவி உறுதி செய்யப்பட்ட ஒன்றாகும். அவர்கள் சாதாரணமாக அவர்களின் பதவிக்காலம் முடிவதற்கு முன்பாக பதவி நீக்கம் செய்ய முடியாது. ஆனால் நிரூபிக்கப்பட்ட ஒழுங்கீனம் அல்லது தகுதிகுறைபாடு ஆகிய காரணங்களைத் தவிர்த்து அவர்கள் சாதாரணமாக பதவிக்காலம் முடிவதற்கு முன்பாக பதவி நீக்கம் செய்யப்படமுடியாது. அவ்வாறு அவர்கள் பதவி நீக்கம் செய்யப்படும் உத்தரவானது அவர்களுக்கு எதிரான குற்றச்சாட்டு சரியானதுதான் என்று உச்சநீதிமன்றம் விசாரணை அறிக்கை கொடுத்த பின்பே குடியரசுத்தலைவர் அம்மாதிரியான பதவி நீக்க உத்திரவுகளை பிறப்பிக்க முடியும்.

(V) ஆணையத்தின் உறுப்பினர்கள் பாரபட்சமற்ற முறையில் செயல்படவேண்டும் என்பதை ஊர்ஜிதம் செய்வதற்காக அவர்கள் தங்களது பதவிக்காலத்தை முடித்த பின்பு, வேறு யாதொரு பணிகளையும் ஏற்பதிலிருந்து தடை செய்யப்படுகிறார்கள். ஆயினும், மத்தியப் பொதுப்பணியாளர் தேர்வாணையத்தின் உறுப்பினர்கள் அதன் தலைவராகவோ அல்லது வேறு மாநில பொதுப்பணியாளர்

தேர்வாணையத்தின் தலைவராகவோ நியமனம் செய்யப்படலாம்.

❖ மத்தியப் பொதுப்பணியாளர் தேர்வாணையத்தின் பணிகள்:

மத்தியப்பொதுப்பணியாளர் தேர்வாணையம் கீழ்க்கண்ட பணிகளை செய்ய வேண்டுமென்று அரசமைப்புச் சட்டம் 55ன் விதி எண். 320 கூறுகிறது.

1) மத்திய அரசுப்பணிகளின் நியமனங்களுக்கு இது தேர்வை நடத்த வேண்டும்.

2) இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாநிலங்கள் கூட்டாக பணியாளர்களை நியமனம் செய்ய கேட்டுக்கொண்டால், அதற்கான திட்டங்களை மாநிலங்களுக்கு வகுத்து தருவதற்கும், மேலும் தேவைப்பட்டால் அவ்வாறான பணிகளுக்கு தேவைப்படும் சிறப்புத் தகுதிகளை கொண்டவர்களை தேர்ந்தெடுக்கும் வகையிலும், இது அத்திட்டத்தை செயல்படுத்த வேண்டும்.

3) பணிநியமன முறைகள், பதவி உயர்வு, ஒரு பணியிலிருந்து மற்றொரு பணிக்கு மாறுதல், ஒழுங்கு நடவடிக்கை, பணியாளரின் ஓய்வூதியக் கோரிக்கைகள் போன்ற விசயங்களில் மத்திய அரசிற்கோ, மாநில அரசிற்கோ மத்தியப்பொதுப்பணியாளர் தேர்வாணையம் ஆலோசனை வழங்கலாம்.

4) பாராளுமன்றம் இயற்றும் சட்டங்களுக்கு ஏற்ப கூடுதல் செயல்களை இது செயல்படுத்தும்.

5) குடியரசுத்தலைவர் அவர்களுக்கு ஆணையம் செய்துள்ள செயல்களை விளக்கி ஆண்டுக்கு ஒருமுறை ஆண்டறிக்கையினை இந்திய அரசியலமைப்பு சட்டம் 323—ன் படி மத்தியப்பொதுப்பணியாளர் தேர்வாணையம் சமர்ப்பிக்க வேண்டும்.

6) ஒரு மாநில ஆளுநர் கேட்டுக்கொள்ளும் பட்சத்தில், ஒரு மாநில அரசின் அனைத்து அல்லது வேறு தேவைகளை, குடியரசுத் தலைவரின் அங்கீகாரத்துடன், மத்திய பொதுப்பணியாளர் தேர்வாணையம் செயல்படுவதற்கு ஒப்புக்கொள்ளும்.

7) குடியரசுத் தலைவரால் ஆலோசனை கேட்டு அனுப்பப்படும் வேறு இதர விசயங்களிலும், மத்தியப்பொதுப்பணியாளர் தேர்வாணையம் செயல்படும்.

மையப் பொதுப்பணியாளர் தேர்வாணையம் என்பது ஒரு ஆலோசனை கோரும் அமைப்பே ஆகும். இவ்வாறாக, அதன் ஆலோசனைகள் ஆலோசனை என்ற தன்மையிலேயே இருக்கும். எனவே, அவ்வாறான ஆலோசனை அரசினை யாதொரு வகையிலும் கட்டுப்படுத்தாது. ஆயினும், மத்தியப் பொதுப்பணியாளர் தேர்வாணையத்திற்கு மத்திய அரசின் பல்வேறு தரப்பட்ட பணிகளுக்கு பணியாளர்களை நியமனம் செய்வதற்கு ஆலோசனை கோரும் அதிகாரம் மட்டுமே வழங்கப்பட்டுள்ளதால், அதன் பரிந்துரைகளை ஏற்பதோ, மறுப்பதோ மத்திய அரசின் விருப்பமாகும். ஆனால், ஆணையத்தின் ஆலோசனைகளை ஏறக்குறைய அப்படியே ஏற்றுக்கொள்வது தான் நடைமுறையில் உள்ள பழக்கமாகும்.

## 6.1.3. மாநிலப் பொதுப்பணியாளர் தேர்வாணையம்

ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஒரு பொதுப்பணியாளர் தேர்வாணையம் அமைவதற்கு இந்திய அரசமைப்பு சட்டம் வகை செய்கிறது. மாநிலப்பொதுப்பணியாளர் தேர்வாணையம் ஒரு தலைவரையும், உறுப்பினர்களையும் மாநில ஆளுநர் நிர்ணயம் செய்கிறார். ஆணையத்தின் பாதி உறுப்பினர்கள் மாநில அரசின் பணியில் குறைந்த பட்சம் பத்தாண்டுகள் பணியாற்றிவராக இருத்தல் வேண்டும். இவ்வாறான ஆணையங்கள் பல்வேறு தரப்பட்ட சமூகத்தினரின் நலன்களை பாதுகாப்பதற்கு உண்டான பிரதிநிதித்துவத்தை கொண்டதாக இருக்கும்.

**அமைப்பு:**

இதில் ஒரு தலைவர் மற்றும் மாநில ஆளுநர் நிர்ணயம் செய்யும் எண்ணிக்கையளவில் உறுப்பினர்களும் இருப்பார்கள். மாநில பொதுப்பணியாளர் தேர்வாணையத்தில் குறைந்த பட்சம் பாதி எண்ணிக்கையினர் அதிகாரிகளாகவும், மறுபாதி எண்ணிக்கையினர் பணியாளர்களாகவும் இருக்க வேண்டுமென்று அரசமைப்புச் சட்டம் உறுப்பு 316 கூறுகிறது. பொதுவாக கல்வியாளர்கள் எழுத்துலகினர், நிர்வாகிகள், மற்றும் மக்களின் பிரதிநிதிகள் ஆகியோர் மாநில பொதுப்பணித் தேர்வாணையத்தில் இருப்பார்கள். மாநில பொதுப்பணியாளர் தேர்வாணையத்தின் எண்ணிக்கையை அவ்வப்போது நிர்ணயம் செய்யும் அதிகாரத்தை மாநில ஆளுநர் பெற்றுள்ளார். மாநில ஆளுநர் அவ்வப்போது நிர்ணயம் செய்யும் எண்ணிக்கையிலான உறுப்பினர்களை இவ்வாணையம் கொண்டிருக்கும். பொதுவாக அரசுப்பணியில் குறைந்தபட்சம் 10 ஆண்டுகள் பணியாற்றிவர்கள்,

மேலும் மாசற்ற குணநலங்கள் உடையவர்கள் மாநில பொதுப்பணியாளர் தேர்வாணையத்திற்கு நியமிக்கப்படுகிறார்கள்

❖ நியமனம்

மாநில ஆளுநரால் மாநில பொதுப்பணியாளர் தேர்வாணையத்தின் தலைவர் மற்றும் உறுப்பினர்கள் நியமிக்கப்படுகிறார்கள். ஆயினும் அமைச்சரவை பரிந்துரைத்த திறமையானவர்களின் பெயர்களைக் கொண்ட பட்டியலில் இருந்து தகுதியானவர்களை ஆளுநர் தேர்ந்தெடுக்கிறார். எனவே, மாநில பொதுப்பணியாளர் தேர்வாணையத்தின் உறுப்பினர்கள் அமைச்சரவையின் ஆலோசனைப்படி நியமிக்கப்படுகிறார்கள்.

மாநில பொதுப்பணியாளர் தேர்வாணையம்:— சிறப்புக்கள்

1. இந்திய அரசமைப்புச் சட்டப்படி ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஒரு பொதுப்பணியாளர் தேர்வாணையம் அமைந்துள்ளது.
2. அவர்கள் மாநில ஆளுநர்களால் நியமிக்கப்படுகிறார்கள்.
3. உறுப்பினர்களின் எண்ணிக்கையை ஆளுநர் தீர்மானம் செய்கிறார்.
4. பொதுவாக தலைவர் உள்ளிட்ட 3 முதல் 4 உறுப்பினர்கள் இருப்பார்கள்.
5. அவர்களில் 50% சதவீதத்தினர் குறைந்த பட்சம் பத்தாண்டுகள் அரசுப்பணியில் இருந்திருக்க வேண்டும்.
6. தலைவரை, ஆளுநர் உயர்நீதிமன்றத்தின் அறிக்கையின் பேரில் பதவி நீக்கம் செய்யலாம்.
7. மாநில பொதுப்பணியாளர் தேர்வாணையத்தின் பணியிலிருந்து ஓய்வு பெற்ற பின் அரசின் வேறு எந்தவொரு பதவியிலும் சேர்வதற்கு தகுதியுடையவர்.
8. மாநில பொதுப்பணியாளர் தேர்வாணையத்தின் தலைவர் மத்திய பொதுப்பணியாளர் தேர்வாணையத்தின் தலைவராகவோ, அல்லது வேறு மாநில பொதுப்பணியாளர் தேர்வாணையத்தின் தலைவராகவோ ஆவதற்கு தகுதியானவராவார்.
9. ஒரு உறுப்பினர் 62 வயதிலோ அல்லது 6 வருடங்கள் வரையிலோ பணியில் இருப்பார்.

❖ பதவிக்காலம்

உறுப்பினர்கள் ஆறு ஆண்டுகளுக்கு அல்லது 62 வயது வரை பதவியில் இருப்பர். 62 வயதை எட்டியவர்கள் மீண்டும் நியமனம் பெறுவதற்கு தகுதியற்றவர் ஆவர். மேலும், மாநில பொதுப்பணியாளர் தேர்வாணையத்தின் தலைவர் மற்றும் உறுப்பினர்கள் மைய பொதுப்பணியாளர் தேர்வாணையத்தின் தலைவராகவோ,

உறுப்பினர்களாகவோ நியமனம் செய்யப்படுவதற்கு தகுதியானவர்கள் ஆவர். மாநில பொதுப்பணியாளர் தேர்வாணையத்தின் உறுப்பினர் ஒருவர் அதே தேர்வாணையத்தின் தலைவராகவோ அல்லது வேறு மாநில தேர்வாணையத்தின் தலைவராகவோ நியமனம் பெறுவதற்கு தகுதியானவர் ஆவர். ஆனால் அதே மாநில தேர்வாணையத்தில் மறு நியமனம் பெறுவதற்கு தகுதியற்றவர் ஆவர்.

❖ ஊதியம்

மாநில தேர்வு ஆணையத்தின் தலைவர் மாதம் ரூ.80,000/— மற்ற உறுப்பினர்கள் ரூ.70,000/— ஊதியம் பெறுகின்றனர். தலைவர் மற்றும் உறுப்பினர்களின் ஊதியம் மாநில சட்டமன்றத்தால் அவ்வப்போது நிர்ணயம் செய்யப்படுகிறது. அவர்களுக்கு விரோதமாக அவர்களின் ஊதியங்கள் மாற்றப்பட முடியாது. மாநிலப் பணியாளர் தேர்வாணையத்தின் பணியாளர்களின் ஊதியம் மற்றும் படிகள் உட்பட்ட ஒட்டுமொத்தச் செலவினமும் மாநிலத்தின் தொகுப்பு நிதிக் கணக்கில் சேர்க்கப்படும். இவ்வாறான வகைமுறைகள் அனைத்தும் மாநிலப் பொதுப்பணியாளர் தேர்வாணையம் ஒரு சுதந்திரமானதும் பாராபட்சமற்றதுமான ஒரு அமைப்பாகச் செயல்படவேண்டும் என்ற நோக்கத்தில் உருவாக்கப்பட்டுள்ளன. இவ்வாறாக மாநிலப்பொதுப்பணியாளர் தேர்வாணையம் தனது பொறுப்புக்களை யாதொரு பயமோ, பாரபட்சமோயின்றி செயல்படுவதற்கு உதவியாக உள்ளது. ஒரு மாநில உயர்நீதிமன்ற நீதிபதிக்கு கொடுக்கப்படுகின்ற அனைத்து சலுகையும் இவர்களுக்கு தரப்படுகிறது.

❖ பதவி நீக்கம்

இவர்கள் அரசமைப்பு சட்டம் சொல்லியுள்ள வழிமுறைகளின் படி மட்டுமே பதவிநீக்கம் செய்யப்படலாம்.

தலைவர் மற்றும் உறுப்பினர்கள் தங்களது பதவிகளிலிருந்து கீழ்க்கண்டமுறைகளில் விலகலாம்.

அ) குடியரசுத் தலைவருக்கு தங்கள் கைப்பட மனுச் செய்வதன் மூலமும்

ஆ) வக்கற்றவர்கள், புத்தி சுவாதீனம் இல்லாதவர்கள் அல்லது மோசமான நடத்தை உள்ளவர்கள் என்பன போன்ற காரணங்களின் அடிப்படையில், அவர்களை குடியரசு தலைவர் பதவி நீக்கம் செய்யலாம். ஆனாலும், உயர்நீதிமன்றத்தின் விசாரணைக்குப்பின்பே அவர்கள் பதவி நீக்கம் செய்யப்படவேண்டும்.

❖ செயல் பாடுகள்

மாநிலபொதுப்பணியாளர் தேர்வாணையம் கீழ்க்கண்ட பணிகளை செய்ய வேண்டுமென்று அரசமைப்புச் சட்டம் கூறுகிறது.

1) மாநில அரசுப்பணிகளின் நியமனங்களுக்கு இது தேர்வை நடத்த வேண்டும்.

2) மாநிலப்பணி சார்ந்த பணிகளுக்கான பணிநியமன விதிகள், பதவி உயர்வு, ஒரு பணியிலிருந்து மற்றொரு பணிக்கு மாறுதல் ஆகியவைகளுக்குண்டான விதிமுறைகளை வகுத்தல் போன்ற மாநிலப் பணியாளர் தேர்வாணையத்தின் பணி ஆகும்.

3) மாநில பொதுப்பணியாளர் தேர்வாணையம் மாநில அரசின் குடிமைப்பணிகள் சம்மந்தப்பட்ட அனைத்து விவகாரங்களிலும், மாநில அரசுக்கு ஆலோசனை கூறவேண்டும்.

4) ஆணையம் செய்துள்ள செயல்களை விளக்கி ஆண்டுக்கு ஒருமுறை ஆண்டறிக்கையினை மாநில ஆளுநர் அவர்களுக்கு சமர்ப்பிக்க வேண்டும். இந்த அறிக்கைகள் மாநில சட்டமன்றத்திற்கு மாற்றப்படும். ஒழுங்கு நடவடிக்கை சம்மந்தப்பட்ட வழக்கு விசயங்களில் இந்த அமைப்புகள் கலந்தாலோசிக்கபடும்.

## 6.1.4. இந்தியாவில் பணியாளர் தேர்வு முறை

1854ஆம் ஆண்டு அமைக்கப்பட்ட மெக்காலே பிரபு குழுவின் அறிக்கையின் பரிந்துரையின் அடிப்படையில் இந்தியாவில் பணியாளர் நியமன முறை அமைந்துள்ளது. இந்தியா முழுமைக்கும் ஒரு மத்தியப்பொதுப்பணியாளர் தேர்வாணையமும், ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஒரு மாநிலபொதுப்பணியாளர் தேர்வாணையமும், அமைவதற்கு அரசியல் அமைப்புச்சட்டம் வழிவகை செய்கிறது. அகில இந்தியப்பணி மத்திய செயலகப்பணி போன்ற பணிகளுக்கு பணியாளர்களை நியமிப்பதற்கான தேர்வுகளை மத்தியப்பணியாளர் தேர்வாணையம் நடத்துகிறது. ரயில்வே பணிக்கு பணியாளர்களை நியமனம் செய்ய ஒரு ரயில்வே பணியாளர் தேர்வாணையமும், தாமோதர் பள்ளதாக்கு நிறுவன பணிகளுக்கு வேறு ஒரு பணியாளாளர் தேர்வாணையமும், இந்திய வானஊர்தி கழக பணிகளுக்கு ஒரு தேர்வாணையமும் தனித்தனியாக உள்ளன. மத்திய அரசுப்பணியாளர் தேர்வாணையம் விண்ணபப்பங்களை வரவேற்று, அவைகளை பரிசீலித்து தகுதியான நபர்களை முதல் நிலைத் தேர்விற்கு அனுமதிக்கிறது. ஒவ்வொரு ஆண்டும் ஜீன் மாதத்தில் முதல் நிலைத்தேர்வு நடைபெறுகிறது. இந்தியாவில் மத்திய குடிமைப் பணிக்கு, மத்திய பணியாளர் தேர்வாணயம் நடத்திவந்த தேர்வுகளில் கலந்து கொள்வோரின் எண்ணிக்கை ஆண்டுக்கு ஆண்டு உயர்ந்து கொண்டே வந்தமையால் மத்திய குடிமைப் பணிதேர்வு சம்பந்தமாக1979 ஆம் ஆண்டு கோத்தாரி குழு ஓர் அறிக்கை சமர்ப்பித்தது. அது I.A.S., I.P.S., இது போன்று குடிமைப்பணிகளுக்கான தேர்வுகளில் சில மாற்றங்களை கொண்டு வந்தது. அதாவது தொடக்க நிலை தேர்வு (Pretiminary Examination) அதன்பின்பு, இறுதியில் வாய்மொழித்தேர்வுக்கு

அழைக்கப்படுவார்கள் என்றும் ஒரு புதிய முறை அமலாக்கப்பட்டது. முதல்நிலைத்தேர்வு இருதாள்களைக் கொண்டது. அவையாவன:

1) பொது அறிவு
2) விருப்பப்பாடம்.

1) பொது அறிவு

பொதுஅறிவுத் தாள் 150 மதிப்பெண்களைக் கொண்டது. அனைத்து கேள்விகளும் கொள்குறி வகையைச் சேர்ந்தது. அரசியல் விஞ்ஞானம், பொருளாதாரம், வரலாறு, புவியியல், உயிரியியல், கணிதவியல் மற்றும் நடப்பு நிகழ்வுகள் ஆகிய பல துறைகளைக் கொண்ட கொள்குறி வகையிலான கேள்விகளை உள்ளடக்கி இதில் கேள்விகள் கேட்கப்படும்.

2) விருப்பப்பாடம்

விருப்பப்பாடம் 300 கேள்விகளை உள்ளடக்கியது. மத்தியப் பணியாளர் தேர்வாணையம் சிறப்பு பாடங்களாக 25 பாடங்களை பட்டியலிட்டுள்ளது. பொது அறிவித்தாளைப் போலவே, இதிலும் கொள்குறி வகையிலான கேள்விகளே கேட்கப்படும். விருப்பப்பாடத்திற்கான கேள்விகள் பட்ட மேற்படிப்பு தரத்தில் கேட்கப்படும். பொது அறிவு மற்றும் விருப்பப்பாடங்களில் விண்ணப்பதாரர் பெற்றுள்ள மதிப்பெண்களின் அடிப்படையில், 10 காலியிடத்திற்கு ஒருவர் என்ற கணக்கில் தகுதிப்பட்டியல் தயாரிக்கப்படும். உதாரணமாக 400 காலியிடத்திற்கு 4000 விண்ணப்பதாரர்களை அதிக மதிப்பெண் பெற்ற அடிப்படையில் 1 : 10 என்ற விகிதாசாரத்தில் வரிசைப்படுத்தி பட்டியலிட்டு அவர்கள் முக்கியத்தேர்வுக்கு அனுமதிக்கப்படுவார்கள்

முக்கியத்தேர்வில் 9 தாள்கள் உள்ளன.

| | | |
|---|---|---|
| தாள் —1 | : | ஆங்கிலம் (300 மதிப்பெண்கள்) |
| தாள் —2 | : | இந்தியமொழி (300 மதிப்பெண்கள்) |
| தாள் —3 | : | கட்டுரைகள் (200 மதிப்பெண்கள்) |
| தாள் —4 மற்றும் 5 | : | பொதுக்கல்வி (600 மதிப்பெண்கள்) |
| தாள் 6 மற்றும் 7 | : | விருப்பப்பாடம் (600 மதிப்பெண்கள்) |
| தாள் 8 மற்றும் 9 | : | விருப்பப்பாடம் (600 மதிப்பெண்கள்) |
| வாய்மொழித்தேர்வு | : | 200 மதிப்பெண்கள். |

➢ ஆங்கிலத்தாள் கட்டாய பாடமாகும். இது 300 மதிப்பெண்களைக் கொண்டது. இதில் விண்ணப்பதாரர் தேர்ச்சி பெற வேண்டும்.

இந்த தாளில் பெற்ற மதிப்பெண்கள் இறுதி தகுதிப்பட்டியல் தயாரிப்பதற்கு கணக்கில் கொள்ளப்படமாட்டாது.

- 22 மொழிகளை இந்திய மொழிகளாக இந்திய அரசமைப்புச் சட்டம் வகைபடுத்தியுள்ளது. இதில் ஏதேனும் ஒரு மொழியை விண்ணப்பதாரர் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். மத்தியப்பணியாளர் தேர்வாணையத் தேர்வுகளில் கலந்து கொள்ளாததற்கு ஆஜராவதற்கு 21 முதல் 26 வயது வரை இருக்க வேண்டும்.
- தகுதியான விண்ணப்பதாரர்கள் நேர்முகத்தேர்விற்கு அழைக்கப்படுவர். அவ்வாறான வாய்மொழித் தேர்வுகளை மையப்பணியாளர் தேர்வாணையமே தகுதியான நிபுணர்களின் துணையுடன் நடத்தும். நேர்முகத்தேர்வு முழுவதும் ஒளிக்காட்சியாக பதிவு செய்யப்படும். நேர்முகத் தேர்வு முடிந்த பின்னர், தகுதியான விண்ணப்பதாரர்களின் பட்டியலை அவர்கள் பெற்ற மதிப்பெண் தகுதியின் அடிப்படையில் தயாரித்து அதனடிப்படையில் அவர்களுக்கு பணி நியமன ஆணைகள் வழங்கப்படும். பின்பு அவர்கள் பயிற்சிக்கு அனுப்பப்படுவார்கள். தற்போது இந்திய ஆட்சிப்பணிக்கு (I.A.S) தேசிய ஆட்சியில் கழகத்தில் (National Academy of Indian Administration) பயிற்சி அளிக்கப்படுகிறது. இது முசோரியில் அமைந்துள்ளது. ஐந்து மாதங்கள் அடிப்படை பயிற்சி வகுப்பும், 7 மாதம் மற்ற அனைத்து வகுப்புகளும் நடைபெறும். இந்திய வெளிநாட்டுப் பணிக்கு (IFS) டில்லியிலுள்ள இந்திய பன்னாட்டுப் படிப்பு பள்ளியில் (Indian School of International Studies) பயிற்சி அளிக்கிறது. 6 மாத பயிற்சி டில்லியிலும், 6 மாத பயிற்சி வெளிநாட்டு தூதரகங்களிலும் நடத்தப்படும். இந்திய காவல் பணிக்கு (I.P.S) ஹைதரபாத்தில் உள்ள தேசிய சர்தார் வல்லபாய் பட்டேல் காவல் பணி பயிற்சி நிலையத்தில் பயிற்சி வழங்கப்படுகிறது. நாக்பூரில் உள்ள இந்திய வருமானவரி பயிற்சி, இந்திய தணிக்கை மற்றும் கணக்குப் பயிற்சி சிம்லாவிலும் நடைபெறுகிறது. அனைத்து பணிகளுக்கும் பயிற்சிக்கு பின்பு ஒரு எழுத்து தேர்வு நடத்தப்படுகிறது. இந்த தேர்வுக்கு பின்பு அவர்கள் இந்தியாவில் உள்ள எப்பகுதியிலும் பணி நியமனம் செய்யப்படுவார்கள்.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனை கேள்விகள்

1. ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் நிலவிய குடிமைப்பணியின் நிலையை விவரி.

2. கோத்தாரி குழுவின் அறிக்கையினை பற்றி ஒரு சிறு குறிப்பு வரைக

3. மத்திய தேர்வாணையத்தின் அமைப்பினை விவரி

## இந்தியாவில் உள்ளாட்சி அரசாங்கம்

### 6.2. உள்ளாட்சி அரசாங்கத்திலன் வரலாற்று பூர்வமான வளர்ச்சி (Historical Development of Local brief)

இந்தியாவில் தல சுய அரசின் வரலாறு என்பது ஆதிகாலம் தொட்டு, தொடர்கிறது. சில வரலாற்று ஆராய்ச்சியாளர்களின் ஆய்வுகள்

நன்கு நிலைப்படுத்தப்பட்ட, ஏறக்குறைய உயர்ந்த அளவில் முன்னேற்றப்படுத்தப்பட்ட தல அரசு முறை பண்டைய இந்தியாவில் இருந்ததை நிரூபிக்கின்றன. முந்தைய கால கிராம சமூக அமைப்பில், சபா மற்றும் சமிதி என்ற இரண்டு பிரபலமான அமைப்புகள் இருந்தன. மேலும், இடைக்காலம் மற்றும் முகாலாய காலம் ஆகியவைகளில் கிராமப் பஞ்சாயத்துக்கள் தல அரசின் அலகுகளாக இருந்தன. பண்டைய காலம் தொட்டு இந்தியாவில் அரசு நிறுவனங்கள் இருந்தாலும், ஆங்கில அரசு வருவதற்கு முன்பு தற்கால கருத்தாக்கத்தின்படி இந்நிறுவனங்கள் இல்லை என்றே சொல்லலாம். இந்நிறுவனங்கள் ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்திலேயே பிரதிநிதித்துவ குணாதிசயங்களை பெற்றது.

சென்னை ராஜதானியில் 17ஆம் நூற்றாண்டின் கடைசிக் காலாண்டின், முனிசிபல் அரசு முதன் முதலாக இந்தியாவில் அறிமுகப்படுத்தப்பட்டது. சுருங்கக்கூறின் புறநகரப் பகுதிகளில் இந்த முனிசிபல் நிறுவனங்களை நிறுவுவதற்கு 1842 முதல் 1868 வரையிலான ஆண்டுகளில் தொடர்ச்சியாக பல சட்டங்கள் இயற்றப்பட்டன. 1870ஆம் ஆண்டு வாக்கில் பம்பாயில் 200; சென்னையில் 44; வங்காளத்தில் 65; வடமேற்கு மாகாணத்தில் 67; பஞ்சாபில் 127; (மற்றும்) மத்திய மாகாணத்தில் 40 முனிசிபாலிட்டிகளும் இருந்தன. ஆயினும் லார்டு மாயா அவர்களின் காலத்தில் இந்தத் துறையில் உண்மையான முன்னேற்றம் உருவாக்கப்பட்டது. 1870ஆம் ஆண்டைய மாயா தீர்மானத்தின் மூலம் தல சுய அரசாங்கங்களுக்கான ஒரு திட்டம் உருவாக்கப்பட்டது.

தல சுய அரசாங்கங்களின் முன்னேற்றம் குறித்த ஒரு அறிக்கையை சமர்ப்பிப்பதற்காக சர் சார்லஸ் ஹாப் ஹவுஸ் அவர்கள் தலைமையில் 1907ஆம் ஆண்டு அதிகாரப் பரவலாக்கம் குறித்த ஒரு அரசுரிமை ஆணையம் கிராம பஞ்சாயத்துக்களை நிறுவ அமைக்கப்பட்டது. அந்த ஆணையம் தனது அறிக்கையை 1907ஆம் ஆண்டு சமர்ப்பித்தது.

அதிகார பரவலாக்கத்திற்கான அரசுரிமை ஆணையம் கிராம பஞ்சாயத்துக்களை புதுப்பிப்பதற்கான ஒரு வலுவான வாதத்தை முதன் முறையாக எடுத்து வைத்தது. ஆனால் அதன் பரிந்துரைகளுக்கு உடனடியான செயலாக்கம் வழங்கப்படவில்லை. எனினும் முறைசாரா கிராம அமைப்புக்களை உருவாக்குவதற்கு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

இந்த ஆணையத்தின் பரிந்துரைகளை கீழ்கண்டவாறு வகைப்படுத்தலாம்:

1) கிராம அமைப்பு
2) ஊரக வாரியம்
3) நகராட்சிகள்

கிராம அமைப்பு சம்மந்தப்பட்ட பரிந்துரையின் அடிப்படையில், சுமார் 500 பேர்கள் அந்தக் கிராமத்தில் குடியிருக்க வேண்டும். அக்கிராமத்திற்கு ஒரு கிராமத் தலைவர் மக்களால் நேரடியாக தேர்ந்தெடுக்கபடுவார். மாவட்ட மற்றும் துணை மாவட்ட வாரியங்களின் கட்டுப்பாட்டிற்குள் பஞ்சாயத்துகள் இருத்தல் கூடாது.

நகராட்சி சம்பந்தப்பட்ட பரிந்துரைகளின் அடிப்படையில், நகராட்சி வரிவிதிக்கும் அதிகாரத்தை முழுமையாக பெற்றிருக்க வேண்டும். நகராட்சி குழுத் தலைவர் அல்லாமல், ஒரு குறிப்பிட்ட முழுநேர அலுவலரிடம் நிர்வாக பொறுப்பை அமைப்பது பெரிய கிராமங்களை பொறுத்தமட்டில் அது விரும்பத்தக்கதல்ல. கிராம வாரியங்களை பொறுத்த வரையில் மாவட்ட வாரியங்களின் தலைவராக மாவட்ட ஆட்சித்தலைவரும், துணை மாவட்ட வாரியங்களின் தலைவராக வட்டாட்சியாரும் இருத்தல் வேண்டும். கிராமப்புற வாரியங்களின் வேலைகளையும், சொத்துக்களையும் மேற்பார்வையிடும் அதிகாரம் மாவட்ட ஆட்சித்தலைவரிடமும் இருத்தல் வேண்டும்.

- காந்திஜியின் கனவினை நனவாக்கும் பொருட்டு இந்திய அரசியல் அமைப்பின் நாற்பதாவது விதியில் கிராம பஞ்சாயத்து அமைக்கப்பட வேண்டும் என்று அறிவுறுத்தப்பட்டிருக்கிறது. சுதந்திரம் அடைந்தற்குப் பின்பு, இந்த உள்ளாட்சி அரசாங்கம் மாநிலப் பட்டியலில் இடம் பெற்றுள்ளன. இந்தியாவில்1952ஆம் ஆண்டு சமுதாய வளர்ச்சித் திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டது. இத்திட்டத்தின் முதன்மையான நோக்கம் வறுமை, அறியாமை, கல்வியின்மை, பிணி போன்றவற்றை முழுவதும் ஒழிப்பதாகும். இந்த திட்டத்தின் முக்கிய நோக்கம் கிராமப்புறங்களில் அனைத்து வசிதிகளையும் ஏற்படுத்தி தருவதாகும். 1953ஆம் ஆண்டு தேசிய விரிவாக்க பணியின் மூலம் அனைத்து பஞ்சாயத்து யூனியன்களிலும் இத்திட்டம் அமுல்படுத்தப்பட்டது. பின்பு இத்திட்டம் சிறப்பாகச் செயல்படுவதற்கும், கிராம பஞ்சாயத்தில் மக்களை நேரடியாக பங்கு பெறச் செய்வதற்கும் 1957ஆம் ஆண்டு ஜனவரி மாதம் திரு.பல்லந்த்ராய் மேத்தா அவர்கள் தலைமையில் மத்திய அரசால் ஒரு குழு அமைக்கப்பட்டது. 1957ஆம் ஆண்டு நவம்பர் மாதம் இக்குழு தனது அறிக்கையினை சமர்பித்தன. இக்குழு மூன்றடுக்கு பஞ்சாயத்து அமைப்புக்களை உருவாக்கியது. அதாவது கிராமப்புற பஞ்சாயத்தானது, உள்ளாட்சி அரசாங்கத்தின் கீழ்

மட்டமாகவும், பஞ்சாயத்து சமிதி என்பது பஞ்சயாத்து யூனியன் வட்டார அளவிலும், ஜில்லா பரிஷத் மாவட்ட அளவிலும் செயல்படுவதற்கு இக்குழு தனது பரிந்துரையை செய்தது. திரு.பல்லந்த்ராய் மேத்தா அவர்களின் அறிக்கையை தேசிய வளர்ச்சி மன்றம் 1958ஆம் ஆண்டு முழுமையாக ஏற்றுக்கொண்டன. பல்லந்த்ராய் மேத்தா அவர்களின் மூன்றடுக்கு முறை முதன் முதலாக ராஜஸ்தான் மாநிலத்தில் அக்டோபர் 02, 1959ஆம் ஆண்டு முன்னால் பாரதப்பிரதமர் திரு.ஜவஹர்லால் நேரு அவர்களால் அறிமுகப்படுத்தப்பட்டது. இந்த மூன்றடுக்கு முறைக்கு நேரு அவர்கள் பஞ்சாயத்து ராஜ் எனப் பெயரிட்டார்கள். மேலும், இந்த அமைப்பு ஆந்திரப்பிரதேசம், பஞ்சாப் போன்ற மாநிலங்களில் அறிமுகப்படுத்தப்பட்டன. 1964ஆம் ஆண்டு முடிவதற்கு முன் எல்லா மாநிலங்களும் இம்முறையை செயல்படுத்தியது.

பல்லந்த்ராய் மேத்தா குழு அறிக்கை பின்வருமாறு

I) கிராம பஞ்சாயத்து

பஞ்சாயத்து ராஜ் முறையில் முதல் அடுக்கு கிராம பஞ்சாயத்து ஆகும். மேகலாயா, நாகலாந்து, சிக்கிம், ஜம்மு & காஷ்மீர் ஆகிய மாநிலங்களை தவிர்த்து, மற்ற மாநிலங்கள் அனைத்திலும் கிராம பஞ்சாயத்து ஏற்படுத்தப்பட்டன. கிராமப்பஞ்சாயத்து ஒரு கிராமத்திற்கு அல்லது சில கிராமங்கள் இணைந்த ஒரு அமைப்பிற்கு உருவாக்கப்படுகிறது. 1967ஆம் ஆண்டு நிர்வாகச் சீர்திருத்த ஆணையம், ஒரு கிராம பஞ்சாயத்திற்கு குறைந்தது 500 மக்கள்தொகை இருக்க வேண்டும் என்று அறிவுறுத்தியது. கிராமபஞ்சாயத்தின் எண்ணிக்கை 5 முதல் 31 வரையிலான அங்கத்தினர்களை கொண்டிருக்கவேண்டும். கிராமப்பஞ்சாயத்து தலைவர் யற்ற சில மாநிலங்களில் நேரடியாகவும் கில மாநிலங்களில் மறைமுகமாகவும் தேர்ந்தெடுக்கப்படுகிறார்.

கிராமப் பஞ்சாயத்தின் அதிகாரங்களும், பணிகளும் ஏறக்குறைய அனைத்து மாநிலங்களிலும் ஒன்று போல் நடைமுறைப்படுத்தப்பட்டன. கிராம பஞ்சாயத்துத்தின் கூட்டம் மாதத்திற்கு ஒரு முறை கூட்டப்படவேண்டும். பல்லந்த்ராய் மேத்தா அவர்களின் அறிக்கை கிராமப்பஞ்சாய்த்திற்கு இருவிதமான பணிகளை வழங்கியுள்ளது. அவையானவை கட்டாயப்பணி, விருப்பப்பணி.

- கட்டாயப்பணி:

    சுகாதாரம் மற்றும் மருத்துவப்பணிகள்
    ஆரம்ப பள்ளிகளை நிறுவி பராமரித்தல்

பிறப்பு இறப்பு போன்றவைகளை பதிவு செய்தல்
தெருவிளக்குகளை பராமரித்தல்
விவசாயம், வாணிபம், தொழில்வளர்ச்சிக்கு உதவுதல்
நீர்பாசன வசதிகளை பெருக்கிக் கொடுத்தல்
விவாசாயிகளுக்கு பயிர்கடன் வழங்குவதற்கு ஆவண செய்தல்
வேளாண்மையில் புதிய யுக்திகளை கையாள்வதற்கு விவசாயிகளுக்கு பயிற்சி அளித்தல்.

- விருப்பப்பணி:
  பொதுச்சாலைகளின் இருபுறங்களிலும் மரங்களை வளர்த்தல்.
  புயல், வெள்ளம் போன்ற இயற்கையின் பாதிப்புள்ளான பகுதிகளுக்கு நிவாரணம் வழங்குதல், கால்நடைகளை பராமரித்தல்
  ஆரம்ப சுகாதார நிலையம் ஏற்படுத்துதல்

II) பஞ்சாயத் சமிதி

பஞ்சாயத்து முறையில் இரண்டாவது அடுக்காக பஞ்சாயத்து சமிதி காணப்படுகிறது. இவ்வமைப்பு சமுதாய வளர்ச்சியை மேம்படுத்துவதற்காக உருவாக்கப்பட்டதாகும். தமிழகத்தில் பஞ்சாயத்து சமிதிக்கு பஞ்சாயத்து யூனியன் எனப் பெயரிடப்பட்டது. தேர்ந்தெடுக்கப்பட்ட வார்டு உறுப்பினர்கள் மூலம் சேர்மன் மற்றும் துணைச் சேர்மன் ஆகியோர் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். இம் முறை ஏறத்தாழ எல்லா மாநிலங்களிலும் ஒரே மாதிரியாக கடைபிடிக்கப்பட்டது. பஞ்சயாத்து சமிதியின் கூட்டத்தொடர் இரண்டு மாதத்திற்கு ஒருமுறை கண்டிப்பாக கூட்டப்படவேண்டும். பஞ்சாயத்து சமிதி கிராமப்பஞ்சாயத்துக்களை கட்டுப்படுத்தி, மேற்பார்வை செய்யும் அதிகாரம் பெற்றிருந்தது. இதன் முக்கியப்பணி பின்வருமாறு கூறப்பட்டுள்ளது. செய்தித்தொடர்பு, குடிநீர் விநியோகம், குழந்தைகள் காப்பகம், கிராமச் சாலைகள் அமைத்தல், புறம்போக்கு ஆக்கிரமிப்புக்களை தடுத்தல், அரசாங்க சொத்துக்களை பராமரித்தல், சிறுதொழில் வளர்த்தல், ஆரம்பக் கல்வித் திட்டங்களை ஒழுங்கு படுத்துதல் போன்றவை பஞ்சாயத்து சமிதியின் முக்கியப் பணியாகும்.

III) ஜில்லா பரிஷத்:

பஞ்சாயத்து ராஜ் முறையில் உயரிய அடுக்காக, ஜில்லா பரிஷத் இடம் பெற்றுள்ளது. இது மாவட்ட அளவில் செயல்படும் ஒரு அமைப்பாகும். தமிழ்நாட்டிலும், கர்நாடகத்திலும், இதனை மாவட்ட

வளர்ச்சிக்குழு என்றழைத்தார்கள். மேலும் இவ்விரு மாநிலங்களிலும் மாவட்ட ஆட்சியர் வளர்ச்சிக்குழுவின் தலைவராகச் செயல்படுவார். ஜில்லா பரிஷத்தின் நிதியைப் பொறுத்தமட்டிலும், அரசாங்கத்திடமிருந்து அவை மானியமாக பெறுகின்றன. ஒவ்வொரு ஆண்டும் வரவு, செலவுத் திட்டம் தயாரித்து, ஊரக உள்ளாட்சி அமைப்பிற்கு நிதி வழங்கும் உரிமை ஜில்லா பரிஷத்திற்கு உண்டு. பின்வரும் வரிகள் பெறுவதற்கு சமிதிக்கு அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது. அவைகள் சொத்துவரி, தொழில்வரி, கால்நடை வரி, வாகனவரி, மின்சாரக்கட்டண வரி, குடிநீர் குழாய் வரி, நுழைவு வரி, கேளிக்கை வரி போன்றவைகளாகும்.

■ 1977ஆம் ஆண்டு ஜனதா அரசாங்கம் திரு.அசோக் மேத்தா அவர்களின் தலைமையில் பஞ்சாயத்து அமைப்புக்கள் புத்துயிர் பெறுவதற்காக ஒரு கமிட்டியை நியமித்தது. திரு. அசோக் மேத்தா அவர்கள் 1978ஆம் ஆண்டு தனது அறிக்கையினைச் சமர்ப்பித்தார். அவ்வறிக்கை பஞ்சாயத்து அமைப்புகளில் இரண்டடுக்கு முறைக்கு வழிவகை செய்தன. அதாவது மண்டலப் பஞ்சாயத்து மற்றும் மாவட்டப் பஞ்சாயத்து ஆகும். இந்த அமைப்பு முதன்முதலாக அறிமுகப்படுத்தப்பட்ட மாநிலம் கர்நாடகம் ஆகும்.

## 6.2.1. 73வது, 74வது அரசியலமைப்பு திருத்தம்:

பஞ்சாயத்துராஜ் அமைப்பிற்கு புத்துயிர் கொடுக்கும் விதத்தில் திரு.ராஜீவ் காந்தி அவர்களால் 1988ஆம் ஆண்டு திரு.P.K.துங்கன் தலைமையில் குழு அமைக்கப்பட்டது. இக்குழு தன் அறிக்கையை ஏப்ரல் 10ம் தேதி சமர்பித்தது. இவ்வறிக்கையின் புதிய பஞ்சாயத்து மசோதா திரு.ராஜீவ் காந்தி அவர்கள் மே 15ம் தேதி பாராளுமன்றத்தில் 64ம் மசோதாவாக சமர்பித்தார். ஆனால் இது பாராளுமன்றத்தில் கீழ்சபையில் அறுதிபான்மையை பெற்று மேல் சபையில் இரண்டு வாக்கு வித்தியாசத்தில் தோற்கடிக்கப்பட்டது. பின்பு திரு.V.P.சிங் அவர்கள் பிரதமராக இருந்த பொழுது இம்மசோதா பாராளுமன்றத்தில் விவாதம் நடைபெற்றுக் கொண்டு இருந்த பொழுது அவ்வரசு கலைக்கப்பட்டது. 1991ம் ஆண்டு திரு.நரசிம்மராவ் அவர்கள் பிரதமராக காங்கிரஸ் கட்சியின் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட பொழுது 73வது பஞ்சாயத்து அமைப்பு மற்றும் 74வது நகராட்சி அமைப்ப ஆகிய இரு மசோதாக்கள் பாராளுமன்றத்தில் 1992ம் ஆண்டு தாக்கல் செய்யப்பட்டது. இரு மசோதாக்களும் அறுதிப்பெரும்பான்மை பெற்று ஏப்ரல் 20, 1993ல் குடியரசுத்தலைவரின் ஒப்புதலை பெற்று ஏப்ரல் 24ல் 1993ல் ஆண்டு நடைமுறைக்க வந்தது. 73, மற்றும் 74 வது அரசியலமைப்ப சட்டம் முழுக்க முழுக்க முன்னாள் பாரதப்பிரதமர் ராஜீவ்காந்தி அறிமுகப்படுத்திய 64வது அரசியலமைப்பு சட்ட திருத்தமசோதாவாகும்.

73வது அரசியலமைப்பின் சட்டத்திருத்தின் மூலம் கிராமபஞ்சாயத்துக்கள், வட்டாரப் பஞ்சாயத்துகள், மாவட்டப் பஞ்சாயத்துக்கள் உருவாக்கப்பட்டதாகும். 73 அரசியலமைப்பு திருத்தம் 11—வது அட்டவணையில் சேர்க்கப்பட்டிருக்கிறது. மொதம் 29 வருவாய் தரக்கூடிய இனங்கள் இந்த அட்டவணையில் சேர்க்கப்பட்டிருக்கின்றன.




73வது மற்றும் 74வது அரசயிலமைப்புத்திருத்தம் மேகலயா, முசோரம், நாகலாந்து, ஜம்மு & காஷ்மீர், டெல்லி யூனியன் பிரதேசம், மணிப்பூர் மற்றும் மேற்கு வங்காளத்திலுள்ள டார்ஸிலிங் போன்ற பகுதிகளுக்கு பெருந்தாது. மேலும் 200ல் ஏற்படுத்தப்பட்ட 83வது அரசியலமைப்புத்திருத்தம் அருணாசலப்பிரதேசத்தில் ஆதி திராவிடர்களுக்கு இட ஒதுக்கீட வழங்கப்படவில்லை.

### 6.2.2. தமிழ்நாடு புதிய பஞ்சாயத்து சட்டம் 1994ன் சிறப்பு பண்புகள்:

அதிகாரப்பரவல், ஜனநாயக விரிவாக்கம், சமூகநீதியை மேம்படுத்துவோம் என்ற பெயரில் தமிழ்நாடு சட்டமன்றம், தமிழ்நாடு சிற்றூராட்சிகளின் சட்டம்

1994 என்ற சட்டத்தை அறிமுகப்படுத்தியது. இச்சட்டப்படி உள்ளாட்சி அமைப்புகள், ஊராட்சிகள், ஊராட்சி ஒன்றியங்கள், மாவட்டப்பஞ்சாயத்துக்கள் என்ற மூன்றடுக்கு உள்ளாட்சி அமைப்பினை ஏற்படுத்தியது. அவை 13.04.1995—ல் அமுல்படுத்தப்பட்டு 1996ல் நடைமுறைப்படுத்தப்பட்டது. ஊராட்சித்தலைவர் மற்றும் ஊராட்சி வார்டு உறுப்பினர் கட்சி சார்பின்றி தேர்வு செய்யப்படுவார்கள். ஊராட்சி ஒன்றிய தலைவர், உறுப்பினர்கள் மாவட்ட ஊராட்சித்தலைவர், உறுப்பினர்கள் கட்சி சார்பில் கட்சி சின்னத்தில் தேர்வு செய்யப்படுவார்கள். கிராமங்களிடையே சமூக நீதியை நிலை நாட்டல் என்ற அடிப்படையில் பெண்கள், தாழ்த்தப்பட்டவர்களுக்கு இடஒதுக்கீடு வழங்கப்பட்டது. இந்த இட ஒதுக்கீடு 10 ஆண்டுகளுக்கு ஒருமுறை சுழற்சி முறையில் மாற்றி அமைக்கப்படும். தற்பொழுது தமிழகத்தில் ஊராட்சி தலைவர் 12618 பேரும் ஊராட்சி வார்டு உறுப்பினர்கள் 97458 பேரும், ஊராட்சி ஒன்றியத்தலைவர் 385 பேரும் ஊராட்சி ஒன்றிய வார்டு உறுப்பினர்கள் 6570 பேரும், மாவட்ட ஊராட்சி தலைவர் 28 பேரும் மாவட்ட ஊராட்சி தலைவர் வார்டு உறுப்பினர்கள் 656 பேரும் உள்ளாட்சி அமைப்புகளில் இடம் பெற்றுள்ளனர்.

ஐ) கிராம ஊராட்சி:

கிராம ஊராட்சி ஏற்படுத்துவதற்கு குறைந்த மக்கள் தொகை ஐநூறு பேர் வரை இருக்க வேண்டும் ரூ.1000க்கு மேலான வருவாயை பெற்றிருக்க வேண்டும் என 1952ஆம் ஆண்டு சென்னை பஞ்சாயத்துச் சட்டம் வலியுறுத்தப்பட்டிருக்கின்றன. ஒரு பஞ்சாயத்தில் குறைந்தது ஐந்து வார்டு உறுப்பினர்கள் இருக்க வேண்டும். அதே நேரத்தில் பதினைந்திற்கு மேல் இருக்கக்கூடாது. வார்டு உறுப்பினர்கள் மற்றும் ஊராட்சித் தலைவர்கள் நேரடியாக மக்களால் ஐந்தாண்டு காலத்திற்கு தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். உதவி ஊராட்சித் தலைவர் வார்டு உறுப்பினர்களால் மறைமுகமாக தேர்ந்தெடுக்கப்படுகிறார்.

கிராம சபை

கிராம சபை என்பது கிராம பஞ்சயாத்தின் பாராளுமன்றம் என்றே கூறலாம். 73வது அரசியல் அமைப்புத் திருத்தச் சட்டத்தின்படி கிராம சபை என்ற அமைப்பு புதியதாக உருவாக்கப்பட்ட அமைப்பாகும். ஒவ்வொரு கிராம பஞ்சாயத்திலுள்ள வயது வந்த வாக்காளர்கள் அனைவரும் கிராம சபையின் உறுப்பினர் ஆவார்கள்.

கிராமத்தின் வரவு செலவு திட்டம் கிராம சபையில் நிறைவேற்றப்பட்டால் தான் அது நடைமுறைப்படுத்தப்படும். கிராம சபை ஆண்டுக்கு நான்கு முறைகள் கூடுகின்றன அதாவது, ஆகஸ்டு 15,

அக்டோபர் 2, ஜனவரி 26, மற்றும் மே 1. கிராம சபை ஏற்படுத்தியதன் முக்கிய நோக்கம் அடித்தள ஜனநாயகத்தை வலிமைப்படுத்துவதாகும்.

கிராம பஞ்சாயத்து தனது நிதி ஆதாரங்களை மாநில அரசாங்கத்திலிருந்து நேரடியாகப் பெறுகின்றன. கிராமப்புற நலப்பணிகளில் தேவையற்ற பஞ்சாயத்து யூனியனிலுள்ள தலையீடு தவிர்க்கப்படுகின்றன. கிராமத்தின் பதிவேடுகளைப் பராமரிப்பதற்கும், பஞ்சாயத்து தலைவருக்கு உதவியாகவும் பகுதி நேர எழுத்தர் ஒருவர் நியமிக்கப்படுகிறார். அரசாங்கத்தினுடைய திட்டங்கள் மற்றும் கொள்கைகள் கிராம சபை மூலம் நிறைவேற்றப்படுகின்றன. ஒவ்வொரு கிராம சபை கூட்டத்திற்கம் ரூ.1000/—ஐ கிராமப்பஞ்சாயத்து தலைவர் பஞ்சாயத்து நிதியிலிருந்து பெற்றுக்கொள்ளலாம். அரசமைப்புச் சட்ட உறுப்பு எண்கள. 243, 243A, கிராமசபை பற்றி கூறுகிறது.

**கிராமப்பஞ்சாயத்தின் பணிகள்**

அ) கிராமச்சாலை, கிராமச்சாலை பழுதுபார்த்தல், கிராமத்திற்கு தேவையான கட்டிடங்கள் கட்டுதல்

ஆ) தெருவிளக்குகளைப், பொது இடங்களிலும், சாலைகளிலும் பராமரித்தல்

இ) தெருச் சாக்கடை வசதிகள் மற்றும் துப்புரவுப் பணிகளை மேற்கொள்ளல்

ஈ) பொதுக்கழிப்பறைகளை பராமரிப்பு செய்தல்

உ) சுடுகாடு, இடுகாடுகளை பராமரிப்பு செய்தல்

ஊ) கிராமச் சொத்துக்களை பராமரித்தல்

எ) குளியலறை, துணிதுவைக்கும் வசதி, கழிப்பிட வசதி செய்து தருதல்

ஏ) படிப்பகம் ஏற்படுத்துதல் மற்றும் பராமரித்தல்.

**II) ஊராட்சி ஒன்றியங்கள்**

புதிய பஞ்சாயத்து ராஜ் அமைப்பின் இரண்டாவது அடுக்குமுறை, ஊராட்சி ஒன்றியமாகும். ஐந்தாயிரம் மக்கட்தொகைக்குட்பட்ட ஒவ்வொரு பகுதிக்கும்/வார்டுக்கும் வார்டு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படுகிறார். ஒவ்வொரு ஊராட்சி ஒன்றியமும் குறைந்தது பதினைந்து வார்டு உறுப்பினர்கள் இருக்க வேண்டும். ஒன்றியக் கவுன்சிலின் உறுப்பினர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து அப்பஞ்சாயத்து யூனியனின் சேர்மன் மற்றும், துணைச் சேர்மன் ஆகியோரை ஐந்தாண்டு காலத்திற்கு தேர்ந்தெடுக்கிறார்கள். குறைந்தது மூன்று மாத்ததிற்கு ஒருமுறை ஊராட்சி ஒன்றிய கவுன்சில் கூட்டப்படவேண்டும் என்று 73வது அரசியல் அமைப்பு திருத்த சட்டம் வலியுறுத்தி கூறகிறது. பஞ்சாயத்து யூனியன்

சேர்மன் இல்லாத பட்சத்தில், துணைச்சேர்மன் பஞ்சாயத்து ஒன்றிய கவுன்சில் கூட்டத்தை கூட்டுவதற்கு அதிகாரம் பெற்றிருக்கிறார்.

பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலின் கடமைகளும், பொறுப்புக்களும்.

அ) பொதுச்சாலைகளை அமைத்தல், சரி செய்தல் மற்றும் பராமரித்தல்
ஆ) மருந்தகங்களை அமைத்தலும், பராமரித்தலும்
இ) ஆரம்பப்பள்ளிகளை அமைத்தலும், பராமரித்தலும்
ஈ) தொற்றுநோய் தடுப்பு நடவடிக்கைகள் மற்றும் நிவாரண நடவடிக்கைகள் மேற்கொள்ளுதல்
உ) விழாக்கள் மற்றும் கண்காட்சிகள் நடத்துதல்
ஊ) கால்நடை பராமரிப்பு
எ) பஞ்சாயத்து யூனியன் சந்தைகளை திறத்தலும், பராமரித்தலும்
ஏ) கிராம இடங்களை விஸ்தரித்லும், கட்டிடங்களை முறைப்படுத்தலும்
ஐ) பிறப்பு மற்றும் இறப்பு சம்மந்தப்பட்ட புள்ளி விவரங்களை பதிவு செய்தல்.
ஒ) வேளாண்மை மற்றும் வேளாண்மைப் பொருள்களை அபிவிருத்தி செய்தல்
ஓ) குடிசைத் தொழில்களை மேம்படுத்துதல் மற்றும் ஊக்கப்படுத்துதல்
ஔ) அரசால் அறிவிக்கை செய்யப்பட்டுள்ளதின் மூலம் கொடுக்கப்பட்டுள்ள மற்ற கடமைகளையும் பொறுப்புக்களையும் நிறைவேற்றுதல்.

கீழேகண்ட கூடுதல் செயல்பாடுகளையும், மாநில அரசு அறிவிக்கை மூலம் பஞ்சாயத்து யூனியன்களுக்கு வழங்கியுள்ளது.

1) பஞ்சாயத்து யூனியன் சாலைகள், பாசன குளங்கள் மற்றும் ஏரிகளை உருவாக்குதல் மற்றும் பராமரித்தல், குடும்ப நலத்திட்டங்களை உருவாக்குதல், மதிய உணவு திட்டம் மற்றும் ஆதிதிராவிடர்களுக்கான திட்டங்களை செயல்படுத்துதல்.
2) வேலைவாய்ப்பு உறுதியளிப்புத் திட்டத்தின் கீழ் நிறைவேற்றப்பட வேண்டிய திட்டங்களை அடையாளம் கண்டு அவைகளை நிறைவேற்றுதல்.
3) வறட்சி நிவாரண வேலைகளை அடையாளம் கண்டு நிறைவேற்றுதல்.

4) பராளுமன்ற உறுப்பினர் மற்றும் சட்டமன்ற உறுப்பினர் ஆகியோர்களின் தொகுதி மேம்பாட்டுத் திட்டத்தின் கீழான வேலைகளை நிறைவேற்றுதல்.

5) தனது கட்டிடங்களை பராமரித்தல்.

6) பொதுசுகாதார பணியாளர்கள், ஆரம்பக்கல்வி, குடிநீர் வழங்கல், சாலைகள், சிறுபாலங்கள், கதர் மற்றும் கிராமத் தொழில்கள், தொழில்நுட்ப பயிற்சி, கல்வி நூலகங்கள், கிராம மின் வசதி மற்றும் மரபு சாரா எரிசக்தி ஆகிய செயல்பாடுகளை மேற்பார்வையிடுதல்.

## III) மாவட்ட ஊராட்சி அமைப்பு

ஒவ்வொரு ஐம்பதாயிரம் மக்கள் தொகைக்கும் ஒரு உறுப்பினர் என்ற விகிதத்தில் நேரடியான தேர்தல் மூலம் மாவட்டம் ஊராட்சி உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். இவ்வாறாக ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒரு மாவட்ட பஞ்சாயத்து அமைக்கப்பட்டுள்ளது. இதன் தலைவர் மற்றும் துணைத்தலைவர் ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களுக்குள் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். அந்தந்த மாவட்ட பாராளுமன்ற உறுப்பினர்கள், மாநில சட்டமன்ற உறுப்பினர்கள் ஆகியோர் பதவியின் காரணமாக மாவட்ட பஞ்சயாத்தின் உறுப்பினர்களாக உள்ளனர். அந்த மாவட்டத்திலிருந்து பாராளுமன்ற மேல் சபைக்கு தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினரும் பதவியின் காரணமாக மாவட்ட பஞ்சாயத்தின் உறுப்பினராகி விடுகிறார்.

மாவட்ட ஊராட்சி கீழ்கண்ட பணிகளை ஆற்றுகிறது.

1) பஞ்சாயத்து ராஜ் சம்மந்தப்பட்ட அனைத்து விஷயங்களிலும் குறிப்பாக அபிவிருத்தி திட்டங்கள் மற்றும் பணிகுறித்த விசயங்களில் அரசிற்கு ஆலோசனை வழங்குகிறது.

2) மாவட்ட அளவில் உள்ள பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் மற்றும் கிராமப் பஞ்சாயத்து ஆகியவைகளில் நடைபெறும் வேலைகளின் முன்னேற்றத்தை கண்காணிக்கிறது.

3) அந்த மாவட்டத்தில் பஞ்சாயத்து ராஜ் திட்டத்தின் கீழான ஏரியாக்களில் அமையும் சந்தைக் கண்காட்சிகள் பொது சாலைகள் அகியவைகளை வகைப்படுத்துகிறது.

4) பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் மற்றும் கிராம பஞ்சாயத்து ஆகியவைகள் குறித்த தகவல்களை தொகுப்பது மற்றும் அது சம்மந்தப்பட்ட புள்ளி விபரங்களை வெளியிடுவது.

மாவட்ட பஞ்சாயத்துக்கள் செய்ய வேண்டியதாக குறிப்பிடப்பட்டுள்ள வேலைகளை செயல்படுத்துவதற்கு வசதியாக ஒவ்வொரு மாவட்டத்திலும்

கோட்ட வளர்ச்சி அலுவலகம் மறு அமைப்பு செய்யப்பட்டுள்ளது. பஞ்சாயத்து உதவி இயக்குநர் மாவட்ட பஞ்சாயத்தின் செயல்பாடுகளை மேற்பார்வையிடுகிறார். ஊரக தணிக்கையின் உதவி இயக்குநர் மற்றும் ஊரக வளர்ச்சியின் உதவி இயக்குநர் ஆகியோர் மாவட்ட பஞ்சாயத்து கணக்குகளின் தணிக்கை மற்றும் அதன் வளர்ச்சி ஆகிய செயல்பாடுகளுக்கு பொறுப்பானவர்கள் ஆவர்.

மேலும் இந்தியாவில் நகர்ப்புற உள்ளாட்சி அரசுகள் மாநகராட்சி, முனிசிபாலிட்டி போர்டு, கன்டோன்மெண்டு போர்டு, அறிவிப்புச் செய்ப்பட்ட பகுதி, நகரியம் என்று வகைபடுத்தப்பட்டுள்ளன.

## 6.2.3. நகர்புற உள்ளாட்சி அமைப்புகள்

பெரும்பாலான மக்கள் தொகை கொண்ட நகர் புறப்பகுதிகளி முதல் தர அல்லது இரண்டாம் தர நகரங்களில் மாநகராட்சி உருவாக்கப்பட்டுள்ளன. ஆரம்பத்தில் பிரிட்டிஷ் பாராளுமன்றத்தினால் இயற்றப்பட்ட சட்டத்தின் அடிப்படையில் உருவாக்கப்பட்டன. ஆனால் இப்பொழுது அவைகள் அனைத்தும் அந்தந்த மாநில் சட்ட மன்றங்களினால் இயற்றப்படுகிறது. இவை அரசியலமைப்பின் ஏழாவது அட்டவனையில் மாநில அதிகாரப்பட்டியலில் 2—வது பிரிவில் சேர்க்கப்பட்டுள்ளது. மாநில அரசாங்கம் எந்தவொரு பகுதியையும் நகராட்சியாக அறிவிக்கலாம். நகராட்சி சம்பந்தமாக மாநில சட்ட மன்றங்கள் சட்டம் இயற்றலாம். நகராட்சியைவிட மாநகராட்சிகள் உயர்வான அந்தஸ்துடையவைகள் ஏனென்றால் மாநகராட்சிகள் தங்களிடைமுள்ள உடமைகளின் பேரில் பொது மக்களிடமிருந்து நேரடியாகவே பணம் கடனாகப் பெறும் உரிமை பெற்றிருக்கிறது. உள்ளாட்சி அமைப்புக்களை பற்றி கீழே காணலாம்.

1) முனிசிபல் கார்ப்பரேசன் (மாநகராட்சி): 1687ஆம் ஆண்டு முதன்முதலாக சென்னையில் மாநகராட்சி உருவாக்கப்பட்டது. மாநகராட்சி அமைப்பு மத்திய அல்லது மாநில அரசுகள் இயற்றும் சட்டங்கள் மூலம் உருவாகின்றன. அவ்வாறான சட்டங்கள் மாநகராட்சியின் அதிகாரங்கள், செயல்பாடுகள், அமைப்பு மற்றும் இன்னபிற அம்சங்கள் குறித்து விளக்குகிறது. குடிமக்கள் சம்மந்தப்பட்ட பிரச்சனைகள் அதிக அளவில் உருவாவது குறித்து தீர்ப்பதற்காக மாநகராட்சிகள் அமைக்கப்பட்டுள்ளன. மாநகராட்சியில் ஒரு மேயரும், கவுன்சிலர்களும் மற்றும் ஆணையாளரும் உள்ளனர். இந்தியாவில் தற்போது 110 மாநகராட்சிகள் உள்ளன. மாநகரத்தின் முதல் குடிமகன் மேயர் ஆவார். அவர் மாநகர மக்களால் நேரடித் தேர்தல் மூலம் ஐந்தாண்டுகளுக்கு தேர்ந்தெடுக்கப்படுகிறார். தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள கவுன்சிலர்களுள் ஒருவர் துணை மேயராக

தேர்ந்தெடுக்கப்படுகிறார். அதேபோல் மாநகராட்சியின் கவுன்சிலர்களும் வாக்காளப் பெருமக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். மாநகர மக்களின் ஆசைகளை சட்டமாக்கி நிறைவேற்றும் பொறுப்பை சட்டமன்றத்தைப் போன்று, மாநகராட்சி கவுன்சிலும் செயல்படுத்துகிறது. மாநகரத்தின் பல்வேறு தேவைகளைக் கவனிப்பதற்கென்று பல்வேறு குழுக்கள் மாநகராட்சி கவுன்சிலர்களிடையே உருவாக்கப்படுகின்றன. மாநகராட்சி நிர்வாகத்தைப் பொறுத்தவரை ஆணையாளரே தலைமை நிர்வாக அதிகாரியாகச் செயல்படுகிறார். பொதுவாக ஐ.ஏ.எஸ். அதிகாரிகளே மாநகராட்சியின் ஆணையாளராக மாநில அரசால் நியமிக்கப்படுகின்றனர். ஆனால் அவர்கள், மாநகராட்சி நிதியில் இருந்து சம்பளம் பெறுகின்றனர்.

நகராட்சிகள் (முனிசிபாலிட்டி): சிறு அளவிலான நகரங்களில் நகராட்சிகள் அமைந்துள்ளன. ஒவ்வொரு மாவட்டத்திலும் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட நகராட்சிகள் உள்ளன. தமிழ்நாட்டில் ஒன்று, இரண்டு, மூன்று என்ற தரத்திலும் மேலும் சிறப்புநிலை மற்றும் தேர்வுநிலை முனிசிபாலிட்டிகள் என்ற தரத்திலும் முனிசிபாலிட்டிகள் அமைந்துள்ளன. தற்போது 100 முனிசிபாலிட்டிகள் உள்ளன. முனிசிபாலிட்டின் தலைவரும் கவுன்சிலர்களும் வாக்காளர்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். நிலைக்குழுக்கள் மற்றும் இதரக் குழுக்கள் அமைத்துச் செயல்படுவதற்கு முனிசிபாலிட்டி சட்டம் வகை செய்கிறது. இதன் தலைமை நிர்வாக அலுவலர் ஆணையாளர் ஆவார். ஆணையாளர் மாநில அரசால் நியமிக்கப்படுகிறார். இவர் முனிசிபாலிட்டியின் முறையான நிர்வாகத்திற்கு பொறுப்பானவர் ஆவார்.

நகரியம் அல்லது நகரப் பஞ்சாயத்து

ஊரகப் பகுதிக்கு அடுத்த நிலையில் நகர பகுதிகளுக்கும் இடைப்பட்ட பகுதியில் நகரியம் அல்லது நகரப் பஞ்சாயத்து உருவாக்கப்படுகிறது. இதன் தலைவரான கவுன்சிலர் மற்றும் வார்டு உறுப்பினர்கள் வாக்காளர்களால் ஐந்தாண்டுகளுக்கு நேரடியாக தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். நகரப் பஞ்சாயத்தின் தலைவர் நிதி மற்றும் நிர்வாகம் சம்மந்தப்பட்டவைகளில் கண்காணிப்பு செய்கிறார். நகரப் பஞ்சாயத்தின் குழு ஒரு மக்கள் சபையாகும்.

கண்டோன்மெண்டு போர்டு

கண்டோன்மெண்டு போர்டு என்பது ஆங்கிலேய அரசால் 1924ஆம் ஆண்டு இயற்றப்பட்ட கண்டோன்மெண்டு சட்டப்படி உருவாக்கப்பட்டுள்ள அமைப்பாகும். பாதுகாப்புப்படை பிரிவு உள்ள இடங்களில் காரியங்களை நிர்வகிப்பதற்காக கண்டோன்மெண்டு போர்டு உருவாக்கப்பட்டுள்ளது. டெல்லி மற்றும் திருச்சி கண்டோன்மெண்டு

போர்டு இதற்கு உதாரணமாக கொள்ளலாம். இந்த போர்டில் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களும், நியமனம் செய்யப்பட்ட உறுப்பினர்களும் உண்டு. அந்த பகுதியின் பாதுகாப்பு அதிகாரிதான் கண்டோன்மெண்டு போர்டின் தலைவர். மேலும் அரசாங்கம் ஒரு ஆணையாளரை நியமிக்கிறது. இது இந்திய அரசின் பாதுகாப்பு அமைச்சகத்தின் நேரடி நிர்வாக கட்டுப்பாட்டின் கீழ் இயங்கும் ஒரு மைய அரசின் நிர்வாக அமைப்பாகும். மற்ற உள்ளாட்சி நிறுவனங்களைப் போலவே இதற்கும் கட்டாயப்பணிகளும், விருப்பப்பணிகளும் உள்ளன.

### அறிவிக்கப்பட்ட பகுதி (Notified Area)

ஒரு சிறு நகரம் அல்லது தொழில் மையத்தில் அமைக்கப்பட்டுள்ள அமைப்பே அறிவிக்கப்பட்ட பகுதியாகும். பொதுவாக, இவ்வாறான பகுதி நகரப் பரப்பளவில் பாதி அளவாக அமையும் இவ்வாறு அறிவிக்கப்பட்ட பகுதிக்கு ஒரு தலைவர் மற்றும் செயலாளர் ஆகியோரைக் கொண்ட தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு குழு உண்டு. அரசால் அனுமதி வழங்கப்படட செயல்களை இக்குழு செயல்படுத்தும், பொதுசுகாதாரம் குறித்த பணிகளை செய்வதே இதன் முதன்மையான செயல்பாடாகும்.

## 6.3. தமிழகத்தில் நகர்புற உள்ளாட்சி அமைப்புகள்:

74—வது நகராண்மை அரசியலமைப்புச் சட்டத்தை மையமாக கொண்டு, 1994ல் தமிழ்நாடு நகராண்மைச்சட்டம் தமிழ்நாடு சட்ட மன்றத்தில் கொண்டுவரப்பட்டது. இச்சட்டத்தின் அடிப்படையில் மாநகராட்சிகள், நகராட்சிகள், மற்றும் உருவாக்கப்பட்டன. சமூக நீதியை நாட்ட பெண்களுக்கும் ஆதி திராவிடர்களுக்கும் இட ஒதுக்கீடு வழங்கப்பட்டது. உள்ளாட்சித் தேர்தல்களை நடத்த உள்ளாட்சி தேர்தல் ஆணையம் ஒன்று நிறுவப்பட்டது. நிதி ஆதாரங்களைப் பெருக்க மாநில நிதிஆணையம் ஒன்றம் நிறுவப்பட்டது. 74—வது நகராண்மை அரசியலமைப்புச் சட்டம் தமிழ்நாட்டில் 1996ம் ஆண்டு நடைமுறைப்படுத்தப்பட்டது. தற்பொழுது தமிழகத்தில் 10 மாநகராட்சிகள், 100 நகராட்சிகள், 50 மூன்றாம் நிலை நகராட்சிகள், 561 பேரூராட்சிகள் நடைமுறையில் உள்ளன. தமிழ்நாடு சட்ட மன்றம் இயற்றிய சட்டங்களின் அடிப்படையில் மாநகராட்சியின் பட்டியல் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

1. சென்னை மாநகராட்சி சட்டம் 1919
2. மதுரை மாநகராட்சி சட்டம் 1971
3. கோவை மாநகராட்சி சட்டம் 1981
4. திருச்சி மாநகராட்சி சட்டம் 1996
5. நெல்லை மாநகராட்சி சட்டம் 1994
6. சேலம் மாநகராட்சி சட்டம் 1994

7. ஈரோடு மாநகராட்சி சட்டம் 2007
8. திருப்பூர் மாநகராட்சி சட்டம் 2007
9. தூத்துக்குடி மாநகராட்சி சட்டம் 2008
10. வேலூர் மாநகராட்சி சட்டம் 2008

## மாநகராட்சி நகராண்மை உள்ளாட்சி

அமைப்பில் மிக உயர்ந்தது மாநகராட்சி இவற்றின் வரையறுக்கப்பட்ட எல்லைகள் அனைத்து பணிகளுக்கும் பொறுப்பாக, அதிகமான சுதந்திரத்துடனும், மாநில அரசின் குறைவான கட்டுப்பாட்டுடன் செயல்படக்கூடியது. இது நான்கு விதமான அமைப்பக்கள் உள்ளன. அவை 1. மாநகர் மன்றம், 2. மேயர், 3. ஆணையாளர், 4. நிலைக்குழுக்கள்

### 1. மாநகர் மன்றம்:

மாநகரின் மக்கள் தொகைக்கு ஏற்ப மாநகர் பல வார்டுகளாக பிரிக்கப்பட்டு ஒவ்வொரு வார்டுகளிலிருந்து 1 உறுப்பினர் மக்கள் 5 ஆண்டு காலத்திற்க தேர்ந்தெடுப்பார்கள். இவர் மாநகர மன்றத்தில் இடம் பெறுவார், மக்களின் முக்கிய பிரச்சனைகள், தேவைகள், அகியவை பற்றி விவாதித்து தீர்மானங்கள் நிறைவேற்றவார்.

### 2. மேயர்:

மாநகர் தந்தை என்ற அழைக்கப்படுகிறார். இவர் மக்களினால் நேரடியாக 5 ஆண்டுக்கு தேர்ந்தெடுக்கப்படுகிறார். இவர் மாநகர் மன்றக் கூட்டங்களுக்கு தலைமை தாங்குவதும் மாநகரின் முதல் குடிமகன் என்பதால் சில சிறப்பு உரிமைகள் வழங்கப்பட்டுள்ளன.

### 3. ஆணையாளர்:

மாநகர் மன்றம் நிறைவேற்றும் தீர்மானங்களை செயல்படுத்தும் ஆட்சித்துறை தலைவர். இவர் மாநில அரசின் மாற்றுப்பணி (Deputation) மூலமாக இவர் மூத்த இந்திய ஆட்சி பணி பணியாளர் ஆவார். மாநகராட்சிக்கும், அரசுக்கும் பாலமாக செயல்படுபவர் ஆவார்.

### 4. நிலைக்குழுக்கள்:

மாநகர் மன்றத்திற்கு உதவி செய்யும் வகையில் பிரச்சனையை தீர்ப்பதற்கு மாநகர் மன்ற வேலைப்பளுவை குறைப்பதற்கு நிலைக்குழுக்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவற்றின் உறுப்பினர்கள் மாமன்ற உறுப்பினர்கள்

தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். நிதி, ஒப்பந்தம், நியமனம், பொது விரிவாக்கம், சுகாதாரம், கல்வி போன்றவை சில பொதுவான குழுக்கள் ஆகும்.

### 6.3.1 மாநகராட்சியின் செயல்பாடுகள்

கட்டாயப்பணி, விருப்பப்பணி என்ற இருவகைப்பட்ட பணிகள் மாநகராட்சிக்கு உள்ளன. அவைகளில் முக்கியமான கட்டாயப்பணிகள் கீழ்வருமாறு

1. சாக்கடைகள், கழிவறைகள், முத்திரைப் பிறை மற்றும் அது சம்மந்தப்பட்ட பொது சௌகரியங்களை உருவாக்குதல், பராமரித்தல் மற்றும் சுத்தம் செய்தல்
2. பொது மக்களுக்கும், தனி நோக்கங்களுக்கும் வழங்குவதற்காக குடிநீர் திட்டங்களை உருவாக்கி பராமரிப்பு செய்தல்.
3. மக்கிய குப்பைகூளங்கள், கழிவுப்பொருட்கள் ஆகியவற்றை எடுத்து சென்று அழித்தல்.
4. மின்சார வசதி, குடிநீர் வசதி மற்றும் போக்குவரத்து வசதி ஆகியவைகள் சம்மந்தப்பட்ட திட்டங்களை உருவாக்கிப் பராமரித்தல் அல்லது அவைகளை கொள் முதல் செய்து மக்களுக்கு வழங்குதல்.
5. இடுகாடு மற்றும் சுடுகாடுகளை உருவாக்கி பராமரித்தல்
6. பிறப்பு மற்றும் இறப்பு புள்ளி விபரங்களை பதிவேடுகளில் பராமரித்தல்
7. தொற்று நோய்கள் பரவுவதை தடுத்தல்
8. மருத்துவமனைகள், மருந்தகங்கள் மற்றும் மகப்பேறு நிலையங்களை உருவாக்கி பராமரித்தல்
9. அங்காடிகள் மற்றும் வதை நிலையங்களை உருவாக்கி பராமரித்தல்.
10. தெருக்கள் மற்றும் கட்டிடங்களுக்கு பெயர் வைத்தல், எண்ணிடுதல்
11. ஆரம்பக்கல்வி (மற்றும்)
12. மாநகராட்சி அலுவலகத்தை பராமரித்தல்

விருப்பப் பணிகள்:

1. நூலகம், நினைவகம், கலையரங்கங்கள் அமைத்தல் மற்றும் தாவர மற்றும் விலங்கியல் பொருள்களை சேகரித்தல்.
2. பொதுப் பூங்காக்கள், தோட்டங்கள் மற்றும் பொழுது போக்கு நிலையங்கள்
3. நிலம் மற்றும் கட்டிடங்களை அளவீடு செய்தல்

4. திருமணங்களை பதிவு செய்தல்
5. தீயணைப்பு, ஓய்வு இல்லம், ஏழைகள் இல்லம், சிறுவர் இல்லம், கைவிடப்பட்டோர், மூளைத்திறன் குறைந்தோர், புகலிடம் தேடி வருவோருக்கான பாதுகாப்பு இல்லங்கள் அமைத்தல், மற்றும் பால் வழங்குதல்

**நகராட்சி**

சிறிய நகரத்தில் நகராட்சி உருவாக்கப்படுகிறது. ஒரு மாவட்டத்தில் ஒன்றும், ஒன்றுக்கும் மேற்பட்ட நகராட்சிகளும் இருக்கலாம். மாநில அரசு எந்தவொரு பகுதியையும் நகராட்சியாக அறிவித்து அதனுடைய எல்லையை வரையறுக்கின்றது. பொதுவாக நாட்டிலுள்ள நகராட்சிகள், அவற்றின் எல்கை, மக்கட்தொகை, வருமானம் ஆகியவற்றின் அடிப்படையில் வகைப்படுத்தப்படுகின்றன.

## தமிழக நகராட்சி நிர்வாகத்தின் தற்போதைய நிலை

தமிழகத்தில் 01.04.2008 நிலைமையின்படி 100 நகராட்சிகள் செயல்பட்டு வருகின்றன. அவை வருடாந்திர வருமானத்தை அடிப்படையாகக் கொண்டு ஐந்து நிலைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன அவை:

| எண். | தரம் | ஆண்டு வருமானத் தொகை | நகராட்சிகள் |
|---|---|---|---|
| 1. | மூன்றாம் நிலை | ரூ.10 இலட்சத்திற்கு மேல் | 15 |
| 2. | இரண்டாம் நிலை | ரூ.20 இலட்சத்திற்கு மேல் | 30 |
| 3. | முதல் நிலை | ரூ.40 இலட்சத்திற்கு மேல் | 30 |
| 4. | சிறப்பு நிலை | ரூ.200 இலட்சத்திற்கு மேல் | 10 |
| | | மொத்த நகராட்சிகள் | 100 |

70 சதவீத நகராட்சிகள் அன்றாடச் செலவினத்தைக் கூட சமாளிக்க முடியாத நிலைமையில் உள்ளன. 1994—95ம் ஆண்டு புள்ளி விபரப்படி அனைத்து நகராட்சிகளின் மொத்த ஆண்டு வருமானம் ரூ.254 கோடி ஆகும். இதில் சுமார் 42 விழுக்காடு பணியாளர்களின் சம்பளச் செலவினமாகும். மொத்தமுள்ள 100 நகராட்சிகளில் சுமார் 22 நகராட்சிகளிடம் மட்டுமே தற்போது ஓரளவுக்கு அன்றாடச் செலவினங்கள் போக வேறு ஆக்கப்பணிகளையும் செய்யப் போதுமான நிதி வசதி உள்ளது. இது போன்ற தன்னிறைவு பெற்றுள்ள நகராட்சிகளின் எண்ணிக்கை வருடா வருடம் குறைந்துகொண்டே வருகிறது.

## நகராட்சியின் நிதிப் பணிகள்

நகராட்சி சட்டத்தில், நகராட்சிகளுக்கான கட்டாய பணிகளும், விருப்பப்பணிகளும் கொடுக்கப்பட்டிருக்கினறது. ஒரு உள்ளாட்சி நிறுவனத்தில் கிடைக்கக் கூடிய வசதிகளின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் மக்களுக்கு வேண்டிய வசதிகள் செய்து தர வேண்டிய பொறுப்புடையவர்களாவர்.

பொதுவாக, கட்டாயப் பணிகளை பொதுச்சுகாதாரம், பொதுப்பணி, பொதுப்பாதுகாப்பு, பொது வசதிகள் மற்றும் கல்வி என்ற ஐம்பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

கீழே கொடுக்கப்பட்டுள்ள பணிகள் கட்டாயப் பணிகளாகும்.

1. பொதுகழிவு நீர் செல்வதற்குண்டான வசதிகள், பொதுக்கழிப்பறை போன்றவைகளைக் கட்டுதல்:
2. பொதுத் தெருக்கள், இடங்கள் ஆகியவற்றை சுத்தம் செய்தல்:
3. தெருக்களை ஒழுங்குபடுத்துதல், கட்டிடங்கள், தெருக்கள் ஆகியவற்றைக் கட்டுவதில் ஒழுங்குமுறை கட்டுப்பாடு செலுத்துதல்
4. பொதுத்தெருக்கள், இடங்களில் உள்ள ஆக்கிரமிப்புக்களை அப்புறப்படுத்துதல்;
5. பொதுச்சாலைகள், தெருக்கள், சந்துகள், பாலங்கள் சந்தைகள் போன்றவற்றைக் கட்டி அவற்றைப் பராமரித்தல்;
6. குடிநீர் விநியோகம், விளக்கு தீய்ணைப்பு மற்றும் வியாபாரங்களை ஒழுங்குபடுத்தல்;
7. மிருகங்கள் கொல்லுமிடத்தைப் பராமரித்தல்; மற்றும் அவற்றைக் கொல்வதில் ஒழுங்குமுறை கடைபிடித்தல்;
8. சந்தைகள், கடைகள் ஆகியவற்றிற்கு உரிமம் அனுமதி வழங்கல்;
9. சுகாதாரம் பேணுதல், மற்றும் நோய்களிலிருந்து காப்பாற்றுவதற்குரிய தடுப்பு நடவடிக்கைகள் எடுத்தல்;
10. காலரா, பிளேக், அம்மை போன்ற கொடிய நோய்கள் சம்பந்தப்பட்ட தகவல்களைச் சேகரித்து அவற்றிற்குண்டான தடுப்பு நடவடிக்கைகளை எடுத்தல்;
11. அம்மை குத்துதல்;
12. இறந்த பின் பிணத்தைப் புதைப்பதற்கும், எரிப்பதற்கும் உண்டான வசதிகளை ஏற்படுத்திக்கொடுத்தல்;
13. ஆரம்பக்கல்வி

14. தெருக்களுக்குப் பெயரிட்டு வீடுகளுக்கு எண் வழங்குதல்.

15. பிறப்பு மற்றும் இறப்பு ஆகியவற்றைப் பதிவு செய்தல் ஆகிய அனைத்தும் கட்டாயப்பணிகளாகும்;

கீழே கொடுக்கப்பட்டுள்ள பணிகள் விருப்பப் பணிகளாகும்.

1. புதிய தெருக்கள், பூங்காக்கள், தோட்டங்கள், ஓய்வு விடுதிகள், குளிக்குமிடங்கள், துணி துவைக்கும் இடங்கள், கிணறுகள் மற்றும் பெண்கள் மகப்பேறு விடுதிகள் போன்றவற்றைக் கட்டுதல்;
2. நூலகங்கள், அருங்காட்சியகங்கள் ஆகியவற்றை உருவாக்குதுல்;
3. ஆரம்பக்கல்விக்கு மேற்பட்ட கல்வி;
4. மக்கட்தொகை கணக்கெடுப்பு நடத்தல்;
5. பொருட்காட்சிகள்;
6. மின்சாரம், போக்குவரத்து ஆகியவற்றை நிர்வகித்தல்.

உள்ளாட்சி நிறுவங்களுக்கென தனியானதொரு வருவாய்ப்பட்டியல் அரசியல் அமைப்பில் இல்லை. மேலும், மாநில அரசாங்கம் தன்னுடைய வருவாயில் ஏதேனும் ஒரு பகுதியை நகராட்சி நிறுவனங்களுக்குக் கட்டாயம் கொடுக்கவேண்டும் என்றும் அரசியலமைப்பு கூறவில்லை. 191ஆம் ஆண்டைய இந்திய அரசுச் சட்டத்தில் அட்டவணைப்படுத்தப்பட்ட வரிகளுக்குரிய விதிகளில் ஒரு சில வரிகள் முழுமையாக உள்ளாட்சி நிறுவனங்களுக்கு மட்டும் உரியது என்று குறிப்பிட்டிருந்தது. இச்சட்டத்தினால் கீழ்க்கண்ட வரிகள் நகராட்சி நிறுவனங்களுக்கென ஒதுக்கப்பட்டிருந்தது.

1. பாதை வரி
2. நிலம் அல்லது நிலமதிப்பின் மேல்வரி
3. கட்டிட வரி
4. வண்டி வாகன வரி
5. மிருகங்கள் மீதான வரி
6. பொருட்கள், வேலையாட்கள் மீதான வரி
7. வியாபாரம், தொழில் வரி
8. தனியார் சந்தைகள் மீதான வரி
9. குடிநீர், விளக்கு, சுகாதாரப் பணிகளுக்குரிய வரி மற்றும் சந்தைகள், பொது வசதிகளுக்குரிய கட்டணங்கள்

நகராட்சி நிறுவனங்களின் வருவாய் இரண்டு வகைப்படும்

1. வரிகளிலிருந்து கிடைக்கும் வருவாய்
2. வரிகள் இல்லாமல் கிடைக்கின்ற வருவாய்

வரிகள் மூலம் கிடைக்கும் வருவாய் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

1. சொத்துக்கள் மீதான வரி
2. வியாபாரம் தொழில் வரி
3. பொருட்கள் மற்றும் நுகர்வு ஆகியவற்றின் மீதான வரி
4. மிருகங்கள் மற்றும் மோட்டார் வாகனங்களைத் தவிர, பிற வண்டி வாகனங்கள் மீது விதிக்கும் வரி
5. பிற வகையான வரிகள்.

1951ஆம் ஆண்டைய உள்ளாட்சி நிதி விசாரணைக் குழுவும், 1954—ஆம் ஆண்டைய வரி விதிப்பு விசாரணைக்குழுவும், உள்ளாட்சி நிறுவனங்களின் நிதிநிலையை சட்ட ரீதியாக அதிகரிப்பதற்கான வழிகளை ஆராய்ந்தன. வரிவிதிப்பு விசாரணக்குழு கீழே கொடுக்கப்பட்டுள்ள வரிகள், கட்டணங்கள் ஆகியவை முழுமையாக உள்ளாட்சி நிறுவனங்களிடமே ஒப்படைக்கப்பட வேண்டும். இதனை மாநில அரசுகளும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று தன்னுடைய அறிக்கையில் பரிந்துரை செய்துள்ளது.

1. நிலங்கள் மற்றும் கட்டிடங்கள் மீதான வரி
2. பொருள் மீதான நகர் சுங்கவரி
3. மோட்டார் வாகனங்கள் தவிர, மற்ற வண்டி வாகனங்கள் மீதான வரி
4. மிருகங்கள் மீதான வரி
5. உத்தியோகம், வேலை, தொழில் ஆகிவற்றின் மீதான வரிகள்
6. பத்திரிக்கைகளில் வந்துள்ளவை நீங்கலாக உள்ள பிற விளம்பரங்கள் மீதான வரி.

பொழுது போக்கு மீது வரி விதிக்க நகராட்சிகளுக்கு உரிமை வழங்கப்படவேண்டுமென்றும், சொத்துக்களை மாற்றுவதற்குரிய கட்டணத்தை மாநில அரசாங்கமும், பத்திரங்களுக்குரிய கட்டணத்தை நகராட்சிகளும் எடுத்துக்கொள்ள வேண்டும் என்றும் வரிவிதிப்பு விசாரணைக்குழு பரிந்துரை செய்திருந்தது. வரிகளின் மூலம் வருகின்ற மொத்த வருவாயை மத்திய, மாநில அரசாங்கங்களுக்கிடையே பகிர்ந்து கொடுக்க வேண்டிய நகராட்சி நிதிக்குழு ஒன்றை நியமனம் செய்வது சம்பந்தமாக அரசியல் அமைப்பின் 280வது விதி குறிப்பிடுகிறது. மேலும் இவ்விதியில் இந்த தொகுதியினின்று, மாநிலங்களுக்கு மானியம் வழங்கக் கூடிய கோட்பாடுகளும் குறிப்பிட்டுள்ளன.

நகராட்சி அரசாங்க நிர்வாகத்தைப் பற்றி ஆய்வு நடத்திய ஒவ்வொரு குழுவும், நகராட்சிகளுடைய நிதி நிலைமை பற்றாக்குறையாகத் தான் இருக்கிறது என்று குறிப்பிட்டுள்ளன. நிதி சம்பந்தப்பட்ட வரையில், உள்ளாட்சி அரசாங்கங்கள் தாமாகவே

இயங்கக்கூடிய வழியில் அவைகளுக்கு உரிமை வழங்கப்படவேண்டும் என்று பரிந்துரை செய்யப்பட்டிருக்கிறது. அவைகள் தாமாகவே இயங்கக் கூடிய நிலையில் இருந்தால் தான், தங்களுக்கென உள்ள வருவாய்களை வசூல் செய்து பணியை நிறைவேற்றுவதற்கு மாநில அரசை எதிர்பார்த்திருக்க வேண்டியதில்லை. மேலும் நகராட்சி அரசாங்கத்திற்கும் நன்மை பயக்கும்.

### 6.3.2. தமிழக பேரூராட்சிகள் நிர்வாகம்:

தமிழ்நாட்டில் உள்ள 561 பேரூராட்சிகளில் 2001—ம் ஆண்டின் மக்கள் தொகை கணக்கெடுப்பின்படி சுமார் ஒரு கோடி 47 இலட்சம் மக்கள் உள்ளனர். ஆண்டு வருமானத்திலன் அடிப்படையில் பேரூராட்சிகள் கீழ்கண்டவாறு நான்கு நிலைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவையாவை.

| எண். | நிலை | ஆண்டு வருமானம் | பேரூராட்சிகள் |
|---|---|---|---|
| 1. | சிறப்புநிலை | ரூ.25 லட்சத்திற்கு மேல் | 24 |
| 2. | தேர்வுநிலை | ரூ.20 லட்சத்திற்கு மேல் | 249 |
| 3. | முதல் நிலை | ரூ.10 லட்சத்திற்கு மேல் | 218 |
| 4. | இரண்டாம் நிலை | ரூ.7 லட்சத்திற்கு மேல் | 70 |
| | | | 561 |

பேரூராட்சிகளின் பிரதான நிதி ஆதாரங்கள் வீட்டு வரியும், தொழில் வரியும். இது தவிர, முத்திரை வரி மீதான கூடுதல் வரி, கோரிக்கை வரி பிரதிபலன் தரத்தக்க முயற்சிகள், உரிமக்கட்டணம், குடிநீர் குழாய் கட்டணம் மற்றும் கட்டிட உரிமக் கட்டணம் ஆகியவற்றின் மூலம் வருவாய் ஈட்டப்படுகிறது. நிதிபற்றாக்குறையால் பெரும்பான்மையான பேரூராட்சிகளில் கட்டாயக் கடமைகளை குறைந்தபட்ச அளவில் கூட நிறைவேற்றுவதே கடினமாக உள்ளது. பேரூராட்சிகளின் மொத்த வருமானம் 2000/2001ம் ஆண்டில் ரூ.130.20 கோடியாகும். மாநிலத்தில் உள்ள பேரூராட்சிகள் அனைத்திலும் மொத்தச் செலவு 2000—2001 ம் ஆண்டில் ரூ 102.85 கோடியாகும். பேரூராட்சிகள் தமது சொந்த வருமானம் நீங்கலாக, மாநில அரசிடமிருந்து மானியமாகவும், கடனாகவும் கீழ்கண்ட திட்டங்களுக்கு நிதி பெறுகின்றன.

முன்னேற்றத்தை அறிவதற்குண்டான தன்னறிவுச் சோதனை கேள்விகள்

4. ஜில்லா பரிஷத் பற்றி சிறு குறிப்பு வரைக.

5. கிராம சபை பற்றி விளக்குக.

6. 73 வது அரசியலமைப்பு திருத்தத்தின் சிறப்பக்கூறுகளை ஆய்க.

1. சாலைகள் அமைத்தல்
2. குடிநீர் வசதி, தெருவிளக்குள், கட்டணக்கழிப்பிடங்கள் அமைப்பதற்கான உதவி
3. ஜவகர் வேலை வாய்ப்புத்திட்டம்
4. ஒருங்கினைந்த நகர்புற அபிவிருத்தித்திட்டம்
5. பேரூராட்சிகளில் அடிப்படை வசிதிகள் அபிவிருதத்திற்கான தன்னறிவுத்திட்டம்

6. ஒருங்கிணைந்த சிறிய மற்றும் நகர்ப்புற வளர்ச்சித் திட்டம்
7. ஒருங்கிணைந்த கோவில் நகர் வளர்ச்சித் திட்டம்.

## 6.4. தொகுப்புரை:

குடிமைப்பணி பற்றிய தகவல்களை இந்த அலகு நமக்கு விளக்குகிறது. மேலும், மத்தியப் பணியாளர் தேர்வாணையம் மாநிலப்பணியாளர் தேர்வாணையம் ஆகியவைகளின் அதிகாரங்கள் மற்றும் பணிகள் மற்றும் பணியாளர்களைத் தேர்வு செய்யும் முறை ஆகியவைகள் குறித்தும் இந்த அலகில் பகுப்பாய்வு செய்யப்பட்டுள்ளன. மேலும், இவ்வலகில் உள்ளாட்சி அமைப்புக்களின் சிறப்புத் தன்மைகள், உள்ளாட்சி தலைவர்களை தேர்ந்தெடுக்கும் முறை மற்றும் அவரிகளின் பணிகள் தெளிவு செய்யப்பட்டிருக்கிறது. 73 மற்றும் 74வது அரசியலமைப்பு திருத்தச் சட்டம் சமூக நல்லிணக்கத்தை ஏற்படுத்துகிறது என்பதை இவ்வுலகு நன்கு தெளிவுபடுத்தியது. 73வது அரசியல் அமைப்பு திருத்தத்தில் முக்கியப் பகுதியான கிராம சபை, மக்களின் அடித்தள ஜனநாயகத்தை பிரதிபலிப்பதை இவ்வலகு சிறப்பாக எடுத்துரைத்திருக்கிறது.

## 6.5. முக்கிய வார்த்தைகள்:

1. அதிகார வர்க்கம் : அதிகாரவர்க்கம் என்பது நிபுணத்துவம் வாய்ந்த தொழில் புரியும் வர்க்கத்தை குறிக்கிறது. அதிகாரவர்க்கத்தினர் திறமையின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்

2. குடிமைப்பணி : அரசின் நோக்கங்களை நிறைவேற்றும் பணியாளர்களை கொண்ட பணி

3. பொதுப்பணி ஆணையம்: போட்டித் தேர்வின் மூலம் திறமையானவர்களை பொதுப்பணிக்கு தேர்வு செய்யும் சுதந்திரமான அமைப்பு

4. உள்ளாட்சி அரசாங்கம் : குறிப்பிட்ட நிலவரை எல்லைக்குள் வாழும் மக்கள் தங்களை சுயமாக ஆள்வதற்கு சட்டபூர்வமாக ஏற்படுத்தப்பட்ட அமைப்பு ஆகும்.

5. ரிப்பன் பிரபு : உள்ளாட்சி அரசாங்கத்தின் தந்தை என புகழாரம் சூட்டப்பட்டவர். இந்தியாவில் உள்ளாட்சி அமைப்ப இவர்காலத்தில் சிறப்பு பெற்று இருந்தது. சென்னை மாநகராட்சி கட்டிடம் இவர் கட்டியது. இது ரிப்பன் மாளிகை என்ற பெயர் கொண்டுள்ளது.

6. கிராம ராஜ்ஜியம் : பொருளாதார தன்னறிவுப் பெற்ற கிராம அரசாங்கம்

7. ஜனநாயகப் பரவலாக்கம் : அரசாங்கத்திற்குள்ள பணிகள், கடமைகள் மற்றும் பொறுப்புக்களையும் அதிகாரங்களையும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பல்வேறு – அரசுகளுடன் பகிர்ந்து கொண்டு அதிகாரத்தை மக்களிடம் ஒப்படைத்தல்

## 6.6. முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக் கேள்விக்கான பதில்கள்:

கேள்வி எண்.1 — இந்த கேள்விக்கான விடையை பகுதி எண்.6.1. ல் அறிக.

கேள்வி எண்.2 — இந்த கேள்விக்கான விடையை பகுதி எண்.6.1.1.ல் அறிக.

கேள்வி எண்.3 — இந்த கேள்விக்கான விடையை பகுதி எண்.6.1.2. ல் அறிக.

கேள்வி எண்.4 — இந்த கேள்விக்கான விடையை பகுதி எண்.6.2. ல் அறிக.

கேள்வி எண்.5 — இந்த கேள்விக்கான விடையை பகுதி எண்.6.2.2. ல் அறிக.

கேள்வி எண்.6 — இந்த கேள்விக்கான விடையை பகுதி எண்.6.2.1. ல் அறிக.

## 6.7. இந்த அலகு தொடர்பாக மேலும் படிக்க வேண்டிய நூல்கள்

1. Mahewari, S.R. Local Government in India, Laxmi Narain Agarwal, Agra.1984.

2. Bhardwar; Municipal Government in India; Select Readings, Sterling Publishers; Madras
3. Saraswathi; The Madras Panchayat System; Vol 11. Inpex India: New Delhi
4. Palanithurai.G; Rejuvenating Republic through local Government; Grass root ejoverance; Vol-2, No.11, June -2004.
5. Maheswari.S.R; Public Administration in India; Government of India publication; 1953.
6. Ram Reddy; (edited), Patterns of Panchayat Raj in India, Macmillan Company of India limited; 1977.

## 6.7. வினாக்கள்/செயல்முறைப்பயிற்சிகள்:

1. ஆங்கிலேயர் ஆட்சி காலத்தில் இந்தியாவில் நிலவிய பொதுப்பணியின் நிலையை எடுத்துரைக்கவும்
2. மத்திய, மாநில பொதுப்பணிகளுக்கு பணியாளர்களை தேர்ந்தெடுக்கும் அதிகாரம் பெற்ற ஆணையங்களின் அமைப்பினையும், பணிகளையும், தேர்வுமுறைகளையும் விளக்குக.
3. குடிமைப்பணி என்பது தற்கால அரசாங்கத்தின் முதுகெழும்பாக எவ்வாறு செயல்படுகிறது என்பதினை பகுப்பாய்க.
4. பல்வந்த்ராய் மேத்தா அவர்களின் அறிக்கையானது உள்ளாட்சி அமைப்புக்கு எந்த அளவுக்க பயனுள்ளதாக இருந்தது என்பதினை விளக்குக.
5. 73வது மற்றும் 74வது அரசியலமைப்பு திருத்தச் சட்டத்தின் முக்கிய கூறுகளை ஆய்க.
6. மாநகராட்சியின் அமைப்பு மற்றும் அதன் பணிகளை விளக்குக
7. நகராட்சியின் அமைப்பு மற்றும் அதன் அதிகாரங்களை வகைப்படுத்துக.

# அலகு—7

## பிராந்திய மனப்பான்மை – மதவாதம் — பயங்கரவாதம் மொழிவாரி மாநிலங்களின் சீரமைப்பு – ஆட்சி மொழிப்பிரச்சனை

**முன்னுரை:**

1947 ஆகஸ்ட் 15ல் இந்திய சுதந்திரம் பெற்றது. சுதேச சமஸ்தானங்களின் எண்ணிக்கை மொத்தம் 554 ஆக இருந்தன. எனவே இந்திய சுதந்திரம் அடைந்த உடனே முதலாவது தீர்வு காணப்படவேண்டிய பிரச்சனையாக இந்திய சமஸ்தானங்களை இந்தியாவுடன் ஒன்றினைப்பதாகும். இந்த சமஸ்தானங்களின் மொத்த பரப்பளவு 5 லட்சம் சதுர மைல்கள். இதில் 8 கோடியே 65 லட்சம் மக்கள் வாழ்ந்து வந்தனர். இவ்வாறான சமஸ்தாங்கள் சிறியதும், பெரியதுமாக இந்திய முழுவதும் பரவிக்கிடந்தன. சர்தார் வல்லபாய் பட்டேலின் தலைமையில் “மாநிலங்களுக்கான அமைச்சகம்” ஒன்று அமைக்கப்பட்டது. இந்த அமைச்சகத்தின் செயலராக V.P. மேனன் என்ற அனுபவமும், திறமையும் கொண்ட அதிகாரி நியமிக்கப்பட்டார். சுதேச மன்னர்கள் இந்தியாவுடன் சேரும் வகையில் “இணைவுப் பத்திரம்” (Instrument of Accession) ஒன்று உருவாக்கப்பட்டது. ஆனால் இந்தியாவுடன் இணைய மறுத்த பல சமஸ்தானங்களை சர்தார் வல்லபாய்படேல் தனது தெளிவானதும், உறுதியானதுமான முடிவில் இவ்வாறான சமஸ்தான மன்னர்களை அடிபணிய வைத்து இந்தியாவுடன் இணைய வைத்தார் எனவே சர்தார் வல்லபாய் பட்டேல் இந்தியாவின் பிஸ்மார்க் என்று அழைக்கப்பட்டார்.

சர்தார் வல்லபாய் பட்டேல் முயற்சியால் பல சுதேச அரசுகள் இந்தியாவுடன் இணைந்தன. இணைய மறுத்த மன்னர்கள் படேலின் எச்சரிக்கையால் இந்திய அரசுடன் இணைவதற்கு சம்மதித்தனர். ஆனால் ஹைதராபாத், ஜனகாத், ஜம்மு & காஷ்மீர் 1947 நவம்பரில் இணைந்தன. இவ்வாறு ஒருக்கிணைக்கப்பட்ட சமஸ்தானங்கள் இந்திய அரசியலமைப்பை ஏற்றுக்கொண்டன. இறுதியாக இந்தியாவில் கீழ்க்கண்ட நான்கு வகையான மாகாணங்கள் அமைக்கப்பட்டன. அவையானவை:—

பிரிவு A : அஸ்ஸாம், பீகார், பம்பாய், மத்திய பிரதேசம், சென்னை, ஒரிஸா, உத்திரபிரதேசம், பஞ்சாப், மேற்குவங்காளம்

பிரிவு B : ஹைதரபாத், ஜம்மு & காஷ்மீர், மத்திய பாரத், மைசூர், பாடியாலா, ராஜஸ்தான், திருவாங்கூர், கொச்சின்

பிரிவு C : ஆஸ்மீர், போபால், கூரிக், டில்லி, கட்ச், ஹிமாச்சலபிரதேசம், விந்தியப் பிரதேசம், மணிப்பூர், திரிபூரா.

பிரிவு D : அந்தமான் நிக்கோபார் தீவுகள்.

இவ்வாறு ஒருங்கிணைப்பின்படி புதிதாக உருவான மாகாணங்கள் பரப்பிலும் மக்கள் தொகையிலும், பொருளாதார முறையிலும் முக்கியமாக மொழி வகையிலும் முரண்பட்டுக் கிடந்தன. மொழி அடிப்படையில் மாகாணம் பிரிக்கப்பட ஆந்திர மாநிலப்பிரிவினை கோரி 57 நாட்கள் பொட்டி ஸ்ரீராமலு உண்ணாவிரதம் இருந்து 1952 டிசம்பர் 15—ம் தேதி உயிர் நீத்தார். முதன் முதலாக 1953 ஆம் ஆண்டு ஆந்திர மாநிலம் மொழிவாரியாக பிரிக்கப்பட்டது. 1956 ஆம் ஆண்டு மாநில மறுசீரமைப்புச்சட்டத்தின்படி "மண்டலக்குழு அமைக்கப்பட்டு" இவை ஐந்து மண்டலமாக பிரிக்கப்பட்டது. 1956ம் ஆண்டு மாநில மறு சீரமைப்பச்சட்டத்தின் படி சென்னை மாகாணம் ஆந்திர, கர்நாடகம், மலையாளம், சென்னை என்று தனித்தனியாகப் பிரிந்தது. தற்பொழுது இந்திய 28 மாநிலங்களையும் 7 யூனியன் பிதேசங்களையும் கொண்டுள்ளன.

## நோக்கங்கள் (Objectives)

இந்திய அரசியல் முறையில் பிராந்தியத்தின் கோரிக்கைகளை புரிந்து கொள்ளுதல்
மொழிவாரி மாநிலங்களின் சீரமைப்பினை பற்றி உணர்தல்.
மாநில சீரமைப்ப ஆணையத்தின் பரிந்துரைகள் கற்றறிதல்
இந்தியாவல் பயங்கரவாதம் மற்றும் மதவாதம் ஆகியவற்றின் தீங்கினை அறிந்து கொள்ளுதல்.

## அலகின் வடிவமைப்பு (Unit Structure)

பிராந்தியம்
திராவிட நாடு கோரிக்கை
தனிமாநில கோரிக்கை
முழுமாநில கோரிக்கை
மாநிலங்களுக்கு இடையே சச்சரவுகள்
மொழிவாரி மாநிலங்களின் சீரமைப்பு

மொழிவாரி மாநிலங்களின் சீரமைப்புக்கு எதிராக உணர்தல்
ஆந்திரா உருவாகுதல்
மாநில சீரமைப்பு ஆணையத்தை நியமித்தல்
மாநில சீரமைப்பு ஆணையத்தின் பரிந்துரைகள்
மராட்டிய மற்றும் குஜராத் மாநிலங்கய் உருவாகுதல்
நாகலாந்து, பஞ்சாபி சுபா உருவாகுதல்
மொழிவாரி சீரமைப்பு ஒற்றுமையை ஏற்படுத்துகிறது
ஆட்சி மொழிப்பிரச்சனை
இந்தியாவில் பயங்கரவாதம்
தொகுப்புரை
முக்கியவார்த்தைகள்
முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனை
கேள்விகளுக்கான பதில்கள்
இந்த அலகு சம்பந்தப்பட்ட மேலும் படிக்க வேண்டிய நூல்கள்
வினாக்கள் / செயல்முறைப் பயிற்சிகள்

## 7.1. பிராந்தியத்துவம் (Regionalism)

பிராந்தியத்துவம் என்பது தன் நாட்டை நேசிப்பதற்குப் பதிலாகக் குறிப்பிட்ட பிராயந்தியத்தை நேசிப்பதாகும். பிராந்தியத்துவம், இந்தியா முழுவதிலும் உள்ள ஒரு பிரச்சனையாகும். பிராந்தியத்துவத்தின் வளர்ச்சி, முக்கியமாக கீழே கண்ட மூன்று காரணங்களால் ஏற்பட்டதாகும்.

1. முதலாவதாக பொருளாதாரம் மற்றும் தொழில் வளர்ச்சி பொது மக்களுக்கு சிறிதளவு இலாபத்தையே கொடுத்து இருக்கிறது. தேசிய இயக்கத்தின் போது மக்களிடையே கஷ்டங்களுக்குக் காரணம் பிரிட்டிஷ் ஆட்சியாகும் என்றும் பிரிட்டிஷ் ஆட்சி முடிந்தவுடன் மக்களுக்கு எல்லா நலன்களும் கிடைக்குமென்று கூறப்பட்டது. ஆனால் அனைத்து வாக்குறுதிகளும் நிறைவேற்றப்படவில்லை. அவர்களுக்குக் கிடைத்தது கஷ்டங்களும் ஏமாற்றங்களும் சுரண்டல்களுமே.

2. இரண்டாவதாக, பிற்பட்ட பகுதிகளில் வசிக்கும் மக்களுக்கு தொழிற்சாலைகளையும் பாலங்களையும் அணைக்கட்டுகளையும் ஏற்படுத்தி வேலை வாய்ப்புகளை ஏற்படுத்த மத்திய அரசாங்கம் அதிக நிதி ஒதுக்கவில்லை என்ற எண்ணங்கள் வளர்ந்து வருவதுமாகும்.

3. மூன்றாவதாக காங்கிரஸ் கட்சியில் உள்ள தேசியத்தலைவர்கள் தேசிய எழுச்சியின் போது தேசிய நிலத்தை பிராந்திய அடிப்படையில் பிரச்சாரம் செய்தார்கள்.

தொற்று வியாதியைப் போல இந்த நோக்கு மறற அரசியல் கட்சிகளிலும் பரவியது. பிராந்தியத்துவம் பிரிந்து வாழ வேண்டும் என்ற எண்ணத்தை இந்திய மக்களின் ஒரு பகுதியினரிடம் வளர்த்தது.

இந்திய அரசியல் முறையில் பிராந்தியத்துவம் கீழ்க்கண்ட கோரிக்கைகளை கொண்டு ஏற்பட்டதாகும்.

1. இந்திய ஒன்றியத்திலிருந்து பிரிய வேண்டும் என்ற கோரிக்கை (Demand for Section from the India Union)
2. தனிமாநில கோரிக்கை (Demand for Separate Statehood)
3. முழுமாநில கோரிக்கை (Demand For Statehood)
4. மாநிலங்களுக்கு இடையே சச்சரவுகளை தீர்க்கும் கோரிக்கை (Demand for Solving the Inter –State disputes)

## இந்திய ஒன்றியத்திலிருந்து பிரிதல்

(Secession from the Indian Union)

### 7.1.1.தனித் திராவிட நாடு கோரிக்கை (Demand for Separate Dravida Nadu)

திராவிடக்கழகம் ஒரு தனி திராவிடஸ்தான் என்ற தென்னிந்திய அரசை நிறுவக்கோரியது. இது தமிழக அரசியல் கட்சியான திராவிட முன்னேற்றக் கழகம் எழுப்பிய முக்கிய அபாயகரமான கோரிக்கையாகும். திராவிட முன்னேற்றக்கழகம் ஆரம்ப காலத்திலிருந்தே திராவிடர்கள் வடக்கிந்தியர்களை விட மாறுபட்டவர்கள் என்றும், திராவிடர்கள் இந்திய ஒன்றியத்திலிருந்து பிரியவேண்டும் என்றும், கூறிக்கொண்டிருந்தது. திராவிட முன்னேற்றக்கழகக் கட்சி திராவிட கழகத்திலிருந்து பிரிந்து ஏற்பட்டதாகும். ஈ.வெ.ராமசாமி என்பவர் இந்த எழுச்சிக்கு வித்திட்டார். அவர் இந்து வேத புத்தகங்கள் திராவிடர்கள் அல்லாதவர்களுக்காக பிராமணர்களால் எழுதப்பட்டதாகும் என்று கூறினார். அவருடைய தலைமையின் கீழ் தென்னிந்தியர்கள் இராமாயணத்தின் நகல்களை எரித்தார்கள். ஏனென்றால் இராமாயணம் வட இந்திய ஆரியர்களுக்கும் தென்னிந்திய திராவிடர்களுக்கும் எழுந்த போராட்டத்தைப் பற்றியது என்பதாலே மேலும் அடிப்படையில் தென்னிந்தியாவும், வடஇந்தியாவும் மாறுபட்ட கலாச்சாரங்கள் கொண்டிருக்கிறது என்பதாலுமாகும்.

ஈ.வெ.ரா., பெரியாரிடம் ஏற்பட்ட கருத்து வேறுபாட்டினாலும் திராவிடநாடை அடைந்தே தீருவோம் என்ற கொள்கையுடனும் திராவிட முன்னேற்ற கழகம் 1949 ஆம் ஆண்டு தோன்றியது திராவிட முன்னேற்றக்கழகம் இந்தியாவிலிருந்து தமிழ்நாடு தனியாகப் பிரிந்து ஒரு சுதந்திரத் தமிழ்நாடு அரசு என்று தோன்ற வேண்டுமென்று சேர்ந்து

பிரச்சாரம் செய்தனர். அவர்கள் இந்திய வரைபடத்தைக் கொளுத்தினார்கள். பிறகு அவர்கள் சென்னை, ஆந்திரா, கேரளா, கர்நாடகா, மைசூர், ஆகிய மாநிலங்கள் இந்திய ஒன்றியத்திலிருந்து தனித் திராவிட அரசு தோன்ற வேண்டுமென்று திட்டமிட்டார்கள். ஆனால் இந்த பிரச்சாரத்திற்கு சென்னையைத் தவிர மற்ற மாநிலங்களில் ஆதரவு இல்லை. 1961ம் ஆண்டு ஏப்ரல் மாதம் திராவிட முன்னேற்ற கழகத்திலிருந்து சில முக்கிய உறுப்பினர்கள் அக்கட்சியிலிருந்து விலகி தமிழ் தேசியக் கட்சி என்ற ஒரு புதிய கட்சியை பாராளுமன்ற உறுப்பினரான ஈ.வி.கே. சம்பத் தலைமையின் கீழ் ஏற்படுத்தினார்கள். அந்தக்கட்சி திராவிட முன்னேற்றக் கழகத்தின் பிரிவினைக் கொள்கையை ஆதரிக்கவில்லை.

திராவிட முன்னேற்றக்கழகம் சி.என்.அண்ணாத்துரை அவர்களின் தலைமையின் கீழ் 1962ம் ஆண்டு நடந்த ஆறாவது பொதுத் தேர்தலில் பெரும் வெற்றியைப் பெற்றது. சுதந்திர திராவிட நாட்டை அடைந்தே தீருவோம் என்ற போராட்டத்தைத் தீவிரப்படுத்தியது. மாநிலங்களவையில்1962ம் ஆண்டு மே மாதம் 1ம் தேதி நடந்த விவாதத்தில் திராவிட முன்னேற்றக்கழகத்தின் தலைவர் சி.என்.அண்ணாதுரை இந்திய அரசானது தென்னிந்தியாவை பொருட்படுத்தவில்லை என்றும் அலட்சியம் செய்கிறது என்றும் குற்றம் சாட்டினார்.

நாட்டில் பிரிந்து செல்லவேண்டும் என்ற கொள்கைகளை உடைய சக்திகள் வலுப்பட்டதால் பாராளுமன்றம் 1963ம் ஆண்டு அக்டோபர் மாதம் அரசியல் அமைப்புச் சட்டத்தில் 16வது திருத்தத்தைத் கொண்டு வரப்பட்டது. அந்த திருத்தம் எந்த ஒரு நபரும், இந்திய ஒன்றியத்தின் இறைமையிலோ, ஒற்றுமையிலோ ஐயப்பாடு கொண்டால் அவர்களைக் தண்டிப்பதற்கும், அவர்களுடைய அரசியல் உரிமைகளை ஒடுக்குவதற்கும், பாராளுமன்றம் சட்டம் இயற்ற அனுமதித்தது. இதன் விளைவாக 1963ம் ஆண்டு நவம்பர் மாதம் திராவிட முன்னேற்றக் கழகம் திராவிட நாட்டுக்கொள்கையையும், இந்திய ஒன்றியத்திலிருந்து பிரிந்து போகும் கொள்கையையுமே விட்டுவிட்டது. அதற்கு பதிலாக மேலே கூறிய நான்கு மாநிலங்களும் திராவிட ஒன்றியம் என்ற அமைப்பில் அதிகமான அதிகாரங்களைக் கொண்டு இந்திய ஒற்றுமையிலும் இறைமையிலும் நம்பிக்கை கொண்டு இந்திய அரசாங்கத்தின் கீழ் இயங்கும் என்று கூறியது.

இந்தி மொழியை ஆட்சிமொழியாகக் கொண்டு வரக்கூடாது என்ற அதன் கொள்கை தொடர்ந்தது. திராவிட முன்னேற்றக் கழகத்தினால் ஏற்படுத்தப்பட்ட இந்தி எதிர்ப்புக்கொள்கை தமிழ்நாட்டில் வலிமை பெற்றது.

இருக்கிறது. இந்தியைப் புகுத்துவதை எதிர்த்து, 1965 ஆம் ஆண்டு சென்னை மாநிலத்தில் தீவிரமான ஒரு எழுச்சி ஏற்பட்டது.

### ஆ. காலிஸ்தான் அல்லது சிக்கியர் அரசு ஏற்படுத்த கோரிக்கை (Demand for Sikh State)

ஆகோலிதல் தலைவரான மாஸ்டர் தாராசிங் என்பவர் கேபினட் தூதுக்குழு இந்தியாவைப் பார்வையிட வந்தபொழுது காலிஸ்தான் என்ற தனி அரசு பஞ்சாப்பில் ஏற்பட வேண்டுமென்ற பிரச்சனையை எழுப்பினார். ஆனால் அவர் பிரச்சனைக்கு ஒரு முக்கியமும் கொடுக்கப்படவில்லை. பஞ்சாப் சமுகத்தினருக்கு பாகிஸ்தானிலிருந்து குடியேறிய மக்களால் மிகப் பெரிய கஷ்டங்கள் ஏற்பட்டன. ஆதலால் குர்காவென் மாவட்டம் பஞ்சாப், பெப்ஸ் அடங்கிய சீக்கிய அரசு தோன்ற வேண்டுமென்று கோரினர்.

### இ. அஸ்ஸாம் மாநில நாகர்கள் மற்றும் மிஜோக்கள் ஆகியோரின் தனி அரசு கோரிக்கை (Demand for Separate state for Mizor and Nagas of Assam)

அஸ்ஸாம் மாநிலத்தில் ஜோஸ் மலை மாவட்டத்தில் உள்ள மக்கள் அஸ்ஸாமிலிருந்தும் இந்தியாவிலிருந்தும் பிரிந்து தனி அரசு அமைக்கக் கோரினர். ஆதலால், மத்திய அரசாங்கம் மிஜோமலை மாவட்டத்தை இந்திய யூனியன் பிரதேசமாக ஆக்கியது. 1972ம் ஆண்டு ஜனவரி மாதம் 21ம் தேதி திருமதி. இந்திராகாந்தி அம்மையார் இதைத் தொடங்கி வைத்தார். அது மிஜோரம் என்று அழைக்கப்படுகிறது.

அஸ்ஸாம் மாநில நாகர்கள் பிசோவின் தலைமையில் தனி நாகர்கள் அரசை அமைக்கக் கோரினர். அவர்கள் வன்முறைகளிலும் கலகங்களிலும் ஈடுபட்டார்கள். இந்திய அரசாங்கம் அவர்களை அடக்குவதற்கு மிகத்தீவிர அடக்குமுறைகளை கடைபிடித்தது. அவர்களுடைய முரட்டுதனமான முறைகள் பயனற்று போய் நாகர்கள் இயக்கம் இந்திய அரசாங்கத்தோடு உடன்பாடு ஏற்பட வகை செய்தது. இதன் விளைவாக 1962 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 4ம் தேதி இந்திய ஒன்றியத்திலிருந்து நாகலாந்து என்ற மாநிலம் ஏற்பட்டது. இந்திய ஒன்றியத்தில் இருக்க விரும்பாத எதிர்ப்பு நாகர்கள் பாகிஸ்தானிடமிருந்தும் சீனாவிடமிருந்தும் ஆயுதங்களையும், பயிற்சியையும் பெற்று தங்களுடைய எதிர்ப்பை தொடர்ந்தார்கள். எதிர்ப்பு நாகர்களின் தலைவரான பிசோ இந்தப் பிரச்சனையை உலக நாடுகளிடம் எடுத்துச் சொல்வார் என்று பயமுறுத்தினர். பங்களாதேஷ் தோன்றியபின்னர் எதிர்ப்பு சக்திகள் குறைந்து வருகின்றன. இப்பொழுது இந்திய அரசாங்கத்திற்கும் எதிர்ப்பு நாகர்களுக்கும் இடையே ஒரு உடன்படிக்கை ஏற்பட்டு இருக்கிறது.

## 7.1.2. தனி மாநிலக் கோரிக்கை (Demand Separate State hood)

சில சுயநல அரசியல்வாதிகள் அரசியலில் செல்வாக்கு பெற விரும்பினார்கள். இது ஒரு தனி மாநில கோரிக்கையின் மூலம்தான் முடிந்தது. அதன் மூலம்தான் அரசியல் நிலைமை பெற வேண்டும் என்ற அவர்கள் கனவு நினைவாகியது. இந்தியாவில் தனி மாநில கோரிக்கை பல பகுதிகளில் பல நேரங்களில் எழுந்தது.

### I) ஆந்திர தனிமாநில கோரிக்கை (Demand Formation of Separate Andhra)

சென்னை, ஹைதராபாத் மற்றும் மைசூர் மாநிலங்களில் வாழ்ந்த தெலுங்கு மக்கள் தங்களுக்கு என்று ஆந்திரா மாநிலம் ஏற்பட வேண்டும் என்று கோரினார்கள். காங்கிரஸ் கட்சி 1948—ஆம் ஆண்டு ஜவஹர்லால் நேரு, வல்லபாய் படேல் மற்றும் பட்டாபி சீதாராமையா ஆகியோரைக் கொண்ட குழுவை அரசியல் ரீதியாக இந்தப் பிரச்சனையை அணுக நியமித்தது. அவர்களுடைய அறிக்கை பொதுவாக மொழி மாநிலக்கோரிக்கைக்கு எதிராக இருந்தாலும் ஆந்திராவைப் பொறுத்தவரை தனி மாநிலம் தலைவர்களின் சக்தியை நல்ல முறையில் திருப்பியதாலும் ஏற்பட்டதாகும் என்று பேராசிரியர் மோரிஸ் ஜோன்சு குறிப்பிடுகிறார். ஆந்திர மக்களுக்கு ஒரு தனி மாநிலம் ஏற்பட வேண்டும் என்ற மக்களின் உணர்ச்சிகளை மதித்து 1949— ஆம் ஆண்டு ஒரு புதிய மாநிலத்தை ஏற்படுத்தலாம் என்ற கோரிக்கையை காங்கிரஸ் செயற்குழு ஏற்றுக்கொண்டது. இந்த கோரிக்கைகள் பல மொழி மாநிலங்களை இந்தியாவில் பல மாநிலங்கள் தோன்றவும் மொழியின் அடிப்படையில் தேசியத்தை வளர்க்கவும் வகை செய்யும் என்பதற்காக மத்திய அரசாங்கம் ஆந்திர மாநிலத்தை ஏற்படுத்த ஒப்புக் கொள்ளவில்லை. இது காங்கிரஸ் கட்சியில் பிளவை ஏற்படுத்த வகை செய்தது. காங்கிரஸ் இருந்து பிரிந்தவர்களும் மற்ற எதிர்க் கட்சியினரும் ஒன்று சேர்ந்து தனி ஆந்திர மாநில கோரிக்கையை வற்புறுத்தினர். பொட்டி ஸ்ரீராமுலு என்பவர் இதற்காக சாகும் வரை உண்ணாவிரதம் இருந்தார். இது மாதிரி சம்பவங்கள் மேலும் தொடராமல் இருப்பதற்காக தெலுங்கு பேசும் மக்களுககென 1953—ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் ஆந்திரா மாநிலம் ஏற்படுத்தப்பட்டது. ஆனால் நேரு மொழி வாரிப் பிரிவினை அமைக்கக்கூடாது என்பதில் உறுதியாக இருந்தார்.

### II) தெலுங்கானா புரட்சி (Telengana Agitation)

மாநில சீரமைப்பு ஆணையம் பல மொழி பேசும் ஹைதராபாத் மாநிலத்தைப் பிரித்து, கன்னட மொழி பேசும் மைசூர் மாநிலத்துடன் சேர்க்க சிபாரிசு செய்தது. ஹைதராபாத் மாநிலத்தில் தெலுங்கானா

பகுதியை ஆந்திர மாநிலத்துடன் சேர்க்க வேண்டும் எனப் பலர் கருதினார்கள். ஆனால் ஆந்திர மாநிலத்தில் மிக அதிகமாக படித்த மக்கள் வாழ்ந்ததால் தெலுங்கானா மக்களை சுயநலத்திற்கு உபயோகப்படுத்தி, தெலுங்கானா மக்கள் உயர்வடையாமல் செய்ய முடியும் என்ற அவர்கள் உணர்வுகளை மதித்து இந்த தெலுங்கானா பகுதியை ஆந்திர மாநிலத்திதோடு உடனடியாக சேர்க்கும் எண்ணத்தை விட்டுவிட வேண்டும் என்று பரிந்துரை செய்தது. ஆகையால், இந்த ஆணையம் ஒரு தனி தெலுங்கானா மாநிலம் ஏற்படவும் மூன்றில் இரண்டு பங்கு தெலுங்கானா பகுதி சட்டமன்ற உறுப்பினர்கள் ஆந்திராவுடன் இணைய வேண்டும் என்ற கோரிக்கையை மூன்றாவது பொதுத் தேர்தலின் போது ஆதரித்தால் ஆந்திராவுடன் இணைந்து விட வேண்டுமென்றும் சிபாரிசு செய்தது.

மத்திய அரசாங்கம் தெலுங்கானா பகுதியின் பொருளாதார வளர்ச்சி தடைபடாமல் இருக்க வேண்டுமானால் அது ஆந்திர மாநிலத்தோடு இணைய வேண்டும் என்று தீர்மானித்தது. அதன் விளைவாக ஆந்திராவிலும், தெலுங்கானாவிலும் இரு பகுதிஅரசியல் தலைவர்களும் ஒன்று கூடி கீழ்க்கண்ட உடன்படிக்கை 1956—ஆம் ஆண்டு ஏற்றுக் கொண்டனர்.

1. தெலுங்கானா பகுதியில் இருந்து தேர்ந்தெடுக்கப்படும் மாநில சட்டமன்ற உறுப்பினர்கள் எல்லாம் சேர்ந்து ஒரு பிராந்திய குழுவை அமைத்து தெலுங்கானா பகுதியின் விஷயங்களைக் கவனிக்க வேண்டும்.

2. இரண்டு பகுதிகளிலும் ஆகும் பொதுவான செலவுகளைகத் தவிர்த்து தெலுங்கானா பகுதியில் இருந்து கிடைக்கும் முழு வருவாயும் அதே பகுதியின் வளர்ச்சிக்கு செலவிடப்பட வேண்டும்.

3. அரசாங்கத்திற்கு 500 ரூபாய் சம்பளத்துக்கு மேல் உள்ள பதவிகளுக்கு ஆள் சேர்க்கும் பொழுது, 5 ஆண்டுகளுக்கு, குறைந்தபட்சம் தெலுங்கானா பகுதியில் 15 ஆண்டுகள் வாழ்ந்தவர்களிடம் இருந்துதான் ஆள் சேர்க்க வேண்டும்.

4. முதன் மந்திரி ஆந்திரா மாநிலத்தில் இருந்து தேர்ந்தெடுக்கப்பட்டால் உதவி முதன்மந்திரி தெலுங்கானா பகுதியில் இருந்து தேர்ந்தெடுக்க வேண்டும். அதே போல உதவி முதன் மந்திரி ஆந்திரா மாநிலத்தில் இருந்து தேர்ந்தெடுக்கப்பட்டால் முதன் மந்திரி தெலுங்கானா பகுதியிலிருந்து தேர்ந்தெடுக்க வேண்டும்.

இந்த உடன்பாடு தெலுங்கானா பகுதி, ஆந்திர பிரதேசத்துடன் இணைய வகை செய்தது. ஆனால் இந்த பரிந்துரைகளை தொடர்ந்து செயல்படுத்தவில்லை. தெலுங்கானா பகுதி மக்கள் தங்களுடைய அதிருப்தியையும், மனக்கசப்பையும் தெரியப்படுத்தினார். அவர்கள் தனி தெலுங்கானா மாநிலம் ஏற்பட கோரினார்கள். 1969—ல் உடன்படிக்கையை முழுவதுமாக செயல்படுத்த வேண்டாமென்று தெலுங்கானா பகுதி மக்களும் மாணவர்களும் புரட்சி செய்தார்கள். அந்தப் புரட்சி சமாதான நோக்கத்தோடு தொடங்கப்பட்டாலும் முடிவில் எப்பொழுதும் போல வன்முறைகளுக்குத் திரும்பியது. அரசாங்கம் தெலுங்கானா மக்களுக்கு ஒதுக்கப்பட்டிருந்த பதவிகளில் இருந்த ஆந்திர மாநிலத்தை சேர்ந்தவர்களை ஆந்திரப் பகுதிக்கு மாற்றியது. மேலும் மற்ற உடன்படிக்கை சரத்துக்களை நிறைவேற்ற ஒத்துக் கொண்டது. ஆந்திரப் பகுதிக்கு தெலுங்கானா பகுதியில் இருந்து அதிகமான மாற்றல்கள் ஏற்பட்டதும், ஆந்திரப் பகுதியில் உள்ள மக்களிடையே ஒரு புரட்சி ஏற்பட்டது. இது தெலுங்கானா புரட்சி மீண்டும் ஏற்பட பிரஜா சமிதியைத் தூண்டியது. இந்த பிரஜா சமிதி தனி மாநில கோரிக்கையை வற்புறுத்தியது. அந்த புரட்சி ஆறு அம்ச உடன்பாட்டின் பேரில் கைவிடப்பட்டது. அந்த ஆறு அம்ச உடன்பாடு தெலுங்கானா பிராந்தியக் குழு தெலுங்கானா மாநிலத்திற்கு 5 ஆண்டு திட்டத்தை தீட்டவும் தெலுங்கானா பகுதிக்கு முதன் மந்திரி பதவி கொடுக்கவும் உடன்பட்டது. அதன் விளைவாக முதன் மந்திரிப் பதவி பிரமானந்த ரெட்டியிடம் இருந்து நரசிம்மராவிற்கு மாறியது.

பிராந்திய உணர்வுகளைத் தான் பம்பாய் மாநிலம், மராட்டிய மற்றும் குஜராத் ஆகிய இரு மொழி மாநிலங்களாக பிரிய வகை செய்தது. இந்திய அரசாங்கமும் அதற்கு சம்மதித்தது. அதே போல 1963—ல் நாகலாந்து உருவாகவும் பஞ்சாபி சபா ஏற்படவும் இந்த பிராந்திய உணர்வுள் காரணமாக இருந்தன.

### 7.1.3. முழு மாநிலக் கோரிக்கை (Demand for full Statehood)

முழு மாநிலக் கோரிக்கை பிராந்திய அடிப்படையில் ஏற்பட்டது. இக்கோரிக்கையை நிறைவேற்ற அரசியல் அமைப்பு 14—வது திருத்த மசோதா 1962—ல் நிறைவேறியது. இதன் மூலமாக ஹிமாசலப் பிரதேசம், மணிப்பூர், திரிபுரா, பாண்டிச்சேரி முதலிய இடங்களில் சட்ட மன்றங்கள் ஏற்பட்டன. அந்தமான் நிக்கோபார் மற்றும் டெல்லி யூனியன் பிரதேசங்களில் இந்த சலுகை மறுக்கப்பட்டதால் அவர்கள் புரட்சி செய்ய ஆரம்பித்தார்கள். முழு மாநில அந்தஸ்து 1970—ஆம் ஆண்டு ஹிமாச்சலப் பிரதேசத்திற்கும், 1972—ஆம் ஆண்டு மணிப்பூருக்கும்,

திரிபுராவிற்கும் கொடுக்கப்பட்டது. டெல்லிக்கு பிரதான நகருக்குரிய குழு அமைய 1970—ஆம் ஆண்டு வகை செய்யப்பட்டது.

### 7.1.4. மாநிலங்களுக்கு இடையே சச்சரவுகள் (Inter – State Disputes)

மாநிலங்களுக்கு இடையே ஏற்படும் சச்சரவுகள் பிராந்திய அடிப்படையில் ஏற்பட்ட மற்றொரு பிரச்சனையாகும். உதாரணமாக பஞ்சாப் இரண்டு மாநிலங்களாக பிரிக்கபட்ட பொழுது சண்டிகார் யார் பக்கம் சேர வேண்டும் என்று பலத்த வேறுபாடு இருந்தது. அதன் காரணமாக மத்திய அரசாங்கம் சண்டிகாரை யூனியன் பிரதேசமாக ஆக்கியது. பிறகு ஹரியானா மாநிலம், உத்திரப்பிரதேசத்தில் உள்ள பத்து மாவட்டங்களிலும் இராஜஸ்தானிலுள்ள இரண்டு மாவட்டங்களிலும் சேர்ந்து விசால் ஹரியானா ஏற்பட வேண்டும் என்ற கனவை நிறைவேற்ற ஹரியானாவோடு சேர வேண்டும் என்று கோரியது. அதே போல கர்னாடகா மாநிலத்திற்கும், மகாரஷ்டிரா மாநிலத்திற்கும் எல்லை தகராறும் தமிழ்நாட்டிற்கும் கானாடகாவிற்கும் இடையே காவிரி நீர் சச்சரவும் இருந்து வருகிறது.

## 7.2. மொழிவாரி மாநிலங்களின் சீர் அமைப்பு (Re organization of Linguistic States)

பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்து எழுந்த எழுச்சி இந்திய மக்களிடையே மொழி, மதம், இனம் என்ற பாகுபாடுகளின்றி, ஒற்றுமையை ஏற்படுத்தியது. வெளிநாட்டு ஆட்சியிலிருந்து சுதந்திரத்தைப் பெறுவதற்காக நாம் எல்லாம் ஒன்று சேர்ந்து பாடுபட்டோம். நாம் வெளிநாட்டு எதிரிகளை எதிர்த்துப் போரிட வேண்டும் என்ற நாட்களில் ஏற்பட்ட எழுச்சி ஆங்கிலேயர்களை எதிர்த்து சுதந்திரத்தைப் பெற வேண்டும் என்பதற்காக மட்டுமில்லாமல் மாநிலங்களின் கலாச்சாரப் பண்பாடுகள் காக்கப்படவேண்டும் என்ற தீர்மானத்தோடு எழுந்தாகும். ஆனால் தேசியத் தலைவர்கள் இந்த நிலைமையை திருப்திகரமாகக் கருதவில்லை. அவர்கள் மாநிலங்களில் மொழி மற்றும் பண்பாட்டின் அடிப்படையில் இந்திய சுதந்திரம் அடைந்தவுடன் மாறுதல்கள் ஏற்படும் என்று கூறினார்கள். காங்கிரஸ் கட்சியும் 1920—ஆம் ஆண்டில் மாநிலங்களின் பொதுவான மாறுதல்கள் ஏற்பட வேண்டும் என்றும் 1921—ஆம் ஆண்டு அரசியல் அமைப்பை இந்த கோரிக்கையை நிறைவேற்றும் வகையில் அமைய வேண்டும் என்றும் கோரியது. 1928—ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்ட மோதிலால் நேரு குழு, மொழி வாரி மாநிலங்கள் ஏற்பட சிபாரிசு செய்தது. இந்த உணர்வு பிரிட்டிஷ்

ஆட்சியை எதிர்த்து எழுந்த தேசிய எழுச்சியின் பொழுது தொடர்ந்து இருந்து வந்தது.

### 7.2.1. மொழிவாரி மாநிலங்களின் சீரமைப்புக்கு எதிராக உணர்தல் (Realization against Linguistic Re-organization)

செல்வாக்குப் பெற்ற மக்களின் எண்ணங்கள் நாட்டை மொழி வாரியாக சீர் அமைக்க வேண்டும் என்பதாகும். இந்த எண்ணங்கள் இந்தியாவில் இருந்த அரசர் ஆண்டு வந்த நாடுகள் இணைக்கப்படவேண்டும். ஆனால் மொழி வாரி மக்களை இணைக்கும் எந்த நிர்வாக அமைப்பையும் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருந்தார்கள். சிலருடைய எண்ணங்கள் மக்களுடைய தேசிய எண்ணத்தைப் பாதிக்கும் வகையில் மாநிலங்களை சீர் அமைப்பதை ஒத்துக் கொள்ளவில்லை. அவர்கள் மொழிவாரி மாநிலங்களை ஏற்படுத்த வேண்டும் என்று எண்ணும் பொழுது நாட்டின் ஒற்றுமை கெடும் என்று எதிர்பார்த்தார்கள், மறைந்து போன பண்டிட் கோவிந்த வல்லபந்த் மொழிவாரி மாநில சீர் அமைப்பை ஒத்துக் கொள்வில்லை. சி. இராஜகோபாலச்சாரி அவர்களும் மொழிவாரி மாநில சீர் அமைப்பை எதிர்த்தார். அவர் 25 ஆண்டுகளாவது மாநில சீர் அமைப்பு ஆணையத்தின் அறிக்கையை செயல்படுத்தக்கூடாது என்று பிரதம அமைச்சரிடம் கூறினார். நேரு அவர்கள் மொழி வாரி மாநில பிரிவினையை இறக்கும் வரை ஏற்றுக்கொள்ளவில்லை.

நேருவும் மொழி வாரி மாநிலப் பிரிவினை நாட்டைப் பல பகுதிகளாகக் பிரித்துவிடும் என்று உணர்ந்தார். மொழி வாரி மாநிலங்கள் ஒரு பிரச்சரனையைத் தீர்வு காணுவதில் சமாதானத்தைத் தவிர சச்சரவுகளையே அதிகம் விளைவிக்கும் என்று கூறினார். சர்தார் படேலும் மொழிவாரி மாநில சீர் அமைப்பு தேசியத்தைக் குத்திக் கொலை செய்வதற்கொப்பாகும் என்று கூறினார். குல்கார்னி என்பவர் கீழ்க்கண்டாவாறு எண்ணினார். "நேரு, சர்தார் படேலின் சக்தி வாய்ந்த ஆதரவுடன் மொழி வாரி சீர் அமைப்பு மாநிலங்களை ஏற்படுத்துவதில் கால தாமதம் செய்திருந்தால் மொழிவாரி மாநிலப் பிரிவினை ஏற்படாமல் தடுத்து இருக்கலாம். ஆனால் நேரு பிரிவினைக்காரர்களை எதிர்த்து தன்னுடைய புகழை குறைத்துக் கொள்ள விரும்பவில்லை".

பிரதம மந்திரியும், மத்திய அரசாங்கமும் குல்கர்னி கூறி இருப்பது போல வல்லுனர்களும் ஆணையர்களும் அளித்த தீர்ப்பு மீட்க முடியாத தீர்ப்புகள் என்று ஒத்துக் கொள்ளாமல் மொழி வெறியர்களை சமாளித்து இருக்கலாம். மொழி வாரி மாநில ஆணையம் அலகாபாத் உயர்நீதிமன்றத்தில் நீதிபதியாக ஓய்வு பெற்ற எஸ். கேதர் என்பவரின்

தலைமையின் கீழ் ஏற்படுத்தப்பட்டது. மொழிவாரி மாநில ஆணையம் மொழிவாரி மாநிலங்களாக சீர் அமைப்பதை எதிர்த்து 1948—ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் "நிர்ணய சபைக்குத் தன் தீர்ப்பை அளித்தது. அந்த அறிக்கை நிர்வாகத் திறமையை குறைக்காமல், மொழி வாரி மாநிலம் ஏற்படுத்தப்பட முடியாது என்று கூறியது. அதற்கும் மேலாக, மொழிவாரி மாநிலப்பிரிவினை தேசிய ஒற்றுமையையும் குலைத்துவிடும். மொழிவாரி மாநிலப்பிரிவினைக் கோரிக்கை மக்களிடம் நாட்டுப்பற்று இல்லாத நிலையைத் தான் காட்டுகிறது என்று அந்த அறிக்கை கூறியது. தென்னிந்தியாவில் உள்ள காங்கிரஸ் கட்சியில் இருக்கும் முக்கியமாக தெலுங்கு பேசும் மக்களிடம் சென்னை ஹைதராபாத் மற்றும் மைசூர் மாநிலங்களில் தெலுங்கு பேசும் மக்களை இணைத்து ஆந்திர மாநிலம் என்ற ஒன்று தங்களுக்கு வேண்டும் என்று கூறினார்கள். காங்கிரஸ் கட்சியும் 1948—ஆம் ஆண்டு ஜவஹர்லால் நேரு, வல்லபாய் படேல் மற்றும் பட்டாபி சீதாதாமய்யா ஆகியோரின் தலைமையின் கீழ் ஒரு குழுவை நியமித்தது. அரசியல் ரீதியாக அந்த அறிக்கை பொதுவாக மொழிவாரி மாநில கோரிக்கையை எதிர்த்தது. ஆனால் ஆந்திராவிற்கு மட்டும் தனிச்சலுகை காட்டலாம் என்று கூறியது. ஆகையால் மாநிலத்தை உருவாக்குவதைப் பொறுத்த வரையில் திறந்த மனத்தோடு அந்தப் பிரச்சனையை அணுக வேண்டும் என்று கூறியது.

### 7.2.2. ஆந்திரா உருவாதல் (Formation of Andra)

JVP அறிக்கை, பிரிவுக் கொள்கையை வலிமை பெறச் செய்தது J.G.P. அறிக்கையைப் பற்றி மோரிஸ் கூறுகையில் அது தெலுங்கு மக்களுடைய சக்தியை முடக்கி அவர்களை வழிநடத்த இயலாத அமைப்பு என்று கூறுகிறார். ஆந்திரா சீக்கிரத்திலேயே அமைய வேண்டும் என்ற உணர்வும், சூழ்நிலையும் கட்டுப்படுத்த முடியாத அளவிற்கு எழுச்சியாக இருந்தது. ஆந்திர மாநிலக் கோரிக்கை காங்கிரஸ் செயற்குழுவில் நிறைவேறாமல் மக்கள் உணர்ச்சிகளுக்குத் தீர்வு காண முடியாது என்ற நிலைமையை உருவாக்கியது. MF 1949—ஆம் ஆண்ட அரசு ஒரு புதிய மாநிலத்தை ஏற்படுத்த பரிந்துரை செய்தது. ஆனால் மத்திய அரசாங்கம் ஆந்திரா என்ற புதிய மாநிலத்தை ஏற்படுத்த விரும்ப வில்லை. மொழிவாரி மாநிலப் பிரிவினை மொழி தொகுதிகளை வளர்த்து பல மொழி மாநிலங்களை ஏற்படுத்தி மொழி தேசிய உணர்ச்சியை வளர்க்கும் என்றும் கருதியது. மத்திய அரசாங்கத்தின் இந்தக் கூற்று காங்கிரஸ் கட்சியில் பிளவை ஏற்படுத்தியது. இந்த கோரிக்கையை வலியுறுத்தி பொட்டி ஸ்ரீராமுலு என்பவர் சாகும்வரை உண்ணாவிரதம் இருந்து உயிர் நீத்தார். இவ்வாறான நிகழ்ச்சிகள் மேலும் தொடராமல் இருப்பதற்காக 1953—ஆம்

ஆண்டு அக்டோபர் மாதம் தெலுங்கு பேசும் மக்களுக்காக தனி ஆந்திர மாநிலம் உருவாகியது.

### 7.2.3. மாநில சீரமைப்பு ஆணையத்தை நியமித்தல் (appointment of Reorganisation Commission)

ஆந்திரா உருவான பிற்பாடு மொழிவாரி மாநிலங்கள் ஏற்பட ஆதரவு பெருகியது. மத்திய அரசாங்கமும், இந்த சூழ்நிலையை கட்டுப்படுத்த 1935—ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் மாநில சீர் அமைப்பு ஆணையத்தை ஏற்படுத்தியது. இதனுடைய முக்கிய நோக்கம் மக்களின் நலன் குறையாமல் மாநிலத்தை சீர் அமைப்பது என்பதாகும். இந்தக் குழுவின் உறுப்பினராக ஃபாசல் அலி, கே.எம். பணிக்கர் மற்றும் எச்.என். குன்ஸ்ரு ஆகியவர்கள் நியமிக்கப்பட்டார்கள். மொழிவாரி மாநில சீர் அமைப்பு நாட்டு ஒற்றுமையையும், பாதுகாப்பையும் மக்களின் நலத்தை முன் கொண்டும் சிறுபான்மை மக்களின் நலத்தைக் கருத்தில் கொண்டும் அறிக்கை சமர்ப்பிக்க ஏற்பட்டதாகும்.

### 7.2.4. மாநில சீரமைப்பு ஆணைத்தின் பரிந்துரைகள் (Recommandation of the S.R.C.)

மாநில சீர் அமைப்பு ஆணையம் 1955—ஆம் ஆண்ட அக்டோபர் மாதம் அதனுடைய அறிக்கையை சமர்ப்பித்தது. இவ்வாளை சமர்ப்பித்த அறிக்யையில் சில மாற்றங்களைச் செய்து 1956 ஆகஸ்டு 31ல் பாராளுமன்றத்தில் மாநிலங்களின் மறுசீரமைப்புச் சட்டத்தை இயற்றியது. மொழிவாரி கொள்கையை ஏற்றுக்கொண்டு மாநில எல்லைகளை மாற்றியமைக்கப் பரிந்துரை செய்தது. இந்த ஆணையம் இந்தியாவில் தேசியம் என்பது இன்னும் குறைந்த சக்தி வாய்ந்ததாக இருக்கிறது என்று கூறுகிறது. தேசியத்தைப் வளர்ப்பதற்காக எல்லா காரியங்களும் செய்யப்படவேண்டும் என்று கூறியது. மொழிவாரி மாநிலங்களின் எல்லையை விரிவாக்கம் செய்வதிலும், வலுச்சண்டைக்கு போவதிலும், பொறுக்க முடியாத நிலைமை வளர்ந்து வருவதாகவும் கூறியது. ஏற்கனவே உள்ள மொழிவாரி மாநிலங்களின் பக்கத்து எல்லைகளில் மொழி மாநில எண்ணம் வளர்ந்து கொண்டு இருக்கிறது. அந்த ஆணையம் மொழிவாரி மாநிலக் கொள்கைக்கு அதிக சிரத்தை எடுத்துக் கொள்ளுவதால், அபாயகரமான பிரிவினைவாதக் கொள்கை வளர்ந்துவிடும் என்று எச்சரித்தது. ஒரே மொழி பேசும் மக்கள் ஒரு கிராமத்திலோ, ஒரு தாலுகாவிலே, பெரும்பான்மையினராக இருந்தால் அவர்கள் வாழும் பகுதியை தாய்நாட்டுடன் இணைக்க வேண்டும் என்ற எண்ணம் தேசிய வளர்ச்சி ஏற்படாதபடி கெடுத்து விடும் என்று கூறியது. மறுபடியும், மொழிவாரி மாநிலங்கள் அமைவதை எதிர்த்து இந்த

ஆணையம் எச்சரிக்கை செய்தது. மொழி மற்றும் தொகுதி நம்பிக்கைகள் இந்திய சுதந்திரத்தில் வேரூன்றி பிராந்திய அடிப்படையில், நமது பண்பாடு வளர்ந்து இருக்கிறது. இந்த தேசியம் என்ற பண்பாடு இனியும் வளர வேண்டியிருக்கிறது. இந்த வேளையில் அரசியல் மற்றும் நிர்வாக வட்டங்களில், நாட்டின் ஒற்றுமை என்ற பரந்த நோக்கு மக்களிடையே வளர வேண்டியது அவசியமாகும்.

### 7.2.5. மராட்டிய மற்றும் குஜராத் மாநிலங்கள் உருவாதல் (Formation of Maharashtra and Gujarat)

மாநில சீர்திருத்த ஆணையம் மலையாள மற்றும் கன்னட மொழி பேசும் மக்களின் விருப்பத்திற்கு ஒப்ப பல மாற்றங்களை பரிந்துரை செய்தது. ஆனால் அது பாம்பாய் மாநிலத்தைப் பிரிப்பதை ஒத்துக் கொள்ளவில்லை. அதற்குப் பதிலாக பாம்பாய் மாநிலத்தின் சில பகுதிகளையும் மத்திய பிரதேசத்தின் சில பகுதிகளையும் ஒன்று சேர்த்து விதார்பா என்ற மாநிலம் தோன்ற சிபாரிசு செய்தது.

விதார்பா மாநிலம் தோன்றுவதால் பிரிக்கப்படாத பம்பாய் மாநிலத்தில் குஜராத்தியர்கள் போல் மாராட்டியர்கள் அதிக பலம் வாய்ந்தவர்களாக இருக்க முடியாது. ஆகையால் 1956—ஆம் ஆண்டில் மராட்டியர்கள் கிளர்ச்சி செய்து பம்பாய் நகரத்தில் ஏற்பட்ட 80 பேர் கலகத்தில் உயிரை இழந்தனர். காங்கிரஸ் கட்சி செயற்குழு இந்தப் பிரச்சனையில், மிகக் கொதிப்படைந்தது. இதனால் சி.டி. தேஸ்முக் என்ற அப்போதைய மத்திய கேபினட் நிதி மந்திரி பதவி விலகினார். அவர் இந்த பிரச்சனையில் நேருவின் கொள்கையை ஒத்துக்கொள்ளவில்லை. அதாவது பாம்பாய் மாநிலத்தை இரண்டு மாநிலங்காளகப் பிரிக்கலாம். ஆனால் பாம்பாய் நகரம் மராட்டிய மாநிலத்துடனோ, குஜராத் மாநிலத்துடனோ சேரக்கூடாது என்ற ஒருவழி கூறப்பட்டது. இந்த முடிவு சம்யுக்த மஹாராஷ்ட்ர சமிதி என்ற கட்சியையும், மஹாகுஜராத், ஜனதா பரிசத் என்ற கட்சிகளையும் ஏற்படுத்த வகை செய்தது. இரண்டு கட்சிகளிலும் கிராமியத்தலைவர்களும், மாணவர்களும், கலைஞர்களும், வணிகர்களும் மற்றும் அரசுப் பணியாளர்களும் இருந்தனர். இந்த இரண்டு கட்சிகளிடையே மக்களிடமிருந்த செல்வாக்கு பிராந்திய அளவில் வளர்ந்தது. 1957 ஆம் ஆண்டு நடந்த பொதுத் தேர்தலில் காங்கிரஸ் கட்சிகள் அதிக பெரும்பான்மையில் இருந்து குறைந்த பெரும்பான்மையிடங்களைப் பெற வகைசெய்தது. மற்றும் கிளர்ச்சிகளும் கலகங்களும் தொடர்ந்ததால் 1962—ஆம் ஆண்டு பாம்பாய் மாநிலம் மராட்டிய மற்றும் குஜராத் ஆகிய மாநிலங்கள் உருவாக வகை செய்தது.

### 7.2.6. நாகலாந்து, பஞ்சாபிசுபா உருவாகுதல்: (Formation of Nagaland and Punjabi suba)

மத்திய அரசாங்கம் நாகர் மலை ஜாதி மக்கள் தொடுத்த சண்டைகளுக்கு முடிவு காணுவதற்கு அதை ஒரு தனி மாநிலமாக உருவாக்க ஒப்புக்கொண்டது. இந்த மாற்றம் கொண்டுவரப்பட்டு நாகலாந்து உருவாகியது.

1946—ஆம் ஆண்டிலேயே மாஸ்டர் தாராசிங் என்பவர் காலிஸ்தான் என்ற தனி அரசு தோன்ற இந்தியாவிற்கு விஜயம் செய்ய கேபினட் தூதுக்குழுவிடம் தனது பேச்சை துவங்கினார். ஆனால் அவருடைய கோரிக்கைக்கு ஒரு முக்கியத்துவம் கொடுக்கப்படாததால் ஏமாற்றம் அடைந்தார். ஏறக்குறைய 1950ஆம் ஆண்டில் பஞ்சாபி சுபா என்ற தனி மாநிலக் கோரிக்கையை தாராசிங் எழுப்பினார். அவர்கள் தொடாந்த கிளர்ச்சி வன்மையான முறையில் இருந்தது. ஆனால் அவர் கோரிக்கைகளுக்கு, அரசாங்கத்திலோ, மாநிலச்சீரமைப்பு ஆணையத்திலோ, ஒரு முக்கியத்துவமும் கொடுக்கப்படவில்லை. பஞ்சாப் மாநிலத்தை அமைக்க வேண்டும் என்ற கோரிக்கை, சீக்கியர்களிடையே எழுந்த கோரிக்கையாகும். மாஸ்டர் தாராசிங்கின் தலைமை சமுதாயத்திற்குள்ளேயே இரு பிரிவுகளை ஏற்படுத்துவதற்கு வகை செய்யுமேயொழிய மக்களால் எந்த ஒரு தீர்மானத்திற்கும் வரும்படி ஒரு முடிவைக் கொண்டு வராது என்று மோரிஸ் ஜோன்ஸ் என்பவர் கூறுகிறார். மக்களுக்கு ஒரு முடிவை ஏற்படுத்த சர்க்கார் முறையும், பிராந்திய முறையும், மொழிக்கொள்கையும், மாநிலத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்டது. எஸ்.ஆர்.தாஸ், எம்.சி.சாக்லா, ராமசாமிஅய்யர் ஆகியவர்கள் அடங்கிய ஒரு குழு மேற்கூறிய பிரச்சனைக்கு முடிவுகாண முற்பட்டது. சீக்கிய சமுதாயம் நாட்டில் நல்ல முறையில் நடத்தப்படுகிறது என்று அந்தக்குழு கூறியது. எனினும் பஞ்சாபி சுபாவை அடைந்தே தீருவோம் என்ற கிளர்ச்சி தொடர்ந்தது. அவர்களுடைய முயற்சி அரசாங்கத்தில் பலிக்காமல் போகவே, பஞ்சாபி சுபாவில் ஆர்வமிக்க ஆதரவாளர்கள் மாஸ்டர் தாராசிங்கை சாகும் வரை உண்ணாவிரதம் இருக்க கட்டாயப்படுத்தினார்கள்.

அவர் அந்தமாதிரி செய்யாமல் இருக்க பாராளுமன்ற குழு அவருடைய பிரச்சனைகளுக்கு முடிவுகாண அமைக்கப்பட்டது. அது 1966 ஆம் ஆண்டு மார்ச் மாதம் பஞ்சாபி சுபாவை ஏற்படுத்துவதற்குப் பரிந்துரை செய்தது. பஞ்சாப், ஹரியானா மாநிலங்களுக்குப் பிறகு படிப்படியாக மேலும் பல மாநிலங்கள் தோன்றின. சட்டிஸ்கார், உத்தராஞ்சல், ஜார்கண்ட் போன்றவை அண்மையில் ஏற்பட்டவை.

## 7.3. மொழிவாரி சீரமைப்பு ஒற்றுமையை ஏற்படுத்தி இருக்கிறதா? Has Linguistic Reorganisation secured integration?

முதலில் வரக்கூடிய பிரச்சனை முதலில் கவனிக்கப்படும் என்ற நேருவின் கொள்கை செயல்படாமல் இருந்து வந்திருக்கிறது. இதற்குக் காரணமாக வி.பி.குல்கர்னி கீழ்க்கண்டவாறு கூறுகிறார். முதலாவதாக, நேரு பெரிய தகுதி பெற்றிருந்தாலும் சிறந்த நிர்வாகியாக இருக்கவில்லை என்பதால் ஆகும். இரண்டாவதாக மிகச் சக்தி வாய்ந்த நபர்கள் மாற்றுவார். கொள்கையைச் செயல்படுத்தாமல் காலதாமதம் செய்ததும் வல்லுனர் குழுக்கள் அளித்த பரிந்துரைகளை நிறைவேற்ற இயலாததும், நாட்டில் பல பகுதிகளில் பேராசை உடைய அரசியல்வாதிகள் தோன்ற காரணம் ஆகியது. மொழிவாரி மாநில சீர் அமைப்பு பிரச்சனையை முடிவடையச் செய்யவில்லை அதற்க பதிலாக மொழிவாரி மாநில பிரச்சனை புதிய மாநிலங்கள் தோன்றக் வேண்டும் என்ற கோரிக்கைகளுக்கு வித்திட்டு இருக்கிறது.

### 7.3.1. ஆட்சி மொழிப் பிரச்சனை (Problems of Official language)

மொழி தேசியத்தின் சின்னமாகக் கருதப்பட்டாலும் நாட்டுப்பற்றை வளர்ப்பதற்கு அடிப்படைத் தத்துவமாகக் கருதப்படுவதில்லை. இந்தியா போன்ற பல சமூகங்களைக் கொண்ட நாட்டில் பல மொழி பேசும் மக்கள் இருக்கிறார்கள், இருந்தும் கூட தேசிய நிர்மாணத்திற்கு மொழியும் மிக முக்கியமாகக் கருதப்படுகிறது. சுதந்திர எழுச்சியின் பொழுது இந்தியாவிற்கு தேசிய மொழி அவசியம் என்று கருதப்பட்டது. ஆங்கில மொழி மக்களை இரண்டு வகுப்பினராக, அதாவது ஆளும் சிலரும், ஆளப்படும் பலருமாக, பிரித்தது என்பது, தேசியக் கருத்தாகும். இந்தக் கருத்தின் அடிப்படையில் 1918—ஆம் ஆண்டிலேயே மகாத்மா காந்தி பின்வருமாறு கூறினார். நாம் ஹிந்திக்கு தேசிய தகுதியையும், பிராந்திய மொழிகளுக்கு அதற்குரிய இடத்தையும் கொடுக்காவிட்டால் நாம் சுய இராஜ்ஜியம் என்று பேசுவதில் அர்த்தமாக இல்லை என்பது தனது உறுதியான கருத்து என்று உறுதியாகக் கூறினார். 1923—ஆம் ஆண்டு காங்கிரஸ் கட்சியின் அரசியல் அமைப்பு சட்டத்தைத் திருத்தி ஹிந்துஸ்தானி மொழியை வருடாந்திரக் கூட்டங்களில் பயன்படுத்த வேண்டும் என்று திருத்தி அமைக்கப்பட்டது. பிராந்திய காங்கிரஸ் குழுக்கள் பிராந்திய மொழியை உபயோகிப்பதற்கு அனுமதிக்கப்பட்டது. ஆங்கில மொழியை பெரிதாக மதிக்கும் ஜவஹர்லால் நேரு கூட, இந்தியாவிற்கு ஒரு பொது மொழியின் அவசியத்தை வலியுறுத்தினார். ஹிந்துஸ்தானி மொழி பொது மொழியாகவும், இந்தியா முழுவதற்கும் இணைப்பு மொழியாகவும் ஆமோதிக்கப்பட்டது. இந்தியா சுதந்திர

எழுச்சியின் பொழுது இந்தியாவிற்கு தேசிய மொழி அல்லது பொது மொழியின் அவசியத்தில் கருத்து வேறுபாடு இருக்கவில்லை.

இந்தியா அரசியலமைப்புச் சட்டம் இயற்றப்பட்ட பொழுதுதான் அரசியல் அமைப்பில் மொழியை சேர்க்கும் பிரச்சனைகள் எழுந்தன. தற்போதைய இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் மொழிகளின் அந்தஸ்து முன்ஷி மற்றும் அய்யங்கார் அவர்களின் விதிமுறையில் அமைந்ததாகும். இந்த விதிமுறை, மத்திய இந்தியாவிற்கு தேவநாகரி எழுத்துக்களில் அமைந்த ஹிந்தி மொழி ஆட்சி மொழியாகவும் ஆனால் எண்கள் பன்னாட்டு அரசாங்கத்தில் உபயோகப்படுத்தும் எண்களைப் பயன்படுத்த வேண்டும் என்றும் கூறியது. ஆங்கில மொழி 15 ஆண்டுகள் உபயோகத்தில் இருக்கும்; இந்தக் காலத்தைப் பாராளுமன்றம் அதிகப்படுத்தலாம். இந்த 15 ஆண்டுகளில் குடியரசுத் தலைவர் ஆங்கில மொழியோடு ஹிந்தி மொழியையும் உபயோகிப்பதற்கு ஆணை பிறப்பிப்பார். தலைமை நீதிமன்றத்திலும், உயர்நீதி மன்றத்திலும் ஆங்கில மொழி உபயோகத்தில் இருக்கும்; 13 இந்திய மொழிகள் பட்டியலில் வரிசைப் படுத்தப்படும்; இரண்டு மொழி ஆணையங்கள் ஒன்று 1955—லும் மற்றொன்று 1960—லுமாக இந்திமொழியின் வளர்ச்சியை ஆய்வு செய்வதற்காக நியமிக்கப்படும். ஆனால் இந்தி மொழி ஆதரவாளர்கள் முன்ஷி அய்யங்கார் விதிமுறையில் 5 திருத்தங்களைக் கொண்டு வந்து அது அரசியல் நிர்ணய சபையால் ஒத்துக்கொள்ளப்பட்டது. இந்த திருத்தங்களின் மூலம் 15 ஆண்டுகளுக்குப் பிறகு தேவநாகரி எண்களை பயன்படுத்துவதற்கும் ஆங்கில மொழி தொடர்ந்து இருக்க வேண்டிய அவசியம் இல்லையா என்பதற்கும், பாராளுமன்றம் சட்டம் இயற்றும் குடியரசு தலைவரின் அனுமதியோடு உயர்நீதிமன்றங்களில் ஹிந்தி மொழி உபயோகப்பட்டது. தற்பொழுது எட்டாவது பட்டியலில் மொத்தம் 15 மொழிகள் காணப்படுகிறது.

இந்தி ஆட்சிமொழியாகக் கொண்ட வரப்பட்டால் ஹிந்தி பேசாத மக்கள் இரண்டாம் தரக் குடியுரிமை பெற்ற மக்களாக ஆக்கப்படுவார்கள் என்று தென்னிந்திய மக்கள், முக்கியமாக தமிழ்நாட்டு மக்கள், கருதும்படிச் செய்தது. ஆகையால் இந்தி பேசாத மக்கள் காலவரையறை இன்றி ஆங்கில மொழி ஆட்சி மொழியாகப் பயன்படுத்தப்பட வேண்டும் என்ற கோரிக்கையை ஏற்படுத்தினார்கள். ஜவஹர்லால் நேரு இந்த வகையில் இந்தி பேசாத மக்களுக்கு ஒரு வாக்குறுதியைக் கொடுத்தார்

1963—ஆம் ஆண்டில் ஆட்சி மொழிச் சட்டம் அமுலுக்கு வந்தது. இந்த சட்டத்தின் பிரகாரம் ஆங்கில, இந்தி மொழிகயோடு மாநில பிராந்திய மொழியும் 1063—க்குப் பின்பும் தொடர்ந்து உபயோகப்படுத்தப்படும் என்று கூறியது. தென்னிந்திய மக்கள் இந்தச்

சட்டத்தினால் திருப்தி அடையவில்லை. தென் இந்திய மக்களின் விருப்பம் இல்லாமல் ஆங்கில மொழிக்கு பதிலாக இந்தி மொழி பயன்படுத்தக்கூடாது என்றும், ஆங்கில மொழியும் இந்தி மொழியும் ஒரே மாதிரிக் கருதப்படவேண்டும் என்றும், தென்னிந்திய மக்கள் கூறினார்கள். 1967—ஆம் ஆண்டு சட்டப்படி இந்தி மொழிக்கு ஒப்புயர்வற்ற இடம் கொடுக்கப்பட்டது. ஆங்கில மொழி தொடர்ந்த உபயோகம் நிர்வாகத்தினரின் தன் விருப்பு உரிமையை பொருத்ததாகும் என்று ஆக்கப்பட்டது. இந்தச் சட்டம் ஆங்கில மொழியை ஒரு கூடுதல் மொழியாக பயன்படுத்தவும் அதைப் பின்பு விட்டுவிடுவதாக முடிவு செய்தது 1968—ஆம் ஆண்டு ஜனவரி மாதம் பாராளுமன்றத்தில் ஒரு தீர்மானம் கொண்டு வரப்பட்டது. இந்த தீர்மானத்தின் மூலமாக இந்தியை மொழியை பரப்புவதற்கும், விரைவுபடுத்தவும் இந்தி வளர்ப்பதற்கும் முடிவு எடுக்கப்பட்டது. மூன்று மொழி விதிமுறையை அமுல்படுத்தியதினால் இந்தி பேசாத மக்கள் மூன்று மொழிகளைக் கற்கவும். இந்திபேசும் மக்கள் ஒரே மொழியைக் கற்றால் போதும் என்ற நிலைமையும் ஏற்பட்டது. இந்தி பேசாத மக்கள் குறைந்த பட்சம் இரண்டு மொழியைக் கற்க வேண்டி இருந்தது இந்தச்சட்டம், ஆங்கில மொர்ழியை நீக்கி, இந்தி மொழியை உபயோகப்படுத்த வேண்டும் என்ற தீவிர எண்ணத்தோடு ஏற்பட்டதாகும். மத்திய செயலகத்தில் பணிபுரிய விரும்புவோர்கள் ஆங்கில மொழியை விட்டு இந்தி மொழியைக் கற்க விரும்பினார்கள். ஏனெனில் மத்திய பணியில் சேர்ந்த பின்பு அவர் இந்தி மொழியை கற்க வேண்டும் என்பது கட்டாயமாக்கப்பட்டது. அரசியலமைப்பின் 8வது அட்டவனையில் விதி எண்.344மற்றும் 351 ன்படி 22 மொழிகள் தேசீய மொழியாக்கப்பட்டுள்ளது.

## 7.3.2. இந்தியாவில் பயங்கரவாதம் மற்றும் மதவாதம்: (Terrorism and Religionism in India)

உலகெங்கும் அதிகரித்து வரும் பயங்கரவாதம், இந்தியாவிலும் தலைவிரித்து ஆடுகிறது என்றால் மிகையல்ல. எல்லைதாண்டிய (Cross order Terrorism) பயங்கரவாதம் ஒவ்வொரு ஆண்டும் கணக்கற்ற படையினரையும், அப்பாவிப் பொதுமக்களையும் பலிவாங்குகிறது. காஷ்மீரிலும் மற்ற எல்லைப் பகுதிகளிலும் இராஜ்ஜிய மற்றும் போர் முறைகளினால் இந்திய மத்திய அரசாங்கங்கள் இதுகாறும் இத்தகைய பயங்கரவாதத்தை ஓரளவு மட்டுப்படுத்தியுள்ளன; முற்றிலும் களைய இயலவில்லை. இமயத்திற்குச் செல்லும் யாத்ரீகர்களைக் கூட இப்பயங்கரவாதிகள் விட்டுவைப்பதில்லை.

மத ரீதியான பயங்கரவாதம் என்பது சில மத அடிப்படைவாதிகளின் குழுக்களினால் கட்டவிழ்த்துவிடப்படுகின்றன.

இவற்றிற்கு வெளிநாட்டுப் பண உதவியும், தூண்டுதலும் பெரிதும் ஆதரவாக உள்ளன. இந்திய அரசு இக்குழுக்களைத் கண்டுபிடித்து, கண்காணித்து அவ்வப்போது தடைசெய்தாலும் கூட, மறு பெயரில், வேறு வேறு இடங்களில் இவை மீண்டும் மீண்டும் தலைதூக்கி இந்திய அரசியலில் குழப்பம் விளைவிக்க முயல்கின்றன. தற்கொலைப் படையினர் தாக்குதல், பயங்கர வெடிகுண்டு வீசி மக்களையும், சொத்துக்களையும், பொது வசதிகளையும் அழிக்க முற்படல் போன்றவை இக்குழுக்களுக்குக் கை வந்த கலை. இந்திய அரசு இத்தவைய பயங்கரவாதத்தினை ஒழிக்க எதிர் நடவடிக்கைகளை அவ்வப்போது எடுத்து வருகிறதுடன் மக்களையும் தற்காப்பு முறைகளில் பயிற்றுவிக்கிறது.

மத அடிப்படை வாதத்தின் மற்றொரு வடிவம் குறுகிய மதக் கண்ணோட்டத்துடன் செயல்படும் பெரும்பான்மை, மற்றும் சிறுபான்மை மதங்களைச் சேர்ந்த குழுக்களினால் ஏற்படுவதாகும். இவை சுயநலமான குறுகிய அரசியல் நோக்கங்களை அடைவதற்காக தேசியத்தையும், மதநல்லிணக்கத்தையும், குலைக்கின்றன. மத வழிபாட்டுத் தலங்களையும் மதத்தலைவர்களையும் தாக்குவது, இனக்கலவரங்களைத் தூண்டுவது போன்ற வழி முறைகளை இவை கையாள்கின்றன.

தேசியத்திற்கு எதிரான பிராந்திய மனப்பான்மை கொண்டவர்களிடமிருந்து தோன்றுவது, மற்றொருவிதமான பயங்கரவாதமாகும். மத்திய—மாநில மற்றும் மாநில—மாநிலப்பிரச்சனைகளை, அமைதியாகவும், சுமுகமாகவும் பேசித் தீர்ப்பதைத் தவிர்த்து, பிராந்திய உணர்ச்சிகளைத் தூண்டி அழிவுப்பாதையில் செலுத்துவது இவர்களின் செயலாகும். இதற்காக மொழி, இனம், மதம், பிராந்தியம் எனும் குறுகிய உணர்ச்சிகளைக் கட்டவிழ்த்து விட்டு, பயங்கரவாதத்தைத் தூண்டி, அரசியலில் சுயலாபம் சம்பாதிப்பதே இக்குழுக்களின் நோக்கமாகும்.

அரசியலுக்கும் சட்டவிரோதக் குழுக்களுக்கும் இடையேயுள்ள தகாத உறவு, போதை மருந்துக் கும்பல், ஆயுதக்கடத்தல் கும்பல் இவைகள் உள்நாட்டிலோ, வெளிநாட்டிலோ வெளிப்படையாகவும், மறைமுகமாகவும் ஆதரிக்கும் தலைவர்கள் ஆகிய சக்திகளும் பயங்கரவாத்திற்குக் காரணமாகும்.

இதைக்கட்டுப்படுத்த பல்வேறு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டள்ளன. படையும், காவல்துறையும் பயங்கரவாதத்தை அடக்குவதற்காக மேலும் மேலும் ஈடுபடுத்தப்பட்டள்ளன. சட்ட ரீதியாகவும் தடா, பொடா, குண்டர் சட்டம் போன்றவையும் கையாளப் பட்டு ஒரளவு வெற்றி கிட்டியுள்ளது

> முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக்கான கேள்விகள்
>
> 1. பிராந்தியத்தின் வளர்ச்சிபற்றி ஒரு சிறு குறிப்பு எழுதுக.
>
> 2. அறிஞர் அண்ணாதுரையின் ஹிந்தி மொழி எதிர்ப்பு பற்றி எடுத்துரைக்கவும்.
>
> 3. சீக்கியர் தனி மாநில கோரிக்கைக்கு தாராசிங் அவர்கள் பங்கினை விளக்குக.

எனலாம். மக்களது விழிப்புணர்ச்சி, பயங்கரவாதத்தை எதிர்க்கும் மகத்தான சக்தி என்பதையும் மறக்கலாகாது.

## 7.4. தொகுப்புரை:

மொழிவாரியாக, இந்திய நாட்டைப்பிரிப்பது என்பது ஆங்கிலேயர்கள் ஆரம்பித்த பாடம். சென்னை மாகாணம் 1956—ல் மொழி அடிப்படையில் ஆந்திரா, கர்நாடகம், மலையாளம், சென்னை, என்று நான்கு மாநிலங்களாக பிரிந்தன. மொழிவாரிப் பிரச்சனை தமிழ்நாட்டில் ஒரு புதிய தனிக்கட்சியைத் தோற்றுவித்தது. ம.பொ. சிவஞானம் (மயிலாப்பூர் பொன்னச்சாமி மகன் சிவஞானம்) என்பவரால் 1946, நவம்பர் 21ம் தேதி தமிழரசுக் கழகம் என்ற பெயரில் தோற்றுவிக்கப்பட்டது. அக்கட்சியின் நோக்கம் மொழிவாரி மாநிலங்களை சீர்திருத்தி அமைக்க வேண்டும் என்பதாகும். இவர் திருத்தணி தமிழ்நாட்டுடன் சேர வேண்டும் என மிகப்பெரிய போராட்டம் செய்து சிறை சென்று வெற்றியும் கண்டவர். இந்திய தேசத்திற்குட்பட்ட அனைத்து மாநிலங்களும் மொழிவாரியாக மாநிலங்களாக வேண்டும் என்ற கிளர்ச்சி எழுந்தன. மாநிலங்களின் மறுசீரமைப்ப குறித்து ஆய்ந்து அறிக்கை செய்வதற்கு நேரு, படேல், பட்டாபி சீதாரமையா ஆகியோரைக் கொண்ட குழு ஒன்று அமைக்கப்பட்டு அதில் வெற்றியும் கண்டார்கள். மாநிலங்களின் மறுசீரமைப்புச் சட்டம் 1956 ஆகஸ்ட் 31ல் இயற்றப்பட்டது. இதன் அடிப்படையில் இந்தியாவில் பல புதிய மாநிலங்களும், மத்திய நேரடி ஆட்சிக்குட்பட்ட பகுதிகளும் மத அடிப்படை வாதிகளால் கட்டவிழ்த்து விடப்பட்டுள்ளது. மேலும் மதவாதம், தீவரரவாதம் ஆகியவை இந்தியாவின் ஒருமைப்பாட்டுக்க குந்தகம் விளைவித்துக் கொண்டு இருக்கின்றன. இன்று அரசியலில் பிராந்திய மற்றும் மதவாதமும் தலைதூக்கி இருப்பதால், இனிவரும் தேர்தலில் எந்த ஒரு தனிப்பட்ட அரசியல் கட்சிக்கும் தனிப்பெரும்பான்மை கிடைக்காது என்று அரசியல் அறிஞர்கள் கூறுகிறார்கள்.

## 7.5. முக்கியவார்த்தைகள்: (Key words)

1. இணைவுப்பத்திரம் : ஐக்கிய இந்தியாவை உருவாக்குவதற்கு சுதேச மன்னர்கள் இந்தியாவுடன் சேரும் வகையில் ஏற்பட்ட ஒப்பந்தம்
2. மொழிவழி மாநில மறுசீரமைப்புக்குழு : மக்களின் மனநிலை, தேசீய உணர்வு, மொழிப்பற்று இவற்றை ஆராய்ந்து மொழி

| | | |
|---|---|---|
| | | அடிப்படையில் மாநிலங்களை மாற்றி அமைப்பதாகும். |
| 3. ம.பொ. சிவஞானம் | : | தமிழரக்கழகம் என்ற தனிக் கட்சியை தோற்றுவித்து, சிறை சென்று திருத்தணியை தமிழகத்துடன் இணைத்த பெருமைக்குரியவர் |
| 4. பொட்டி ஸ்ரீராமுலு | : | ஆந்திர மாநில பிரிவினை கோரி 57 நாட்கள் உண்ணாவிரதம் இருந்து உயிர்நீத்து தனியாக ஆந்திரம் என்கிற மாநிலத்தை உருவாக்கி தந்தவர். |
| 5. திராவிடஸ்தான் | : | பெரியார், அண்ணா போன்ற தலைவர்கள் சுதந்திர திராவிட நாட்டை அடைவதற்க ஏற்படுத்தப்பட்ட அமைப்பு. |

## 7.6. முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனை கேள்விக்கான பதில்கள்

| | | |
|---|---|---|
| கேள்வி எண். 1 | — | இந்த கேள்விக்கான விடையை பகுதி எண்.7.1.ல் அறிக. |
| கேள்வி எண். 2 | — | இந்த கேள்விக்கான விடையை பகுதி எண்.7.1.1.ல் அறிக. |
| கேள்வி எண். 3 | — | இந்த கேள்விக்கான விடையை பகுதி எண்.7.1.6.ல் அறிக. |

## 7.7. இந்த அலகு சம்பந்தப்பட்ட மேலும் படிக்க வேண்டிய நூல்கள்


1. Paul Milkinson; Terrorism and the Liberal State; Macmillan, London: 1986.
2. Dasgupta.J; Language conflict and National Development; Berkaley, University of Califorin a press 1976.
3. Washbrook.D.A; The Emergence of Prouincial Politics; Vikas; 1976.


## 7.8. வினாக்கள் / செயல் முறைப்பயிற்சிகள்

1. பிராந்தியத்துவம் வளர்ச்சியினால் இந்திய அரசியலின் தாக்கநிலை விவரி.

2. திராவிடநாடு கோரிக்கையில் அறிஞர் அண்ணாவின் பங்கினை விளக்குக.
3. இந்தியாவில் எழுந்த ஆட்சிமொழி பிரச்சினையை கூர்ந்தாய்க.
4. 1956ம் ஆண்டு இயற்றப்பட்ட மாநில மறுசீரமைப்புச் சட்டத்தின் சிறப்புத்தன்மையினை விளக்குக.
5. இந்திய சமஸ்தானங்களின் ஒருங்கிணைப்பில் சர்தார் படேல் ஆற்றிய பங்கினை எடுத்துரைக்கவும்.

குறிப்பு

# அலகு – 8

# தேர்தல்களும் தேர்தல் சீர்திருத்தங்களும்: கட்சி முறை: தன்னலக்குழுக்கள்

## முன்னுரை:

பிரதிநிதித்துவ மக்களாட்சி நடைபெறும் நாடுகளில் பொது மக்கள் தங்களுடைய பிரதிநிதிகளைத் தோந்தெடுக்கின்றார்கள். தேர்தலில் பெரும்பான்மை பெற்ற அரசியல் கட்சி ஆட்சி அடைக்கிறது. தேர்தல் முக்கியமாக அனைத்து தரப்பட்ட மக்களின் ஏகோபித்த எண்ணங்களின் ஒருங்கிணைப்பு வழிவகை செய்யவேண்டும் என்பதாகும். அரசியலமைப்பின் 324—வது விதி தேர்தல்களை நடத்த சுதந்திரமாய் இயங்கம் தேர்தல் ஆணையம் ஒன்று அமைக்கவழி வகை செய்கிறது. அரசியலமைப்பின் 82—வது விதி மக்கட் தொகை கணக்கீட்டின் அடிப்படையில் இட ஒதுக்கீடு செய்ய வழி வகுத்துள்ளது. அரசியலமைப்பின் 330 –வது விதி இட ஒதுக்கீட்டிற்க வழி வகை செய்துள்ளது. வயது வந்தோர்க்கு வாக்குரிமையை 326—விதி வழங்கியது. மக்களாட்சி மாண்பினை சோதிக்கும் சோதனைக் கூடமாக தேர்தல் கருதப்படுகிறது. மக்களை முட்டாளாக்கி அரசியல்வாதிகள் வலையில் வீழ்த்தும் வாய்ப்பினை அரசு முழுமையாக தடுக்க வேண்டும். அரசியல் கட்சிகளுக்கு அரசியலமைப்பு ரீதியான அங்கீகாரம் வழங்க வேண்டும். அப்பொழுதுதான் சிறிய கட்சிகள் மறையும், தேர்தல்கள் ஒழுங்காய் நடைபெறும், மக்களாட்சி உயிருடன் திகழும். மேலும் தன்னலக்குழுக்களின் நலன்களை அரசியல் கட்சிகள் மக்களாட்சி நாடுகளில் பெரும்பாலும் புறக்கணிப்பதில்லை.

## நோக்கங்கள்: (Objectives)

இந்திய தேர்தல் முறையின் கூறுகளை கற்றறிதல்.
இந்திய மக்களாட்சியில் நடைபெறும் தேர்தல்கள் மற்றும் தேர்தல் சீர்திருத்தங்களை புரிந்து கொள்ளுதல்.
இந்திய அரசியலில் அரசியல் கட்சியின் பங்கினை உணர்தல்.
இந்தியாவில் தன்னலக் குழுக்கள் செயல்படும் விதத்தினை கற்றறிதல்.

## அலகின் வடிவமைப்பு: (Unit Structure)

இந்திய தேர்தல் முறையின் கூறுகள்
இந்திய தேர்தல் சீர்திருத்தத்தின் போது ஏற்படும் பிரச்சனைகள்
இந்தியாவில் அரசியல் கட்சி முறை செயல்படும் விதம்.
இந்திய அரசியல் கட்சி முறையின் பண்புகள்.

காங்கிரஸ் கட்சியின் பிளவு
தன்னலக் குழுக்களின் இயல்பு
சமுதாய சங்கங்களின் கோரிக்கைகள்
சமுதாய சங்கங்களின் வளர்ச்சி குழுக்களுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகள்
தொகுப்புரை
முக்கிய வார்த்தைகள்
முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனை
இந்த அலகு சம்பந்தப்பட்ட மேலும் படிக்க வேண்டிய நூல்கள்
வினாக்கள் / செயல்முறைப்பயிற்சிகள்.

## 8.1. தேர்தல்களும் தேர்தல் சீர்திருத்தங்களும் இந்தியத் தேர்தல் முறையின் கூறுகள்

இந்தியாவில் கடைப்பிடிக்கப்படும் தேர்தல்முறை பிரிட்டனிடமிருந்து எடுத்துச் கொள்ளப்பட்டதாகும். அங்கு மக்கள் பிரதிநிதித்துவச் சட்டப்படி தேர்தல்முறை நடைபெறுகிறது. அது குறைந்த பெரும்பான்மை முறை என்று விவரிக்கப்படுகிறது. அது மேலும், முதலில் வரைக்கோடு கடந்த முறை என்றும் விவரிக்கப்படுகிறது. அதாவது எந்தக் குதிரை வேகமாகப் போய் வெற்றி எல்லைக் கோட்டை முதலில் கடக்கிறதோ, அது வெற்றி பெற்றதாகக் கருதப்படுகிறது. இரண்டாவது குதிரை முதல் குதிரையுடன் சென்று கொஞ்ச தூரத்தில் பின் தங்கினாலும் வெற்றி பெற்றதாகக் கருதப்படாது. அதே போல் உறுப்பினர்கள் மிக அதிகமான வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற வேண்டியது அவசியம் இல்லை. ஒரு உறுப்பினர்கள் மிக அதிகமான வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றாலும், வெற்றி பெற்றவராகக் கருதப்படுகிறார். இந்திய தேர்தல் முறைக்கும், இங்கிலாந்தின் தேர்தல் முறைக்குமுள்ள ஒரே வித்தியாசம் இந்தியத் தேர்தல் முறையில் தாழ்த்தப்பட்வர்களுக்கும், மலை சாதியினருக்கும் சில இடங்கள் ஒதுக்கப்பட்டிருப்பதாகும். இந்தியத் தேர்தல் முறையின் கூறுகள் கீழே விவாதிக்கப்படுகின்றன.

1. இந்தியா வாக்காளர் தொகுதிகளை ஒற்றை உறுப்பினர் தொகுதிகளாகப் பிரித்திருக்கிறது. தற்பொழுது 542 வாக்காளர் தொகுதிகள் உள்ளன. அங்கு பன்மை அல்லது பல வாக்காளர் தொகுதிகள் இல்லை. இரண்டு உறுப்பினர்களை உடைய வாக்காளர் தொகுதிகள் முன்பு அறிமுகப்படுத்தப்பட்டிருந்தன. தற்போது இரட்டை உறுப்பினர் தொகுதி முறை நீக்கப்பட்டுவிட்டது. இப்பொழுது உள்ள ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ள வாக்காளர் தொகுதிகள் கூட ஒற்றை ஒற்றை உறுப்பினர் முறையில் தான் அமைந்துள்ளது.

2. தேர்தல்களில் பதிவான செல்லுபடி வாக்களில் அதிக வாக்குகள் பெற்றவர் தேர்ந்தெடுக்கப்படுகிறார். ஒரு உறுப்பினர் அறுதிப் பெரும்பான்மை வாக்கப்பெற வேண்டும் என்பது அவசியமில்லை. ஏறக்குறைய எல்லா தொகுதிகளிலும் பல உறுப்பினர்கள் போட்டியிடுகிறார்கள். ஆகையால் முப்பதிலிருந்து நாற்பது சதவிகிதம் வரை கூட மொத்தம் பதிவான செல்லுபடி வாக்குகள், குறிப்பிட்ட ஒரு வாக்காளருக்கு அவருடைய தொகுதியில் கிடைக்கப் பெற்றாலும் கூட, அவர் தோந்தெடுக்கப்பட்டவர் என்று அறிவக்கப்படுகிறார். ஒரு உறுப்பினரை விட ஒரு வாக்கு அதிகம் பெற்று இருந்தாலும் அவர் தேர்ந்தெடுக்கப்படவராக அறிவிக்கப்படுகிறார். மற்ற உறுப்பினர்கள் எல்லாம் சேர்ந்து மிக அதிக வாக்குகள் பெற்று இருந்தாலும் அதற்கு யாதொரு மதிப்போ, சட்ட செலலுபடி நிலையோ கிடையாது.

3. ஒவ்வொரு பத்து ஆண்டும், மக்கள் தொகை புள்ளி விவரக் கணக்கை எடுத்து பின் தொகுதிகளை வரையறுக்கும் ஆணையம் நியமிக்கப்பட்டு, அது வாக்காளர் தொகுதிகளை வரையறை செய்யும். பாராளுமன்ற வாக்காளர் தொகுதிகள் பல சட்டமன்ற வாக்காளர் தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டு, மற்றொரு பாராளுமன்ற வாக்காளர் தொகுதியில் அமையாமல் வரையறுக்கப்படும். எந்த ஒரு அரசியல் கட்சியின் பெரும்பான்மை உறுப்பினர்கள் வெற்றி பெறும்படி வாக்காளர் தொகுதிகள் அமைக்கப்படாமல் இருப்பது மனநிறைவைத் தரும் அம்சமாகும்.

4. இந்தியா சுதந்திரம் அடைந்த பிறகு வயதுவந்தோருக்கு வாக்குரிமை என்ற கொள்கையை வேறு எந்த தகுதியையோ அல்லது பண்பையோ வரையறுக்காமல் நாம் உலக முழுவதுக்கும் ஏற்புடைய கொள்கையை அறிமுகப்படுத்தியிருக்கிறோம். 21 வயதுக்கு மேற்பட்ட எல்லா வயது வந்த குடிமக்களுக்கும் வாக்களிப்பதற்கும் உரிமை கொடுக்கப்பட்டு உள்ளது. 25 வயதைக் கடந்த ஒரு குடிமகனுக்கு தேர்தலில் போட்டியிட உரிமை கொடுக்கப்பட்டுள்ளது. வாக்குப் போடும் உரிமையிலோ, அல்லது, போட்டியிடும் உரிமையிலோ சாதி, மதம், இனம், நிறம் முதலிய பாகுபாடு கடைபிடிக்கப்படுவதில்லை.

5. 1967 ஆம் ஆண்டு வரை பாராளுமன்றத்திற்கும், மாநில சட்டமன்றங்களும் தேர்தல்கள் ஒரே நேரத்தில் சேர்ந்து நடந்ததால், இரண்டிற்கும் சேர்த்து ஒரு பொதுத்தேர்தல் நடப்பது வழக்கம். இருந்தபோதிலும், 1977—ல் பாராளுமன்றத்திற்கு நடைபெற்ற தேர்தல்கள், மாநில சட்டமன்ற தேர்தல்களிலிருந்து பிரிக்கப்பட்டன. இந்த மாற்றம் மக்கள் வாக்குப் போடும் மனப்பாங்கை வெகுவாகப்

பாதித்துள்ளது. இவ்வாறான மனப்பாங்கு மாநிலங்களிலும், மத்திய அரசியலும் அரசியல் மனநிலையை மாற்றி இருக்கிறது.

6. இந்தியாவில் தேர்தல் முடிவுகள் பற்றித் தொடரப்படும் வழக்குகள் மிக அதிகமானவை, மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம் தேர்தல் பிரச்சாரத்தை நடத்துவதற்கு நிறைய தடைகளை விதித்து இருக்கிறது. அது குறைந்த பட்சம் கடைபிடிக்க வேண்டிய தேர்தல் ஒழுங்கு முறைகளை விதித்து இருந்த போதிலும், மிக அதிகமான தேர்தல் புகார்கள் வெற்றி பெற்றவர்களுடைய தகுதிகளையும், அந்தஸ்தையும், பொதுக் கடமைகளை ஆற்றுவதையும் பாதிக்கிறது. தேர்தல் புகார்களின் தீர்ப்பு வருவதற்குள் சட்டமன்றத்தில் பாதிக்கு மேற்பட்ட பதவிக்காலம் முடிந்து விடுவதால் அவ்வாறாக தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர் தனது வேலையை, தனது முழுக்கவனத்தையும் செலுத்தி செய்ய இயலாமல் போகிறது.

7. இந்தியாவில் வாக்குப் போடுவது அல்லது போடாமல் இருப்பது மக்களின் விருப்பத்தைப் பொருத்தாகும். இருந்தபோதிலும் ஒவ்வொரு தேர்தலிலும் வாக்காளர்கள் அதிக விகிதத்தில் வாக்குப் பதிவு செய்து வருகிறார்கள். அதிக எண்ணிக்கையில் வாக்காளர்கள் வாக்களிப்பது என்பது அரசியல் முன்னேற்றத்தைக் குறிக்கும் என்று சொல்ல முடியாவிட்டாலும் அது மக்கள் தங்களின் வாக்குரிமையின் முக்கியத்துவம் பற்றி அறிந்தும் அதில் ஆர்வமுடையவர்களாகவும் இருந்து, சமூக மாற்றத்திற்குக் காரணமாக இருப்பதைக் காட்டுகிறது

8. இந்தியத் தேர்தல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்ட வாக்காளர்களைத் திரும்ப அழைத்துக் கொள்வதற்குச் சட்டத்தில் இடமில்லை. இது தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் தங்களுக்கு முனபாக தீர்விற்குரிய பிரச்சனைகளில் தங்களுடைய தீர்மானங்களை, தாங்களாகவே சுதந்திரமாக தீர்மானிக்க வகை செய்கிறது. அவர்கள் கட்சி கொரடாவிற்குக் கீழ்ப்படிந்தும், தொகுதி மக்களின் விருப்பங்களுக்கும், எண்ணங்களுக்கும் மதிப்பு கொடுத்தும் செயல்பட வேண்டியிருந்தாலும், கொடுக்கப்பட்ட அதிகார வறையறைக்குள் அவர்கள் சொந்த விருப்பு வெறுப்புகளுகக்கு ஏற்ப சுதந்திரமாகச் செயல் புரிகிறார்கள்.

9. ஐக்கிய அமெரிக்க நாட்டில் நடைமுறையில் இரண்டு தேர்தல்கள் இருக்கின்றன. முதலாவதாக, ஒருவர் சட்டம் இயற்றும் துறைக்கோ, அல்லது அதிபர் பதவிக்கோ அல்லது வேறு எந்த பொதுப் பதவிக்கோ தேர்தலில் நிற்ச விருப்பப்பட்டால், அவர் தன்னுடைய கட்சியில் முதலில் போட்டியிட்டு வெற்றி பெறகிறார்.

அதில் வெற்றி பெற்ற பிறகு பொதுத் தேர்தலைச் சந்திக்கிறார். இது அமெரிக்காவில் அவசியமான அடிப்படைகள் என்று அழைக்கப்படுகிறது. ஆனால் இந்தியாவில் கட்சிகள் வேட்பாளர்களைத் தேர்ந்தெடுக்கின்றன. தேர்தலில் வேட்பாளராக நிற்கும் எந்த ஒரு நபரும் எந்த கட்சிகயையோ அல்லது பிரிவையோ சாராவிட்டாலும் தேர்தல்களில் போட்டியிடலாம்.

### 8.1.1. தேர்தல் சீர்திருத்தங்கள்

கடந்த பல ஆண்டுகளில் நடைபெற்றுள்ள தேர்தல்முறை தன்னுடைய குறைகளையும், கட்டுப்பாடுகளையும் சுட்டிக்காட்டியிருக்கிறது. மக்கள் பிரதிநித்துவச் சட்டம் 1951ல் ஏற்படுத்தியுள்ள பல்வேறு திருத்தங்கள் தேர்தல் முறையில் உள்ள பிரச்சினையையும், குறைபாடுகளையும் தீர்க்கவில்லை. தற்காலத் தேர்தல் முறையில் உள்ள குறைபாடுகளுக்கும், கட்டுப்பாடுகளுக்கும் சில அடிப்படையான தீவிர சீர்திருத்தங்கள் உடனடியாக தேவைப்படுகின்றன. பணச் செல்வாக்கு, கறுப்புப் பணம் முதலியவை தற்போதைய தேர்தல் முறையில் அபாய அளவுக்கு புகுந்து, இந்திய தேர்தல் முறைக்கு மிகப்பெரிய சவாலாக இருக்கின்றன. நம்முடைய தேர்தல் முறையில் கொண்டுவரப்பட வேண்டிய சில அவசியமான சீர்திருத்தங்கள் கீழ்க்கண்டவாறு விவாதிக்கப்பட்டு இருக்கின்றன.

**1. குறைந்தபட்ச வாக்குப்போடும் வயதும் தகுதி வயதும்**

நமது நாட்டில் அரசியல், பொருளாதா சமூக வாழ்க்கையில் 18 வயதிலிருந்து 21 வயது வரை உள்ள பொது மக்கள் முக்கியமான பங்கு வகிக்கிறார்கள். மேலும், அவர்களுடைய பங்கு கொஞ்சம் கொஞ்சமாக அதிகமாகிக்கொண்டு இருக்கிறது. குறைந்தபட்ச வாக்களிக்கும் வயது இந்தியாவில் 18 வருடங்களாக இருக்கிறது. ரஷ்யா, பிரிட்டன், ஸ்ரீலங்கா போன்ற நாடுகள் வாக்களிக்கும் வயதை 18 வயதாக குறைத்து இருக்கின்றன. இந்தியாவில் இளைஞர்களின் வற்புறுத்தலால் பல மாநிலங்கள் தங்களுடைய ஊராட்சி, மாநகராட்சி தேர்தல்களில் வாக்களிக்கும் உரிமையை 18 வயது அடைந்தவர்களுக்கு கொடுத்து இருக்கின்றன. இளைஞர்களுக்குச் சட்டமன்றம் மற்றும் பாராளுமன்ற தேர்தல்களில் வாக்களிக்கும் வயதை 21ல் இருந்து 18 வயதாகக் குறைந்துள்ளது போல பொதுத்தேர்தலில் போட்டியிடுவதற்கும் குறைந்தபட்ச வயதை 25—ல் இருந்து 21 வயதாகக் குறைக்க வேண்டும் என்ற கோரிக்கை உள்ளது.

2. பெரும்பான்மை முறை

தற்போதைய பெரும்பான்மை முறையும் தனிநபர் வாக்காளர் தொகுதி முறையும், பல கட்டுப்பாடுகளினால் அது பணம் படைத்த வகுப்பினர்களுக்குச் சாதகமாக இருக்கின்றன. 40 முதல் 50 சதவிகித செல்லுபடியான வாக்குகள் பதிவானாலும் 70 சதவிகித இடங்களை சட்டமன்றத்தில் பெறலாம். இந்த முறையின் கீழ் சில கட்சிகள் ஒரு இடம் கூட பெறாமல் போகலாம். உதாரணமாக, 1980 ஜனவரியில் தமிழ்நாட்டில் நடந்த பாராளுமன்ற தேர்தல்களில் கம்யூனிஸ்டு கட்சிகள் ஒரு இடம் கூட பெறவில்லை. மேலும், இந்த முறை ஒரு அரசியல் கட்சியின் ஏகபோக தனி உரிமையையும், வட்டாரத்துவத்தையும், சாதி முறையையும் வளர்க்கிறது. இந்த முறை முக்கியமாக தேர்தல்களில் பணச் செல்வாக்கையும், ஊழல் முறைகளையும் வளர்க்கிறது என்று கூறப்படுகிறது.

மேற்கூறிய குறைபாடுகளைக் களைவதற்காக தற்போதுள்ள பெரும்பான்மை முறை, விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ முறையினால் மாற்றப்படவேண்டும். நமது மக்களிடையே பல்வேறு அரசியல் கட்சிகளும் செல்வாக்கு பெற்று இருப்பதால், விகிதாச்சாரப் பிரதிநிதித்துவம் நமது நாட்டுச் சூழ்நிலைக்கு சிறந்ததாக இருக்கும். அது சட்டம் இயற்றும் சட்ட மற்றும் பாராளு மன்றங்களில் மக்களுடைய ஆதரவை மிகச் சரியாகப் பிரதிபலிக்கும். பல்வேறு அரசியல் கட்சிகளுக்கு எவ்வளவு செல்லுபடியான வாக்குகள் பதிவாகி இருக்கின்றன என்ற விகிதாச்சாரத்தில் இடங்கள் கொடுக்கப்படும். சிறுபான்மை மக்களுக்கும், பிராந்தியங்களுக்கும், நமது நாட்டின் பல்வேறு அபிப்பிராயங்களுக்கும் உரிய பிரதிநிதித்துவம் இருப்பதற்கு விகிதாச்சார பிரதிநிதித்துவ முறை உறுதியளிக்கும் என்று சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

பல்வேறு விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ முறைகளில், இந்தியாவிற்கு பட்டியல் முறை மிகப் பொருத்தமானதாக இருக்கும். இந்த முறையில் ஓட்டுப் போடுபவர்கள் கட்சிப் பட்டியலில் உள்ள எல்லோருக்கும் ஓட்டுப் போடுகிறார்கள். ஒரு கட்சியில் வேட்பாளர்கள் எந்த பட்டியல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்ற முன் மதிப்பீட்டை கட்சி சமர்ப்பிக்கிறது. வாக்காளர் ஏதாவது ஒரு கட்சிப் பட்டியலுக்கு ஓட்டுப் போடுகிறார். பட்டியல் முறையின் கீழ் ஒரு கட்சியில் உள்ள பட்டியலிலோ அல்லது மற்றொரு கட்சியில் உள்ள பட்டியலிலோ தன்னுடைய விருப்பப் பிரகாரம் வாக்காளர் ஓட்டுப் போடுகிறார். மலைசாதியினருக்கும், தாழ்த்தப்பட்ட சாதியினருக்கும் சில இடங்கள் ஒதுக்கீடு செய்வதற்கு வகை செய்யப்பட்டு இருக்கிறது. ஆனால், அந்தப் பட்டியல் முறையானது மிகக் கடினமாகவும், படிப்பறிவில்லாத இந்திய மக்கள் சுலபமாகப் புரிந்துகொள்ளும் படியாகவும் இல்லையென்பதையும் நாம் நினைவில்

கொள்ளவேண்டும். மேலும், இந்த முறை பல கட்சிகள் தோன்றுவதற்கும் வழிவகுக்கும். முதல் குறைபாட்டை பட்டியல் முறையில் அடையாளக் குறியை பயன்படுத்தி நீக்கலாம். இரண்டாவது குறைபாட்டைப் பொறுத்த வரையில் பட்டியல் முறை அல்லாத போதும் கூட, இந்தியாவில் பல கட்சிகள் இருக்கின்றன என்பதைத்தான் சுட்டிக் காட்ட முடியும்.

3. தேர்தல் ஆணையத்தை மாற்றியமைத்தல்

தேர்தல் ஆணையமும், அதனுடைய அமைப்பும் நாடு முழுவதும் வலிமை பெறச் செய்யவேண்டும். தேர்தல் கமிஷன் ஒரு தனி மனிதனின் அமைப்பாக இருக்கக்கூடாது. மேலும் அது இந்தியா பொதுப்பணி அல்லது இந்திய காவல் பணி அதிகாரிகளைக் கொண்டு இருக்கக்கூடாது. தேர்தல் ஆணையமானது தலைமை தேர்தல் கமிஷனருடன், மூன்று உறுப்பினர்களைப் பெற்று குடியரசுத் தலைவரால் அமைக்கப்படவேண்டும். இது தேர்தல் ஆணையத்தின் அமைப்பில் உள்ள பிரிவினை மனப்பான்மையைக் கட்டுப்படுத்தும்.

4. தேர்தல் பட்டியல் திருத்தங்கள்

வாக்குப் பதிவேட்டில் உள்ள குறைபாடுகள் திருத்தப்பட்டு, அதில் புதிய பெயர்கள் சேர்க்கப்பட்டு தவறான பெயர்கள் நீக்கப்பட்டும் திருத்தி அமைக்கப்படவேண்டும். வாக்காளர் பதிவேட்டில் தவறான பெயர்கள் சேர்க்கப்பட்டுள்ளன என்று கூறப்படும் புகார்களை விசாரிக்க ஒரு சிறந்த அமைப்பு இருக்க வேண்டும். ஒவ்வொரு 6 மாதத்திற்கு ஒரு முறையும், வாக்களிக்கும் வயதையடைந்தவர்கள் தங்களுடைய பெயர்களை வாக்காளர் பட்டியலில் சோத்துக் கொள்வதற்காக வாக்காளர் பட்டியலைத் திருத்தி அமைக்க வேண்டும்.

5. தேர்தல் சச்சரவுகளை விரைவாகத் தீர்த்து வைத்தல்

தேர்தல் சச்சரவுகளை தேர்தல் முடிவுகள் அறிவித்த 6 மாத்திற்குள் தீர்த்து வைப்பதற்கு ஒரு சிறந்த அமைப்பு இருக்க வேண்டும். தேர்தல் வழக்குகளை விசாரிக்கும் நீதிமன்றங்களை மிக விரைவாகத் தீர்வு அளிக்கும்படி அரசாங்கம் செயல்முறை கட்டளைகளை வழங்க வேண்டும்.

6. தேர்தலில் பண செல்வாக்கு:

மிக முக்கியமாக தேர்தல சீர்திருத்தம் தேர்தல்களில் பணச் செல்வாக்கைக் குறைப்பதாக இருக்க வேண்டும். தேர்தல் செலவுகளைச் சந்திக்க போதுமான வசதி வாய்ப்புகள் உள்ளவருக்குத்தான் தேர்தலில் கட்சி வேட்பாளராக போட்டியிட கட்சி இசைவு சீட்டுக் கொடுக்கிறது. சில

சமயங்களில் கட்சியில் வேட்பாளருக்கு உதவிடவோ அல்லது தேர்தலில் ஏற்படக்கூடிய முழுச்செலவுகளை சந்திக்கவோ முடிவதில்லை. இன்று வரை அரசாங்கம் கூட இந்த வகையில் யாதொரு கடுமையான நடவடிக்கைகளையும் எடுக்கவில்லை.

ஆனால் தேர்தல் ஆணையம் நான்காவது பொதுத் தேர்தலின் போது பணச் செல்வாக்கைக் குறைப்பதற்காக ஒரு சிறந்த பட்டியலைச் சமர்ப்பித்து. அது கீழ்க்கண்டவாறு சிபாரிசு செய்தது.

1. தேர்தல்களுக்கு உபயோகப்படுத்தப்படும் வாகனங்கள் ஒரு குறிப்பிட்ட வரையறைக்குள் இருக்க வேண்டும்.
2. தேர்தல்களில் பொது ஊர்வலங்களையும், ஆர்ப்பாட்டங்களையும் தடை செய்ய வேண்டும்.
3. சாலைகளில், ஒலி பெருக்கிகளைப் பயன்படுத்தக் கூடாது.
4. வேட்பாளர்களுடைய தேர்தல் செலவுகளைக் கட்சிகள் ஏற்க வேண்டும்

7. மாநிலங்கள் தேர்தல் செலவுகளைப் பகிர்ந்து கொள்ள வேண்டும்.

தனிப்பட்டவரோ அல்லது கட்சியின் நிதிகளில் இருந்தோ ஆகும் தேர்தல் செலவுகளை குறைக்க ஒவ்வொரு மாநிலமும் ஒரு நிதியை ஏற்படுத்த வேண்டும். கீழ்க்கண்ட செலவுகளும் வசதிகளும், ஒரு மாநிலத்தால் வேட்பாளருக்கு கொடுக்கப்படலாம்.

1. ஒரு மாநிலம், வாக்காளர் தொகுதியில் உள்ள வாக்காளர் பட்டியலில் 5 பிரதிகளுக்கு ஆகும் செலவை இலவசமாக தேர்தலில் போட்டியிடும் வேட்பாளருக்குக் கொடுக்கலாம். எந்த வேட்பாளருக்கும் பிணையமாக வைக்கக்கூடிய பணத்தைப் பெறுவதற்கு தகுதி பெறாமல் போய்விட்டால், அவர் அரசாங்கத்திற்கு அதற்கான செலவை திருப்பித் தரவேண்டும்.

2. ஒரு மாநிலம், வேட்பாளருக்கு ஓட்டுப் போடுபவருடைய அடையாளச் சீட்டுகளை (எந்த ஓட்டுச் சாவடியில் யார், யார் ஓட்டுப்போட வேண்டும் என்ற புள்ளி விபரங்களைக் கொண்ட ஓட்டுப் போடுபவருடைய அடையாளச் சீட்டுக்களை) இலவசமாகக் கொடுக்கலாம்.

3. மாநிலம், தபால் வில்லைகள், அச்சிடப்பட்ட அடையாளக் குறிகள், போஸ்டர்கள் போன்றவற்றை குறிப்பிட்ட தொகை மதிப்புக்கு இலவசமாகக் கொடுக்கலாம்.

8. அதிகார அமைப்பையும் அதனுடைய நிலையையும் தவறான வகையில் பயன்படுத்தல்

அமைச்சர்களும், மற்ற சட்டம் இயற்றுபவர்களும், மற்ற வேட்பாளர்களுக்கு கிடைக்காத அலுவல் அதிகாரத்தையும், வசதிகளையும் பயன்படுத்த அனுமதிக்கக் கூடாது. மேலும், தேர்தல் ஆணையம் தேர்தலை அறிவித்த உடன் பொருளாதார, சமூக நல திட்டங்களை கட்சி அதிகாரத்தில் உள்ள கட்சி அறிவிக்கக்கூடாது. அதிகாரத்தில் உள்ள கட்சி, அரசாங்க வழிமுறைகளில் உள்ள வசதிமுறைகளைத் தேர்தல் அறிவித்த பின்னர் தேர்தலில் வெற்றி பெறுவதற்காகப் பயன்படுத்தக்கூடாது. தேர்தல் அறிவித்து இருக்கிற காலத்தில், ஆட்சியில் உள்ள கட்சியும், மற்ற எதிர்க்கட்சிகளும், வானொலி, தொலைக்காட்சி போன்றவற்றை சரிசமமாக பயன்படுத்துவதற்கு வகை செய்ய வேண்டும். 1977 தேர்தல்களுக்கு பிறகு எல்லா கட்சிளும் வானொலி, தொலைக்காட்சிகளைப் பயன்படுத்துவதற்கு சரிசமமான நேரம் ஒதுக்கீடு செய்யப்பட்டு இருக்கிறது.

9. தகுதியின்மை

மக்கள் பிரதிநித்துவச் சட்டம், சட்டமன்றஉறுப்பினரின் தகுதியின்மையை வரையறுக்கிறது. இந்த வரையறைகள் போதுமானவைகள் அல்ல. பொருளாதாரக் குற்றங்களான பதுக்கல், கறுப்புப் பண மார்க்கெட், கள்ளக்கடத்தல் போன்ற பொருளாதாரக் குற்றம் புரிந்தவர்களையும், தீண்டாமையை செயல்படுத்துபவரையும், மற்ற நாட்டினருக்கு வேவு பார்ப்பவரையும் மற்றும் அரசாங்கப் பணியிலிருந்து ஊழல் குற்றத்திற்காக வெளியேற்றப்பட்டவரையும் தகுதி அற்றவர்கள் என்ற பட்டியலில் சேர்க்க வேண்டும்.

10. தேர்தல் செலவுகளும், செலவு வரம்பும்

தேர்தல் செலவுகளில் ஒரு சட்ட வரையறையை வகுப்பதின் மூலம் பணச் செல்வாக்கை தேர்தல்களில் கட்டுப்படுத்த முடியாது என்று அனுபவம் சுட்டிக்காட்டி இருக்கிறது. எனவே சில தீவிர நடவடிக்கைகளை எடுக்க வேண்டியது அவசியமாகிறது. இருந்தபோதிலும், தற்போதைய வரையறையை வைத்துக்கொண்டு தேர்தல் செலவுகள் போன்ற காரணங்களுக்காகவும், விலைவாசிகள் உயர்வுக்குத் தகுந்த படியும், மாற்றி அமைக்கவும் வேண்டும்.

தேர்தலில் ஒரு வேட்பாளர் எவ்வளவு செலவு செய்ய வேண்டுமென்ற செலவு வரம்பை விதித்து. அந்த வரம்புக்குள் வேட்பாளர் செய்யும் செலவும், அவர் கட்சி மற்றும் இதர அமைப்புகள் செய்த செலவும் அடங்குதல் வேண்டும். ஒரு வேட்பாளருக்கு கட்சியால்

செலவழிக்கப்பட்ட தேர்தல் செலவுகள் வேட்பாளர்களின் தேர்தல் செலவுகளில் அடங்க வேண்டும்.

பொதுத் தேர்தல் பிரச்சாரம் சம்மந்தமாக கட்சியின் அறிக்கை விளம்பரங்கள், துண்டு பிரசாரங்கள், தேர்தல் அறிக்கை போஸ்டர்கள் போன்றவைகளுக்கு ஒரு அரசியல் கட்சியால் செலவழிக்கப்பட்ட செலவுகள் எந்த ஒரு தனி வேட்பாளரினாலோ அல்லது வேட்பாளர் தொகுதியிலோ தேர்தல் செலவுகளுக்காக செலவழிக்கப்பட்ட கணக்கு எல்லையில் கணக்கிடக்கூடாது.

தனிப்பட்ட நபர்களாலோ அல்லது கம்பெனிகளாலோ, அரசியல் கட்சிகளுக்கு கொடுக்கப்படும் நன்கொடைகளை ஒட்டு மொத்தமாகத் தடை செய்ய வேண்டும். அவ்வாறான தடையை மீறினால் அவர்கள் தண்டிக்கப்பட வேண்டிய குற்றத்திற்கு ஆளாக வேண்டும்.

ஒரு வேட்பாளர் தனக்குக் கொடுக்கப்பட்டுள்ள தேர்தல் செலவுகள் வரையறைக்கும் மேல் செலவழித்ததாக தேர்தல் ஆணையம்நினைத்தால் உடனே அது குறித்து விசாரிக்க தேர்தல் ஆணையத்திற்கு அதிகாரம் கொடுக்கப்பட வேண்டும்.

## 11. வேட்பாளர் தொகுதி வரையறை புனராய்வு

தொகுதிகள் ஒரு கட்சி வெற்றி வேட்பாளர்கள் பெருவதற்குச் சாதகமாக மாற்றியமைக்கப்பட்டிருக்கிறது என்பன போன்ற புகார்கள் இங்கு இல்லை. வரையறை ஆணையத்தில் பிரதிநிதித்துவம் கொடுக்கப்பட வேண்டும். அதனுடைய வேலையை புனராய்வு செய்வதற்கு அங்கீகாரம பெற்ற எல்லா அரசியல்கட்சிகளுக்கும் அந்த வரையறை ஆணையத்தில் பிரதிநிதித்துவம் கொடுக்கப்பட வேண்டும்.

## 12. புதிய தேர்தல்களை வேகப்படுத்துதல்

அரசியலமைப்புச் சட்டமோ அல்லது வேறு எந்தச் சட்டமோ, மாநிலச் சட்டமன்றங்கள் கலைக்கப்பட்டவுடன் எப்பொழுது தேர்தல்கள் நடத்த வேண்டுமென்பதற்கு காலவரையறை குறிப்பிடவில்லை. அது போலவே பாராளுமன்றத்திற்கோ, சட்டமன்றத்திற்கோ எப்பொழுது இடைத்தேர்தல் நடைபெற வேண்டுமென்பதற்கும் காலம் எதுவும் வரையறுக்கப்படவில்லை. மக்கள் பிரதிநிதித்துவச் சட்டத்தில் சுமாராக ஆறுமாத காலத்திற்குள் தேர்தல்கள் நடத்த வேண்டுமென்ற விதிகள் சேர்க்கப்பட வேண்டும். அத்தியாவசியமான காரணங்களக்காக தேர்தலை ஒத்திப் போட வேண்டிய நிலைமை ஏற்பட்டால் அதற்கு பாராளுமன்றத்தில் ஒரு தீர்மானம் கொண்டு வந்து பெரும்பான்மை உறுப்பினர்கள் ஒப்புதல் பெற வேண்டும்.

13. ஆள் மாறாட்டத்தைத் தவிர்த்தல்

ஆள் மாறாட்டம் மற்றும் போலி ஓட்டுப்போடும் முறை நகர்ப்புறங்களில் அதிகமாகிக்கொண்டு வருகிறது. இந்தத் தவறைத் தவிர்ப்பதற்கு புகைப்படத்தோடு கூடிய அடையாள அட்டை சட்டப்பூர்வமான வாக்காளர்களுக்கு அளிக்க வேண்டும். அதனால் ஆகக் கூடியச் செலவும், தொழிலாளர் உழைப்பும், ஆள் மாறாட்ட பிரச்சனையை உடனடியாக கட்டுப்படுத்துவதற்குத் தடையாக இருக்கக்கூடாது.

14. தேர்தல்களை நடத்துதல்

தேர்தல்களில் மக்கள் தங்களுடைய ஓட்டுக்களை யாருடைய அச்சுறுத்தலுக்கும் பயப்படாமல் எந்த ஒரு அரசியல் கட்சியின் தூண்டுதல்களுக்கும் குறுக்கீடுகளுக்கும் ஆளாகமாமல் சுதந்திரமாகவும் தைரியமாகவம் வாக்களிக்கும் நிலைமை இருக்க வேண்டும். தாழ்த்தப்பட்டவரையும், நலிந்த வகுப்பினரையும் கட்டாயப்படுத்தி ஒரு கட்சிக்கு ஓட்டுப்போட வற்புறுத்துவதும், வாக்காளர்களை ஓட்டுப்போடச் செல்லும் பொழுது, ஓட்டுப்போடாமல் தடுத்து நிறுத்துவதும் ஜனநாயகத்திற்குப் புறம்பான செயலாகும். மேற்கூறிய குற்றவியல் செயல்களுக்கு முடிவு காண குற்றம் புரிந்தவர்களைத் தண்டிப்பதற்கு சட்டங்கள் இயற்றப்படவேண்டும்.

மேலும் தொகுதியிலுள்ள வாக்குச் சாவடிகளை அதிகப்படுத்த வேண்டும். வாக்காளர்கள் வசிக்கும் இடத்திலிருந்து ஒரு கிலோ மீட்டர் தூரத்திற்கு அதிகப்படாமல் வாக்குச் சாவடிகள் அமைய வேண்டும். மேலும் வாக்குச் சாவடியில் பயிற்சி பெற்ற அதிகாரிகளை பணியில் அமர்த்த வேண்டும். துப்பாக்கி போன்ற ஆயுதங்களை வைத்துக் கொள்ள அனுமதி பெற்று இருக்கும் தனி நபர்கள் குறைந்த பட்சம் தேர்தல் நடப்பதற்கு ஏழு நாட்களுக்கு முன்பாக அவைகளை தங்களுக்கு அருகாமையில் உள்ள காவல் நிலையத்தில் ஒப்படைக்க வேண்டும்.

ஒவ்வொரு தொகுதியிலும் எத்தனை வாகனங்களை ஒரு வேட்பாளர் உபயோகிக்கலாம் என்பதற்கு வரையறைகள் இருக்க வேண்டும். தேர்தலில் உபயோகப்படுத்தப்படும் எல்லா வாகனங்களுக்கும் தகுதி பெற்ற தேர்தல் பதிவு அதிகாரியிடமிருந்து அத்தாட்சி பெற்றிருக்க வேண்டும். வர்கக்குச்சாவடியில் தேர்தலில் போட்டியிடும் உறுப்பினர்களின் வாகனங்களைத் தவிர, மற்ற வாகனங்களை தேர்தல் நாளில் உபயோகிப்பது தடைசெய்ய வேண்டும். 1980 ஜனவரியில் நடந்த தேர்தலில், தனி நபர் வாகனங்களை தேர்தல் நாளில் உபயோகிப்பது தடை செய்யப்பட்டது. ஆனால் பல மாநில அரசாங்கங்கள், தேர்தல் ஆணையத்தின் கட்டளையை நிறைவேற்ற முடியாத நிலைமையை வலியுறுத்தின. இந்த வகையில் தேர்தலில் கமிஷனின் உத்திரவுகள்

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக்கான கேள்விகள்

1. இந்திய தேர்தல் முறையின் கூறுகளை விவரி.

2. மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம் பற்றி சிறு குறிப்பு வரைக.

3. விகிதாச்சார பிரதிநிதித்துவ முறையாக எடுத்துலரக்கவும்.

அனைத்தும் கடைபிடிக்கப்படுமாறு மாநிலங்களிலும் செய்ய வேண்டும். வேட்பாளர்கள் அல்லது அவர்களுடைய பிரதிநிதிகள் வாக்குச் சாவடிகளிலிருந்து வாக்குகளை எண்ணக்கூடிய இடங்களுக்கு வாக்குப் பெட்டிகளோடு செல்ல அனுமதி இருக்க வேண்டும். மேலும் அவர்களின் முத்திரையிடப்பட்ட பெட்டிகளை மாற்றி விடாமல் இருப்பதற்கு அவர்களும் வாக்கு பெட்டிகளை கண்காணிக்க அனுமதியளிக்க வேண்டும். ஜெயபிரகாஷ் நாராயணன் மற்றும் கம்யூனிஸ்ட் கட்சி உட்பட பல கட்சிகளும், தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளை வாக்காளர்களை திரும்பி அழைப்பதற்கு ஏதுவாக தேர்தல் சட்டத்தில் தகுந்த சீர்திருத்தம் கொண்டு வரவேண்டும் என்றனர். இந்த உரிமை தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளை வாக்காளர்களுக்குப் பொறுப்புள்ளவர்களாக ஆக்குவதாக இருந்த போதிலும், வாக்காளர்களுக்கும் இந்த உரிமையை வாக்காளர்களுக்கு அளிப்பதற்கு முன்பாக அதன் சாதக, பாதகங்களைச் சீர்தூக்கி ஆராய்ந்து அதனடிப்படையில் கொடுக்க வேண்டும். ஏனெனில், இந்த உரிமை பொறுப்பற்ற கட்சிகளினால் தவறாகப் பயன்படுத்துவதில் முடியும்.

கடைசியாக வாக்காளர்கள் அனைவரும் கட்டாயமாக தேர்தல்களில் வாக்கு அளிக்கும் முறையை அறிமுகப்படுத்துவதுப் பற்றியும், அதனுடய சாத்தியத்தைப் பற்றியும் குறிப்பிட வேண்டும். கட்டாய வாக்களிக்கும் முறை மலேசியா போன்ற பல நாடுகளில் மிக நல்லமுறையில் செயல்படுகிறது. கட்டாய வாக்கு அளிக்கும் முறை குடியுரிமை பெற்ற எல்லா மக்களையும் அரசாங்கத் தேர்தல்களில் பங்கெடுக்க வகை செய்யும். இந்திய தேர்தல் சட்டமானது திருத்தப்பட்டு, வாக்காளர் அடையாள அட்டை முதலான பல்வேறு சீர்திருத்தங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. தேர்தல் கமிஷன் விரிவுபடுத்தப்பட்டு மூன்று தேர்தல் ஆணையாளர்களைக் கொண்டுள்ளது. குற்றவாளிகள் அரசியலில் புகுவதைத் தடுக்கும் பொருட்டு, வேட்பு மனு தாக்கல் செய்வோர் தமது சொந்த விபரங்கள் அனைத்தையும் குறிப்பிடவேண்டுமென்றும், தேர்தல் நடவடிக்கை ஆரம்பத்திலிருந்து, தேர்தல் முடியும் வரை ஒரு வேட்பாளர் தான் செய்யும் அனைத்துத் தேர்தல் செலவுகளையும் அவ்வப்போது அறிவிக்க வேண்டும் என்றும் தேர்தல் ஆணையத்தால் அறிவிக்கப்படடுள்ளது.

## 8.2. கட்சி முறை

### ஒரு கட்சி ஆதிக்கமுறை (1947—1967)

பலநாடுகள் பல்வேறு கட்சி முறைகளைப் பெற்று இருக்கின்றன. சில கம்யூனிஸ்டு நாடுகளில் ஒரு கட்சி முறை இருக்கிறது. பிரிட்டனிலும், அமெரிக்காவிலும் இரு கட்சி முறை இருக்கிறது. பேராசிரியர் இராபர்ட்டும், பேராசிரியர் மகானியும் ஜப்பானின் அரசியலைப்

படித்து ஆராய்ந்து அங்கு ஒன்றரைக் கட்சி முறை இருப்பதாக கூறியிருக்கிறார்கள். ஏனென்றால், அங்கு ஒரு முழுமையான ஆதிக்கக் கட்சியும் அதற்கு மாற்றாக மற்ற எந்த ஒரு கட்சியும் ஒரு முழு அரசியல் கட்சியாக ஆதிக்கக் கட்சிக்கு மாற்றாக வரமுடியாத நிலை ஜப்பானில் உள்ளது. ஒரு நாட்டில் அமையும் கட்சி முறை அந்த நாட்டின் வரலாறு சமூக மற்றும் பொருளாதார ரீதியில் எப்படி வளர்ந்தது என்பதன் அடிப்படையில் பிறந்ததாகும். ஒரு நாட்டுக்கு நல்ல கட்சி முறையாக இருப்பது, மற்ற நாட்டிற்கு நல்ல கட்சி முறையாக இல்லாமல் இருக்கலாம்.

இந்திய கட்சி முறை பல்வேறு விதமாக விவரிக்கப்படுகிறது. 1961ஆம் ஆண்டிற்கு முன், இந்தியா பல கட்சி முறையைப் பெற்ற நாடு என்று பொதுவாகக் கருதப்பட்டது. இந்த கருத்தை உள்நாட்டு அரசியல் விஞ்ஞானிகளும், வெளிநாட்டு அரசியல் விஞ்ஞானிகளும் ஒத்துக்கொண்டார்கள். உதாரணமாக, பேராசிரியர் வெயினர் என்பவர் இந்தியாவில் பல கட்சி முறை இருப்பதாக கூறுகிறார். இருந்த போதிலும், 1960—ல் பல அரசியல் விஞ்ஞானிகள் இந்திய கட்சி முறையை அலசி ஆராய்ந்து இந்தியாவில் இரு கட்சி முறையோ, அல்லது பல கட்சி முறையோ இல்லை. அங்கு இருப்பதெல்லாம் ஒரு ஆதிக்கக் கட்சி முறையாகும் என்ற முடிவுக்கு வந்தார்கள். ரஜினி கோதாரி, பால் வாலேஸ் மற்றும் மோரிஸ் ஜோன்ஸ் ஆகியோர் இந்த கருத்தை ஒத்துக்கொள்கிறார்கள்.

ஒரு அரசியல் கட்சியானது, நீண்ட கால அரசியல் வளர்ச்சியில் சட்டமன்றத்தில் பெரும்பான்மையான இடங்களைப் பெற்றிருந்தால் அதை ஆதிக்கக் கட்சி என்று கூறலாம். அந்தக் கட்சி மற்ற கட்சிகளை விட முக்கியமான இடத்தைப் பெற்று ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு மற்ற கட்சிகளைக் குறிப்பிடும்படியாக இல்லாமல், செய்தால் அது ஆதிக்க கட்சி என்று கூறப்படும். ஆதிக்கக் கட்சி என்பது நிச்சயமாக பெரும்பான்மைக் கட்சியாகாது. எப்பொழுது ஒரு கட்சியை ஆதிக்கக் கட்சி என்ற அர்த்தத்தில் நாம் கூறுகிறோம் என்றால் அந்த கட்சி சட்டமன்றத்தில் பெரும்பான்மை இடங்களைப் பெற்று அமைச்சரவையை ஏற்படுத்தி நீண்ட காலம் ஆட்சியில் இருக்க வேண்டும். ஆதிக்கக் கட்சி ஏக போக அதிகாரங்களையும், கட்டுப்பாடுகளையும் பெற்று அரசாங்க அலுவலகங்களிலும் மிக செல்வாக்குப் பெற்றதாக இருக்கும். மற்ற கட்சிகள் சட்டப்பூர்வமாக இருந்தாலும், பல்வேறு காரணங்களுக்காக அவைகளால் ஆதிக்கக் கட்சியின் பொது அதிகாரத்திற்கு சவால் விடும் அளவிற்கு இருக்க முடியாது.

ஆதிக்கக் கட்சி கீழ்க்கண்ட இரண்டு பண்புகளைப் பெற்று இருக்கின்றது. முதலாவது, ஆதிக்கக் கட்சி எல்லாப் பிரிவினரும் பிரதிநிதித்துவம் பெறும் வகையிலும், உள்போட்டிக்கு வளைந்து கொடுக்கும் வகையிலும் இருக்கிறது. இதனால் பல்வேறு தொகுப்பகளையும், எழுச்சிகளையும் ஏற்றுக்கொள்ளுகிறது.

இரண்டாவதாக, மற்ற கட்சிகள் வாக்காளர்களிடம் செல்வாக்குப் பெற இயலாத வகையில் தடுக்கிறது. ஆதிக்கக் கட்சி இவ்விதமாக பல வருடகாலம் அதிகாரத்தில் இருந்து, அதை கீழே இறக்க முடியாமல் இருந்தது.

இந்தியாவில் காங்கிரஸ் கட்சி ஒரு ஆதிக்கக் கட்சியாகும். இந்தக் கட்சி இந்திய அரசியல் முறையில் 1946 ஆம் ஆண்டு இடைக்கால அரசாங்கம் ஏற்பட்டதில் இருந்து 1967 ஆம் ஆண்டு வரை தனது ஆதிக்கத்தைச செலுத்தி வந்து இருக்கிறது. இந்தக் கருத்து காங்கிரஸ் மூன்று பொது தேர்த்களில் சட்டமன்றஙக்ளில் பெற்றிருந்த இடங்களில் இருந்து தெரிய வருகிறது.

| | | காங்கிரஸ் கட்சி | மற்ற கட்சிகள் | மொத்த இடங்கள் |
|---|---|---|---|---|
| I | 1952பொதுத்தேர்தல் | | | |
| | லோக்சபை | 354 | 125 | 489 |
| | மாநில சட்டமன்றங்கள் | 2246 | 1037 | 3283 |
| II | 1957 பொதுத்தேர்தல் | | | |
| | லோக் சபை | 321 | 123 | 497 |
| III | 1962பொதுத் தேர்தல் | | | |
| | லோக்சபை | 361 | 133 | 494 |
| | மாநில சட்டமன்றங்கள் | 1904 | 1204 | 3108 |

இருந்தபோதிலும் இந்தியா சுதந்திரம் அடைந்ததில் இருந்து 1967ல் பொதுத் தேர்தல் வரை காங்கிரஸ் கட்சி அனுபவித்து வந்த ஏகபோக அரசியல் அதிகாரம் 1967—ஆம் ஆண்டு தேர்தலில் மறைந்தது. மத்திய அரசாங்கத்தில் காங்கிரஸ் கட்சி குறைந்த பெரும்பான்மை இடங்களில் அதிகாரத்தைப் பெற்று இருந்தது. ஏறக்குறைய பாதி மாநிலங்களில் காங்கிரஸ் கட்சியிடம் இருந்து ஆட்சி பறி போனது. ஹரியானா, உத்திரப்பிரதேசம் மற்றும் மத்தியப் பிரதேச மாநில அரசாங்கங்களில் உறுப்பினர்கள் கட்சி மாறியதால் அங்கும் காங்கிரஸ் கட்சியின் அதிகாரம் கை நழுவிப் போனது. காங்கிரஸ் கட்சி கேரளாவைப் பொறுத்தவரை 1957—ஆம் ஆண்டிலேயே தோல்வி அடைந்தது. இந்திய அரசியலில் ஒரு திருப்பு முனையாக அமைந்தது என்று கூற முடியாது. ரஜினி கோதாரி கூறி இருப்பதுபோல, போட்டி அரசியலில் 1967—ஆம் ஆண்டு தேர்தல் ஒரு முக்கியக் கட்டமாகவே இருந்து வந்திருக்கிறது.

1967—ஆம் ஆண்டு பொதுத்தேர்தலில் ஒரு கட்சி ஆதிக்க முறை தற்காலிகமாக சரிந்ததற்கு, பல்வேறு காரணங்கள் கூறப்படுகின்றன. இந்தியா சீனாவோடும், பாகிஸ்தானோடும் தொடர்ந்த இரு சண்டைகளினால் தேசிய செல்வங்கள் பாதிக்கப்பட்டதாலும், நேருவின் இறப்பும், சாஸ்திரியின் இறப்பும் ஒன்றரை ஆண்டுகளுக்குள்ளேயே ஏற்பட்டதாலும், நாணயத்தின் மதிப்பு குறைக்கப்பட்டதாலும், பண வீக்கத்தினால் பொருள்களின் விலை அதிகமாக்கப்பட்டதாலும், அத்தியாவசியப் பொருள்கள் கிடைக்காததினாலும் காங்கிரஸ் கட்சி மக்களிடத்தில் செல்வாக்கை இழந்து, 1967ஆம் ஆண்டு அந்த கட்சிக்கு எதிராக மக்கள் தீர்ப்புக் கூறும்படியாக ஆகிவிட்டது. ஒரு கட்சி ஆதிக்க முறை சரிந்து, முதன் முதலாக பல கட்சிகள் அதிகாரத்திற்கு வந்தன.

1967—ஆம் ஆண்டு தேர்தலில் சில மாநிலங்களில் காங்கிரஸ் கட்சி சரிந்தாலும் 1971ஆம் ஆண்டு லோக்சபைக்கு நடந்த இடைத்தேர்தலில் அக்கட்சி முழு ஆதிக்கத்தைப் பெற்றது. கம்பீரமான கூட்டுக்கட்சிகள் பெரிய தோல்வியைச் சந்தித்தன. காங்கிரஸ் கட்சி மேகாலயா மாநிலத்தை தவிர்த்து, மற்ற எல்லா மாநிலங்களிலும் ஆட்சியைப் பிடித்தது. கம்பீர கூட்டுக்கட்சிகள் தாங்கள் எதிர்பார்த்த வெற்றியை அடைய முடியவில்லை.

1971—ஆம் ஆண்டு மறுபடியும் ஏற்பட்ட ஒரு கட்சி ஆதிக்கமுறை 1977ஆம் ஆண்டு நடந்த லோக் சபை தேர்தலில் படுதோல்வியை சந்தித்து இந்திராகாந்தி தலைமையிலான காங்கிரஸ் கட்சி தோல்வியடைந்தது. ஜனதா கட்சி ஆட்சியைப் பிடித்தது. 542 இடங்களில் காங்கிரஸ் கட்சி 153 இடங்களையும், ஜனதா கட்சி 293 இடங்களையும பிடித்தன. ஒரு கட்சி ஆதிக்க முறை முடிவடைந்து, இருகட்சி முறை நமது நாட்டில் வளர்ந்துகொண்டு வருகிறது என்று நம்பப்பட்டது. ஜனதா அரசாங்கத்தின் திறமையற்ற தன்மையினால் 1980ஆம் ஆண்டு ஜனவரி மாதம் நடைபெற்ற இடைத்தேர்தலில் தோல்வியை சந்திக்க நேர்ந்தது. மறுபடியும் இந்திய அரசியல் முறையில் ஒரு கட்சி ஆதிக்க முறை அமுலுக்கு வந்தது. இந்திராகாந்தியின் தலைமையிலான காங்கிரஸ் கட்சி 542 இடங்களில் 351 இடங்களைப் பெற்றது.

அவசரநிலைப் பிரகடனத்தின் போது, முக்கியமாக வட இந்தியாவில் குடும்பக் கட்டுப்பாடு பிரச்சார முறையில் ஏற்பட்ட செயல்களினால் 1977ஆம் ஆண்டு காங்கிரஸ் கட்சி சரிந்து, ஜனதா கட்சி ஆட்சி அதிகாரத்திற்கு வருவதற்கு வகை செய்தது. ஆனால் மொரார்ஜி தேசாய்க்கும், சரண்சிங்கிற்கும் இடையே ஏற்பட்ட அதிகாரப்

போராட்டத்தால் அவர்களது பிரதமர் பதவி முடிவிற்கு வந்து 1980ஆம் ஆண்டு ஜனவரி மாதம் நடந்த தேர்தலில் திருமதி. இந்திராகாந்தி ஆட்சி அதிகாரத்தைப் பிடிக்க வகை செய்தது. ஜனதா கட்சி சில இடங்களோடு பாராளுமன்றத்தில் மூன்றாவது இடத்தைப் பெற்றது.

ராஜீவ் காந்தி பிரதமராக இருந்த போதும் காங்கிரஸ் வலிமையாகவே இருந்தது. நரசிம்மராவ் பிரதமராக இருந்த போது காங்கிரஸ் பெரும்பான்மையை இழந்திருந்தது. ஆயினும், எதிர்க்கட்சிகள் சிதறியிருந்ததால் அவரால் வலிமையான அரசாங்கத்திற்குத் தலைமை தாங்கி, ஆழ்ந்த பொருளாதார மாற்றங்களை கொண்டு வர முடிந்தது.

### 8.2.1. இந்திய அரசியல்கட்சி முறையின் பண்புகள்

இந்தியாவில் அரசியல் கட்சிகள் சில பண்புகளைப் பெற்று இருக்கின்றன. முதலாவதாக ஒரு கட்சி ஆதிக்க முறை அதனுடைய முக்கியப் பண்பாக இருந்தது.

இரண்டாவது பண்பு பலமான எதிர்க்கட்சி இல்லாதது ஆகும். பாராளுமன்ற ஜனநாயகம் வெற்றி பெற ஒரு வலிமையான எதிர்க்கட்சி அவசியமாகும்.

மூன்றாவது பண்பு, இந்தியாவில் பல புதுக்கட்சிகள் தோன்றி இருப்பதாகும். காங்கிரஸ் கட்சி, கம்யூனிஸ்ட் கட்சி மற்றும் சோசலிச கட்சி போன்ற கட்சிகள் இந்தியா சுதந்திரம் அடைவதற்கு முன்பே இருந்திருந்தாலும், மற்ற பல புதிய கட்சிகள் இந்தியா சுதந்திரம் அடைந்த பிற்பாடு தோன்றி இருக்கின்றன. மேலும் இன்று எல்லா பெரிய கட்சிகளிலும் பிளவுகள் ஏற்பட்டு இருக்கின்றன. காங்கிரஸ் கட்சி பிளவுபட்டு இருக்கிறது. கம்யூனிஸ்ட் கட்சி, இந்திய கம்யூனிஸ்ட் என்றும், இந்திய கம்யூனிஸ்ட் (மார்க்சிஸ்ட்) என்றும் பிரிந்திருக்கிறது. ஜனதா கட்சி, பல கட்சிகளாகப் பிரிந்திருக்கிறது.

நான்காவது முக்கியப்பண்பு, அரசியல் கட்சிகளில் மதக் கட்சிகள் இருப்பதாகும். உதாரணமாக முஸ்லீம் லீக், சிவசேனா முதலிய பல இனக் கட்சிகள் இந்தியாவில் உள்ளன.

இந்திய கட்சி முறையின் ஐந்தாவது பண்பு, எல்லாக் கட்சிகளிலும் கட்சி மாறும் முறை இருப்பதாகும். 1967ஆம் ஆண்டு மார்ச் மாதம் முதல் டிசம்பர் மாதத்திற்குள்ளாக 9 மாநிலங்களில் உள்ள 3447 மாநில சட்டமன்ற உறுப்பினர்களில் 314 பேர் கட்சி மாறினார்கள். கட்சி மாறும் தன்மை மிக அதிகமாக பரவி, எந்த ஒரு மாநில அரசாங்கமும் நிலையாக இருக்க முடியாத அளவிற்குப் பயமுறுத்துகிறது.

மேற்கூறிய எல்லாப் பண்புகளும் ஒரு நல்ல கட்சி முறைக்கு அவசியமற்றதாகும். மேற்கூறிய பண்புகளினால், பிரான்ஸ் நாட்டில் நான்காம் குடியரசில் ஒரு நிலையான அரசாங்கம் தோன்ற முடியாமல் இருந்தது.

## அ. அரசியல் கட்சிகள்

இந்திய தேசிய காங்கிரஸ்கட்சி 1885 ஆம் ஆண்டில் இருந்தே பல்வேறு மக்களை ஒன்று சேர்த்து, பல்வேறு எண்ணங்களைப் பிரதிபலித்து, பல்வேறு கொள்கையை உள்ளடக்கி சுதந்திரப் போராட்டத்தின் கீழ் புற்பட்ட ஒரு கம்பீரமான கூட்டுக் கட்சியாகும். கட்சித் தலைமையில் கருத்து வேறுபாடு இருப்பது இயற்கையாகும். இந்தக் கருத்து வேறுபாட்டினால் பலமுறை இக்கட்சியில் பிளவு ஏற்பட்டு இருக்கிறது. தீவிரவாதிகளுக்கும், நடுநிலைவாதிகளுக்கும் இடையே ஏற்பட்ட கருத்து வேறுபாட்டினால் 1907ஆம் ஆண்டிலும், 1920—1930 க்கும் இடைப்பட்ட ஆண்டுகளில் மோதிலால் நேருவும், சி.ஆர். தாசும் காங்கிரஸ் கட்சியின் தலைமையில் இருந்து பிரிந்து சுயராஜ் என்ற கட்சி ஏற்படுத்தியும் 1930—1940 இடைப்பட்ட ஆண்டுகளில் சுபாஸ் சந்திரபோஸ் கட்சியில் இருந்து பிரிந்து பார்வார்டு பிளாக் என்ற கட்சியை ஏற்படுத்தியும், 1939—லும் 1978—லும் காங்கிரஸ் கட்சியில் ஏற்பட்ட பிளவுகளினால் இதுவரை காங்கிரஸ் கட்சியில் பல பிளவுகள் ஏற்பட்டுள்ளன. பாலகங்காதர திலகர் காங்கிரஸ் கட்சியில் 1920ஆம் ஆண்டு வரை ஆளுமை பெற்றிருந்தார். பாலகங்காதர திலகர் இறந்த பிறகு மகாத்மா காந்தி காங்கிரஸ் கட்சியில் முக்கியமான இடத்தைப் பிடித்து? சுதந்திரப் போராட்டத்தை நடத்தினார்.

## ஆ. சுதந்திரத்துக்குப் பின் காங்கிரஸ் ஆட்சி

1947ஆம் ஆண்டு இந்தியா சுதந்திரம் அடைந்தவுடன் காங்கிரஸ் கட்சித் தலைவர்கள் காங்கிரஸ் கட்சியைக் கலைத்து விட்டு பயனுள்ள பணிகளை மக்களுக்குச் செய்யுமாறு கேட்டுக்கொண்டனர். ஆனால், அவருடைய வழித் தோன்றல்கள், அவருடைய ஆலோசனையை ஏற்றுக்கொள்ளவில்லை. அவர்கள் அதிகாரத்தை அனுபவிக்க விரும்பினார்கள். நேருவுக்கும், படேலுக்கும் பல விஷயங்களில் கருத்து வேறுபாடு இருந்தாலும், காங்கிரஸ் கட்சியை கலைத்து விடவேண்டும் என்ற காந்தியின் கொள்கையை எதிர்த்தார்கள். 1950 ஆம் ஆண்டு படேல் இறந்த உடன், நேரு தன்னுடைய அதிகாரத்தை நிலை நிறுத்த விரும்பினார். இந்த மோசமான வருடத்தில் நேரு முக்கியமான அரசியல் தலைவராக ஆனார் என்று மோரிஸ் ஜோன்ஸ் கூறுகிறார். நேரு காங்கிரஸ் கட்சியின் தலைமையை ஏற்றுக்கொண்டு, 1954 ஆம்

அண்டு வரை காங்கிரஸ் தலைவராக இருந்தார். அதற்குப் பின்பும் காங்கிரஸ் கட்சியில் முக்கியமான பதவிகள் வகிக்கும் ஆட்களை சேர்ப்பதிலும், காங்கிரஸ் கட்சியின் தலைவரை தேர்ந்தெடுப்பதிலும் ஒரு முக்கியப் பங்கை வகித்தார். 1953 ஆம் ஆண்டு காங்கிரஸ் தான் நாடு. நாடு தான் காங்கிரஸ் என்று கூறும் அளவிற்கு நேரு மாறிவிட்டிருந்தார். இந்தியா சுதந்திரம் அடைவதற்கு முந்தைய நாட்களில் காங்கிரஸ் ஒரு சிறந்த சக்தியாக இருந்தது. இந்தியா சுதந்திரம் அடைந்த பிறகு அது ஒரு ''லமிழந்த சக்தியாக மாறிவிட்டது. காங்கிரஸ் கட்சித் தலைவர்கள், அமைப்பு ரீதியாக மாவட்ட அளவிலும், மாநில அளவிலும், கூட்டங்களாகப் பிரிந்து ஒருவருக்கொருவர் வேற்றுமை கொண்டு கட்சியில் அதிகாரத்தைப் பிடிப்பதற்கும், அரசாங்க அமைப்புகளில் செல்வாக்கு அடைவதற்கும், தொடர்ந்து போராட்டங்களை நடத்திக்கொண்டு இருக்கின்றனர் என்று பால் என்பவர் கூறுகிறார். காங்கிரஸ் கட்சியாளர்களுக்கு இடையே ஏற்பட்ட தொடர்ந்த சச்சரவுகளினால் கட்சியின் ஒழுங்கு கெட்டு, கட்சிக்கு கெட்ட பெயரை தேடித் தந்தார்கள். மந்திரிகள் காங்கிரஸ் கட்சியின் அமைப்பில் பங்கு பெற ஆர்வம் கொண்டு அரசாங்கத்தையே பல மாநிலங்களில் கவிழ்க்க வகை செய்தார்கள். பத்து வருட விதி என்ற விதியை 1961 ஆம் ஆண்டு காங்கிரஸ் தலைவராக இருந்த சஞ்சீவ ரெட்டி ஏற்படுத்தி, பத்து வருடங்கள் அரசாங்க அதிகாரத்தை கட்சித்தலைவர் அனுபவித்து இருந்தால், அவர்கள் அரசாங்கத்தில் இருந்து பதவி விலகி, காங்கிரஸ் கட்சியின் வளர்ச்சிக்கு முழு கவனத்தைச் செலுத்த வேண்டும் என்று கூறினார். காமராஜ் திட்டம் என்ற பிரசித்தி பெற்ற திட்டம் மத்தியிலும், மாநிலத்திலும் முதுநிலை தலைவர்கள் அரசாங்கப் பணியில் இருந்து விடுபட்டு கட்சிப் பணிகளில் முழு மனதாக ஈடுபட வேண்டும் என்று கூறியது.

## கட்சி அமைப்பு

...கிரஸ் கட்சி இந்தியாவின் எல்லாப் பகுதி மக்களையும் சமநோக்கோடு கொண்டு சேர்க்க வேண்டும் என்று மோரிஸ் ஜோன்ஸ் கூறுகிறார். காங்கிரஸ் செயற்குழுவிலும், காங்கிரஸ் கட்சியின் கீழ் மட்டத்திலும் கூட தேசிய எதிர்ப்புக்கு சிறந்த பணிகளைச் செய்தவர்களுக்கு இடமில்லை. ஆனால், அவர்கள் இந்திய அரசியல் வாழ்க்கையில் இந்திய சமூகத்தைச் சேர்ந்தவர்கள். இவர்களை கட்சியில் சேர்த்து அனுசரித்துப் போக வேண்டிய நிலைமை இருக்கிறது. காங்கிரஸ் கட்சி ஆரம்பம் முதலாக நடுநிலைமை கொண்ட கட்சியாக இருந்தது. இயற்கையாகவே கிராமங்களில் கட்சி பலம் பெற்றுள்ளது. கட்சியின் கீழ் அலகு வட்டாரக் குழுவாகும். அதற்கு மேல், மாவட்ட காங்கிரஸ் குழுவும், பிரதேச காங்கிரஸ் குழுக்களும் இருக்கின்றன. மாவட்ட காங்கிரஸ் குழுவானது சட்டமன்றம் மற்றும் பாராளுமன்றத் தேர்தல்களுக்கு

வேட்பாளர் உறுப்பினர்களை தேர்ந்தெடுத்து சிபாரிசு செய்கிறது. பிரதேச காங்கிரஸ் குழு என்பது மாநில அளவில் பெரிய குழுவாகும். தேசிய அளவில் இரண்டு அமைப்புகள் இருக்கின்றன. ஒன்று அகில இந்திய காங்கிரஸ் குழு. இக்குழுவின் வருடாந்திர கூட்டத்தில் கட்சியின் முக்கிய கொள்கைகள் வரையறுக்கப்படுகின்றன. இரண்டாவது குழு செயற்குழுவாகும். இந்தக்குழு காங்கிரஸ் கட்சியின் நிரந்தர நிர்வாக அமைப்பு ஆகும்.

காங்கிரஸ் கட்சி மத்திய அரசாங்கத்தின் அதிகாரத்திற்கு வந்ததில் இருந்தே காங்கிரஸ் கட்சியின் அமைப்புக்கும் பாராளுமன்ற கட்சி அமைப்பிற்கும் நல்ல தொடர்புகள் இருந்தது இல்லை. நேருவிறகுப் பிறகு கிருபளானி காங்கிரஸ் தலைவர் ஆனார். நேரு பிரதம மந்திரி ஆனார். கிருபளானி அரசியல் தீர்மானங்கள் காங்கிரஸ் கட்சி செயற்குழுவில் தான் எடுக்கப்படவேண்டும் என்று வற்புறுத்தினார். நேருவும், படேலும் அதை வன்மையாகக் கண்டித்தார்கள். டான்டென் என்ற மற்றொரு காங்கிரஸ் தலைவர் அரசாங்கத்தின் திறமையை ஏற்படுத்துவதற்காக முயற்சி செய்ததால் அவர் பதவியில் இருந்து விலக வேண்டியதாயிற்று. பாராளுமன்ற அமைப்பின் அரசாங்கக் கட்சியில் உள்ளவர்கள் கட்சிக் கொள்கைக்கு பிரதம மந்திரியையே சார்ந்து இருந்தார்கள். காங்கிரஸ் கட்சித் தலைவரைப் பொருட்படுத்தவில்லை என்று பிராங்க் முறையாஸ் கூறுகிறார். நேருவின் மறைவிற்குப் பிறகு காமராஜ் திட்டத்தின் படி ஆறு மத்திய மந்திரிகள் பதவி விலகினார்கள். காங்கிரஸ் தலைவராக இருந்த லால் பகதூர் சாஸ்திரியை பிரதம மந்திரியாக்கினார். லால்பகதூர் சாஸ்திரி இறந்த பின்னர் இந்திராகாந்தியை 1966ஆம் ஆண்டு ஜனவரி மாதம பிரதம மந்திரியாக்கினார். பாராளுமன்ற கட்சி அமைப்பில் இந்திராகாந்தி ஆதரவை இழந்தார். அவர் தன்னை பதவிக்கு கொண்டு வந்தவர்களிடமிருந்து சுதந்திரமாக செயல்பட விரும்பியதே அதற்குக் காரணமாகும்.

## 8.2.2. 1969 ஆம் ஆண்டு காங்கிரஸ் கட்சியின் பிளவு

நேரு தன்னுடைய வசிகரத் தலைமையினாலும் கம்பீர ஆளுமையினாலும், காங்கிரஸ் கட்சியில் அதிகாரத்தைப் பெற்று, கட்சியில் பிளவு ஏற்படாதபடி காத்து வந்தார். ஆனால் அவர் இறப்பதற்கு பின்பு, கட்சியில் ஒரு பிரிவினர் சிண்டிகேட் என்று பிரசித்தி பெற்ற ஒரு அமைப்பை ஏற்படுத்தினர். நேரு இறந்தபின் ஹிந்தி பேசாத மாநிலத் தலைவர்கள் ஒன்று சேர்ந்து மொரார்ஜி தேசாயை, பிரதம மந்திரி ஆக்க விரும்பினார்கள். இது மத்திய பாராளுமன்றத்தில் குழப்பத்தை ஏற்படுத்தி 1967ஆம் ஆண்டு தேர்தல்களில் காங்கிரஸ் கட்சி பலம் இழந்து போவதற்கு காரணமாகியது. காங்கிரஸ் கட்சிக்குள்ளேயே

இந்திராகாந்திக்குப் பதிலாக மொரார்ஜி தேசாயை பிரதம மந்திரியாக்க ஒரு எதிர் கோஷ்டி விரும்பியது. இந்தப் பிளவு அவ்வளவு சக்தி வாய்ந்ததாக இல்லாததால் அது காங்கிரஸ் கட்சியில் அதிக சேதத்தை ஏற்படுத்தவில்லை. இவ்விதமாக 1967 ஆம் ஆண்டிற்கு முன்பே காங்கிரஸ் கட்சி பிரிவதற்கு வழி வகுக்கப்பட்டது. இந்திராகாந்தியின் ஆளுமையும் 1969 ஆம் ஆண்டு குடியரசுத் தலைவரை தேர்ந்தெடுப்பதில் பிளவை ஏற்படுத்தியது. V.V.கிரி அவர்கள் குடியரசுத் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டதைத் தொடர்ந்து இந்திரா காந்தியின் கை ஓங்கியது. ஸ்தாபன காங்கிரஸ் படிப்படியாக பலவீனமடைந்தது.

அலகாபாத் உயர்நீதிமன்றம் திருமதி. இந்திராகாந்தியின் தேர்தல் செல்லாது என்று தீர்ப்புக் கூறியது. நாட்டில் நிலவிய பொருளாதாரப் பிரச்சனைகளும், திட்டமிட்ட போராட்டங்களும், இந்திராகாந்தியை 1975 ஆம் ஆண்டு ஜீன் மாதம் 25 ஆம் தேதி அவசரநிலை பிரகடனம் செய்ய வைத்தது. அனைத்து எதிர்கட்சித் தலைவர்களும் சிறையில் அடைக்கப்பட்டார்கள். புத்தகங்கள், பத்திரிக்கைகள், செய்திகள், கடிதங்கள் முதலியவைகளை முன் தணிக்கை செய்தும், 20 அம்சத் திட்டம் மூலமாக பொருளாதார வளர்ச்சி ஏற்படுவதற்கும் வகை செய்யப்பட்டது. சில தீவிர காங்கிரஸ் கட்சியினர் வட இந்திய மக்களிடம் குடும்ப கட்டுப்பாடு முறையை அதிகார வரம்பை மீறி செயல்படுத்தினார்கள். 1977ஆம் ஆண்டு மார்ச் மாதம் நடந்த லோக் சபை தேர்தலில் காங்கிரஸ் கட்சியும், திருமதி. இந்திராகாந்தியும் தோற்கடிக்கப்பட்டார்கள். ஜனதா கட்சி அதிகாரத்திற்கு வந்து மொரார்ஜி தேசாய் பிரதமரானார். ஆனால் ஜனதா கட்சிக்குள்ளேயே ஏற்பட்ட சண்டை சச்சரவுகளினால் ஜனதா கட்சி பிளவுபட்டது. மொரார்ஜி தேசாய்க்குப் பின்பு சரண்சிங் சிறுபான்மை ஆதரவு பெற்ற அரசாங்கத்தை நிறுவினார். நாட்டில் ஸ்திரமான அரசாங்கம் ஏற்படுவதற்காக குடியரசுத் தலைவர் லோக்சபையை கலைத்தார். 1980 ஆம் ஆண்டு நடந்த பொதுத்தேர்தலில் திருமதி. இந்திராகாந்தி மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மையோடு மீண்டும் பதவிக்குத் திரும்பினார். அவர் இறந்த பின் 1984—ல் நடைபெற்ற தேர்தலில் இந்திரா காங்கிரஸ் கட்சி வரலாறு காணாத பெரும் வெற்றி பெற்றது. இந்திராகாந்தியும், அதற்குப் பின் பிரதமரான ராஜீவ் காந்தியும் கொலை செய்யப்பட்ட பின் காங்கிரஸ் கட்சி ஓரளவு பலவீனமடைந்தது. நரசிம்மராவ் பெரும்பான்மை பலம் இன்றியே பிரதமராகப் பணியாற்ற நேர்ந்தது.

**கம்யூனிஸ்டு கட்சிகள்**

பன்னாட்டு கம்யூனிசத்தை இந்தியாவில் பரப்ப வேண்டும் என்ற நோக்கத்தில் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி 1921 ஆம் ஆண்டு

ஏற்படுத்தப்பட்டது. 1927 ஆம் ஆண்டு அந்தக்கட்சி அதனுடைய அரசியல் அமைப்பை ஏற்படுத்தி, நிர்வாகக் கமிட்டியை நியமித்து. 1934 ஆம் ஆண்டு அந்தக் கட்சியின் தீவிர செயல்களுக்காக அந்தக்கட்சிக்கு தடை விதிக்கப்பட்டது. பல கம்யூனிஸ்ட் தலைவர்கள் இரகசியமாக வேலை செய்தார்கள். மற்றும் சிலர் சோசலிசக் கட்சியில் சேர்ந்தார்கள். 1939 ஆம் ஆண்டு இரண்டாவது உலகப்போர் சாம்ராஜ்ய போராகக் கருதப்பட்டது. 1940 ஆம் ஆண்டு சோவியத் யூனியன் நேச நாடுகளுடன் சேர்ந்தது. அந்தப் போர் பின்பு மக்கள் போராக விவரிக்கப்பட்டது. கம்யூனிஸ்டுக் கட்சி போருககக்கு ஆதரவு அளித்தால் இந்திய அரசாங்கம் கம்யூனிஸ்ட் கட்சிகளின் மீதான தடையை நீக்கியது. 1940 இல் இருந்து 1945 ஆம் ஆண்டு வரை கம்யூனிஸ்டு கட்சிக்கும் இந்திய அரசாங்கத்திற்கும் நிலவிய தொடர்பு தேன்நிலவு கால உறவாக கருதப்பட்டது.

1960—ஆம் ஆண்டுக்குப் பின்பு கம்யூனிஸ்ட் கட்சியினரிடையே ஒற்றுமையும், ஒழுங்கும் குறைந்துவிட்டது என்று ரஜினி கோதாரி கூறுகிறார். இந்தப் பிளவு 1962 ஆம் ஆண்டில் இந்தியாவிற்கும், சைனாவிற்கும் போர் நடக்க காரணமானது. சிலர் சைனா நாட்டை ஆதரித்தார்கள். மற்ற கம்யூனிஸ்ட் கட்சியாளர்கள் அதை ஆதரிக்கவில்லை. அஜய் கோஷ் என்ற மிக முக்கிய கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் இறந்ததும், கம்யூனிஸ்ட் கட்சியில் பிளவு ஏற்படுவதற்கு காரணமாகியது. இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) கேரளாவிலும், மேற்கு வங்காளத்திலும் பெரிய கட்சியாக ஆனது. கம்யூனிஸ்ட் கட்சி மேற்கு வங்காளத்தில் இன்றும் ஒரு முக்கிய அதிகாரமுள்ள கட்சியாக திகழ்கிறது. 1971 ஆம் ஆண்டில் நடந்த லோக்சபை தேர்தலில் பத்தொன்பது இடங்களில் இரண்டே இரண்டு இடங்கள் தான் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்டுக்கு) கிடைத்தது. மற்ற பதினேழு இடங்களையும், காங்கிரசும், கம்யூனிஸ்ட் கட்சியும் கூட்டுச் சேர்ந்து பிடித்தன.

1967ஆம் ஆண்டு மேற்கு வங்காளத்தில் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியில் (மார்க்சிஸ்டில்) இருந்து இந்திய கம்யூனிஸ்ட் (மார்க்சிஸ்ட் லெனினிஸ்ட்) என்ற புது அரசியல் கட்சி தோன்றியது.

முக்கியமாக அதிகமான படிப்பறிவுள்ள மக்கள் வாழும் இடங்களில் கம்யூனிஸ்ட் கட்சி வெற்றியை அடைந்திருக்கிறது. படித்துவிட்டு வேலை இல்லாமல் இருக்கும் இளைஞர்கள் முழுமனதாக இந்தக் கட்சியை ஆதரித்தார்கள். மார்க்ஸ் மற்றும் லெனின் கற்றுக்கொடுத்த சோசலிச கொள்கையின் அடிப்படையில் மக்கள் ஜனநாயக நாட்டை ஏற்படுத்துவதே கம்யூனிஸ்ட் கட்சியின் முக்கிய நோக்கமாகும். அது எல்லா முக்கிய தொழிற்சாலைகளையும், வங்கிகளையும், இன்சூரன்ஸ்

இணையங்களையும் வெளிநாட்டு முதலீடுகளையும், எந்தவித நஷ்ட ஈடும் கொடுக்காமல் தேசிய மயமாக்குவதை ஆதரிக்கிறது. அது மொழிவாரி மாநிலங்கள் ஏற்படுத்துவதையும் ஆதரிக்கிறது. கம்யூனிஸ்ட் கட்சி முன்பு ஹிந்தி மொழியை எதிர்த்தது. ஆனால் அவ்வாறான அதனுடைய கொள்கையை 1951 ஆம் ஆண்டில் மாற்றிக்கொண்டது. 1951ஆம் ஆண்டில் ஹிந்தி ஒரு தேசிய மொழியாக படிப்படியாக அறிமுகப்படுத்தி ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கருத்துக்கொண்டது. இந்திய கம்யூனிஸ்ட் கட்சி சோவியத் ரஷ்யாவையும், கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட் லெனினிஸ்டு) சீனாவையும் ஆதரித்து பன்னாட்டுக் கொள்கையை ஆதரித்தன.

ஜனதா கட்சி

1977 ஆம் ஆண்டு இந்திய பிரதம மந்திரி திருமதி. இந்திராகாந்தி லோக்சபை தேர்தலை அறிவித்ததும், காங்கிரஸ் கட்சிக்கு சவால்விடும் அளவில் முக்கிய எதிர்க்கட்சிகளான ஜனசங்கம். காங்கிரஸ் (o) சோசலிஸ்ட் கட்சி மற்றும் பாரதிய லோக்தல் ஆகிய நான்கு கட்சிகளும், 1977ஆம் ஆண்டு ஜனவரி 23ஆம் தேதி ஜெயப்பிரகாஷ் நாராயணன் தலைமையில் ஒன்று சேர்ந்து ஜனதா கட்சியை ஏற்படுத்தினார்கள்.

1977 ஆம் ஆண்டு பிப்ரவரி 2ஆம் தேதி ஜகஜீவன்ராம் திருமதி. இந்திராகாந்தியின் கேபினட்டில் இருந்து பதவி விலகி மற்ற சில ஆதரவாளர்களுடன் ஜனதா கட்சியுடன் சேர்ந்து கூட்டாக திருமதி. இந்திராகாந்தியின் தலைமையில் ஆன காங்கிரஸ் கட்சியை எதிர்த்தார்.

ஜனதா கட்சியும், ஜனநாயக காங்கிரசும் சேர்ந்து தேர்தலில் வெற்றியைப் பெற்றது. ஜனதா கட்சி 265 இடங்களையும், ஜனநாயக காங்கிரஸ் 28 இடங்களையும் பெற்றன. காங்கிரஸ் கட்சி 153 இடங்களைத் தான் பெற முடிந்தது. 1977 ஆம் ஆண்டு மார்ச் மாதம 24ஆம் தேதி மொரார்ஜி தேசாய் ஜனதா பாராளுமன்ற கட்சியின் தலைவராகி முதன்முதலாக காங்கிரஸ் அல்லாத பிரதம மந்திரி பதவியை ஏற்றார்.

ஏப்ரல் மாதக் கடைசியில் ஜனதா கட்சியில் உள்ள நான்கு கட்சிகளும் தனித்தனியாக கூடி தங்களுடைய கட்சிகளைக் கலைத்து ஒரே ஜனதா கட்சியாக ஏற்பட தீர்மானம் செய்தார்கள். 1977ஆம் ஆண்டு மே மாதம 1—ஆம் தேதி ஜனதாக கட்சி சட்டப்பூர்வமாக ஏற்பட்டது. மே மாதம 5—ஆம் தேதி ஜனநாயக காங்கிரஸ் கலைக்கப்பட்டு ஜனதா கட்சியுடன இணைந்தது.

ஜனதா கட்சி கூட்டுக் கட்சிகளாகத்தான் செயல்பட்டதே தவிர ஒற்றுமையாக தனிக்கட்சியாக செயல்படவில்லை. ஐந்து கட்சிகளும் தங்களுடைய தனித்தன்மையை தொடர்ந்து காப்பாற்றி வந்தன. இந்த நிலைமையில் ஜனதா கட்சி வலிமை பெற்ற கட்சியாக முடியாமல் போயிற்று. மொரார்ஜி தேசாய்க்கும் சரண்சிங்கிற்கும் ஏற்பட்ட அதிகாரப் போராட்டம் இந்தக் கட்சியை மேலும் பலம் இழக்கச் செய்தது. சரண்சிங் ஜனதா கட்சியை இனக்கட்சி என்று குற்றம் சாட்டி ராஜ்நாராயணனும் அவரும் ஒன்று சேர்ந்து ஜனதா அரசாங்கத்தை பதவியில் இருந்து இறக்கி சரண்சிங் பிரதம மந்திரியாக ஆனார். சரண்சிங்கிற்கு கட்சியில் போதுமான பலம் இல்லாததால் லோக்சபை கலைக்கப்பட்டு இடைத்தேர்தல் அறிவிக்கப்பட்டது. ஜனதா கட்சிக்குள்ளேயே ஏற்பட்ட பிளவினால் ஜனதா கட்சி என்றும், லோக்தல் என்றும் இரண்டு கட்சிகளாகப் பிரிந்து இடைத்தேர்தலில போட்டியிட்டு தோல்வியைச் சந்தித்தன. 1990களில் பாரதியா ஜனதாக் கட்சி வலிமை பெற்று வளர்ந்தது.

## 8.2.3. தன்னலக்குழுக்கள்

தன்னலக் குழுக்களை பல வகைகளாகப் பிரிக்கலாம். அவை ஒவ்வொரு அரசியல் முறையிலும் செயல்படுகின்றன. மிகவும் பிரசித்தி பெற்ற செல்வாக்குக் குழுக்களில தொழிலாளர் குழுக்களும் வணிகக் குழுக்களும் அடங்கும். தொழில் வளமிக்க நாடுகளில் இந்த இரண்டு வகைக் குழுக்களும் மிக முக்கிய பங்கு வகிக்கின்றன. விவசாயக் குழுக்கள் விவசாய நாடுகளில் மிக பிரசித்தி பெற்றவையாகும். இந்தக்குழுக்களைத் தவிர பல தொழில்களை மையமாகக் கொண்ட வாழ்க்கைத் தொழிலாளர் குழுக்களும், மொழிக் குழுக்களும் இனக்குழுக்களும் குறுகிய நோக்கங்கள் கொண்ட குழுக்களும் உள்ளன. சில குழுக்களும் பண பலத்தாலும் சில குழுக்கள் தற்காலத்தில் சட்டம் இயற்றும் துறைக்கு துணை அளிப்பவையாக உள்ளன. அவைகள் மூன்றாவது சில தன்னல செல்வாக்குக் குழுக்கள் ஆகும்.

### அ. வணிகக் குழுக்கள்

சுதந்திர பொருளாதார நாடுகளிலோ அல்லது கலப்புப்பொருளாதார நாடுகளிலோ வணிகக் குழுக்கள் மிக முக்கிய பங்கு வகிக்கின்றன. அவைகள் மிக சக்தி வாய்ந்தவைகளாகவும் இருக்கின்றன. அவைகள் அரசியல் கட்சிக்கு அப்பாற்பட்டு சுதந்திரமாகச் செயல்படுகின்றன. முதல் வணிகக் குழு இந்தியாவில் 1801—ஆம் ஆண்டு தோன்றியது. பிரிட்டிஷ் வணிகர்கள் இந்தியாவிற்கு வந்தவுடன் வணிகக் குழுக்களை

அமைத்தார்கள். 1830—ல் வணிகக் குழு ஐரோப்பிய வணிகர்களைக் கொண்ட ஏற்படுத்தப்பட்டது. 1834—ல் கல்கத்தாவில் வணிக சங்கம் ஏற்படுத்தினார்கள். 1887—ல் இந்திய வணிகச் சங்கம் ஏற்படுத்தப்பட்டது. இந்திய வணிகச் சங்கம் ஏற்படுத்தப்பட்டதின் முக்கிய நோக்கங்கள் கீழே வருவன ஆகும்.

“வங்காளத்தில் வணிக நிறுவனங்கள் வளர்ச்சியை ஊட்டுவதற்கும் உதவி புரிவதற்கும் வணிக நிறுவனங்களோடு தொடர்பு கொண்ட எல்லோர் நலத்தையும் காப்பதற்கும், வணிக சமுதாயத்தின் வணிக உறுப்பினர்களுக்கு ஒற்றுமையை வளர்க்கவும், வணிக நிறுவனங்களுக்குள் சச்சரவுகள் ஏற்படும் பொழுது நடுவராய் இருந்து தீர்ப்பு வழங்கவும், மற்றும் பொதுவாக வங்காள மக்களின் நலத்தை பேணும் வகையில் எல்லா காரியங்களையும் செய்வதற்கும் ஏற்படுத்தப்பட்டதாகும்”.

அந்த வணிகச் சங்கம் ஏற்படுத்டதப்பட்டதின் முக்கிய நோக்கம் வணிகச் சமுதாயத்தில் உள்ள பிரச்சனைகளை புனராய்வு செய்து செல்வாக்கு குழுவாக சேவை செய்யவும், மேலே குறிப்பிட்ட காரணங்களுக்காகவும் ஏற்படுத்தப்பட்டதாகும். 1900—ஆம் ஆண்டு பம்பாயில் இந்திய வணிகச் சங்கம் தோற்றுவிக்கப்பட்டது.

இந்தியா சுதந்திரம் அடைந்த பின்பு வணிகர்கள் ஒன்று சேர்ந்து நல்ல முறையில் செயல்பட்டு வருகின்றார்கள். ஆயிரத்துக்கும் மேற்பட்ட வணிகச் சங்கங்கள் நாடு முழுவதும் பரவலாக உள்ளன. ஒவ்வொரு நகரத்திலும் ஒரு வணிகச் சங்கமோ, அல்லது அதே மாதிரி அமைப்போ இருக்கிறது. இந்த வணிகச் சங்கங்களுக்கு ஒரு கூட்டு நிறுவனமாக, கூட்டு இந்திய வணிக மற்றும் தொழில் சங்கம் இருக்கிறது. அது எல்லா வணிக மக்களும், வணிக செயல் முறைகளை அறிந்து கொள்ளத்தக்க வகையில் அமைந்து இருக்கிறது. அகில இந்திய உற்பத்தியாளர்கள் சங்கம் 1941—ல் தோன்றியதாகும். அது இந்தியாவின் சிறிய தொழில் அதிபர்களை உண்டாக்கியது. ஆனால் கூட்டு இந்திய வணிக மற்றும் தொழில் சங்கம் பெரிய வணிக நிறுவனங்களில் ஈடுபட்டு இருக்கும் வணிக மக்களையும் சிறிய தொழிலில் ஈடுபட்டள்ள வணிக மக்களையும் உள்ளடக்கியது. அகில இந்திய உற்பத்தியாளர் சங்கத்தின் அலுவலகமும் புதுடெல்லியில் இருக்கிறது.

**உத்தியும்—நோக்கமும்**

இந்தியா சுதந்திரம் அடைவதற்கு முன்பு வணிகக் குழுக்களின் நோக்கம் அரசாங்கத்தோடு தொடர்பு கொள்ளவும் அரசாங்கத்தின் பல

அளவுகளில் தொடர்பை ஏற்படுத்திக் கொள்ளும் விதமாக இருந்தது. ஆனால் அதே சமயம் அவர்கள் தேசிய எழுச்சியையும் ஆதரித்தனர். அவர்களுக்கு சட்டமன்றங்களின் பிரதிநிதித்துவம் இருந்தது. அவர்கள் அரசாங்கத்தின் ஆலோசனை மன்றங்களிலும் இடம் பெற்று இருந்தனர். இந்தியா சுதந்திரம் அடைந்த பின்பு அதே நிலைமை இருந்து வருகிறது. அவர்களுடைய முக்கிய நோக்கம் அரசாங்கத்தோடு நல்லுறவை ஏற்படுத்திக் கொள்வதாகும். அதே சமயம் அவர்கள் எதிர்க்கட்சிகளோடும் தொடர்புகளை வைத்துக்கொண்டு இருக்கின்றனர். இந்திய அரசியல்முறை கூட்டாட்சி முறையாக இருப்பதால் அரசியலில் எல்லா மட்டங்களிலும் அவர்கள் செயலாற்றுகிறார்கள். அவர்கள் சட்ட மன்றங்களில் பிரதிநிதித்துவம் பெற உரிமை பெற்றிருக்கவில்லை. ஆனால் சில வணிகர்கள் எப்பொழுதம் சட்ட மன்றங்களில் (மத்தியிலும் மாநிலங்களிலும்) இருக்கின்றனர். இந்திய அரசாங்கத்தின் ஒவ்வொரு அமைச்சகத்திலும் சில வகையான ஆலோசனைக் குழுக்கள் இருக்கின்றன. அந்தக்குழுக்களில் வணிகக்குழுக்களின் பிரதிநிதிகள் தங்களுடைய கருத்துக்களை பிரதிபலிக்க வாய்ப்புள்ளது. வணிகர்கள் அரசாங்கத்தோடு புதுடில்லியில் உள்ள அலுவலகத்தில் இருந்து தொடர்பு கொள்கிறார்கள். இந்த தொடர்புகள் முக்கியமாக அவர்களுடைய வருடாந்திர கூட்டங்களில் செயல் திறன் உடையவையாக இருக்கின்றன. பிரதமமந்திரியும், நிதிமந்திரியும் வணிகர்களை பொதுவாக வருடாந்திர கூட்டங்களில் சந்திக்க சம்மதிக்கிறார்கள்.

இந்திய சோஷலிசக் கொள்கையை அடைய முடிவு செய்திருக்கிறது. மேலும் பொது மக்கள் வணிக மக்களை எதிர்ப்பு நோக்கோடு காண்கிறார்கள். இந்தக்காரணங்களுக்காக வணிக குழுக்கள் அமெரிக்க ஐக்கிய நாடு அல்லது பிரிட்டன் போன்ற நாடுகளை போல சிறந்த முறையில் செயல்பட இயலவில்லை. இந்த வணிகச் செல்வாக்கு குழுக்கள் இந்தியாவில் சட்டமியற்றும் துறையிலோ அல்லது நிர்வாகத்துறையிலோ தங்களுடைய கொள்கைகளை வலியுறுத்த இயலவில்லை. இதற்கு முக்கிய காரணம் கொள்கைகளை உருவாக்குவதில் அவர்களுடைய பங்கு மிகச் சிறயதாகும். மாநில அரசாங்க மட்டத்திலும் கூட வணிக குழுமங்கள் கொள்கைகளை வகுப்பதில் தங்களுடைய செல்வாக்கை பயன்படுத்த முடியவில்லை என்பதையும் சேர்த்துக்கொள்ளலாம். ஏனெனில் இதற்கு முக்கிய காரணம் மாநில அரசுகள் மத்திய அரசின் வணிகக் கொள்கைகளை பின்பற்றுவதுதான்.

### ஆ. தொழிற்சங்கங்கள்

அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸ் 1920—ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்டது. லாலாலஜபதிராய் முதல் வருடாந்திர கூட்டத்திற்கு

தலைமைவகித்தார். அது பின்பு தேசிய கூட்டு தொழிற்சங்கமாக அறியப்பட்டது. அந்த சமயம், அந்த சங்கமானது இந்தியத் தேசிய காங்கிரஸ் உறுப்பினர்களால் ஆதிக்கம செலுத்தப்பட்டது. 1929—ல் அகில இந்திய தொழிற் சங்கக் காங்கிரஸ், இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் கட்டுப்பாட்டில் வந்தது. 1931—ல் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி தனிகூட்டு தொழில் சங்கங்களை ஏற்படுத்தியது. 1935—ல் அந்தக் கூட்டுத் தொழில் சங்கங்கள் இந்திய தொழில் சங்க காங்கிரசின் கட்டுப்பாட்டுக்குள் வந்தன. 1948—ல் இந்திய தேசிய தொழில் சங்க காங்கிரஸ் ஏற்படுத்தப்பட்டது. இது இந்திய தேசிய காங்கிரஸின் தொழில் சங்க பிரிவு ஆகும். சோசலிஸ்டு கட்சி அதனுடைய சொந்த தொழில் சங்க அமைப்பை ஏற்படுத்தியது. அது ஹிந்து மஜதூர் சபா என்று அழைக்கப்பட்டது. மற்ற தேசிய அரசியல் கட்சிகளும் அவைகளுடைய தொழில் சங்க கூட்டு அமைப்புகளைப் பெற்று இருக்கின்றன. இந்த முறையில் இந்தியாவில் தொழில் சங்கங்கள் அரசியல் கட்சிகளோடு நெருங்கிய தொடர்புடையவர்களாக இருக்கின்றன. இந்த தொடர்ப வணிக குழுக்களிடம் அவ்வளவாக இல்லை. ஆனால் தொழில் சங்கங்களைப் பொறுத்தவரை இந்த நெருங்கிய தொடர்பு கட்சி அமைப்பின் எல்லா மட்டங்களிலும் இருக்கிறது. கொஞ்ச காலம் தொழில் சங்க அமைப்புகளுக்கும் அரசியல் கட்சிகளுக்குமிடையே உள்ள தொடர்புகள் வலுப் பெற்றன. இப்பொழுது தொழில் சங்கங்கள் அரசியல் சங்கங்களிடம் இருந்து சுதந்திரமாக செயல்படவில்லை. இந்த முறையில் தொழில் சங்கங்கள் சுயேச்சை செல்வாக்குக் குழுவாக செயல்படவில்லை. அவைகள் வெவ்வேறு அரசியல் கட்சிகளின் விரிவாக்கமாகத்தான் இந்திய அரசியலில் இருக்கின்றன.

## இ) உழவர் குழு

1920—ல் பல்வேறு உழவர் எழுச்சிகள் காந்தி தலைமையில் இருந்து வந்தன. இருந்த போதிலும் 1936—ம் வருடம்தான் அகில இந்திய உழவர் சபை ஏற்படுத்தப்பட்டது. 1939—ஆம் வருடத்தில் அகில இந்திய உழவர் சபையின் தேசிய பேரவை ஆச்சாரிய நரேந்திரதேவ் என்பவரின் தலைமையில் கூட்டப்பட்டது. அவருடைய தலைமை உரையில் ஆச்சாரியா நரேந்திரதேவ் காங்கிரஸ் கட்சி உழவர் மக்களால் பிரதிநிதித்துவம் பெற்று இருந்தாலும் ஒரு தனிப்பட்ட உழவர் சபை அவசியம் என்று சுட்டிக்காட்டினார். அவர் காங்கிரஸ் கட்சிக்குள் உழவர்கள் தங்களுடைய செல்வாக்கை செயல்படுத்த முடியவில்லை என்று சுட்டிக்காட்டினார். காங்கிரஸ் கட்சியில் உள்ள மற்ற சில குழுக்கள் உழவர்களின் எண்ணங்களை பிரதிபலிக்கவிடாமல் கட்டுப்படுத்தின. ஆகையால் ஒரு தனி உழவர் சபை இந்திய தேசிய காங்கிரஸ் கட்சியில் உழவர்களுடைய தேவைகளை எடுத்துச் சொல்வதற்கு அவசியம் என்று

குறிப்பிட்டார். அந்த சபை காங்கிரஸ் கட்சியோடு போட்டியாக இருக்காது என்றும் காங்கிரஸ் கட்சியோடு இணைந்து செயல்புரியும் என்று கூறினார். 1942—ஆம் ஆண்டிற்குப் பிறகு இந்திய கம்யூனிஸ்டு கட்சி அகில இந்திய உழவர் சபையில் கட்டுப்பாட்டைப் பெற்றது. பல அரசியல் கட்சிகள் அவைகளுடைய உழவர் குழுக்களைப் பெற்று இருக்கின்றன. தொழில் சங்கங்களைப் போன்று உழவர் குழுக்களும் கட்சிக்கட்டுப்பாட்டில் இருந்து சுதந்திரமாக செயல்படவில்லை. செல்வாக்குப்பெற்ற ஒரு உழவர் குழுவை அமைப்பு முறையில் உள்ள கஷ்டங்களாலும் பண வசதி இல்லாததாலும் மற்ற காரணங்களுக்காகவும் அமைக்க இயலவில்லை.

## ஈ) மாணவர்கள் குழுக்கள்

1929—ல் பஞ்சாபில் ஒரு மாணவர் குழு லாலாலஜபதிராய் தலைமையில் துவங்கியது. அகில வங்காள மாணவர் குழு திரு.ஜவஹர்லால் நேரு தலைமையில் அதே ஆண்டு தோன்றியது. 1936—ல் அகில இந்திய மாணவர்கள் சங்கம் ஏற்படுத்தப்பட்டது. திரு.முகமது அலி ஜின்னா அந்த அமைப்பின் முதல் தலைவராக இருந்தார். 1940—ல் அந்த அமைப்பில் ஒரு எதிர்ப்பு ஏற்பட்டது. கம்யூனிஸ்ட் கட்சிகள் மாணவர் மன்றத்தில் கட்டுப்பாட்டைப் பெற்றனர். 1945—ல் காங்கிரஸ் கட்சியினர் அகில இந்திய மாணவர் காங்கிரஸ் என்ற அமைப்பை ஏற்படுத்தினர். 1950—ல் மாணவர்கள் நாட்டு அரசியலில் ஈடுபடுத்தக் கூடாது என்று கட்சி தலைமை முடிவு செய்ததால் இந்த அமைப்பு கலைக்கப்பட்டது. தேசிய மாணவர் மன்றம் என்ற மற்றொரு அமைப்பு தோன்றியது. அது அரசியல் சார்பற்ற மாணவர் சபையாகும். அதே வருடத்தில் இந்திய தேசிய காங்கிரஸ் இளைஞர் காங்கிரசை ஏற்படுத்தியது. பல அரசியல் கட்சிகள் அவைகளுடைய சொந்த மாணவர் குழுக்களைப் பெற்று இருக்கின்றன.

## உ) சமுதாயச் சங்கங்கள்

மேலே விவாதிக்கப்பட்ட தொழில் முறையில் ஏற்படுத்தப்பட்டு இருக்கும் செல்வாக்கு குழுக்களுக்கும், சமுதாய சங்கங்களுக்கும் ஒரு வேறுபாடு இருக்கிறது. மேற்கத்திய நாடுகளில் செல்வாக்குக் குழுக்கள் மிகப் பிரசித்தி பெற்றவை என்றும் வளர்ச்சியடையாத நாடுகளில் சமுதாய சங்கங்கள் அதிகாரம் பெற்றவையாக உள்ளன என்றும் மேற்கத்திய அறிஞர்கள் நம்புகிறார்கள். இந்தியாவைப் பொறுத்தவரை நான்கு வகை சமுதாய சங்கங்கள் இருக்கின்றன என்று பேராசிரியர் வெயினர் குறிப்பிடுகிறார். அவைகள் மத, இன, மொழி, நாகரீக மற்றும் சமுதாய அடிப்படையில் இருக்கின்றன. இந்திய சமூக அமைப்பு, இன வகுப்பு படிநிலை அமைப்பிலும், மதம், மொழி முதலானவை இடைநிலை அமைப்புகளிலும் அரசியல் செல்வாக்குப் பெற்று இருக்கின்றன.

இந்த படிநிலை அமைப்பும் இடைநிலை அமைப்பும் பிராந்திய மற்றும் எங்கும் பரவலாக இருப்பதால் பல வகையான உள்ளூர் கட்சிகளிலும் செல்வாக்கு குழுக்களிலும் மற்ற நாடுகளைப் போல் அல்லாமல் செல்வாக்கு பெற்று இருக்கின்றன என்று பேராசிரியர் வெயினர் கூறுகிறார். இங்கே ஒன்றை நாம் ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும். மத, இன, மொழிக் குழுக்கள் முழுவதுமாக இடைமட்ட பிரிவுகள் அல்ல. ஒன்றோடு ஒன்று மாறுபட்டவை. உதாரணமாக முஸ்லீம்கள் பல மொழி பிராந்தியங்களில் இருக்கின்றார்கள். ஒரே மொழி பேசும் மாநிலத்தில் பல மதங்களைக் கொண்டவர்களும் இருக்கின்றார்கள். ஆகையால் இந்தக் குழுக்கள் எப்பொழுதும் வலுப்பெற முடிவதில்லை. அவைகள் ஒன்றக்கொன்று முரணாகவும் செயல்பட இயலும். மேலும் இந்த மாதிரி செல்வாக்குக் குழுக்கள் இந்தியாவிற்கு மட்டும் நூதனமானவை அல்ல. உண்மையாகவே இந்தியாவில் எவ்வளவு சமுதாய சங்கங்கள் உள்ளனவோ அத்தனை சங்கங்கள் அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் உண்டு. மிக்சிகன் மாநிலம் சட்டம் இயற்றும் துறையைப் பற்றிய ஒரு ஆய்வு அறிக்கையில் மிக்சிகன் மாநிலத்தில் மிக அதிகமான இனக்குழுக்கள் இருப்பதாகவும் அவைகள் இந்தியாவில் உள்ள சமூக சங்கங்களை விட நல்ல அமைப்புகள் பெற்றவை என்றும் அந்த சமுதாய சங்கங்கள் அரசியலில் இந்தியாவை விட மிக செல்வாக்குப் பெற்றவை என்றும் கூறுகிறது.

### 8.3. பேராசிரியர் வெயினர் என்பவர், இந்த சமுதாய சங்கங்களின் கோரிக்கைகளை இரண்டு வகையாகப் பிரிக்கலாம் என்று கூறுகிறார்.

1. அரசியல் எல்லை மாற்றங்களிலும் அல்லது அரசியல் உட்பொருள் தகுதியிலும் சமுதாய சங்கங்கள் தங்களுடைய கோரிக்கைகளில் முழு சுதந்திரத்தில் இருந்து பிராந்திய தன்னாட்சி வரை கேட்கின்றன. திராவிட முன்னேற்றக் கழகம், மாநில சுய ஆட்சி கேட்டார்கள். ஆகாலிதல் கட்சி, திராவிட முன்னேற்றக் கழகம் ஆகியன பிராந்திய சுய ஆட்சியைக் கோரின.

2. தற்போதைய அரசாங்கத்தில் அதிக வாய்ப்புகளுக்கு சில சமுதாய சங்கங்கள் கோருகின்றன. உதாரணமாக சட்டமன்றத்தில் அதிக இடங்களை ஒதுக்கவும், பொருளாதார வகையில் அந்த சமுதாய மக்கள் அதிகமாக வாழும் பகுதியில் மாநிலம் அதிகமான பணம் ஒதுக்கவும் இந்த சமுதாய சங்கங்கள் கோருகின்றன. அந்த மாதிரி கோரிக்கைகளில் மேற்கு வங்காளத்தில் வாழும் பழங்குடி மக்களின் சமுதாய சங்கங்களின் கோரிக்கைகள், ஆந்திராவில் உள்ள கம்மாரெட்டி இனத்தவரின் கோரிக்கைகள், கர்நாடக மாநிலத்திலுள்ள லிங்காயத், ஒக்காலிகா இனத்தவரின் கோரிக்கைகள், கேரளாவில் நாயர், கிருத்தவர்,

ஈழவர் சமூகத்தினரின் கோரிக்கைகள், பீகாரில், ராஜபுத்திரர்கள், பூமிகார் மற்றும் காஸ்தா இனத்தவரின் கோரிக்கைகள், மேற்கு வங்காளத்தில் தாழ்த்தப்படவர் சங்கம், ஆங்கிலோ இந்திய சங்கம், குர்க்கா சங்கம் முதலியவற்றின் கோரிக்கைகள், உத்திரப்பிரதேசத்தில் சில சாதிகளுடைய கோகிமா சங்கத்தின கோரிக்கைகள், மேற்கு வங்காளத்தில் புருளியா மாவட்டத்தில் லோக் சேவக் சங்கத்தின் கோரிக்கைகள் முதலியவை அடங்கும். மாநிலங்களுக்கு முழு சுதந்திர கோரிக்கை இந்தியாவில் இப்பொழுது குறிப்பிடும்படியாக இல்லை. பிராந்திய சுய ஆட்சிக் கோரிக்கை இந்தியாவில் மொழி வாரி மாநிலங்கள் தோன்றித் தீர்ந்து விட்டன. சிறுபான்மை மக்களின் கோரிக்கை தொடர்ந்து கொண்டே இருக்கும். ஏனெனில் அவர்களுடைய நலன்கள் நிரந்தரமாக காக்கப்பட வேண்டியவை.

பேராசிரியர் வெயினர் மற்ற சமுதாய அமைப்புகளை பற்றியும் கூறுகிறார். அந்த அமைப்புகளை சாதி அமைப்புகள் என்று விவரிக்கிறார். உண்மையிலேயே அவைகள் வகுப்பு அமைப்புகள் ஆகும். இந்த வகையில் தாழ்த்தப்பட்ட சாதியினர் சங்கமும் அல்லது பிற்பட்ட சாதியினர் சங்கமும் அடங்கும். முதலாவதாக இந்த சங்கங்கள் ஒரு சாதி அமைப்பை குறிப்பிடவில்லை. மேலும் சாதியும் வகுப்பும் இணைவது போல இருக்கின்றன. தாழ்த்தப்பட்ட சாதியினர் இந்திய மக்களின் மிக ஏழை வகுப்பை சேர்ந்தவர். ஆகையால் அவர்களுடைய நலன்கள் தொடர்ந்து காக்கப்பட வேண்டியவை. அவர்களுடைய நலன்கள் சாதி அடிப்படையேயல்லாமல் கீழ் வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்ற முறையிலும் காக்கப்பட வேண்டியவை. அதே போல பிற்பட்ட சாதியினரின் கோரிக்கைகளும் ஆகும். பேராசிரியர் வெயினர் கர்நாடகா மாநிலத்தில் உள்ள லிங்காயத் மற்றும் ஒக்காலிகா சாதியினரையும். பீகாரில் உள்ள பூமிகார் மற்றும் காயஸ்தா சாதியினர் பற்றியும் கூறுகிறார். இங்கேயும் சாதிகள் வகுப்போடு இணைந்தவையாக தெரிகிறது. ஏன் என்றால் பெரும் வாரியான இந்த சாதி மக்கள் உழவர் வகுப்பைச் சார்ந்தவர்கள். உழவர் என்பது ஒரு சாதி இல்லை. அவர்கள் ஒரு வகுப்பைச் சேர்ந்தவர்கள். அவர்கள் கோருவதெல்லாம் உழவர்களின் நலன்களைக் காக்க வேண்டும் என்பதுதான். அதே சமயம் உழவர்களுக்குள்ளேயே சாதி அடிப்படையில் போட்டி இல்லை என்று கூற முடியாது. நாம் தெரிந்து கொள்ள வேண்டியது எல்லாம் சாதி அடிப்படையில் உள்ள கோரிக்கைகள் தெரிந்து கொள்ள வேண்டியது எல்லாம் சாதி அடிப்படையில் உள்ள கோரிக்கைகள் தற்காலிகமானவை. ஆனால் நிலமில்லாத உழவர்கள் என்று அவர்கள் செயல்படும் பொழுது சாதி அடிப்படையில் செயல்படவில்லை. ஆனால் வகுப்பு என்ற முறையில்தான் செயல்படுகிறார்கள்.

## 8.3.1. சமுதாய சங்கங்களும், வளர்ச்சிக்குழுக்களும் உள்ள ஒற்றுமை, வேற்றுமைகள்

செல்வாக்குக் குழுக்கல், வகுப்பு தொழில் மற்றும் சிறுபான்மையினர் நலன்கள் என்கின்ற அடிப்படையில் இருக்கின்றன என்பதை நாம் அனுமானிக்கலாம். இந்த குழுக்கள் கீழ்க்கண்ட காரணங்களுக்காகச் செல்வாக்குக் குழுக்கள் என்று கூறலாம்.

1. அவைகள் தங்களுடைய குறிப்பிட்ட தேவைகளைத் தெளிவாக அறிவிக்கின்றன. அவைகளுடைய தெளிவான கோரிக்கைகள் தற்காலிகமானவை அல்ல. நிரந்தரமானவை.

2. இந்த அமைப்புகளில் ஒரே சீரான உள் அமைப்ப இருக்கிறது. மேலும் அவைகளுடைய நலன்கள் பொதுவானதாகவும் தெளிவானதாகவும் இருக்கின்றன.

சமுதாய சங்கங்களைப் பொறுத்தவரையில் தெளிவான கோரிக்கைகளை விடுகின்றன. அவைகள் தெளிவான கோரிக்கைகள் விடுவதால் செல்வாக்கு குழுக்கள் என்று நாம் கூற முடியாது. சமுதாய சங்கங்களுக்கும் அமைப்புகள் உள்ளன. ஆனால் எல்லா சமுதாயங்களுக்கும் சங்கங்களோ அல்லது அமைப்புகளோ இல்லை. அமைப்புகள் உள்ள சமுதாயங்களிலும் அவைகளுடைய பெரும்பான்மையான வேலைகள் அரசியல் சார்பற்றவையாக இருக்கின்றன. அவைகள் தனித்துவத்தை வளர்க்கவும் சமூக மாற்றத்தை ஏற்படுத்தவும் மற்றும் சமூக குழுக்களில் சமூக போட்டியை வளர்க்கவும் இருக்கின்றன. அவைகள் அரசாங்கத்தோடு ஒரு சில சமயங்களில் தான் தொடர்பு கொள்கின்றன. அது கூட தற்காலிக அடிப்படையில்தான் அவைகளுடைய அரசியல் நலன்கள் பொதுவானவை அல்ல. ஏனெனில் சமுதாய சங்கங்களில் சாதி, மதம், மற்றும் மொழி அடிப்படையில் இந்த சங்கங்களுக்காக மட்டும் அல்ல. சில சமயங்களில் அவர்கள் பொதுவான தொழில், வகுப்பு மற்றும் சிறுபான்மை இனத்தவராக இருக்கலாம். அவை பின்வருமாறு.

சமூக மாற்றங்கள் காலத்திற்கேற்றவாறு இருந்தால் சமூக சங்கங்களில் வளர்ச்சியை ஏற்படுத்துகின்றன.

2. ஒரு மாநிலத்தில் சமுதாய சங்கங்கள் குறைவாக இருந்து சங்கங்களில் ஆள் சேர்க்கும் பொழுத தகுதி அடிப்படையில் சேர்த்தால் சமுதாய சங்கங்களின் அழிவு என்பது மாநில அரசாங்கத்தில் நிச்சயமுண்டு.

முதலாவது பிரச்சனையிலிருந்து நாம் முடிவு கொள்வது என்னவென்றால் சமூக மாற்றங்கள் அதிகமாக, சாதி மதம், மொழி

மற்றும் இன சங்சங்கள் அதிகமாகும். இரண்டாவது பிரச்சனையிலிருந்து நாம் தெரிந்து கொள்வது என்னவென்றால் சமுதாய சங்கங்கள் அதிகமாகும் பொழுது அதனுடைய நிலைத்தன்மையும் அதிகமாகும். நமது அனுமானம் என்னவெனில் காலத்திற்கேற்ற மாற்றம் சமுதாய நல கோரிக்கைகளை ஏற்படுத்தி அரசியலில் பங்கு பெற வைக்கும். அவைகள் அரசியலில்குழுவாக செயல்படும். ஆனால் குழுக்களை அரசியல் படுத்தும் பொழுது குழுக்களின் இடையெ வேறுபாடுகள் தோன்றும். அதன் மூலமாக அரசியலில் பொதுவான மற்றும் ஒன்றிய நலன்கள் பெற முடிவது இல்லை. பேராசிரியர் வெயினர் கூறுவது என்னவென்றால் சமுதாய சங்கங்கள் இந்தியாவில் அதிகமாக இருக்கிறது. ஏற்கனவே அதிகமாக சமுதாய சங்கங்கள் கல்வி, மற்றும் சமூக அமைப்புகளிலும் மற்றும் ஒவ்வொரு பகுதிகளிலும் இருக்கின்றன. சமுதாய சங்கங்கள் அதிகமாகும் பொழுது அரசியலுக்கு சம்பந்த மில்லாதவைகளாக ஆகி விடுகின்றன. இது ஒரு வகையில் உண்மையாகும். ஒழுங்காக அமைந்த குழுக்கள் அரசியலில் சுதந்திரம் வாய்ந்தவையாக இருக்க வேண்டும். இந்த புத்தகத்திற்கு முகவுரையளித்த பேராசிரியர் ஆல்மண்டு என்பவர் இந்தியாவில் செல்வாக்குக் குழுக்களின் குறிப்பிட்ட கோரிக்கைகள் மறுக்கப்படுகின்றன என்றும் அமெரிக்க ஐக்கிய நாட்டிலும் கூட நீண்ட காலம் வரை செல்வாக்குக் குழுக்களின் சட்ட பூர்வமான கோரிக்கைகள் நிறைவேற்றப்படவில்லை என்றும் குறிப்பிடுகிறார். சமீப காலத்தில் அமெரிக்க அரசியல் சட்டபூர்வமான அங்கீகாரம் கிடைத்தது போல செல்வாக்குக் குழுக்களின் கோரிக்கைகளுக்கு இந்தியாவிலும் சட்டபூர்வமான அங்கீகாரம் கிடைத்தது போல செல்வாக்குக் குழுக்களின் கோரிக்கைகளுக்கு இந்தியாவிலும் சட்டபூர்வமான அங்கீகாரம் கிடைக்கலாம் ஆல்மண்டின் இக்கருத்தை கீழ்கூறிய காரணங்களுக்காக ஏற்றுக் கொள்ள முடியாது.

1. அமெரிக்க ஐக்கிய நாட்டில் அரசியல் தன்மை, இந்திய அரசியல் தன்மையில் இருந்து மாறுபட்டதாகும். அமெரிக்க அரசியல் அதிகார பங்கீட்டுக் கொள்கையில் இந்தியாவைப் போல் அல்லாது மாறுபட்டதாகும்.

2. அமெரிக்க ஐக்கிய நாட்டு கூட்டாட்சி முறை இந்திய கூட்டரசு முறையில் இருந்து வேறுபட்டதாகும். கூட்டரசு அமைப்பில் ஓரளவு பேரம் இருக்க முடியும் என்பதை நாம் ஒத்துக்கொள்கிறோம். இந்தியாவில் நிச்சயமாக மத்திய அரசாங்கத்தில் அதிகாரம் குவிந்து இருக்கிறது. மாநில அரசாங்கங்கள் தங்களுடைய ஆதரவுகளுக்கு அமெரிக்க ஐக்கிய நாட்டைப் போல் அல்லாமல் மத்திய அரசாங்கத்தை நம்பியிருக்க வேண்டியிருக்கிறது.

3. அமெரிக்கா முதலாளித்துவ நாடாகும். அது முதலாளித்துவ பொருளாதாரத்தையும், முதலாளித்துவ அரசியலையும் பெற்று இருக்கிறது.

ஆனால் இந்தியா, சோசலிச கொள்கைளை ஏற்றுக் கொண்டு இருக்கிறது. ஆகையால் இந்தியாவின் சமுதாய பொருளாதார நோக்கங்களும், செயல்முறைகளும், அமெரிக்க ஐக்கிய நாட்டில் இருந்து மாறுபட்டு இருக்கும் நாம் முன்பு கூறியது போல எந்த நாட்டிலும் எல்லாக் குழுக்களும் ஒழுங்கமைந்தவைகளோ அல்லது சரிசமமானவைகளோ அல்ல. ஆகையால் பல குழுக்கள் பேரம் செய்வதிலும் தங்கள் தங்களுடைய வழிகளை குழுக்களின் கொள்கைகளாக செயலாக்குவதிலும் கடைப்பிடிக்கின்றன. அமெரிக்க ஐக்கிய நாட்டைப் போல இந்தியா ஒரு தொழில் வளம் மிக்க நாடு அல்ல. இந்தியாவில் உள்ள செல்வங்கள் எல்லாம் முழுமையாக பயன்படுத்தப்பட்டாலும் இந்தியா ஒரு விவசாய நாடாகத்தான் இருக்க முடியும். மிகப் பெரும்பான்மையான இந்திய மக்கள் நிலம் உள்ள விவசாயிகளாகவோ அல்லது நிலமற்ற தொழிலாளர்களாகவோ தான் இருப்பார்கள். இந்த விவசாயத் தொகுதிகளை ஒழுங்காக அமைப்பது என்பது முடியாத காரியம். ஏனெனில் மக்கள் நாடு முழுவதும் பரவி இருக்கிறார்கள். அவர்கள் ஒருவரோடு ஒருவர் தொடர்பு கொள்வது என்பது மிகக் கடினமான காரியமாகும். இந்தியாவில் செல்வாக்கு குழுக்கள் ஒழுங்காக அமைந்தாலும் அமெரிக்க ஐக்கிய நாட்டில் இருப்பது போல் செயல்பட முடியாது. மிகக் குறைந்த சதவிகிதமக்கள்தான் அரசியலில் பிரதிநிதித்துவம் பெற முடியும்.

ஆகையால் நமது முடிவு என்னவென்றால், செல்வாக்குக் குழுக்கள் மேற்கத்திய நாடுகளைப் போல தோன்ற முடியாது. இனக் குழுக்கள் அவைகளுடைய பொருளாதார சமூக நலன்களைக் கருத்தில் கொண்டவைகளாக இருக்கின்றன என்று பேராசிரியர் வெயினர் கூறுகிறார். சமூக நலனைப் பொறுத்தவரை நாம் இதை ஒத்துக்கொள்ளலாம். ஆனால் பொருளாதார நலம் அரசியலோடு மிக நெருங்கிய தொடர்பு உடையதாகும். அரசியலில் இனக் குழுக்கள் தற்காலிக நலத்துக்காக தற்காலிகமாகத்தான் ஈடுபாடு கொண்டுள்ளது எனவும் நாம் கூறலாம். அவைகள் அரசியலுடனோ அல்லது சாதி, மதம், மொழி முதலியவைகளுடனோ தொடர்பு கொள்ளவில்லை என்று கூறு முடியாது. ஆனால் அந்த தொடர்புகளின் தன்மை தற்காலிகமானதாகும். தொடர்ந்த பல மாற்றங்கள் அவர்களுடையா நலனையும் நடத்திச் செல்கிறது.

நல்ல அமைப்பு பெற்ற குழுக்களின் செல்வாக்கு இந்தியாவில் பொதுக் கொள்கைகளை வகுக்கும் பொழுது ஓரளவு இருக்கிறது என்று பேராசிரியர் வெயினர் குறிப்பிடுகிறார். ஆனால் பெரும்பாலும் இந்தச் செல்வாக்கு எதிர்மறையான பலன்களையே தந்து இருக்கிறது. நாம் இதை ஒத்தக் கொள்கிறோம். இருந்த போதிலும் இந்திய அரசியலில் அவைகளுடைய கோரிக்கைகள் ஏற்றுக் கொள்ளும் பொழுது ஏற்படும்

அபாயங்களைத்தான் இது காட்டுகிறது. ஒழுங்குஅமைவு பெற்ற குழுக்களின் செல்வாக்கு அரசாங்க கொள்கையை வகுப்பதைவிட நிர்வாகத்தில் அதிகம் என்று அவர் கூறுகிறார். இது ஒரு அபாயகரமான நிலைமையை ஏற்படுத்தும். ஏன் என்றால் அவைகள் கொள்கைகள் விதிப்பதிலும் கொள்கைகளை நிறைவேற்றுவதில் உள்ள வேகத்தைத் தடுத்து வளர்ச்சியைக் கட்டுப்படுத்தும்.

அரசியலில் குழுக்களின் பங்கை நாம் குறைத்து மதிப்பிடவில்லை. ஜனநாயக அரசியலில் ஆலோசனை முறைகளும் பேரமுறைகளும் தீர்வு காணும் முறைகளும் அவசியம் என்பதை நாம் ஒத்துக் கொள்கிறோம். இந்திய அரசியலில் மிக நன்கு இயங்கும் குழுக்களில் தொழில் குழுக்களும், தொழில்சங்கங்களும் மற்றும் அரசாங்கத்தோடு நெருங்கிய தொடர்பு உள்ள குழுக்களும் ஆகும். இந்திய அரசாங்கத்தின் ஒவ்வொரு அமைச்சகமும் ஆலோசனையை வரவேற்கிறது. அந்த மாதிரி ஆலோசனைகள் அரசாங்கத்திற்கு நன்மை பயக்கின்றன. இருந்த போதிலும் ஒழுங்கமைந்த குழுக்களின் நலன்களை மட்டும் அரசியல் தலைவர்கள் கருத்தில் கொண்டு தீர்க்க முயலக்கூடாது. ஒழுங்கு அமைவு பெறாத மக்களுக்கு அதிகமான வாய்ப்பும். அரசாங்க அமைப்பில் அவர்களுக்கு பிரதிநிதித்துவம் கொடுக்க வேண்டும்.

## 8.4. தொகுப்புரை:

தற்போதுள்ள தேர்தல்களில் கட்சிக்கும், கோட்பாட்டிற்கும், முக்கியத்துவம் கிடையாது. அரசியலின் தனிநபர் முக்கியத்துவத்தாலும், கவர்ச்சி, பணபலம் மற்றும் படைபலம் ஆகிய சக்திகளுக்கு மக்கள் ஆட்பட்டு செயல்படுவதால் ஜனநாயக பண்பு மறைந்து விட்டது. சாதி, மத உணர்வுகள் அதிக அளவில் தேர்தலில் இடம் பெறுகிறது. சமீபகாலத்தில் நடந்த தேர்தல்களில் சில அதிர்ச்சி தரும் சம்பவங்கள் நடந்தேறின. அக்குறைபாடுகளைக் களைய தேர்தல் ஆணையம் சில சீர்திருத்தங்களை கொண்டு வர வேண்டும். தேர்தலில் பணத்தின் செல்வாக்கை அகற்றி, நாட்டுப்பற்று மற்றும் சேவை மனப்பான்மைக்கும் முக்கியத்துவம் வழங்கப்பட வேண்டும். அரசியல் அறிவை வளர்த்து, அரசியல் விழிப்புணர்வை உருவாக்கி, கவர்ச்சி மற்றும் பண பலத்திற்கு தேர்தலில் இடமில்லாமல் செய்ய வேண்டும். தற்பொழுது உள்ள சூழ்நிலையில் தேசியகட்சி ஏதேனும் ஒரு பிராந்தியக்கட்சியினைச் சார்ந்து செயல்படக்கூடி சூழ்நிலை மேலும் மேலும் வளர்ந்து கொண்டே செல்கிறது. மேலும் இந்தியாவில் வாக்காளர்கள் வாக்கு அளிக்கும் முயினை கட்டாயமாக்கி சட்டமியற்றப்பட வேண்டும். இந்தியத் தேர்தல் சட்டம் திருத்தப்பட்டு ரௌடிகள், குற்றவாளிகள், தேசதுரோகிகள் அரசியலில் புகுவதை தடுக்க வேண்டும். இந்தியா போன்ற நாடுகளில்

> முன்னேற்றத்தை அறிவதற்குண்டான தன்னறிவுச் சோதனைக் கேள்விகள்.
>
> 4. ஒரு கட்சி ஆதிக்க முறையை விளக்குக.
>
> 5. இந்திய அரசியல் கட்சியின் பண்பினை விளக்குக
>
> 6. ஜனதா கட்சிபற்றி ஒரு சிறுகுறிப்பு வரைக.

சுதந்திரமாகவும் நேர்மையாகவும் தேர்தல் நடைபெறுவது மிகவும் அவசியமாகும்.

## 8.5. முக்கிய வார்த்தைகள்:

1. மக்கள் பிரதிநிதித்துவச்சட்டம்: தேர்தல் நடத்தப்பட வேண்டிய முறைகள் சட்டமன்ற உறுப்பினர்களின் தகுதி மற்றும் தகுதியின்மையை வரையறுக்கிறது. அரசியலமைப்புக்கு புறம்பாக சட்டமன்ற உறுப்பினர் செயல்படுவதாக உறுதி செய்யப்பட்டால் அவர் தகுதி இழக்க செய்வது மக்கள் பிரதிநிதித்துவச்சட்டம் ஆகும்.

2. அடையாளச் சீட்டு : ஆள்மாறாட்டம் மற்றும் போலி ஓட்டுபோடும் முறை இவற்றை தடுப்பதற்காக புகைப்படத்தோடு, சட்டபூர்வமாக வாக்காளர்களுக்கு தேர்தல் ஆணையம் வழங்கப்படும் அதிகார சீட்டு.

3. ஆதிக்க கட்சி : ஒரு கட்சி, நீண்ட கால அரசியல் வளர்ச்சியில் பெரும்பான்மையான சட்ட மன்ற இடங்களை பெற்றிருந்தால் அதை ஆதிக்க கட்சி என்கிறோம்.

4. எதிர் கட்சி : ஆளுங்கட்சிக்கு அடுத்த நிலையில் கூடுதல் வாக்குகளை பெற்று ஆளுங்கட்சியை நெறிப்படுத்தும் அரசியல்கட்சி. பாராளுமன்ற ஜனநாயகத்தில் அவசியமாகத் தேவைப்படுகிற நெறியாளர்தான் எதிர்கட்சியாகும்.

5. ஜனதா கட்சி : நான்கு எதிர்கட்சிகள் ஒன்று சேர்ந்து ஜெயப்பிரகாஷ் நாராயணன் தலைமையில் உதயமானது ஜனதாகட்சி.

## 8.6. முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனை கேள்விக்கான பதில்கள்.

கேள்வி எண்.1 — இந்தக்கேள்விக்கான விடையை பகுதி எண். 8.1ல் அறிக.

கேள்வி எண்.2 — இந்தக்கேள்விக்கான விடையை பகுதி எண். 8.1.1ல் அறிக.

கேள்வி எண்.3 — இந்தக்கேள்விக்கான விடையை பகுதி எண்.8.1.1.(2)ல் அறிக.

கேள்வி எண்.4 — இந்தக்கேள்விக்கான விடையை பகுதி எண்.8.2.ல்அறிக.

கேள்வி எண்.5 — இந்தக் கேள்விக்கான விடையை பகுதி எண்.8.2.1.ல் அறிக

கேள்வி எண்.6 — இந்தக்கேள்விக்கான விடையை பகுதி எண்.8.2.2.ல் அறிக

## 8.7. இந்த அலகு சம்பந்தப்பட்ட மேலும் படிக்க வேண்டிய நூல்கள்


1. Narain(ed), State Politicals in India, Meerut, Meenakshi Prakasham, 1967.
2. Kothari .R; Party system and election studies; Asia Publising House. 1967.
3. Sahni .N.C. (ed) coaliation Politics in India, Jullundar; New Academic Publishing company; 1971.
4. Vinod Kumar; Constitution of India; Critical Appraisal New Delhi; 1988.


## 8.8. வினாக்களும் / செயல்முறைப்பயிற்சிகளும்.

1. இந்திய மக்களாட்சியில் நடைபெறும் தேர்தல்களை விளக்கி, அதில் தேவைப்படும் சீர்திருத்தங்களை ஆராய்க.
2. தமிழகத்தில் தேர்தல்களும், தேர்தல் உடன்பாடுகளும் பற்றி விவரிக்க.
3. ஒரு கட்சி ஆதிக்க முறைப்பற்றிய கருத்தை இந்தியாவை உதாரணமாகக் கொண்டு விளக்குக.
4. தன்னலக் குழுக்கள் இந்தியாவில் எப்படி செயல்படுகின்றன என்பதை விளக்கி எழுதுக.
5. உங்கள் கருத்தில் இந்தியக் தேர்தல் முறையில் என்னென்ன மாற்றங்கள் தேவை என்பதை பட்டியலிடுக.

குறிப்பு

# அலகு —9

## மாநில சட்டப் பேரவைகள்: ஆளுநர்: உயர் நீதிமன்றம்: உச்ச நீதிமன்றம்

### முன்னுரை:

இந்தியா 28 மாநிலங்களையும் 7 யூனியன் பிரதேசங்களையும் கெண்டுள்ளது. மாநிலங்கள் தங்கள் தேவைக்கேற்ப இரு சபைகள் கொண்ட சட்டமன்றங்களையும், ஒரே சபையை கொண்ட சட்டமன்றங்களையும் ஏற்படுத்திக்கொள்ளலாமென்று, அரசியலமைப்பின் 168 வது விதி கூறுகிறது. கர்நாடகம், ஜம்மு காஷ்மீர் பீகார், மததியப்பிரதேசம், மகாராஷ்டிரம், உத்திரபிரதேசம் மற்றும் ஆந்திர பிரதேஷம் அகிய மாநிலங்கள் இரு சபைகள் கொண்ட சட்டமன்றங்களைப் பெற்றுள்ளன. கீழ்சபை சட்டப்பேரவை ( Legislative Assembly) என்றும், மேல்சபை சட்ட மேலவை (Legislative Council) என்றும் அழைக்கப்படுகிறது. மேலும் மக்களாட்சியில் மக்களின் உரிமைகளை காக்கச் சுதந்திரமாக நீதித்துறை அவசியமாகிறது. அரசியலமைப்பின் 124 முதல் 127 வரையிலான விதி உயர்நீதிமன்றம் பற்றியும், 129 ஆம் விதி உச்ச நீதிமன்றம் பற்றியும் கூறுகிறது.

### நோக்கங்கள்:

சட்டப்பேரவையின் அமைப்ப மற்றும் பணிகளை புரிந்து கொள்ளுதல்
மாநில ஆளுநரின் நிலை மற்றும் அதிகாரங்களை கற்றறிதல்.
மாநில அமைச்சர் மற்றும் முதலமைச்சரின் பணிகள் மற்றும் அதிகாரிகளை உணர்தல்.
உச்ச நீதமன்றம் மற்றும் உயர்நீதிமன்றம் அமைப்ப மற்றும் பணிகளை தெரிந்து கொள்ளுதல்.

### அலகின் வடிவமைப்பு (Unit Structure)

சட்டப்பேரவை
சட்ட மேல்சபை
மாநில சட்ட மன்றத்தின் அதிகாரங்கள்
மாநில ஆளுநர்
அமைச்சரவை
மாநில முதலமைச்சர்
உயர்நீதிமன்றம்
உச்ச நீதிமன்றம்
உச்ச நீதிமன்றத்தின் அதிகாரங்கள்
நீதிப்புனராய்வு அதிகாரம்

தொகுப்புரை
முக்கிய வார்த்தைகள்
முன்னேற்த்தை அறிவதற்கான தன்னறிவுச்சோதனை
இந்த அலகு சம்பந்தப்பட்ட மேலும படிக்க வேண்டிய நூல்கள்
வினாக்களும்/ செயல்முறைப்பயிற்சிகளும்.

## 9.1. சட்டப்பேரவை (Legistlative Assmbly)

மாநில சடடமன்றங்களிலுள்ள கீழ்சபை மக்களால் நேரடியாக ஐந்தாண்டு காலத்திற்கு தேர்ந்தெடுக்கப்படுகிறது. கீழ்சபையின் உறுப்பினர்களின் எண்ணிக்கை 500 க்கு மிகாமல் அறுபதுக்கும் குறையாமலும் இருக்க வேண்டும். அரசியலமைப்பின் 333 வது விதி ஆங்கிலோ இந்திய உறுப்பினர்கள் நியமனபம் செய்யப்பட வழிவகை செய்கிறது. மிசோரம், கோவா மாநில சட்டப் பேரவையில் நாற்பது உறுப்பினர்கள் இருப்பார்கள். கீழ்சபையின் உறுப்பினராக விரும்புபவர் இந்தியக் குடிமகனாகவும், 24—ம் அதற்கும் மேற்பட்ட வயதினராகவும் இருக்க வேண்டும். தேர்ந்தெடுக்கப்பட்ட ஐந்தாண்டு காலம் முடிந்ததும் சபை தானாகவே கலைக்கப்படுகிறது. அல்லது பதவிக்காலம் முடியும் முன்பே முதல்வரின் பரிந்துரையின் மீது, ஆளுநரால் கலைக்கப்படலாம். தேசிய நெருக்கடியிருக்கும் காலத்தில் கீழ் சபையின் ஐந்து அண்டுப் பதவிக் காலத்தை ஓராண்டிற்கு மிகாமல் பாராளுமன்றம் சட்டமியற்றி, நீட்டிக்கலாம். எந்த சூழ்நிலையிலும் தேசிய நெருக்கடி முடிந்த நாளிலிருந்து ஆறு மாதத்திற்கதிகமாக சட்ட மன்றத்தின் காலத்தை நீட்டிக்ககூடாது.

கீழ்சபை தன்னுடைய சபாநாயகரையும், துணை சபாநாயகரையும் தேர்ந்தெடுத்துக்கொள்ளுகிறது. அவர்கள் சபையின் உறுப்பினர்களாகயிருக்க வேண்டும். உறுப்பினர் பதவியை இழந்தால் அவர்கள் பதவிகளிலிருந்து விலகிக்கொள்ள வேண்டும். சபாநாயகரை விலக்க வேண்டுமாயின், அதற்கான தீர்மானம் கொண்டுவர 14 நாட்கள் முன்னறிவிப்பு வேண்டும். பேரவையின் மொத்த உறுப்பினர்களில் பெரும்பான்மை ஆதரவோடு நிறைவேற்றப்படும் தீர்மானத்தின் அடிப்படையில் சபாநாயகர் விலக்கப்படுவார். பேரவைக் கலைக்கப்பட்டாலும் அதன் சபாநாயகர் பதவியிலிருந்து விலக வேண்டியதில்லை. புதிய பேரவையின் முதல் கூட்டத் தொடரின் முதல் அமர்வு வரையில் அவர் பதவியில் நீடித்திருக்கலாம். சபாநாயகர் பதவி வெற்றிடமாயிருக்கும் பொழுது துணை சபாநாயகர் கூட்டங்களுக்குத் தலைமை தாங்கி நடத்துவார். சபாநாயகரையோ அல்லது துணை சபாநாயகரையோ பதவியிலிருந்து விலக்க வேண்டுமென்பதற்காக கொண்டு வரப்படும் தீர்மானங்கள் சபையில் விவாதிக்கப்படும் பொழுது

அவர்கள் சபைக் கூட்டங்களுக்குத் தலைமை தாங்கக் கூடாது. ஆனால் சபையின் நடவடிக்கைகளில் பங்கெடுத்துக் கொள்ளலாம்.

பணமசோதாக்கள் கீழ்சபையில்தான் முதலில் தாக்கல் செய்யப்படவேண்டும். கீழ்சபை நிறைவேற்றிய பண மசோதாக்கள் மேலவைக்கு அனுப்பி வைக்கப்படும். மேல் சபையில் அவைகள் நிறைவேற்றப்படவேண்மென்ற அவசியமில்லை. பணமசோதா வந்த இரண்டு வாரத்திற்குள் விவாதித்து அதன் மீது பரிந்துரைகள் மட்டும்தான் செய்ய வேண்டும். மேல்சபை செய்துள்ள பரிந்துரைகளை கீழ்சபை ஏற்கவோ, மறுக்கவோ செய்யலாம். 14 நாடகளுக்குப் பிறகு பண மசோதாவை இரண்டு சபைகளும் நிறைவேற்றியதாகக் கருதி அம்மசேதாவை, ஆளுநரின் ஒப்புதலுக்கு அனுப்பி வைக்கப்படும்.

ஒரு மசோதா பண மசோதாவா இல்லையா என்ற கேள்வி எழுந்தால், அதைப்பற்றி பேரவை சபாநாயகர் எடுக்கும் முடிவே இறுதியானதாகும். சாதாரண மசோதாக்கள் எந்தவொரு சபையிலும் சமர்ப்பிக்கப்படலாம். பேரவையால் நிறைவேற்றப்பட்ட மசோதாவானது, மேல்சபைக்கு அனுப்பி வைக்கப்படும். மேல்சபையானது மசோதாவை அப்படியே நிறைவேற்றி வைக்கலாம். திருத்தங்களுடன் நிறைவேற்றலாம் அல்லது நிராகரிக்கலாம். மசோதாவை நிறைவேற்றாமல் மூன்று மாதம் காலம் தாழ்த்தலாம். மூன்று மாதம் கழித்த பிறகு மசோதா பேரவைக்குத் திரும்பி வரும். மேல்சபையால் செய்யப்பட்ட திருத்தங்களை ஏற்றோ, ஏற்காமலோ சட்டப்பேரவை இரண்டாவது முறை மசோதாவை நிறைவேற்றி மீண்டும் மேல்சபைக்கு அனுப்பி வைக்கும். இரண்டாவது தடவையாக வந்துள்ள மசோதாவின் மீது மேல்சபை என்னவிதமான நடவடிக்கை எடுத்தாலும், பேரவையால் மசோதா எந்த வடிவத்தில் நிறைவேற்றியுள்ளதோ அதே வடிவத்தில் இரு சபைகளாலும் நிறைவேற்றப்பட்டதாகக் கருதப்படும்.

மாநில அமைச்சரவை சட்டப்பேரவைக்கு மட்டும் தான் கூட்டாகப் பொறுப்புள்ளது.

### 9.1.1. சட்ட மேல்சபை (Legistative Council)

மேல்சபையானது மக்களால் தேர்ந்தெடுக்கப்படாமல் மறைமுகமாகத் தேர்ந்தெடுக்கப்படுகிறது. மேல்சபை நிரந்தரமானது. அதை கலைக்க ஆளுநருக்கு அதிகாரம் கிடையாது. கீழ்சபையில் மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கையில் மூன்றில் ஒரு பாகத்திற்கு மிகாமல், அதே நேரம நாற்பதுக்கும் குறையாமல் மேல்சபை உறுப்பினர்களின் எண்ணிக்கை இருக்க வேண்டும். தற்போது இந்தியாவில் பீகார், ஜம்மு

காஷ்மீர், கர்நாடகம், மகாராஷ்டிரம், உத்திரப்பிரதேசம் ஆகிய ஐந்து மாநிலங்களில் மட்டுமே மேல் சபை உள்ளது. மேல் சபையானது கீழ்க்கண்ட முறையில் அமைக்கப்படுகிறது.

1) மூன்றில் ஒரு பங்கு உறுப்பினர்கள், நகராண்மைக் கழக உறுப்பினர்கள், வட்டார ஆட்சி உறுப்பினர்கள், உள்ளூராட்சி உறுப்பினர்கள் அடங்கிய தேர்தல் தொகுதியால் தேர்ந்தெடுக்கப்படுகின்றார்கள்.

2) பன்னிரெண்டில் ஒரு பங்கு உறுப்பினர்கள், மூன்றாண்டுகளுக்கு முனனதாகப் பதிவு செய்யப்பட்ட பட்டதாரிகளடங்கிய தேர்தல் குழவால் தேர்ந்தெடுக்கப்படுகின்றார்கள்.

3) பன்னிரெண்டில் ஒரு பங்கு உறுப்பினர்கள், பல்வேறு கல்வி நிலையங்களில் மூன்றாண்டுகளுக்கும் அதிகமாகப் பணிபுரிந்து வரும் ஆசிரியர்களடங்கிய தேர்தல் குழுவால் தேர்ந்தெடுக்கப்படுகின்றார்கள்.

4) மூன்றில் ஒரு பங்கு உறுப்பினர்கள் சட்டபேரவை (கீழ்சபை) உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் சட்டப்பேரவை உறுப்பினர்களாயிருத்தல் கூடாது.

5) மீதியுள்ள எண்ணிக்கை உறுப்பினர்கள் ஆளுநரால் நியமிக்கப்படுகின்றார்கள். இவர்கள், இலக்கியம், விஞ்ஞானம், கலை, கூட்டுறவு போன்ற துறைகளில் அனுபவம் பெற்றவர்களாகவும் சேவை செய்தவர்களாகவும் இருக்க வேண்டும். ஆறில் ஐந்து பங்கு உறுப்பினர்கள் கவர்னரின் நியமனம் மூலமும் உறுப்பினர்களாக உள்ளனர்.

சட்ட மேல் சபைக்கு உறுப்பினராக விரும்புவர் இந்தியக் குடிமகனாகவும், முப்பதும், அதற்கு மேற்பட்ட வயதினராகவும் இருக்க வேண்டும். உறுப்பினர்கள் ஆறாண்டுப் பதவிக்காலத்திற்கு தேர்ந்தெடுக்கப்படுகின்றார்கள். மூன்றில் ஒரு பங்கு உறுப்பினர்கள் இரண்டாண்டிற்கு ஒரு முறை ஓய்வு பெறுகின்றார்கள்.

மேல் சபையின் உறுப்பினர்களில் ஒருவர், தலைவராகவும், மற்றொருவர் துணைத் தலைவராகவும் மேல்சபை உறுப்பினர்களாலேயே தேர்ந்தெடுக்கப்படுகின்றார்கள். இவர்களைப் பதவியிலிருந்து நீக்க 14 நாட்கள் முன் அறிவிப்பு கொடுக்க வேண்டும். விலகல் தீர்மானம் சபையின் பெரும்பான்மை ஆதரவோடு இயற்றப்படவேண்டும். விலக்கல் தீர்மானம் விவாதிக்கப்படும் பொழுது அவர்கள் சபைக்கூட்டங்களுக்குத் தலைமை தாங்குதல் கூடாது.

## மேல்சபையின் நிலை

மாநிலங்களிலுள்ள மேல் சபைகள் மிகவும் பலவீனமான முறையில் அமைக்கப்பட்டுள்ளன. அவைகள் மறைமுகமாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றன. சிறிய சபைகளாக அமைக்கப்பட்டுள்ளன. எல்லா பண மசோதாக்களும் கீழ்சபையில் தான் ஆரம்பமாக வேண்டும் மேல்சபை பணமசோதாவை விவாதித்தாலும் கூட 14 நாட்களுக்குள் தமது பரிந்துரைகளை மட்டும்தான் செய்யமுடியும். இதனால் நிதிச் சட்டமியற்றும் துறையில், மேல் சபையானது மிகவும் பலவீனமான சபையாக உள்ளது. சாதாரண மசோதாக்கள் எந்தவொரு சபையிலும் சமர்ப்பிக்கப்படாலாமென்றாலும், முக்கியமான மசோதாக்களும், அரசாங்க மசோதாக்களும் முதலில் கீழ்சபையில்தான் ஆரம்பமாகின்றன. சாதாரண மசோதாக்களை மேல்சபை நிராகரிக்கலாம். திருத்தம் கொண்டு வரலாம். மூன்று மாத காலத்திற்கு தடுத்து நிறுத்தி வைக்கலாம் என்றாலும், கீழ் சபையானது பிரச்சனைக்குரிய மசோதாவை இரண்டாவது முறை நிறைவேற்றினால், மசோதாவானது இரு சபைகளாலும் நிறைவேற்றப்பட்டதாகக் கருதப்படும்.

இங்கிலாந்தில் மேல் சபையானது பிரபுக்கள் சபையாகும். அச்சபை பண மசோதாவை ஒரு மாத காலத்திற்கும், மற்ற மசோதாக்களை ஓராண்டுக் காலத்திற்கும் தடுத்து நிறுத்த முடியும். இதனால் ஆங்கிலேய பிரபுக்கள் சபையைவிட இந்திய மாநில மேல்சபை பலவீனமானது என்பது புலனாகிறது. மேலும், மேல்சபை உறுப்பினர்கள் மறைமுகமாகத் தேர்ந்தெடுக்கப்படுவதும் அமைச்சரவை கீழ்சபைக்கு மட்டுமே பொறுப்புள்ளதாக இருப்பதும், மேல்சபையின் ஆதரவு மக்களிடத்தில் குறைந்துகொண்டு வருகிறது. மேற்கு வங்காளம், பஞ்சாப், த‌மிழ்நாடு போன்ற மாநிலங்களில் சட்டமன்ற மேலவைகள் ஒழிக்கப்பட்டுள்ளன. மேல் சபையை நீக்குவதற்கு, பேரவையில் மூன்றில் இரண்டு பெரும்பான்மை ஆதரவுடன் தீர்மானம் நிறைவேற்றி அதை பாராளுமன்றத்திற்கு அனுப்பவேண்டும். பாராளுமன்றமும் அதற்காகச் சட்டமியற்றினால், குறிப்பிட்ட மாநிலத்தின் மேலவை நீக்கப்படுகிறது. ஒரு மாநிலத்தில் மேலவையை அமைத்துக்கொள்ளவும், நீக்கவும், பாராளுமன்றத்தின் ஒப்புதல் பெற வேண்டியது அவசியமாகும்.

## 9.1.2. மாநில சட்டமன்றத்தின் அதிகாரங்கள்:

மாநில அதிகாரப்பட்டியலிலுள்ள எந்தவொரு பொருளைப் பற்றியும் மாநில சட்டமன்றம் சட்டமியற்றலாம். பொது அதிகாரப் பட்டியலில் கூறப்பட்டுள்ள ஒரு பொருளைப் பற்றிய சட்டத்தையும் நிறைவேற்றலாம். ஆனால் அதே பாராளுமன்றம் அப்பொருளைப் பற்றி ஒரு

சட்டமியற்றியிருந்தது, அதற்கும் சட்டமன்றம் இயற்றிய சட்டத்திற்குமிடையே முரண்பாடு இருந்தால், பாராளுமன்றம் இயற்றிய சட்டம் தான் அமுலுக்கு வரும். மாநில சட்டமன்றத்தின் மீது கீழ்க்கண்ட கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டுள்ளன.

1. தனியார் சொத்தை அரசாங்க உடமையாக்குதல் பற்றிய மாநில சட்டத்தை குடியரசுத் தலைவருடைய பரிசீலனைக்கு அனுப்பிவைத்தும் அவரின் ஒப்பதலைப் பெறவேண்டும்.

2. ஒரு மாநில அரசு தோல்வியடைந்ததின் காரணமாகவும் அம்மாநிலத்தில் நெருக்கடிப் பிரகடனம் செய்து அம்மாநிலத்தில் குடியரசுத் தலைவராட்சி புகுத்தப்பட்டால் மாநில சட்டமன்றம் கலைக்கப்பட்டு பாராளுமுன்றம் அல்லது அதன் சார்பில் குடியரசுத் தலைவரே மாநிலத்திற்கான சட்டமியற்றும் அதிகாரத்தைப் பெறுகிறார்.

3. நாட்டின் நலனைக் கருதி, மாநில அதிகாரப் பட்டியலிலுள்ள ஒரு பொருளைப் பற்றி பாராளுமன்றமும், சட்டமியற்றலாம் மாநில மேல்சபை (Council of States) மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மை ஆதரவுடன் தீர்மானம் நிறைவேற்றினால், குறிப்பிட்ட பொருளைப் பற்றி பாராளுமன்றம் ஓராண்டு காலத்திற்கு சட்டமியற்றலாம்.

4. தேசிய நெருக்கடி அமுலில் இருக்கும்பொழுது, மாநில அதிகாரப் பட்டியலிலுள்ள எந்தவொரு பொருளைப் பற்றியும் பாராளுமன்றம் சட்டமியற்றலாம்.

5. மாநிலத்திற்குள் நடைபெறும் வர்த்தக், வியாபாரத்தின் மீது அல்லது வெளியாருடன் நடைபெறும் வர்த்தகத்தின் மீது, மாநில அரசாங்கம் பொதுநலனைக் கருதி, சில தடைகள் விதிக்க விரும்பினால் அதற்கான மசோதாவை சட்டமன்றத்தில் தாக்கல் செய்வதற்கு முன்னதாக, குடியரசுத் தலைவரின் முன் சம்மதத்தைப் பெற்றாக வேண்டும்.

### 9.1.3. ஆளுநர்

இந்திய மாநிலங்களுக்கு என்னவிதமான ஆட்சிமுறை ஏற்படுத்த வேண்டும் என்பதைப் பற்றி அரசியல் நிர்ணய சபையில் விவாதங்கள் நடைபெற்றன. மாநிலங்களுக்கு மக்களாலே தேர்ந்தெடுக்கப்பட்ட ஆளுநர்கள் மாநிலத் தலைவர்களாகப் பதவியேற்க வேண்டுமென குறிப்பிட்டிருந்தார்கள். மாநிலத் தலைவரும் மக்களாலே தேர்ந்து எடுக்கப்பட்டு, மக்கள் பிரதிநிதிகளும் அமைச்சர்களாகப் பதவி ஏற்றால்

இவ்விரு நிறுவனங்களுக்கிடையே பிணக்குகளும், முட்டுக்கட்டைகளும் தோன்ற வாய்ப்புக்கள் ஏற்படலாம். என்பதனால் மாநிலத் தலைவர் அல்லது ஆளுநர் பதவியானது குடியரசுத் தலைவரால் நியமிக்கப்பட வேண்டுமென்று முடிவெடுக்கப்பட்டது.

மாநில ஆளுநரை குடியரசுத் தலைவர் ஐந்தாண்டுப் பதவிக் காலத்திற்கு நியமிக்கிறார். ஆயினும் அவர் கூட பதவியிலிருந்து விலக்கப்படலாம். ஆளுநர் குடியரசுத் தலைவருக்கு மட்டும்தான் பொறுப்புள்ளவர். ஆளுநராக நியமிக்கப்படுவர் இந்திய குடிமகனாகவும், முப்பத்தைந்து வயதுள்ளராகவுமிருக்க வேண்டும். பாராளுமன்றம், அல்லது மாநில சட்டமன்றங்களின் உறுப்பினராய் இருக்கக்கூடாது. அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தால் அந்த உறுப்பினர் பதவியை அவர் கைவிட வேண்டும்.

மாநில ஆளுநரை நியமிப்பதில், முக்கியமான மரபுகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. 1) ஆளுநரை நியமனம் செய்வதற்கு முன்பாக மத்திய அரசு மாநில முதலமைச்சரைக் கலந்து அவருடைய சம்மதத்தைப் பெறுதல் 2) அம்மாநிலத்து அரசியலில் ஈடுபடாத வெளியார் ஒருவரை மாநில ஆளுநராக நியமித்தல் என்பன ஆகும். ஆளுநராக நியமிக்கப்பட்டவர் வேறெந்தவொரு லாபகரமான பதவியையும் வகிக்கக்கூடாது.

ஆளுநருக்கு அரசாங்க மாளிகையும், அரசியலமைப்பின்படி அவ்வப்போது உயர்த்தி நிர்ணயிக்கப்படும் ஊதியமும் மற்றச் செலவுப்படிகளும் கொடுக்கப்படுகின்றன. ஊதியமும், மற்ற செலவுப்படிகளும் அவருடைய பதவிக்காலத்தில் குறைக்கப்படுதல் கூடாது. ஆளுநர் பதவியேற்பதற்கு முன்னதாக, அவர் அம்மாநில உயர்நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியின் முன்பு பதவிப் பிரமாண உறுதிமொழி எடுத்துக்கொள்ளவேண்டும்.

### அ) ஆளுநரின் நிர்வாக அதிகாரங்கள்

மாநில தலைமை வழக்கறிஞர், மாநிலப் பொதுப்பணியாளர் தேர்வாணைக்குழு தலைவர் மற்றும் உறுப்பினர்களை ஆளுநர் நியமிக்கிறார். நியமிக்கப்பட்ட தேர்வாணைக்குழு உறுப்பினர்களை பதவி நீக்கம் செய்ய ஆளுநருக்கு அதிகாரம இல்லை. ஆளுநர் மாநில மேல்சபைக்கு ஒரு ஆங்கிலோ இந்திய உறுப்பினரை நியமிக்கலாம். மேலும் மாநில மேல் சபையின் மொத்த உறுப்பினர்களில் ஆறில் ஒரு பங்கு உறுப்பினரை நியமனம் செய்வார். மாநிலத்தின் நிர்வாக அதிகாரங்கள் ஆளுநரிடம் உள்ளன. அவ்வதிகாரங்களை தாமாகவோ

அல்லது உயர் அதிகாரிகள் மூலமாகவோ செயல்படுத்தலாம். ஆளுநர், தனக்கு உதவி புரியவும், அறிவுரை கூறவும் முதலமைச்சரைத் தலைவராகக் கொண்ட அமைச்சரவையை நியமிக்கிறார். ஆளுநருக்கு என்னவிதமான அறிவுரை அமைச்சர்களால் வழங்கப்பட்டதென்பதை நீதிமன்றங்கள் விசாரிக்க அதிகாரம் கிடையாது. ஆளுநர் முதலமைச்சரை நியமிக்கிறார். முதல்வரின் பரிந்துரையின் பேரில் மற்ற அமைச்சர்களை ஆளுநர் நியமிக்கிறார். அமைச்சர்கள் ஆளுநரின் தயவில் அல்லது அவர் விரும்பும் காலம் வரைக்கும் தான் பதவியிலிருக்க முடியும். ஆனால் நடைமுறையில் மாநில அமைச்சரவயையானது எதுவரையில் கீழ் சபையின் பெரும்பான்மை ஆதரவைப் பெற்று வருகின்றதோ அதுவரையில் பதவியில் நீடித்திருக்கலாம்.

மாநில அரசின் எல்லாவிதமான நிர்வாக செயல்களும் ஆளுநரின் பெயராலேயே நடைபெற வேண்டும். ஆட்சித்துறையைப் பற்றி அமைச்சரவையால் எடுக்கப்பட்ட முடிவுகளும், கொண்டு வரப்போகிற மசோதாக்களைப் பற்றிய விவரமும், ஆளுநரால் தேவைப்படுகின்ற செய்திகளும் அவரிடம் சமர்ப்பிக்க வேண்டும். அமைச்சரவையின் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென்று விரும்பினால் அவ்வாறே செய்ய வேண்டும்.

### ஆ)ஆளுநரின் சட்டம் சார்ந்த அதிகாரங்கள்

மாநில சட்டமன்றத்தின் கூட்டங்களை கூட்டவும் ஒத்தி வைக்கவும், சட்டமன்றத்தைக் கலைக்கவும் ஆளுநர் அதிகாரம பெற்றுள்ளார். பொதுத் தேர்தலுக்குப் பிறகு, சட்டமன்றத்திலுள்ள இரு சபைகளின் இணைப்புக் கூட்டத்தின் முன்பும், ஆண்டுதோறும் இரு சபைகளின் முதல் கூட்டுத்தொடரின் முன்பும் உரை நிகழ்த்துவார். மேலும் இரு சபைகளுக்கும் அவர் செய்தி அனுப்பலாம். மாநில சட்டமன்றமானது குறைந்தது ஆறு மாதங்களுக்கொரு முறையாவது கூட்டப்படவேண்டும்.

மாநில சட்டமன்றத்தால் நிறைவேற்றப்படும் ஒவ்வொரு மசோதாவும் ஆளுநருடைய ஒப்புதலுக்குச் சமர்ப்பிக்கப்பட வேண்டும். ஆளுநர் மசோதாவிற்கு ஒப்புதலளிக்கலாம். ஒப்புதலளிக்க மறுக்கலாம் அல்லது. குடியரசுத் தலைவருடைய பரிசீலனைக்காக மசோதாவை ஒதுக்கி வைக்கலாம். மேலும், பிரச்சனைக்குரிய மசோதாவை தன்னுடைய செய்தியுடன் அல்லது திருத்தங்களுடன் சட்டமன்றத்தின் மறுபரிசீலனைக்கு திருப்பி அனுப்பி வைக்கலாம். இரண்டாவது முறை மசோதாவை ஆளுநரின் திருத்தங்களுடனோ அல்லது திருத்தம் இல்லாமலோ

சட்டமன்றம் நிறைவேற்றி வைத்தால், இம்முறை ஆளுநர் அந்த மசோதாவிற்கு கட்டாயம் சம்மதம் அளித்து கையெழுத்திட வேண்டும்.

ஆண்டுதோறும் மாநிலத்தின் வரவு செலவுத் திட்டத்தையும், மற்ற மானிய கோரிக்கைகளையும் சட்டமன்றத்தில் தாக்கல் செய்யும்படி செய்கிறார்.

மாநிலத்திலுள்ள எல்லாப் பல்கலைக் கழகங்களுக்கும் (தேசிய பல்கலைக்கழகங்களைத் தவிர) ஆளுநர் வேந்தராக பணியாற்றுகிறார்.

## இ) ஆளுநரின் நீதி அதிகாரங்கள்

மாநிலத்தின் நிர்வாகத்துறை அதிகாரங்கள் எந்தெந்தப் பொருள்கள் மீது செலுத்த முடியுமோ, அவைகளைப் பற்றிய சட்டங்களுக்கு விரோதமான குற்றங்களுக்கு வழங்கப்பட்ட தண்டனைகளை மன்னிக்கவோ, குறைக்கவோ, ஒத்திப்போடவோ, தள்ளி வைக்கவோ ஆளுநருக்கு அதிகாரமுண்டு. மாநில உயர்நீதிமன்ற தலைமை நீதிபதி மற்றும் பிற நீதிபதிகளை நியமிக்கும் போது, குடியரசுத்தலைவர் மாநில ஆளுநரின் ஆலோசனைகளையும் கேட்டுக்கொள்கிறார்.

## ஈ) அவசரச் சட்டம் பிறப்பிக்கும் அதிகாரம்:

மாநில சட்டமன்றம் நடைபெறாத காலத்தில் உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டுள்ளதென ஆளுநர் உணர்ந்தால், அதற்கான அவசரச் சட்டத்தைப் பிறப்பிக்க அரசியலமைப்பின் 213வது விதியின் கீழ் அதிகாரம் உண்டு. ஆனால் அவசரச் சட்டத்தில் அடங்கியிருப்பவை, குடியரசுத் தலைவரின் முன் சம்மதத்துடன் தான் சட்டமன்றத்தல் மசோதாவாக தாக்கல் செய்யப்படவேண்டுமென்றிருந்தால் அல்லது அம்மசோதா குடியரசுத் தலைவரின் பரிசீலனைக்கு அனுப்பப்படவேண்டுமென்றிருந்தால், அம்மாதிரியான பொருளடங்கிய அவசரச் சட்டத்தை குடியரசுத் தலைவருடைய அனுமதியின்றி பிரகடனபடுத்துதல் கூடாது. சாதாரணமாக இயற்றப்படும் ஒரு சட்டத்திற்கு என்ன விளைவும் மதிப்பும் உண்டோ, அவ்வளவிற்கு அவசரச் சட்டத்திற்கும் உண்டு. மாநில சட்டமன்றம் கூடிய உடனேயே ஆளுநரால் பிறப்பிக்கப்பட்ட அவசரச்சட்டம் அதன் முன்பு தாக்கல் செய்யப்படவேண்டும். சட்டமன்றம் கூடிய நாளிலிருந்து ஆறு வாரத்திற்குப் பிறகு அவசரச் சட்டம் செயலிழந்து விடுகிறது. அல்லது அதற்கு முன்னதாகவே சட்டமன்றத்தால் ஏற்றுக்கொள்ளளவோ நிராகரிக்கப்படவோ, அல்லது திரும்பப் பெறவோவென்று ஏதாவதுதொரு நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்க வேண்டும். ஆனால் இந்த அவசரச் சட்டமியற்றும் அதிகாரம் மக்களாட்சித் தத்துவத்திற்கு முரணானதாகக் கருதப்படுகிறது.

## ஆளுநரின் நிலை

ஆளுநரின் பல்வேறு அதிகாரங்களை இரு வகையாகப் பிரித்துக்கூறலாம்.

1) பெயரளவிற்கான அதிகாரங்கள்: மாநில ஆட்சி ஆளுநருடைய பெயரில் பொறுப்புள்ள அமைச்சர்களால் நடத்தப்படுகின்றது.

2) தன் முடிவு அதிகாரங்கள்: மாநில சட்டசபையில் எந்தவொரு கட்சிக்கும் பெரும்பான்மை ஆதரவு கிடைக்காத சூழ்நிலையில், முதலமைச்சரைத் தெரிந்தெடுத்து நியமனம் செய்யும் பொழுது, ஆளுநர் தன் முடிவு அதிகாரத்தை உபயோகிக்கிறார். குறிப்பாக அஸ்ஸாம் மாநிலத்து ஆளுநருக்கு சில சிறப்பான அதிகாரங்கள் கூடுதலாக வழங்கப்பட்டுள்ளன.

மாநில சட்டசபையில் எந்தவொரு கட்சிக்கும் பெரும்பான்மை ஆதரவில்லாத போதும், கீழ் சட்டசபையை கலைக்கும் விஷயத்திலும், மாநில அரசின் தோல்வி பற்றிய அறிக்கையை குடியரசுத் தலைவருக்கு அனுப்பும் பொழுதும், ஆளுநர் தன் முடிவுப்படியே செயல்பட உரிமை உண்டு.

பல மாநிலங்களில் உறுப்பினர்கள் அடிக்கடி கட்சி மாறுவதன் காரணமாக, மாநில அரசுகள் அடிக்கடி கவிழ்வதும், புதிய அரசுகள் நிறுவப்படுவதுமான நிரந்தரமில்லாத சூழ்நிலை ஏற்படும் சமயத்தில், ஆளுநரின் நிலை முக்கியத்துவம் பெற்று விடுகிறது. அதிகாரங்கள் பெருகி விடுகிறது. செல்வாக்கும் கூடி விடுகிறது. மாநிலங்களில் அடிக்கடி குடியரசுத் தலைவராட்சி கொண்டு வரப்படுவதன் மூலம் குடியரசுத் தலைவரின் பிரதிநிதி என்ற முறையில், மாநிலங்களில் ஆளுநர்கள் நேரடியாக ஆட்சி செலுத்துவது அதிகரித்துவிட்டது.

2001, மார்ச் வரையிலான காலகட்டத்தில் 105 முறை மாநிலங்களில் குடியரசுத்தலைவராட்சி பிரகடனப்படுத்தப்பட்டுள்ளது. ஒரு பக்கம் ஆளுநர் அரசியலமைப்பிற்குட்பட்ட மாநிலத் தலைவராகவும், மற்றொருபுறம், மாநிலத்திற்குள் மத்திய அரசாங்கத்தின் கொள்கையை நிறைவேற்றுவதில் மத்திய அரசின் ஏஜெண்டு போலவும் பணியாற்ற வேண்டியுள்ளது என்று அலெக்சாண்டர் ரோவிச் அவர்களின் கருத்து கூறுகிறார்.

## 9.2. அமைச்சரவை

முதலமைச்சரைத் தலைவராகக் கொண்ட அமைச்சரவை ஆளுநருக்கு உதவியளிக்கவும், அறிவுரை கூறவும் அரசியலமைப்பின் 163ம் பிரிவின்படி அமைக்கப்படுகிறது. அமைச்சர்கள் ஆளுநருக்கு என்னவிதமான அறிவுரைகளை வழங்கினார்கள் என்பதை நீதிமன்றங்கள் விசாரிக்க முடியாது. முதலமைச்சரை ஆளுநர் நியமிக்கிறார். முதல்வரின் அறிவுரையின்படி மற்ற அமைச்சர்கள் நியமிக்கப்படுகின்றார்கள். அமைச்சர்கள் ஆளுநர் விரும்பும் காலம் வரைக்கும் பதவியில் நீடித்திருக்கலாம். அமைச்சர்கள் கூட்டாக, தங்களுடைய கொள்கைகளுக்கும் அன்றாட நடவடிக்கைகளுக்கும், சட்ட சபைக்குப் பொறுப்பேற்கின்றார்கள். அமைச்சர்கள் பதவியேற்கும் முன்பாக, ஆளுநர் முன்னிலையில் உறுதிமொழி எடுத்துக் கொள்ளவேண்டும். அமைச்சர்கள் மாநில சட்டமன்ற உறுப்பினர்களாயிருக்க வேண்டும். உறுப்பினரல்லாதவர் தொடர்ந்து ஆறுமாத காலத்திற்கு அமைச்சராகப் பணியாற்றலாம். அதற்கு பிறகு அமைச்சர் பதவியை இழக்க வேண்டும் அல்லது அதற்கு முன்னதாகவே இடைத் தேர்தலில் போட்டியிட்டு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்படவேண்டும். மாநில சட்டமன்றத்தால் நிச்சயிக்கப்படும் ஊதியம் மற்றும் இதர செலவுப்படிகளையும் அமைச்சர்கள் பெறுகின்றார்கள்.

### 9.2.1. மாநில முதலமைச்சர்

மாநில முதலமைச்சருடைய பதவியின், அந்தஸ்தானது, மத்திய அரசின் தலைமை அமைச்சருடைய பதவி அந்தஸ்தை ஒத்திருக்கின்றது. மாநில முதலமைச்சர் சட்டமன்ற பொதுத் தேர்தலில் அதிக இடங்களை கைப்பற்றயுள்ள பெரும்பான்மைக் கட்சியின் தலைவராவார், முதல்வரை ஆளுநர் முதலமைச்சரை நியமிக்க, மற்ற அமைச்சர்களை முதலமைச்சர் பொறுக்கியெடுக்கிறார். முதலமைச்சர் அமைச்சர்களின் பட்டியலை தயாரித்து ஆளுநருக்கு பரிந்துரை செய்ய, அவ்வாறான பட்டியலில் கண்டவர்களை அமைச்சர்களை ஆளுநர் நியமிக்கிறார். முதல்வரின் பரிந்துரையின் மீது குறிப்பிட்ட அமைச்சரை பதவியிலிருந்து ஆளுநர் நீக்கி விடலாம். முதல்வர் அமைச்சரவைக்குத் தலைமை தாங்குகிறார். மேலும் இலாக்காக்களை அமைச்சர்களிடையே ஒதுக்கீடு செய்கிறார். மேலும் அவ்வப்போது அசைச்சர்களின் இலாக்காக்களையும் மாற்றியமைக்கிறார். இவைகள் மட்டுமின்றி முதலமைச்சர் அரசாங்கத் தலைவராகப் பணியாற்றுகிறார். இவ்வளவு அதிகாரங்களையும், பெரும்பான்மைக் கட்சியின் தலைவர் என்ற முறையில் தான் முதலமைச்சர் பெற்றுள்ளார். எனவே, மற்ற அமைச்சர்களுடைய

ஒத்துடைப்புடன்தான் அவர் அரசாங்கத்தைச் சமூகமாக நடத்திச் செல்ல முடியும்.

முதல்வர் எந்தவொரு சபையின் உறுப்பினராயிருக்கிறாரோ, அச்சபையில் தலைவராகப் பணியாற்றுகிறார். அரசாங்கத்தின் பொதுவான கொள்கைகளுக்கு சட்டமன்றத்திடம் பொறுப்பேற்கிறார். கேள்விகள், துணைக்கோள்விகள் கேட்பதன் மூலம் அமைச்சார்கள் தாக்கப்படும் பொழுதெல்லாம் அவர்களுக்கு துணை நின்று விடையளிக்கும் பொறுப்பு முதல்வருக்குண்டு. அரசாங்கத்திலுள்ள பல்வேறு இலாக்காக்களின் நடவடிக்கைகளை ஒழுங்கிணைத்து மேற்பார்வை செய்கிறார். முதல்வர் அரசாங்கத்தின் பேச்சாளர் ஆவார். அவருடைய அறிக்கைகளும், வாக்குறுதிகளும், அறிவிப்புகளும் அதிகாரப்பூர்வமானவையாகும். மாநில அரசாங்கத்திலுள்ள உயர் பதவிகளுக்கு நியமனம் செய்வதில் முதலமைச்சர் தன்னுடைய செல்வாக்கை உபயோகப்படுத்த முடியும். முதல்வரை மாநிலத்தின் உண்மையான நிர்வாக அதிகாரி என்று அழைக்கலாம்.

முதல்வருக்கும், ஆளுநருக்குமிடையே சில நேரங்களில் கீழ்க்கண்ட பொருள்களைப் பற்றிய கருத்து வேறுபாடுகள் தோன்றலாம். மன்னிப்பு வழங்குதல், உயர்நீதிமன்ற நீதிபதிகளின் நியமனம், பல்கலைக் கழக துணைவேந்தர்களின் நியமனம், ஆறுநர் குடியரசுத் தலைவருக்கு அனுப்பி வைக்கும் அந்தரங்க அறிக்கைகள் போன்றவைகளில் கருத்து வேறுபாடுகள் தோன்றலாம். ஆனால், பொதுவாக முதல்வரின் பரிந்துரைகளை ஆளுநர் ஏற்றுக்கொள்கிறார்.

ஆளுநர், அரசியலமைப்பிற்குட்பட்ட மாநிலத் தலைராக பணியாற்றுகிறார் நமது ஆட்சி முறை பாராளுமன்ற அரசாங்கமாதலால், ஆளுநர் அமைச்சரவையின் அறிவுரையின்படி, முக்கியமாக முதலமைச்சரின் அறிவுரையின்படி நடந்துகொள்ள வேண்டியுள்ளது.

## 9.3. மாநில நீதிமன்றம் (or) உயர்நீதிமன்றம் (High Court)

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக் கேள்விகள்

1. மாநில சட்டமன்றத்தின் அமைப்பு

2. ஆளுநரின் அதிகாரங்கள் பற்றி சிறு குறிப்பு வரைக.

3. உச்ச நீதிமன்றத்தின் அதிகாரங்கள்

அரசியலமைப்பிலுள்ள 214 வது விதியின்படி ஒவ்வொரு மாநிலத்திலும், ஒரு உயர்நீதிமன்றம் இருக்க வேண்டும். உயர் நீதிமன்றத்தில், தலைமை நீதிபதியும், குடியரசுத் தலைவரால் நிச்சயிக்கப்படும் எண்ணிக்கையுள்ள நீதிபதிகளும் இடம் பெறுகின்றார்கள். இவர்களை குடியரசுத் தலைவர் நியமிக்கிறார். இவ்வாறு நியமிக்கும் முன்பாக, இந்தியத் உச்ச நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியையும், மாநில ஆளுநரையும், மாநிலத் தலைமை நீதிபதியையும் குடியரசுத்தலைவரும் கலந்து ஆலோசிக்க வேண்டும். மாநில

உயர்நீதிமன்றத்தின் நீதிபதி 62 வது முடியும் வரையில் பதவியிலிருக்கலாம். அல்லது அதற்கு முன்னதாகவே குடியரசுத் தலைவருக்கு எழுத்து மூலம் தெரிவித்து பதவியிலிருந்து விலகிக்கொள்ளலாம். இந்திய உச்ச நீதிமன்றத்து நீதிபதியை பதவியிலிருந்து நீக்குவதற்கும் பொருந்தும். ஒரு உயர்நீதிமன்ற நீதிபதி உச்ச நீதிமன்றத்திற்கு நீதிபதியாகவோ, அல்லது வேறு மாநிலத்திற்கு நீதிபதியாகவோ மாற்றப்படலாம். மாநில உயர் நீதிமன்றத்திற்கு நியமிக்கப்படுவர் 1) இந்தியக் குடிமகனாகவும் 2) நீதித்துறையில் குறைந்தது பத்து ஆண்டுகள் நீதிபதி பதவி வகித்தவராகவும் 3) அல்லது பத்து ஆண்டுகள் வழக்கறிஞராகப் பணியாற்றியிருப்பவராகவும் இருக்க வேண்டும். மாநில உயர்நீதிமன்றத்தின் நீதிபதியாக நியமிக்கப்பட்டவர் பதவியேற்கும் முன்னர் ஆளுநர் முன்னிலையில் பதவிக்கான உறுதிமொழி எடுத்துக்கொள்ள வேண்டும்.

தற்போது மாநில உயர்நீதிமன்ற தலைமை நீதிபதிக்கு மாத ஊதியமாக ரூ.50,000மும் பிற நீதிபதிகளுக்கு ரூ.70,000மும் வழங்கப்படுகிறது. இது தவிர குடியரசுத் தலைவரால் அவ்வப்போது நிச்சயிக்கப்படும் செலவுப் படிகளும் வழங்கப்படுகின்றன. நீதிபதிகளின் பதவிக் காலத்தில் அவர்களுக்குண்டான செலவுப் படிகளையோ, விடுமுறைகளைப் பற்றிய உரிமைகளையோ மாற்றியமைத்தல் கூடாது.

இந்தியாவின் தலைமை நீதிபதியைக் கலந்தாலோசித்து மாநில நீதிபதிகளை வேறு மாநிலத்திற்கு குடியரசுத் தலைவர் மாற்றலாம்.

உயர்நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியின் பதவி வெற்றிடமானாலோ, அல்லது பணிகளைச் செய்ய முடியாத நிலையிலிருந்தாலோ அப்பணிகளை ஏற்று நிறைவேற்றுவதற்காக, மற்ற நீதிபதிகளிலிருந்து ஒருவரை தற்காலிக தலைமை நீதிபதியாக குடியரசுத் தலைவர் நியமிப்பார்.

மாநில உயர் நீதிமன்றத்தில் தற்காலிகமாகப் பணிகள் மிகுந்திருந்தாலோ அல்லது ஆற்ற வேண்டிய பணிகள் பெருமளவில் மிச்சமிருந்தாலோ, மாநில உயர் நீதிமன்றத்தின் நீதிபதிகள் எண்ணிக்கையை உயர்த்த வேண்டுமென்று குடியரசுத்தலைவர் கருதினால், தகுதியுள்ளவர்களை கூடுதல் நீதிபதிகளாக இரண்டாண்டிற்கு அதிகமாகாத பதவிக்காலத்திற்கு நியமிக்கலாம்.

உயர்நீதிமன்றம் மாநில முழுவதும் நீதி அதிகாரத்தை செலுத்துகிறது. நமது அரசியலமைப்பில் மாநில நீதிமன்றங்களுக்கான அதிகாரங்கள் விரிவான முறையில் கூறப்படவில்லை. 1935 ம் அண்டின் இந்திய அரசாங்கச் சட்டம், மாநில நீதிமன்றங்களுக்கு கொடுத்திருந்த

அதிகாரங்களையே, தற்போதைய மாநில நீதிமன்றங்களும் பெற்றிருக்கின்றன.

**உயர்நீதிமன்றத்தின் அதிகாரங்கள்:**

1) மூல வழக்கு அதிகாரம் மக்களின் அடிப்படை உரிமைகளை நிலை நாட்டுவதற்காக உயர்நீதிமன்ற கட்டளைகள், ஆணைகள் பிறப்பிப்பதற்கு உயர்நீதிமன்றம் அதிகாரம் பெற்றுள்ளது. இவ்வாறான நிதிப்பேராணைகள் மற்றும் ஆணைகள், மாநிலத்திலுள்ள எந்தவொரு அதிகாரிக்கும் பிறப்பிக்கப்படும் கப்பற்படை, நிருலாக் நீதிமன்றங்கள் மீது அவதூறு இவை சம்பந்தமாகவும், உயர்நீதிமன்றம் மூலவழக்கு அதிகாரம் பெற்றுள்ளது. மேலும் மாநிலத்திலுள்ள இராணுவ நீதிமன்றம் தவிர மற்றைய அனைத்து நீதிமன்றங்கள் மீதும் உயர்நீதிமன்றம் மேற்பார்வை செலுத்துகிறது.

உயர்நீதிமன்றம், பதிவுச்சான்று மன்றமாக அதற்குண்டான அதிகாரங்களோடு இயங்குவதுடன், தன்னை அவமதித்தவர்களைத் தண்டிக்கும் அதிகாரமும் பெற்றுள்ளது.

கீழ் நீதிமன்றத்திலுள்ள ஒரு வழக்கை முடிப்பது சம்பந்தமாக முக்கியமான ஒரு சட்டத்தைப் பற்றிய அரசியல் சட்டரீதியான விளக்கம் தேவையென்று உயர்நீதிமன்றம் கருதினால், அவ்வழக்கை தன்னகத்தே வரவழைத்துக்கொள்ளும் அதிகாரம் உண்டு.

தன்னுடைய அதிகாரிகளையும், ஊழியர்களையும் நியமித்துக்கொள்ளவும், அவர்கள் மீது கட்டுப்பாடு செலுத்தவும் உயர்நீதிமன்றம் அதிகாரம் பெற்றுள்ளது.

ஒவ்வொரு மாவட்டத்திலும் சிவில் வழக்குகளுக்குத் தனியாக நீதிமன்றங்கள் நிறுவப்பட்டுள்ளன. இந்நீதிமன்றங்களுக்கான நீதிபதிகள், ஆளுநர் அவர்களால், உயர்நீதிமன்றத்துடன் கலந்து ஆலோசனை செய்து நியமிக்கப்படுகின்றார்கள்.

### 9.3.1. தலைமை நீதிமன்றம் (or) உச்ச நீதிமன்றம் (Supreme Court)

இந்திய அரசியலமைப்பு இந்தியா முழுமைக்குமான ஒருங்கிணைக்கப்பட்ட நடுநிலைமையுடன் செயலாற்றக்கூடிய சுதந்திரமான நீதித்துறையை ஏற்படுத்தியிருக்கிறது. இதற்கு மணிமகுடம் சூட்டினாற்போன்று சிறந்ததொரு உச்ச நீதிமன்றத்தையும் அமைத்திருக்கிறது. உச்ச நீதிமன்றத்தின் அமைப்பும் அதிகாரங்களும்

அரசியலமைப்பில் விரிவாக விளக்கப்பட்டிருக்கின்றன. ஒரு நல்ல கூட்டாட்சியில் தலைமை நீதிமன்றம் எவ்வாறு அமைந்திருக்க வேண்டுமோ அவ்வாறே நம் தலைமை நீதிமன்றமும் அமைந்துள்ளது. இது சிறந்த தலைமை நீதிமன்றத்திற்கு இலக்கணமாக விளங்குகிறது. இந்திய தலைமை நீதிமன்றம் புது டெல்லியில் இயங்கி வருகிறது.

அமைப்பு:

இந்தியத் தலைமை நீதிமன்றம் ஒரு தலைமை நீதிபதியையும், 25 நீதிபதிகளையும் கொண்டுள்ள ஒரு அமைப்பாகும். நீதிபதிகளின் எண்ணிக்கையைக் கூட்டுவதற்கு பாராளுமன்றத்திற்கு அதிகாரம் உண்டு. தலைமை நீதிமன்ற நீதிபதிகளைக் குடியரசுத் தலைவர் நியமிப்பார். அவர்களை நியமிக்கும் முன்பு, குடியரசுத் தலைவர் தலைமை நீதிமன்றம் நீதிபதிகளிலும், உயர்நீதிமன்ற நீதிபதிகளிலும் யாரைக் கலந்து பேச வேண்டுமென்று நினைக்கிறாரோ அவர்களைக் கலந்து பேசி நீதிபதிகளை நியமிப்பார். தலைமை நீதிபதியல்லாத பிற நீதிபதிகளை நியமிக்கும் போது அவர் தலைமை நீதிபதியையும் கலந்து பேச வேண்டும்.

உச்ச நீதிமன்ற நீதிபதியாவதற்கான தகுதிகள்

தலைமை நீதிமன்ற நீதிபதியாக வேண்டுமானால் கீழ்க்கண்ட தகுதிகள் வேண்டும்.

1. இந்தியக் குடிமகனாக இருக்க வேண்டும்
2. மாநில உயர்நீதிமன்றம் ஒன்றில் (அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட நீதிமன்றங்களில்) குறைந்தது ஐந்து ஆண்டுகளாவது நீதிபதியாக பணியாற்றியிருக்க வேண்டும்
3. அல்லது குறைந்தது பத்து ஆண்டுகளாவது உயர்நீதிமன்ற வழக்கறிஞராகப் பணியாற்றியிருக்க வேண்டும்.
4. அல்லது குடியரசுத் தலைவரின் கருத்துப்படி புகழ்பெற்ற சட்ட நிபுணராக இருக்க வேண்டும்.

தலைமை நீதிமன்றத்தில் அறிவும் அனுபவமும் மிக்க நீதிபதிகளே அமரவேண்டும் என்பது தான் அரசியலமைப்பை உருவாக்கியவர்களின் நோக்கமாகும்.

பதவிக்காலமும், ஊதியமும்:

நீதிபதிகள் தங்கள் ஆயுட்காலம் முழுவதும் பதவியிலிருப்பதை அரசியலமைப்புச் சட்டம் அனுமதிக்கவில்லை. ஆனாலும், நியமனம்

பெற்ற ஒருவர் தனது 65 வயதுவரை பதவியிலிருக்கலாம். அதற்கு முன்பாகவும் அவர்கள் விரும்பினால் பதவி துறக்கலாம். உச்ச நீதிமன்ற நீதிபதிகளின் குறைந்தபட்ச வயது குறிப்பிடப்படவில்லை. அத்துடன் அவர்களது பதவிக்காலமும் நிர்ணயம் செய்யப்படவில்லை.

பதவியில் அமரும் நீதிபதிகள் ஒவ்வொருவரும், தான் 'இந்திய அரசியலமைப்பின் மீது உண்மையாகவும் பற்றுறுதியோடும் இருப்பதாகவும், இந்தியாவின் இறைமையையும், உறுதிப்பாட்டையும் காப்பதாகவும், முறைப்படியும் உண்மையாகவும் தன் திறமைக்கும், அறிவுக்கும், பகுத்தறிவும் திறனுக்குத் தக்க வகையிலும், தன் பதவியின் கடமைகளை விருப்பு வெறுப்பின்றிச் செய்வதாகவும், அரசியலமைப்பையும், சட்டங்களையும் காத்துக் பேணுவதாகவும் உறுதி கூறுகிறேன்' என்று குடியரசுத் தலைவர் முன்பாக உறுதிமொழி எடுக்க வேண்டும்.

தலைமை நீதிமன்றத்தில் தலைமை நீதிபதி மற்றும் இதர நீதிபதிகளுக்கு பாராளுமன்றம் அனுமதித்துள்ள சம்பளம் வழங்கப்படுகிறது. அவர்களுக்கு இலவசக் குடியிருப்புகளும் தரப்படுகிறது. அவர்களின் சலுகைகள், படிகள், விடுமுறை, ஓய்வுக்கால ஊதியம் ஆகியவற்றைப் பாராளுமன்றம் அதன் கூட்டம் மூலமாக நிர்ணயிக்கும், நீதிபதிகளின் பதவியும், ஊதியமும் பாதுகாக்கப்பட்டு, அவைகள் அரசியலமைப்பில் அத்திரவாதம் செய்யப்பட்டுள்ளன.

பதவி விலகுதல்

நீதிபதி ஒருவர் தவறான நடத்தை அல்லது திறமையின்மைக்காக பதவியிலிருந்து நீக்கப்படலாம். நீதிபதியை பதவியிலிருந்து விலக்குவதற்கு அரசியலமைப்பில் விதிகள் சேர்க்கப்பட்டுள்ளன. நீதிபதிக்கு எதிரான தீர்மானங்கள் நுறு லோக்சபா உறுப்பினர்கள் அல்லது ஐம்பது ராஜ்யசபா உறுப்பினர்களின் கையெழுத்துடன் சபாநாயகரிடம் தாக்கல் செய்யப்பட வேண்டும். பின்னர் பாராளுமன்றத்தின் இரண்டு சபைகளாலும், ஒரே கூட்டத் தொடரில் நிறைவேற்றப்பட வேண்டும். ஒவ்வொரு சபையிலும் சபையின் மொத்த உறுப்பினர்களில் பாதிப்பேருக்கு மேலானவர்களாலும் சபைக்கு வந்திருந்து வாக்களிப்போரில் மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மையினராலும் அத்தீர்மானம் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும். சபைகளின் தீர்மானங்கள் குடியரசுத் தலைவரை அடைந்ததும், அவர் நீதிபதியைப் பதவியிலிருந்து நீக்கி உத்தரவிடுவார். நீதிபதியின் தவறான நடத்தை அல்லது திறமையின்மை ஆகியவற்றை அறிவதற்குப் பின்பற்ற வேண்டிய முறையையும், தீர்மானங்களைக் குடியரசுத் தலைவருக்கு சமர்ப்பிக்க வேண்டிய முறையையும் பாராளுமன்றம், அதன் சட்டம் மூலமாக நிர்ணயம் செய்யும்.

தலைமை நீதிமன்ற நீதிபதி V.ராமசாமி அவர்கள் பதவியிலிருந்து நீக்குவதற்காக 1993—ம் வருடம் மே 11—ம் தேதி மக்கள் சபையில் சோம்நாத் சட்டர்ஜி என்பவரால் தீர்மானம் கொண்டுவரப்பட்டது. அந்த தீர்மானம் மக்கள் சபையில் 196 வாக்குகள் பெற்று தோல்வியடைந்தது. ஆனால், அந்த தீர்மானத்திற்கு எதிராக யாரும் வாக்களிக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி சிவப்பா என்பவர் பிறந்த தேதியை தவறாகக் கொடுத்து 62 வயதுக்கு மேல் இருந்தார் என்று 1999 மார்ச் 6—ம் தேதி குடியரசுத் தலைவர் முடிவு செய்து ஆணை ஒன்றை வெளியிட்டு அந்த நீதிபதி தனது பதவியில் தொடர்ந்து நீடிக்காதவாறு செய்யப்பட்டார்.

### 9.3.2. உச்ச நீதிமன்றத்தின் அதிகாரங்கள்

தலைமை நீதிமன்றம் ஈடு இணையற்ற அதிகாரங்களை உடையதாக விளங்குகிறது. சில வழக்குகளை அதுவே முதல் நிலை மன்றமாக இருந்து எடுத்த எடுப்பிலேயே விசாரிக்கலாம் என்றாலும், அங்கு வரும் வழக்குகளில் மாநில உயர் நீதிமன்றங்களின் தீர்ப்புகளிலிருந்து மேல் முறையீடாக வருபவையெ அதிகமாகும்.

**1. மூலவழக்கு விசாரணை (Original Jurisdiction)**

தலைமை நீதிமன்றம் கீழ்க்கண்ட மூல வழக்குகளை விசாரிக்கிறது. a) மத்திய மாநில அரசாங்கங்களுக்கிடையே ஏற்படும் வழக்குகள் b) ஒரு பக்கம் மத்திய அரசிற்கும் மறுபக்கம் ஒன்று அல்லது ஒன்றிற்கு மேற்பட்ட மாநிலங்களுக்கும் இடையே ஏற்படும் வழக்குகள். c) இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட மாநிலங்களுக்கிடையே ஏற்படும் வழக்குகள்.

மேற்கண்ட வழக்குகளை முதன் முறையாக அனுமதித்து விசாரணை செய்வதற்கு அதிகாரம் பெற்றுள்ளது. அமெரிக்க தலைமை நீதிமன்றத்திற்கு இருப்பது போல, இரு மாநிலங்களில் வாழும் மக்களிடையே ஏற்படும் வழக்குகளையும், ஒரு மாநிலத்திற்கும் மற்றொரு மாநிலத்தில் வாழ்பவருக்குமிடையே ஏற்படும் வழக்குகளையும் விசாரிக்க இந்திய தலைமை நீதிமன்றத்திற்கு அதிகாரம் கிடையாது.

**2. மேல் வழக்கு விசாரணை அதிகாரம் (Appellate Jurisdiction):**

தலைமை நீதிமன்றமானது நாட்டிலுள்ள மாநில உயர் நீதிமன்றங்களுக்கும் மற்றுமுள்ள இதர நீதிமன்றங்களுக்கு மேலாக, தலையாய மேல் விசாரணை வழக்கு மன்றமாகப் பணிபுரிகிறது. சிவில் வழக்குகள், குற்ற வழக்குகள், மேலும் தொழில் துறை

வழக்குகளிலிருந்தும் தலைமை நீதிமன்றத்திற்கு முறையீடு செய்து கொள்ளலாம். இந்திய நீதித்துறையில் தலைமை நீதிமன்றம் தலையாய மேல்வழக்கு மன்றமாக இயங்குகிறது. இனி தலைமை நீதிமன்றத்தின் மேல் வழக்கு அதிகாரங்களை விரிவாகக் காணலாம்.

**a) அரசியலமைப்பு சார்ந்த வழக்குகள்**

அரசியலமைப்பு சார்ந்த வழக்குகளை உயர்நீதி மன்றத்தின் தீர்ப்புகளிலிருந்து தலைமை நீதிமன்றத்திற்கு மேல் முறையீடு செய்து வைக்கலாம். ஆனால் அவ்வழக்கு அரசியலமைப்புச் சட்டமொன்றின் விளக்கத்தைப் பொறுத்த வழக்காக அது இருக்க வேண்டும். வழக்கை முன்பு விசாரித்த உயர்நீதிமன்றம் அது அரசியலமைப்பைச் சார்ந்த வழக்காக இருப்பதற்கான சான்றிதழ் வழங்க வேண்டும். அது போன்ற சான்றிதழை வழங்க உயர்நீதிமன்றம் மறுத்தாலும், தலைமை நீதிமன்றம் அந்த வழக்கு அரசியலமைப்பின் விளக்கத்தை நாடியது என்று கருதினால், தன்னிடம் முறையிட்டுக் கொள்ள (Special leave to appeal) அனுமதி வழங்கலாம். அரசியலமைப்புக்குப் பொருள் விளக்கம் காணும்படி தூண்டும் வழக்குகள், தலைமைநீதி மன்றம் வரை எடுத்துச் செல்லப்படலாம் என்பது அரசியலமைப்புக்கு நாம் அளிக்கும் முக்கியத்துவத்தை உணர்த்துகிறது. அரசியலமைப்பு விதிகளுக்கு தலைமை நீதிமன்றம் கூறும் பொருளே இறுதியான பொருளாகும்.

**b) சிவில் வழக்குகள் (Civil cases)**

சிவில் வழக்குகளில் மாநில உயர் நீதிமன்றங்களிலிருந்து தலைமை நீதிமன்றத்திற்கு மேல் வழக்காக செல்ல வேண்டுமானால் சிவில் வழக்கின் மதிப்பு ரூபாய் 20,000 ஆக இருக்க வேண்டும் என்ற விதியானது 30—வது திருத்தத்தின்படி அரசியலமைப்பிலிருந்து நீக்கப்பட்டு விட்டது. ஒவ்வொரு வழக்கும் அதன் தகுதியின்படி மேல்மன்றம் செல்லலாம். அல்லது அந்த வழக்கு தலைமை நீதிமன்றத்திற்க மேல் வழக்காகச் செல்லத் தகுதியுள்ளது எனச் சான்றிதழ் பெற்றிருக்க வேண்டும்.

**c) கிரிமினல் வழக்குகள் (Criminal cases)**

குற்ற வழக்குகளும், மேல் முறையீடாகத் தலைமை நீதிமன்றத்திற்கு எடுத்துச் செல்லப்படலாம். குற்ற வழக்குகளில் மாநில உயர் நீதிமன்றங்களிலிருந்து தலைமை நீதிமன்றத்திற்கு மேல் வழக்காகச் செல்ல வேண்டுமென்றால், கீழ் நீதி மன்றத்தில் விடுதலையான வழக்கில் உயர் நீதிமன்றம் மரணதண்டனை கொடுத்திருந்தால், அல்லது கீழ் நீதிமன்றத்திலிருந்து வழக்கை தானே எடுத்துக் கொண்டு உயர்நீதிமன்றம் மரண தண்டனை கொடுத்திருந்தால், அல்லது தலைமை நீதிமன்றத்திற்கு மேல் வழக்காகச் செல்லத் தகுதியுடையது என்று

சான்றிதழ் பெற்றிருந்தால், தலைமை நீதிமன்றத்தில் முறையீடு செய்து கொள்ளலாம்.

அரசியலமைப்பில் கூறப்பட்டிருக்கும் சிவில், குற்ற வழக்குகளைத் தவிர, பாராளுமன்றம் வேறு வகையான வழக்குகளையும், தலைமை நீதிமன்றத்தில் மேல் முறையீடு செய்து கொள்ள அனுமதித்து சட்டமியற்றலாம்.

3. விசேஷ அனுமதி வழங்கும் அதிகாரம் (Special leave)

நாட்டிலுள்ள எந்த நீதிமன்றத்தின் தீர்ப்பிலிருந்தும் தலைமை நீதிமன்றம் அதனிடம் மேல் முறையீடு செய்து கொள்ள அனுமதியளிக்கலாம். சட்டப்படி தலைமை நீதிமன்றத்தில் விசாரிக்கப்படுவதற்குரிய தகுதியைப் பெறாத வழக்குகளுக்கு, அவற்றின் தனித்தன்மையை அல்லது முக்கியத்துவத்தைப் பொறுத்துத் தலைமை நீதிமன்றம் விசேஷ அனுமதி அளித்து, அவற்றை அதன் முன்பாக வழக்காட வகை செய்யலாம். கீழ் நீதிமன்றங்களில் நியாயம் மறுக்கப்பட்டது என்று தோன்றினாலோ, அதனால் நீதிநிர்வாகத்தில் தவறிழைக்கப்பட்டு விட்டது என்று தோன்றினாலோ, அவற்றின் முடிவுகளிலிருந்து தனக்கு விண்ணப்பித்துக் கொள்ள அனுமதி வழங்கவதோடு தலைமை நீதிமன்றம் வாய்ப்பளித்திருப்பது மிகச் சிறந்த ஏற்பாடாகும்.

தலைமை நீதிமன்றமே சில சமயங்களில் தவறிழைக்கக்கூடும். அதனுடைய தீர்ப்புகளை அது மறுபரிசீலனை செய்யும்படி கேட்டுக் கொள்ளப்படலாம். அதற்கான விண்ணப்பம் தீர்ப்பு அளிக்கப்பட்ட முப்பது நாட்களுக்குள் தலைமை நீதிமன்றத்தின் பதிவாளர்களிடம் பதிவு செய்யப்பட வேண்டும்.

4. அடிப்படை உரிமைகளைக் காத்தல்

நம் அரசியலமைப்பு மக்களுக்கு வழங்கியுள்ள அடிப்படை உரிமைகள் மக்களுக்கு மறுக்கப்படாதவாறு உத்திரவாதம் அளிப்பதும் தலைமை நீதிமன்றத்தின் பொறுப்பாகும். மக்களின் உரிமைகளில் தலையிட்டு அவற்றைப் பறிக்க முயல்வோர் யாராக இருப்பினும், தலைமை நீதிமன்றம் அவர்களுக்கு கட்டளைகள் அனுப்பி அடிப்படை உரிமைகளை மக்கள் அனுபவிப்பதற்கு வழி வகுக்கும்.

ஆள்கொணர் கட்டளை (Writ of Habeas Corbus) செய் என்னும் ஆணைக் கட்டளை (Writ of Mandamus), விசாரணைத் தடைகட்டளை (Writ of Prohibition), உரிமை ஆதாரக் கட்டளை (Writ of Quo warento), பத்திரத்தைக் கொண்டு வந்து முன்னிலைப் படுத்துமாறு கீழ்

மன்றங்களுக்கு இடப்படும் கட்டளை (Writ of certiorari) ஆகியவைகளைப் பிறப்பித்து அவைகள் மூலமாக அடிப்படை உரிமைகளைப் பாதுகாக்கும்படி அரசியலமைப்புச் சட்டம் தலைமை நீதிமன்றத்தைக் கோருகிறது.

**5. குடியரசுத் தலைவருக்கு ஆலோசனை வழங்குதல்**

அரசியலமைப்பின் 143—ம் விதியின்படி, தலைமை நீதிமன்றத்திற்கு அறிவுரை கூறும் அதிகாரமும் உண்டு. முக்கியமான பொருள் பற்றி குடியரசுத் தலைவர் தலைமை நீதிமன்றத்தின் அறிவுரையைக் கேட்கலாம். சட்டத்தைப் பற்றிய ஐயப்பாடுகளையும், அல்லது மசோதாவை நிறைவேற்று முன்பு சட்டப்படி செல்லுமா? என்பன போன்ற பிரச்சினைகளையும், தலைமை நீதிமன்றத்திற்கு அனுப்பி அதன் கருத்தை அறிந்து கொள்ள குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் உண்டு. மேலும் முக்கியமான செயல்களைப் பற்றி சட்ட ரீதியான கருத்தை அறியவும் குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் உண்டு. தலைமை நீதிமன்றம், பிரச்சனைக்குரிய செயல்களைப்பற்றி சட்ட ரீதியான கருத்தை எடுத்துரைக்க வேண்டிய கட்டாயமில்லை. அதே போன்று தலைமை நீதிமன்றம் கொடுத்த கருத்தை குடியரசுத் தலைவர் ஒப்புக் கொள்ளவேண்டுமென்ற கட்டாயமும் இல்லை.

**6. பதிவுச் சான்று மன்றமாக செயல்படுதல் (Court of Records)**

அரசியலமைப்பு, தலைமை நீதிமன்றத்தை பதிவச் சான்று நீதிமன்றம் என்று அறிவிக்கிறது. தலைமை நீதிமன்றத்தின் முடிவுகளும், தீர்ப்புகளும், விளக்கங்களும், நடவடிக்கைகளும் எழுதப்பட்டு நிலையான சான்றுகளாகப் பதிவு செய்யப்படுகின்றன. தலைமை நீதிமன்றத்தின் பதிவுச் சான்றுகள் தலையாய அதிகாரமுடையவை. அவைகள் மற்ற நீதிமன்றங்களில் மேற்கோள்களாகக் காட்டப்படும் தன்மை உடையன. அவைகளை ஐயப்படவோ, எதிர்த்து வழக்காடவோ யாருக்கும் அதிகாரம் கிடையாது. அவை எல்லோராலும் உயர்ந்த சான்றுகளாக ஏற்றுக் கொள்ளப்படவேண்டும்.

## 9.3.3. உச்ச நீதிமன்றத்தின் நீதிப்புனராய்வு அதிகாரம் (Judicial Review)

அமெரிக்காவைப் போல, இந்தியாவிலும் அரசியலமைப்பே நிலையானது. நாட்டிலுள்ள எல்லா அரசாங்கங்களுக்கும் அரசியலமைப்பு தான் பிறப்பிடம். அரசியலமைப்புக்கு உட்பட்டே எல்லா நிறுவனங்களும் செயல்பட வேண்டும். அரசியலமைப்புக்கு உட்பட்டு தான் மத்திய அரசும் மாநில அரசுகளும் இயங்க வேண்டும். பாராளுமன்றமும், மாநில சட்ட மன்றங்களும் இயற்றும் சட்டங்கள் எல்லாம் அரசியலமைப்புக்கு உட்பட்டே

இருக்க வேண்டும். அப்படி இயற்றப்படும் சட்டங்கள் அரசியலமைப்பின் விதிகளுக்கு முரணானவைகளாக இருக்குமென்றால் தலைமை நீதிமன்றம் அவற்றை அரசியலமைப்புக்கு புறம்பானவை என்று புறந்தள்ளிவிடும். இவ்வாறு இயற்றப்பட்ட சட்டங்கள் அரசியலமைப்புக்கு உட்பட்டவையா, முரணானவையா என்று ஆய்வதே 'நீதிப் புனராய்வு' எனப்படும். இதனால்தான் தலைமை நீதிமன்றம் அரசியலமைப்பின் பாதுகாவலன் என்று அழைக்கப்படுகிறது.

**அரசியலமைப்பில் நீதிப்புனராய்வு அதிகாரம்**

தலைமை நீதிமன்றத்திற்கு நீதிப்புனராய்வு செய்யும் அதிகாரம் அரசியலமைப்பில் வெளிப்படையாக கொடுக்கப்படவில்லை என்றாலும், சில விதிகள் மூலம் இந்த அதிகாரத்தை வழங்கியுள்ளது. அரசியலமைப்பின் 13—ம் விதி, 32—ம் விதி, 131 முதல் 136 வரையுள்ள விதிகள் சட்டங்களைச் செல்லாது என்று அறிவிக்கம் இந்த நீதிப்புனராய்வு அதிகாரத்தை முடியும். மற்ற எந்த நீதிமன்றமும் அறிவிக்க முடியாது.

**நீதிப்புனராய்வு அதிகாரம் செயல் படுத்தப்படுதல்**

**a) வழக்குகள் சம்பந்தமான சச்சரவுகளை தீர்த்து வைத்தல்**

இந்தியாவில் நீதிப்புனராய்வு அதிகாரம், அரசியலமைப்புத் திருத்தங்கள் மூலம் ஓரளவு குறைக்கப்பட்டுள்ளது. உதாரணமாக, சொத்துரிமையைப் பொறுத்தவரையில் பொது நலனுக்காக அரசு தனிநபர் ஒருவரின் சொத்தை எடுக்கும்போது வழங்கும் இழப்பீட்டுத் தொகை போதுமானதா என்பதைத் தீர்மானிக்கும் அதிகாரம் நீதிமன்றத்திலிருந்து எடுக்கப்பட்டு விட்டது. ஆயினும் கோலக் நாத் வழக்கிலும், வங்கிகளை அரசுடைமையாக்கிய சட்டம் குறித்த வழக்கிலும், மன்னர் மானிய ஒழிப்பு வழக்கிலும், தலைமை நீதிமன்றம் அளித்த தீர்ப்புகளின் விளைவாக நீதிப்புனராய்வு அதிகாரத்தைத் திட்டவட்டமாக வரையறுக்கும் வகையில், 24—வது 25—வது அரசியலமைப்புத் திருத்தங்கள் அமைந்துள்ளன.

**b) அதிகாரப் பங்கீடு சம்பந்தப்பட்ட வழக்கு தீர்க்கப்படுதல்**

இந்தியாவில் அதிகாரப்பங்கீடு மிகத் தெளிவாகக் குறிக்கப்பட்டுள்ளது. அவை மத்திய அதிகாரப்பட்டியல், மாநில அதிகாரப்பட்டியல், பொது அதிகாரப்பட்டியல் என்பனவாகும். மத்திய அரசு, மாநில அதிகாரப்பட்டியலில் குறுக்கிட முடியாது. அப்படி மாநில அதிகாரப்பட்டியலில் உள்ள பொருள் பற்றி சட்டமியற்றினால், அது தன்னுடைய அதிகார வரம்பை மீறியதாகும். இதனால் அதிகாரப் பங்கீட்டைப் பற்றிய சச்சரவுகளை தலைமை நீதிமன்றம் தீர்த்து வைக்கிறது. அமெரிக்காவில் இப்படி விரிவான பாகுபாடு இல்லாமையால், நீதிப்புனராய்வின் எல்லை இந்தியாவைவிட பரந்து காணப்படுகிறது.

இந்திய நீதித்துறையானது, நீதிப்புனராய்வு செய்யும் அதிகாரம் பெற்றுள்ளதால், தலைமை நீதிமன்றங்களும், உயர்நீதி மன்றங்களும் அரசியலமைப்பிற்கு உரை விளக்கம் தந்து, அதன் மேம்பாட்டைக் காக்கின்றன. சட்டமொன்று அரசியலமைப்பிற்கு உட்பட்டதா என்ற ஐயப்பாட்டை அச்சட்டத்தினால் நேரடியாகப் பாதிக்கப்படுவோர் மட்டுமே எழுப்ப முடியும். அரசியலமைப்பிற்கு முரணானதாகக் கருதப்படும் சட்டத்தில், அதன் எப்பகுதி முரணானதாக இருக்கிறதோ, அது மட்டுமே செல்லாது என்று அறிவிக்கப்படும். எஞ்சிய பகுதி சட்டமாகத் தொடர்ந்து நீடிக்கும்.

தலைமை நீதிமன்றத்தின் முன்வந்த முக்கிய வழக்குகளில் ஒன்றாகிய ஏ.கே. கோபாலன் எதிர் சென்னை அரசாங்க வழக்கில் (1950) தடுப்புக் காவல் சட்டத்தின் 14—ம் பிரிவை (Preventive Detention Act ) அரசியலமைப்பிற்கு முரணானதெனத் தள்ளியது. இது மத்திய அரசாங்கத்தின் சட்டத்தை தலைமை நீதி மன்றம் தள்ளியதற்கு எடுத்துக்காட்டாக இருப்பதுமல்லாமல், அடிப்படை உரிமைகளை பாதுகாத்து செயல்படுத்துவதற்கும் சான்றாக விளங்குகிறது.

### d) மாநில சட்டங்களை செல்லாது என்று சொல்லும் சபை

தலைமை நீதிமன்றம் பாராளுமன்றச் சட்டங்களை அரசியல் அமைப்புக்கு முரணானவை என்று தள்ளிவிடுவது போல, பல மாநிலச் சட்டங்களையும் தள்ளியிருக்கிறது. எடுத்துக்காட்டாக, வெங்கட்ராமன் எதிர் சென்னை அரசாங்க வழக்கில் அரசாங்க அலுவல்கள் சிலவற்றிற்கு முஸ்லீம்கள், கிறிஸ்தவர்கள், பிராமணரல்லாத இந்துக்கள் என்ற மத ஜாதி அடிப்படையில் ஆட்களை நியமித்த அரசாங்க ஆணையை, அரசியலமைப்பின் பதினாறாம் விதிக்கு முரணானது என்று கூறி நீதிமன்றம் தள்ளியது.

### e) அடிப்படை உரிமைகளைப் பாதுகாத்தல்

மேலும் அடிப்படை உரிமைகளுக்கு விரோதமான எந்தவொரு சட்டத்தையும் தள்ளுபடி செய்ய 13—வது விதியின்படி தலைமை நீதிமன்றத்துக்கு அதிகாரம் உண்டு. பாராளுமன்றமோ, மாநில சட்ட சபைகளோ இயற்றும் சட்டங்கள் அடிப்படை உரிமைகளை பாதிக்கவோ, குறைக்கவோ, கட்டுப்படுத்தவோ கூடாது. ஆனால் 1971—ல் நிறைவேற்றப்பட்ட 24—வது திருத்தத்தின்படி, அரசியலமைப்பிலுள்ள எந்தவொரு பகுதியையும் அடிப்படை உரிமைகள் உட்பட திருத்தியமைக்கும் அதிகாரம் இந்திய பாராளுமன்றத்திற்கக் கொடுக்கப்பட்டுள்ளது.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக் கேள்விகள்

1. மாநில சட்டமன்றம் பற்றி ஒரு சிறுகுறிப்பு எழுது.
2. மாநில மேல்சபையின் அதிகாரங்களை மதிப்பீடு செய்க.
3. மாநில ஆளுநரின் அதிகாரங்களை பட்டியல் இடுக.

## 9.4. தொகுப்புரை:

மாநில சட்டப் பேரவையால் கீழ்சபைக்கு சட்டமன்ற உறுப்பினர்களை மக்கள் நேரடியாக 5 ஆண்டு தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். சட்டமன்ற மேலவைக்கு உறுப்பினர்கள் மறைமுகமாக 6 ஆண்டு தேர்ந்தெடுக்கிறார்கள். மாநில அரசாங்கத்தில் ஆளுநரின் மிக முக்கியமானதாகும். மேலும், இந்தியாவைப் பொருத்தவரையில் நீதிப்புனராய்வானது இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் நிலவும் இரு எல்லைகளுக்கு இடையில் உள்ளது. இங்கிலாந்தில் பாராளுமன்றம் வரையரையற்ற அதிகாரம் பெற்றுள்ளது. அமெரிக்காவில் நீதிமன்றமே மேலாண்மை பெற்றுள்ளது. இந்திய அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் இவ்விரு எல்லைகளையும் தவிர்த்து, இடைப்பட்டதொரு நிலையை நிறுவியுள்ளனர்.

இந்திய தலைமை நீதிமன்றத்தின் அதிகாரங்களுக்கு நிகரான அதிகாரங்களையுடைய நீதிமன்றம், உலகில் வேறெங்குமில்லை என்ற கருத்து உள்ளது. இந்திய நாட்டின் நீதித்துறை ஒருங்கிணைக்கப்பட்ட நீதித்துறையாக இருப்பதால் மிகவும் வலுவுள்ளதாக உள்ளது. பொருளாதாரம் வளர்ச்சியடைந்து வரும் நம் நாட்டில் குடிமக்களின் அடிப்படை உரிமைகளைப் பாதுகாப்பதுடன், பொருளாதார, சமூக நீதியையும் காக்கும் வகையில் தலைமை நீதிமன்றம் செயலாற்றி வருகிறது. தலைமை நீதிமன்ற நீதிபதிகள் சுதந்திரத்துடனும், திறமையுடனும், அறிவுடனும் செயலாற்றுவதைப் பொருத்தே அது வரலாற்றில் இடம் பெறும்.

## 9.5. முக்கிய வார்த்தைகள்

1.பண மசோதா : பணமசோதா மாநில பேரவையில் கீழ்சபையில் அமைச்சரால் அறிமுகப்படுத்தப்படுகிறது. பணமசோதா முடிவு செய்யும் அதிகாரம் சபாநாயகருக்கு வழங்கப்பட்டுள்ளது.

2. அவசரச்சட்டம் : மாநில ஆளுநருக்கு அவசரச்சட்டம் பிறப்பப்பதற்கு அரசியலமைப்பின் விதி எண். 213 அதிகாரம் வழங்கியுள்ளது. அவசரச்சட்டம் பிறப்பித்த ஆறுமாதத்திற்குள் சட்டமன்றத்திடம் ஒப்புதல் பெற வேண்டும்.

3. பதிவுச் சான்று நீதிமன்றம்: உச்ச நீதிமன்றத்தின் தீர்ப்புகள், விளக்கங்கள் மற்றும் முடிவுகள், நடவடிக்கைகள் எழுதப்பட்டு நிலையான சான்றுகளாகப் பதிவுசெய்யப்படுகின்றன. உச்ச நீதிமன்றத்தின் பதிவுச் சான்றின் மீது தலையிட எவருக்கும் அதிகாரம் இல்லை.

4. நீதிப்புனராய்வு : பாராளுமன்றத்தில் இயற்றப்படும் சட்டம் அரசியலமைப்பக்கு புறம்பாகவே, அல்லது மக்களின் அடிப்படை உரிமையினை பறிப்பதாகவே இருந்தால் அப்படிப்பட்ட சட்டத்தை நீதித்துறை செல்லாது என அறிவிப்பதை நீதிப்புனராய்வு என்கிறோம்.

## 9.6. முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக்கான கேள்விகள்.

கேள்வி எண் 1. — இந்த கேள்விக்கான விடையை பகுதி எண்.9.1.ல் அறிக.
கேள்வி எண் 2. — இந்த கேள்விக்கான விடையை பகுதி எண்.9.1.3.ல் அறிக.
கேள்வி எண் 3. — இந்த கேள்விக்கான விடையை பகுதி எண். 9.3.1.ல் அறிக.
கேள்வி எண் 4. — இந்த கேள்விக்கான விடையை பகுதி எண். 9.2.1.ல் அறிக.
கேள்வி எண் 5. — இந்த கேள்விக்கான விடையை பகுதி எண்.9.3.ல் அறிக.
கேள்வி எண் 6. — இந்த கேள்விக்கான விடையை பகுதி எண். 9.3.1.ல் அறிக.

## 9.7. இந்த அலகு சம்பந்தப்பட்ட மேலும் படிக்க வேண்டிய நூல்கள்.

1. Kashyap, Subhash.C; (ed) The Citizen and Judicial Reforming, Universal, New Delhi; 2002.

2. Duliey.S.N; Constitutions; Published by Naram; Agra. 1998.

3. Alagumali.A; Modern Governments; J.J. Publication; Madurai 2005.

## 9.8. கேள்விகளும் / செயல்முறை பயிற்சிகள்

1. மாநில சட்டப் பேரவையின் அமைப்பு மற்றும் செயல்பாட்டை விவரி.
2. மாநில ஆளுநரின் அதிகாரங்கள் மற்றும் பணியினை விளக்குக.
3. இந்திய மாநில முதலமைச்சரின் அதிகாரங்களை விவரி.
4. மாநில அமைச்சரவையின் பணிகள் யாவை?
5. இந்திய மாநில நீதிமன்றத்தின் அமைப்பினை விவரிக்கவும்.
6. இந்திய தலைமை நீதிமன்றத்தின் அதிகாரங்கள் மற்றும் பணியினை விவரி.

குறிப்பு

# அலகு – 10

## இருபதாம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில் தமிழ் நாட்டில் நிலவிய சமூதாயமும் அரசியலும் — பிராமணர் எதிர்ப்பின் தோற்றம் — திராவிட இயக்கம் — பத்திரிக்கை, சினிமா ஆகியவற்றின் பங்கு:

**முன்னுரை:**

ஆங்கிலேயர் ஆட்சியின் விளைவாகத் தமிழகம் சென்னை மாகாணம் என்ற பெயரில் விரிவடைந்திருந்தது. பர்மா, நீங்கலாக வேறு எந்த இந்திய மாகாணத்தையும் விட அளவில் பெரியது. சென்னை மாகாணத்தில் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளு, உருது, முதலிய மொழிகள் பேசும் மக்கள் பல சமயங்களைத் தழுவி நின்றனர். இந்தியாவிலிருந்த அனைத்து பிரிட்டிஷ் மாகாணங்களிலும் மிகப் பெரியது சென்னையே. அது தெற்கே குமரி வரையிலும், வடக்கே பம்பாய் வரையிலும் பரவி இருந்தது. 1911—ல் தமிழைத் தாய் மொழியாகக் கொண்டவர்கள் 17—மில்லியன் மக்களாவர். கன்னடம், மலையாளம், துளு, ஆகிய மொழிகளும் சிறுபான்மையினரால் பேசப்பட்டன. சென்னை மாகாணத்தில் நில உடமையைப் பொறுத்த வரை 29 சதவீதமும் ஜமீன்தாரி முறையின் கீழும், 71 சதவீதமும் ரயத்வாரி முறையின் கீழும் இருந்தது. சென்னை மாகாணத்தில் கல்வி, வருவாய் மற்றும் நீதித் துறைகளில் பிராமணர்களுடைய ஆதிக்கம் அதிக அளவில் இருந்தது. இதற்கான காரணம் தமிழ், ஆங்கிலம், கல்வியில் பிராமணர்கள் பெற்றிருந்த தேர்ச்சியே ஆகும். 1920—ம் ஆண்டு தேர்தல்களின் நீதிக்கட்சி ஆட்சிக்கு வந்தது. சென்னை சட்டமன்றத்தில் பல தீர்மானங்களைக் கொண்டு வந்து, மாகாண அரசாங்கப்பணிகள் அனைத்திலும் பிராமணரல்லாதோர்களை அமர்த்த பல முயற்சி எடுத்தது. சட்டமன்ற கூட்டத்தில் 1921ம் ஆண்டு நிறைவேற்றப்பட்ட தீமானத்தின்படி பிராமணரல்லா வகுப்பினர்களுக்கு இடஒதுக்கீடு இனவாரி சார்பாளர் முறை அடிப்படையில் அனைத்து துறைகளிலும் அரசாங்க வேலைக்கு பெறுவதற்கு அரசாணை பிறப்பிக்கப்பட்டது. நீதிக்கட்சி வீழ்ச்சி அடைய தொடங்கியபொழுது இதனை மக்கள் இயக்கமாக மாற்றும் பொறுப்பை தந்தை பெரியாரிடம் ஒப்படைக்கப்பட்டது.

தமிழகத்தில் தொழில் துறையும், கல்வியும், வேளான்மையும் நீதிகட்சி ஆட்சி முதல் இன்றுவரை ஏற்பட்ட முன்னேற்றத்தையும் இப்பாடப்பகுதி தெளிவாக விளக்குகிறது. நீதிக்கட்சி 1944—ம் ஆண்டு திராவிடர் கழகம் என பெயர் மாற்றப்பட்டது. தந்தை பெரியார் அவர்கள் மூடப்பழக்க வழக்கங்கள் மற்றும் சாதிக் கொடுமை, பிராமணர்களுக்கு எதிரான போராட்டம் சமுதாய ஏற்றத் தாழ்வு,

பார்ப்பணியத்தை ஒழித்தல் ஆகியவை திராவிடக் கழகத்தின் கொள்கையாக செயல்பட்டது. தமிழகத்தில் பிற்காலத்தில் தோன்றிய திராவிட முன்னேற்ற கழகம், அண்ணா திராவிட முன்னேற்றக்கழகம் பெரியாரின் திராவிட இயக்கத்தை தாய் கட்சியாக ஏற்று செயல்பட்டுக கொண்டு இருக்கிறது. மேலும் இவ்வலகில் சினிமாவும், பத்திரிக்கையும். தமிழக அரசியல் தாக்கம், மனித உரிமைகள், நவீனமயமாக்கம மற்றும் முன்னேற்றம் போன்ற பாடங்களின் தொகுப்பும் இடம் பெற்றுள்ளன

## நோக்கங்கள் (Objectives)

இருபதாம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில் தமிழ்நாட்டில் நிலவிய சமூக, அரசியல் நிலையினை கற்றறிதல்.
பிராமனரல்லாதோர் இயக்கத்தின் தோற்றத்தையும் நோக்கங்களையும் தெரிந்து கொள்ளுதல்.
நீதிக்கட்சியின் தோற்றம், வளர்ச்சி, அதன் சாதனைகளை உணர்தல்.
தமிழ் நாட்டு அரசியலில் பெரியார்.ஈ.வே.ராவின் பங்கினை தெரிந்து கொள்ளுதல்.
தமிழ்நாட்டு அரசியலிலும், அரசாங்கத்திலும் சினிமா, பத்திரிகைகள் ஆகியவற்றின் பங்கினை புரிந்து கொள்ளுதல்.

## அலகின் வடிவமைப்பு (Unit Structure)

கிறிஸ்தவ மிஷனரிகளின் பங்கு
சென்னை மாகாணத்தின் அரசாங்கப்பணிகளின் நிலை
சென்னை பல்கலைக்கழகத்தின் கல்வியறிவு நிலை
சென்னை பல்கலைக்கழக்கத்தின் பட்டதாரிகள் பற்றி விபரம்
தென்னிந்தியாவின் கல்வி மையமாக சென்னை மாகாணம்
மாணவர்களை அரசியலில் ஈடுபடுத்தியதில் தேசிய தலைவர்களின் பங்கு
பிராமணிய எதிர்ப்பின் தோற்றம், பிரகடனம் மற்றும் சாதிவழி ஆணை
முதலாவது வகுப்பவாரி ஆணை
இரண்டாவது வகுப்புவாரி ஆணை
நீதி கட்சியின் தோற்றம், வளர்ச்சி மற்றும் அதன் சாதனைகள்
மாண்டேகு செம்ஸ்போர்டு சீர்திருத்தம்
தந்தை பெரியாரின் சுயமரியாதை இயக்கம்
சுயமரியாதை இயக்கம் அல்லது தன்மான இயக்கம்
திராவிடகழகமும், பெரியாரும்
தமிழ்நாட்டு அரசியலில் பத்திரிக்கையின் தாக்கம்
தமிழ்நாட்டு அரசியலில் சினிமாவின் தாக்கம்
நவீனமயமாக்கல் மற்றும் முன்னேற்றம்
மனித உரிமைகள்
தொகுப்புரை

முக்கிய வார்த்தைகள்
முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனை
இந்த அலகு சம்பந்தப்பட்ட மேலும் படிக்க வேண்டிய நூல்கள்
வினாக்கள்/ செயல்முறைப்பயிற்சிகள்.

## 10.1. கிறிஸ்தவ மிஷனரிகளின் பங்கு

19 ஆம் நூற்றாண்டின் இறுதிப் பத்தாண்டுகளில், கிறிஸ்தவ மிஷனரிகள் மற்றும் அரசாங்க முயற்சிகளின் விளைவாக, தீண்டத்தகாதோர் தமது அரசியல் மற்றும் சமூக சமூக உரிமைகளை உணரத்தொடங்கினர். அப்போது பொருளாதார, சமய அந்தஸ்தில் நிலவிய ஏற்றத்தாழ்வுகளின் பரிமாணத்தையும் அவர்கள் உணர்ந்தனர்.

தெலுங்குப் பகுதியின் இந்தியக் கிறிஸ்தவர்கள், பெரும்பாலும் தாழ்த்தப்பட்டோர் மதம் மாறினர். தமிழ்க்கிறிஸ்தவர்களில் ஒரு பகுதியினர் பனையேறிகளான நாடார்கள்: சில வேளாளர்களுமிருந்தனர் சமூத்தில் அவர்களுடைய நிலை தெலுங்கு கிறிஸ்தவர்களின் நிலையை விட உயர்ந்தே இருந்தது. மூன்றாவது வகுப்பான, தென்னிந்திய முஸ்லீம்கள் பெரும்பாலும் நகர்ப்புறங்களில், குறிப்பாக சென்னை நகரிலும், வட ஆற்காடு மாவட்டத்திலும் வசித்தனர். முஸ்லீம்களில் பலர் முக்கியமான தொழிற்சாலைகளை வைத்திருந்தனர். அவர்கள் தமது பகுதிகளின் அரசியலிலும் முக்கியமான பங்கு வகித்தனர்.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், தமிழ்ப்பகுதிகளில் வேளாளர்களும், பலிஜா நாயுடுகளும், தெலுங்க பகுதிகளில் பலிஜா நாயுடுகள், கம்மவார்கள் மற்றும் ரெட்டியார்களுமே அதிகமான அளவில் நில உடைமையாளராய் இருந்தனர். தமிழ் மற்றும் தெலுங்குப் பிராமணர்களும் நிறைய நிலங்களுக்கு சொந்தக்காரர்களாய் இருந்தனர். ஜாதி அடிப்படையிலான நில உடைமையாளர் பற்றிய புள்ளியியல் விபரங்கள் இந்நூற்றாண்டின் தொடக்க வருடங்களுக்கு இல்லை. பெரும் நிலக்கிழார்கள், முக்கியமாக ஜமீன்தார்கள் மற்றும் விவசாய குழுக்களுல் முக்கியமானவர்கள் அனைவரும் பிராமணர் அல்லாத ஜாதி இந்துக்கள் ஆவர். 1911 ஆண்டைய கணக்கெடுப்பின் படி, தொழிற்சாலைகளின் உரிமையாளர் எண்ணிக்கையிலும் பிராமணர் அல்லாதார், பிராமணர்களை விட முன்னனியிலேயே இருந்தனர்.

### 10.1.1. சென்னை மாகாணத்தின் அரசாங்கப்பணிகளின் நிலை.

கல்வித்திறன் அடிப்படையிலான பணிகள், குறிப்பாக அரசாங்கப் பணிகளில்தான் பிராமணர், பிராமணர் அல்லாதோர் ஆகியோரின் விகிதாச்சாரத்தை தெளிவாக அறியலாம். 192—ல் வங்கிகளும், பிற நிதி நிறுவனங்களும் தெலுங்கு, தமிழ் பிராமணர்கள், கோமுட்டிகள் மற்றும்

வேளாளர்களையே பணிக்கமர்த்தின. இந்நான்கு வகுப்பினருமாகச் சேர்ந்து ஏறக்குறைய மூன்றில் இரு பங்கு வேலைகளைத் தக்க வைத்துக்கொண்டிருந்தனர். அரசுப்பணியில் தமிழ்ப்பிராமணர்கள் முதலிடத்தையும், வேளாளரும் தெலுங்கு பிராமணர்களும் இரண்டாவது இடத்தையும், நாயர்கள் பலிஜா நாயுடுகள் மூன்றாம் இடத்தையும், பெற்றிருந்தனர். இதே அமைப்பிலான பிரதிநிதித்துவம் சட்டம், கல்வித் துறைகளிலும் இருந்தது.

1912—ஆம் ஆண்டின் அரசு அலுவல்களில் ஜாதிவாரியான விகிதாரம் கீழ்கணடவாறு இருந்தது.

| புதவி பெயரின் வரிசை எண். | பதவி மற்றும் ஜாதி பெயர் | எண்ணிக்கை | மொத்த ஆண்கள் தொகையில் விழுக்காடு | பணிகளில் விழுக்காடு |
|---|---|---|---|---|
| 1. | துணை கலெக்டர்கள் | | | |
| | பிராமணர்கள் | 77 | 32 | 55 |
| | பிராமணரல்லாத இந்துக்கள் | 30 | 85.6 | 21.5 |
| | முஸ்லீம்கள் | 15 | 6.6 | 10.5 |
| | இந்திய கிறிஸ்தவர்கள் | 7 | 2.7 | 5 |
| | ஐரோப்பிய, ஐரோப்பிய ஆசியரும் | 11 | 7 | 8 |
| 2. | துணை நீதிபதிகள் | | | |
| | பிராமணர்கள் | 15 | | 83.3 |
| | பிராமணரல்லாத இந்துக்கள் | 3 | | 16.7 |
| | முஸ்லீம்கள் | இல்லை | | |
| | இந்திய கிறிஸ்தவர்கள் | இல்லை | | |
| | ஐரோப்பிய, ஐரோப்பிய ஆசியரும் | இல்லை | | |
| 3. | மாவட்ட முன்சீப்கள் | | | |
| | பிராமணர்கள் | 93 | | 72.6 |
| | பிராமணரல்லாத இந்துக்கள் | 25 | | 19.5 |
| | முஸ்லீம்கள் | 2 | | 1.6 |
| | இந்திய கிறிஸ்தவர்கள் | 5 | | |
| | ஐரோப்பிய, ஐரோப்பிய ஆசியரும் | 3 | | 2.4 |

அதே போல் 1917 ஆம் ஆண்டில் அரசின் வருவாய்த்துறை, நீதித்துறை ஆகியவைகளில் ஜாதி வாரியான பணிகள் விகிதாச்சாரம் கீழ்கண்டவாறு இருந்தது.

| பதவிபெயர் | பிராமணரல்லாதார் | பிராமண கிறிஸ்தவர் | இந்திய முஸ்லீம் | கிறிஸ்தவர் | மூ |
|---|---|---|---|---|---|
| ஊசூர் சிராஸ்தார்கள் | 135 | 69 | 14 | 12 | 41.3 |
| துணை தாசில்தார் | 214 | 63 | 21 | 10 | 30.9 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தலைமை குமாஸ்தாக்கள் | 16 | 5 | 2 | 1 | 33.3 |
| மாவட்ட நீதிமன்றங்களில் சிராஸ்தார்கள் | 13 | 6 | 1 | 2 | 40.9 |
| துணை நீதிமன்றங்களில் சிராஸ்தார்கள் | 15 | 4 | 1 | Nil | 25 |

பிராமணல்லாதோர், இந்திய கிறிஸ்தவர்கள், முஸ்லீம்களின் மொத்த விகிதாச்சாரம் வருவாய், நீதித்துறைகளில் 33.3% காணப்பட்டது.

### 10.1.2. சென்னை மாகாகணத்தின் கல்விறிவுநிலை

தமிழ், ஆங்கிலக் கல்வியில் பிராமணர்கள் பெற்றிருந்த தேர்ச்சியே இவ்வாறு அவர்கள் மிக அதிகமான பதவிகளில் இருந்ததன் காரணமாகும். பிராமணரல்லாத வகுப்பினர் பிராமணர்களின் விகிதாச்சாரத்தை எட்டவே முடியாது. 1912 ஆண்டுக் கணக்கெடுப்பின்படி தமிழ் பிராமணர்களில் 71.5 விழுக்காட்டினர் எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள். அரசாங்கப்பணிக்கு மட்டுமின்றி ஆசிரியத்தொழிலுக்கும், அரசியலுக்கும் ஆங்கில அறிவு அவசியமாயிருந்தது. இத்துறைகள் அனைத்திலும் தமிழ் பிராமணர்கள் பிற ஜாதியினரைவிட முன்னணயில் இருந்தனர். 1921—ல் தமிழ் பிராமண ஆண்களில் 28.2 % ஆங்கில அறிவைக் கொண்டிருந்தனர். தெலுங்கு பிராமணரல்லா வகுப்புக்களில், முக்கியமான ஆறு பிரிவினர்களிடையே (நாயர்கள், செட்டியார்கள், வேளாளர், பலிஜா நாயுடுகள் இந்தியக் கிறிஸ்தவர்கள் மற்றும் நாடார்கள்) எழுதப்படிக்கத் தெரிந்தோர் எண்ணிக்கை மிகவும் உயர்ந்திருந்தது. ஆயினும் ஆங்கில அறிவைப்பொறுத்தவரை அவர்களால் தமிழ், தெலுங்கு, பிராமணர்களோடு போட்டியிட முடியவில்லை. பிராமரல்லாத தெலுங்கு, சாதியினரான கம்மாவார்கள், ரெட்டியார்களில், 1921 ஆம் ஆண்டில் ஆண்களில் கல்வியறிவு பெற்றோர் எண்ணிக்கை 13.6, விழுக்காடாக உயர்ந்திருந்தது. எனினும் அவர்களில் ஆங்கில அறிவைப் பெற்றிருந்தோர் எண்ணிக்கை ஒரு விழுக்காட்டிற்கும், குறைவாகவே இருந்தது.

முக்கிய பிராமணரல்லாத சாதி இந்துக்களிடையே 1910 ஆம் ஆண்டிற்கு இடைப்பட்ட காலத்தில் ஏற்பட்ட கல்வியறிவு வளர்ச்சியே அவர்கள் அந்தக் கால கட்டத்தில், சென்னை மாகாண அரசியலில் நுழைய முக்கியமான காரணமாயிருந்தது. சென்னையின் பொது வாழ்வில் வேளாளர்கள், செட்டியார்கள், நாடார்கள்,நாயர்கள் ஆகிய சாதியினர் யாவரும் முன்னேறிக் கொண்டிருந்தனர். இருபதாம் நூற்றாண்டுகளின் மத்தியில் தமது கல்வியறிவும், அத்துடன் முன்னேற்றத்திற்கான வாய்ப்பும் வளர்ந்து வருவதைக்கண்ட

பிராமணரல்லாதோர், அரசாங்கப் பணிகளிலும், அரசியல் வாழ்விலும், பிராமணர்கள் ஏறக்குறைய முற்றுரிமை பெற்றிருந்ததைக் கண்டிக்கத் தொடங்கினர். மேலும், பிராமணரல்லாதோரின் சாதிச் சங்கங்கள் உயர் நிலைப்பள்ளி, கல்லூரித் தேர்வுகளில் தம் சாதியினர் பெற்ற வெற்றிச் செய்திகளை உடனடியாக மாகாணமெங்கும் பரப்பி வந்தன. கல்வியறிவு வளர்ச்சியும், அவ்வளர்ச்சியைப் பற்றிய பெருமித உணர்வுமே, பிராமணரல்லாதாரின் அரசியல் விழிப்புணர்ச்சிக்கு அடிப்படை எனலாம்.

சில சாதிகளில் ஆங்கிலக் கல்வியறிவு (விழுக்காட்டில்)

| | 1901 ஆண்டு | 1911 ஆண்டு | 1921 ஆண்டு |
|---|---|---|---|
| தமிழ் பிராமணர் | 17.88 | 22.27 | 28.21 |
| தெலுங்கு பிராமணர் | 10.81 | 14.75 | 17.37 |
| இந்திய கிறிஸ்தவர் | 2.72 | 4.41 | 5.47 |
| நாயர் | 1.54 | 2.97 | 4.57 |
| பலிஜாநாயுடு, சுவரியர் | .98 | 2.60 | 3.43 |
| வேளாளர் | .19 | 2.12 | 2.37 |
| செட்டியார் | .13 | .98 | 2.34 |
| வேளமா | .06 | .41 | .63 |
| நாடார் | .05 | .30 | .75 |
| காப்பு, ரெட்டியார் | .04 | .22 | .41 |
| கம்மவார் | 0.3 | .20 | .45 |

## 10.1.3. சென்னை பல்கலைக்கழகத்தின் பட்டதாரிகளின் புள்ளிவிபரம்

சென்னைப் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த கல்லூரிகளின் மாணவர் எண்ணிக்கை விகிதாச்சாரத்தைப் பார்க்கும் பொழுது கல்வியறிவில் பிராமணர் கொண்டிருந்த ஆதிக்கம், புலனாகின்றது. 1870க்கும் 1918க்கும் இடைப்பட்ட காலத்தில் கல்லூரியில் பயின்று பட்டம் பெற்றவர்களில் 67 முதல் 71வரையான விழுக்காட்டினர் பிராமணர்களாவர். அதே காலத்தில், B.A. பட்டம் பெற்ற பிராமணரல்லாதோர் எண்ணிக்கை, பட்டம் பெற்றோரில் 12க்கும் 18க்குமிடைப்பட்ட விழுக்காடுகளிலிருந்தது, பட்டம் பெற்றவர்களில் இந்தியக் கிறிஸ்தவர்கள் 5.3 விழுக்காட்டினர். சட்டப்படிப்பில் ஈடுபட்டவர்களிலும் பிராமணர்களே அதிகம். உதாரணமாக சட்டப்படிப்பில் இருந்த 3651 மாணவர்களில், 2686 பேர் பிராமணர்கள்: 752 பேர் பிராமணரல்லாத இந்துக்கள். அது போல ஆசிரியத் தகுதிப் பட்டப்படிப்பில் இருந்த மொத்தம் 1498 பேரில், 1094 பிராமணர்கள். 163 பிராமணரல்லாத இந்துக்கள்: 267 இந்திய கிறிஸ்தவர்களும் இருந்தனர்.

> முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக் கேள்விகள்
> 1) கிழக்கிந்திய கம்பெனி ஆட்சியின் முறை கூர்ந்தாய்க.
> 2) ஆங்கிலேயர் விட்டுச் சென்ற அரசியல் பாரம்பரியகள் பற்றி ஆராய்க
> 3) தேசீய ஒருமைப்பாட்டிற்க இந்திய தேசிய காங்கிரஸின் பங்கு

மருத்துவத்தொழிலுக்கான பட்டப்படிப்பான (L.M.P.) படிப்பில் மட்டுமே பிராமணர்களை விட பிராமணரல்லாத இந்துக்கள் அதிகமிருந்தனர்.

அ. சென்னை மாகாண ஐ.சி.எஸ்.பணியாளர்கள், பிராமணர்கள் மற்றும் அரசியல்

தென்னிந்தி''யாவோடு பிரிட்டிஷ் தொடர்பு ஏற்பட்டது முதலே பிராமணர்களின் சமய, சமூக ஆதிக்கமும், கல்வித்திறனும் கவனத்தில் இருந்து வந்தது. சமூக அமைப்பின் தலைவர்களான குருக்கள் என்ற வகையில், அவர்கள் பிரிட்டிஷாரின் கட்டுப்பாட்டில் இல்லாது சுதந்திரமாய் இயங்கி வந்தனர். கல்வியறிவு படைத்தவர்கள் என்ற வகையில் அரசுத்துறையில் பணியாற்றுவதற்கு அவர்கள் தேவைப்பட்டனர். எனினும்,

| ஆண்டு | பிராமணர்கள் | | பிராமணர் அல்லாதார் | | இந்திய கிறிஸ்தவர் | | இந்திய முஸ்லீம் | | ஐரோப்பிரும் ஐரோப்பிய ஆசியரும் | | மொத்த பட்டதாரிகள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | எண் | மூ | எண் | மூ | எண் | மூ | எண் | மூ | எண் | % | |
| 1870—1871 | 110 | 67 | 36 | 22 | 10 | 6 | | | 8 | 5 | 164 |
| 1880—1881 | 492 | 64 | 171 | 22 | 47 | 6 | 2 | 25 | 58 | 75 | 770 |
| 1890—1891 | 1467 | 67 | 445 | 20.5 | 168 | 8 | 20 | 1 | 75 | 3.5 | 2169 |
| 1901—1911 | 4074 | 71 | 1035 | 18 | 306 | 5.3 | 69 | 1 | 225 | 4 | 5709 |
| 1918++ | 10269 | 67 | 3213 | 21 | 1343 | 8.8 | 186 | 1.2 | 205 | 1 | 15216 |

பிரிட்டிஷார் அவர்களைச் சந்தேகிக்கவே செய்தனர். ஏனென்றால், பிரிட்டிஷ் நிர்வாகத்தின் பெரும் பகுதிகளில் ஊடுருவியிருந்த அவர்கள் பிரிட்டிஷ் நலன்களை விடுத்து, தம் சொந்த நலன்களைப் பேணிக்கொள்ளும் நிலையிலிருந்தனர். இவ்வாறு, 20ஆம் நூற்றாண்டில் பிராமண எதிர்ப்பு இயக்கம் தோன்றுவதற்கு முன்னரே, சென்னை மாகாண பிரிட்டிஷ் அதிகாரிகள் கல்வியறிவு பெற்றிருந்த பிராமணர்களைக் குறித்து அச்சமடைந்திருந்தனர். ஏனெனில், இந்தியாவில் பிரிட்டிஷ் ஆதிக்கத்திற்கு ஒரு போட்டிச் சக்தியாக பிராமணர்களை அவர்கள் நினைத்தனர்.

பிராமணர் எதிர்ப்பில் பிரிட்டிஷ் ஐ.சி.எஸ். அதிகாரிகள்

மட்டுமின்றி, புதிதாய்த் தோன்றியிருந்த தீண்டத்தகாதோர் குழுக்களும், பிராமணரல்லாத எழுத்தாளர் கூடினார். பல பிராமணரல்லாத சாதி

இந்துக்களும், தாழ்த்தப்பட்டவர்களும் இந்திய தேசிய காங்கிரஸ் பிராமணரல்லாத சாதியினரும், தாழ்த்தப்பட்டவர்களும் ஒரு புறமும், பிரிட்டிஷ் ஐ.சி.எஸ். அதிகாரிகள் மறுபுறமுமாக இருந்து இரண்டு மாறுபட்டவர்களிடையே பிராமணர் குறித்த அச்சம் என்ற கருத்தொருமிப்பு இருந்ததன் அரசியல் பின் விளைவுகள் 1916க்கும் இடைப்பட்ட காலத்தில் வெளிப்படலாயின.

**சென்னைப் பல்கலைக் கழகத்தின் பட்டதாரிகள் (1870—1918 ஆண்டுகளில்)**

**++1918இல் பதிவு செய்தவர்களின் எண்ணிக்கை பட்டம் வாங்கியவர்கள் அன்று**

### 10.1.4. தென்னிந்தியவின் கல்வி மையமாக சென்னை மாகாணம்

பெரும்பாலும் சென்னை மாகாண அரசியல் நடவடிக்கைகள் சென்னை நகரிலேயே மேற்கொள்ளப்பட்டன. நிர்வாகம் மற்றும் கல்வி மையமாய் சென்னை இருந்தமையால், மாகாணத்தின் எல்லா பகுதி மக்களும் தம் தொழில் திறனை வளர்த்துக் கொள்ளவும், தமது திறமைகள் மற்றும் குறிக்கோள்களை நிறைவேற்றிக் கொள்ளவும் சென்னைக்கே வரவேண்டியதாயிற்று, சென்னையோவென்றால் ஒரு தமிழ் நகரமே ஆகும். மாகாணத்தின் வட பகுதிகளில் வாழ்ந்த தெலுங்கர்களோவென்றால், தமது கல்வி மற்றும் தொழில் தேவைகளை, நிறைவேற்றக்கூடிய கிளப்கள், செய்தித்தாள்கள், நகராட்சி மற்றும் கல்வி நிறுவனங்கள் ஆகியவற்றின் பொருட்டு, பல மாவட்ட நகரங்களுக்குச் சென்றனர். கல்வி நிறுவனங்கள் ஆகியவற்றின் பொருட்டு, பல மாவட்ட நகரங்களுக்குச் சென்றனர். கல்வியறிவு பெற்றிருந்த தெலுங்கர்களைப் பொறுத்தவரை, சென்னை நகரம் தெலுங்கர் நலன்களைப் புறக்கணித்து வந்ததொரு நகரமாகும். ஆயினும் சென்னையில் தெலுங்கர் பலர் வாழவில்லை என்று சொல்ல முடியாது. மாபெரும் ஆந்திர சமூகச் சீர்திருத்த வாதியான K.வீரசலிங்கம், தமது நூல்களை நன்முறையில் வெளியிடும் பொருட்டு, சென்னை நகரில் குடியேறினார். தமிழ்ப்பகுதிகளில் காணப்பட்ட அநேக தெலுங்கர்கள் தமிழ் நகரங்களான கோயம்புத்தூர், சென்னை, வேலூர், சேலம் ஆகிய இடங்களுக்குச் சென்று வாழலாயினர். 19ம் நூற்றாண்டிற்கு முன்னரே, கோமுட்டிகள், பேரி செட்டியார்கள், போன்ற பல தெலுங்கு வியாபாரிகள் சென்னை நகரில் வாழ்ந்து கொண்டிருந்தனர். பிராமணரல்லாதார் இயக்கத்திற்கு தொடக்கத்தில் அவர்கள் பெரும் ஆதரவை அளித்தனர். சென்னை வாழ் தெலுங்கர்கள் ஆந்திர பகுதியைவிட, தமிழ் மாவட்டங்களின் அரசியல்தான் அதிக ஈடுபாடு கொண்டிருந்தனர். இருப்பினும்

சென்னையில் கல்வி வசதிக்காகவும், நிர்வாகம் மற்றும் அரசியல் வாய்ப்புகளுக்காவும் அதிகம் மக்கள் தமிழகத்திற்கு இடம் பெயர்ந்தார்கள். ஏனெனில் சென்னை பல வகைகளில் அரசியல், சமூகம், பத்திரிகைத் தொழில் ஆகிய நடவடிக்கைகளுக்கு ஒரு மையமாகத் திகழ்ந்தது. ஆந்திரப் பகுதியில் அந்நடவடிக்கைகள் பரவிக் கிடந்தன. தமிழர்கள் தஞ்சாவூரிலிருந்து மராட்டிய மொழிபேசுபவர்கள், மேற்குக் கடற்கரையின் மலபார் மாவட்டத்தைச் சேர்ந்த மலையாளம் பேசும் நாயர்கள் ஆகிய அனைவரின் கல்வித் தேவைகளையும் நிறைவேற்றக்கூடிய பல முக்கிய கல்லூரிகள் மற்றும் சென்னைப் பல்கலைக்கழகத்தின் இருப்பிடமாய் சென்னை இருந்தமையால், அது தென்னிந்தியாவின் கல்வி மையமாகக் கருதப்பட்டது. அரசாங்கத்தின் தலைமைச் செயலகமும், உயர்நீதிமன்றமும், பிற நீதிமன்றங்கள் பலவும் சென்னையிலேயே இருந்தன.

## 10.2. மாணவர்களை அரசியலில் ஈடுபடுத்தியதில் தேசிய தலைவர்களின் பங்கு

பொது வாழ்வில் சென்னைநகர் இத்துணை சிறப்புப் பெற்றிருந்தாலும்,1885—ஆம் ஆண்டு வாக்கில் தான் தேசிய காங்கிரஸ் தோற்றுவிக்கப்பட்டது. காங்கிரசைத் தோற்றுவித்தவர்களுள் ஒருவரான A.சுப்ரமண்ய ஐயர், ஒரு தமிழ் ஸ்மார்த்தா பிராமணராவார் காங்கிரஸ் தொடங்கி பதினைந்து ஆண்டுகளுக்குள்ளாக, சென்னை உட்பட இந்தியாவெங்கிலும் நன்கு பரவிவிட்டது. தமிழ், தெலுங்கு பகுதிகளில் நடத்தப்பெற்ற மாவட்ட மாநாடுகள் அரசியல் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தின. ஆயினும் சென்னை மாகாணமெங்கிலும் 1907—ஆம் ஆண்டில் பயணம் மேற்கொண்ட வங்காள அரசியல் தீரர் பெப்பின் சந்திரபாலின் முக்கிய நோக்கம் தம் பேச்சுக்களின் மூலம் நகர்ப்புறக்கல்லூரி மாணவர்களையும், படித்தவர்களையும் கவர்ந்திழுப்பதாகும். அதில் அவர் சிறப்பான வெற்றியுங்கண்டார். அவருடைய உரைகள் கல்லூரி மாணவர்களைத் தூண்டிவிட்டு, பொது அமைதியைக் குலைக்கும் வண்ணம் இருந்தாய் கல்லூரி நிர்வாகிகளும், அரசாங்கமும் குறை கூறினர்.

சென்னை மாகாணத்தில் அரசாங்கத்திற்கெதிராயப் படித்தவர்களை அணிதிரளச் செய்ததில் சுதேசி இயக்கமும், பயங்கரவாத இயக்கமும் முக்கியப்பங்கு வகித்தன. அதனால் பின்பற்றி, வ.உ.சி.சிதம்பரனார் தலைமையில் ஒருசிலர் சதேசிக் கப்பல் கம்பெனியைத் தோற்றுவித்தனர். கம்பெனியின் அலுவலகங்கள் தூத்துக்குடியில் அமைக்கப்பட்டன. இலங்கைக்கும் தென்னிந்தியாவிற்குமிடையே இருந்த கப்பல் போக்குவரத்தின் முற்றுரிமையைக் கொண்டிருந்த பிரிட்டிஷ் உடைமைக் கப்பல் கம்பெனிக்கு ஒரு போட்டியாளராய் எழுந்தது. சுதேசிக்கப்பல்

கம்பெனி, வங்காளம், பம்பாய், பஞ்சாப், ஆகிய பகுதிகளைப் பின்பற்றி சென்னை மாகாணத்திலும் பயங்கரவாத நடவடிக்கைகள் தோன்றின. அந்நடவடிக்கைகளில் ஈடுபட்டோர் குறைவென்றாலும், சுதேசி இயக்கத்தினரோடு சேர்ந்து உழைத்த அவர்களே ஒரு மாவட்ட நீதிபதியான ஆஷ் கொலைக்குக் காரணமாயிருந்தனர். ஏனெனில், பிரிட்டிஷ் கப்பல் கம்பெனிக்குப் ஆதரவாக ஆஷ், சுதேசி கப்பல் கம்பெனிக்குப் பல தொல்லைகளைக் கொடுத்து வந்தார். அரசாங்கம் வன்முறைகளில் ஈடுபட்டோரைக் கைது செய்தது. சிலர் பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்து தப்பியோடி, பாண்டிச்சேரி போன்ற பிரெஞ்சுப் பகுதிகளில் அடைக்கலம் பெற்றனர். அவர்களுள் ஒருவர் மகாகவி சுப்ரமணிய பாரதியார் ஆவார். அன்னி பெசன்ட் அம்மையாரின் தன்னாட்சி இயக்கம் மக்களின் மனதில் சுதந்திர வேட்கையைத் தூண்டியது.

## 10.2.1. பிராமணிய எதிர்ப்பின் தோற்றம் பிரகடனம் — சாதிவழி அணை

தென்னிந்திய வரலாற்றின் முற்போக்கு கருத்துக்களை கொண்ட நீதிக்கட்சி பிராமணியர்கள் ஆதிக்க எழுச்சிக்கு ஒரு முடிவுகட்ட வேண்டிய அதன் போராட்டம் வெற்றி கண்டது. நீதி கட்சியின் தோற்றமும், வளர்ச்சியும் படிப்படியாக வளர்ந்து 1920—ம் ஆண்டுத் தேர்தல்களின் முடிவில் ஆட்சிக்கு வந்தது. அது ஆட்சிக்கு வந்தவுடன், தென்னிந்தியாவில் தனது நிலையை வலுப்படுத்திக் கொள்ளும் பொருட்டு சென்னை சட்ட மன்றத்தில் பல தீர்மானங்களைக் கொண்டு வந்து, மாகாண அரசாங்கப் பணிகள் அனைத்திலும் பிராமணர் அல்லாதோர்களை அமர்த்த முயற்சி எடுத்து வந்தது. பொதுவாக நீதிக்கட்சி தனது லட்சியங்களாக நிர்வாக அதிகாரம், சமூக அந்தஸ்து, பொருளாதாரப் பாதுகாப்பு இவற்றைக் கொண்டு இருந்தது. இதை அடைவதற்கு, அதற்கு சாதனமாக அமைய எல்லா அரசு ஆணைகளை செயல்படுத்தும் அரசு அமர்த்த உறுதி கொண்டது. நீதிக்கட்சி கொண்டு வந்த தீர்மானங்கள், அதன்பின் வெளியிட்ட அரசு ஆணைகளினால் தமிழர், பிராமணர் ஆகியோருடைய கசப்பு உணர்வை தேடித்தந்தது.

அரசுடன் இணைந்து அரசு ஆணைகள் பிறப்பித்து பிராமணர் அல்லாதோரை அரசுப் பணிகளில் அதிகமாய் அமர்த்தப் செய்யலாமென அக்கட்சி நம்பியிருந்தது. இந்த முயற்சியின் முதல் வெற்றியாய் அமைந்த ஒன்று 1922ல் வெளியிட்ட இரண்டாவது அரசு ஆணை ஆகும். (second Communal Govt. order, 1992) அந்த அரச ஆணைப்படி மாவட்ட கலெக்டர்களும், அரசாங்கப் பணிகளுக்கு ஆட்களை அமர்த்தும் அதிகாரம் படைத்த பிற அதிகாரிகளும் அரசுப்

பணிகளுக்கு ஆட்சேர்க்கும் கொள்கையில் பிராமணரல்லாதார்க்கும், பிற பின் தங்கிய வகுப்பினர்க்கும் முன்னுரிமை வழங்க வேண்டுமென அறிவுறுத்தியது. அரசியலிலும், நிர்வாகத்திலும் இருந்த பிராமணர்கள் மீது அரசாங்கம கொண்டிருந்த வெறுபபுணர்வும் நீதிக்கட்சியின் கோரிக்கையை ஏற்க வேண்டியதாய் இருந்தது. அரசு பணித் தேர்வாணைக்குழு 1913—ல் சென்னை வந்தது. அது, இப்பிரச்சனை அரசியல் சம்பந்தப்பட்டது. என்றும் மேலும் குழு உறுப்பினர்களிடையே ஏற்பட்ட விவாதத்தில், சென்னை அரசாங்க தலைமைச் செயலரான அலெக்ஸாண்ட் கார்டியு என்பவரின் கருத்து சிறப்பாக இருந்தது. இவர் அரசுப் பணிகளுக்கு போட்டி, தேர்வு பொதுவாக நடத்தப்படுமேயானால் 30 ஆண்டுகாலமாக முன்னனியில் இருந்து வரும் பிராமணர்கள், தமது அறிவுத்திறணை மேன்பாட்டின்படி இனிவரும் பல்லாண்டு காலமளவும் தொடர்ந்து முன்னனியில் இருப்பார்கள். அதே நேரத்தில், மக்கள் தொகையின் பெரும்பான்மையினரும், முக்கியமானவர்களுமான பெரும்பகுதி மக்கள் ஒதுக்கப்படுவார்கள். அவர்களுடைய வாழ்வில் எந்த ஒரு அரசுப்பணியையும் சென்று அடைய முடியாது. அந்த மக்கள் வளர்ச்சி பெறாமல் போய் விடுவார்கள் என்று தெளிவாகவும், நடைமுறைக் கருத்துடனும்அவர் வாதாடினார்.இதைத் தொடர்ந்து நடந்த வாதங்களில் Dr.T.M.நாயர். P.தியாகராஜசெட்டி உட்பட பலர் தமது கருத்தையும், குழவின் முன் வைத்தனர். சட்டமன்றத்தில் சமூகச்சீர்திருத்தச் சட்டங்களைக் காட்டிலும், அரசாங்கப் பணிகளில் அதிக அளவு இடங்களை பிராமணரல்லாதாருக்கு கிடைக்கச் செய்ய வேண்டுவதற்கான முயற்சிகளிலே நீதி கேட்க அதிக அக்கறை காட்டியது. நீதிக்கட்சி ஓர் அழுத்தத் குழுவாக செயல்பட்டு வந்த போது, சிறுபான்மையானரான பிராமணர்களால் ஒன்று சேர இயலவில்லை. 1920—ல் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் தேர்தலை புறக்கணிக்க வேண்டும் என்று காங்கிரஸ் தீர்மானம் போட்டது. ஆனால், அந்தத் தீர்மானத்திற்கு எதிராக போட்டியிட்டு வெற்றி பெற்ற ஒரே காங்கிரஸ் வேட்பாளர் S.சீனிவாசஐயங்கார் அவர் பிராமணரல்லாதவர் நலனுக்கு முன்பு போல்தெளிவான உணர்வுகள் இல்லையென்று கூறியதோடு, பிராமணரல்லாதாருக்கு அவசியம் நீதி கிடைக்க வேண்டுமென்றும் கூறினார். இல்லையேல் சட்டமன்றத்திற்கு நாட்டு, வளர்ச்சி முன்னேற்றம் குறித்த அலுவல்களுக்குப் பதிலாக, சாதிப் பிரச்சனைகளிலேயே முழு நேரமும் கழிந்து விடும் என்று அவர் சுட்டிக் காட்டினார்.

1916ல் பிராமணரல்லாதார் பிரகடனம் (Non-Brahmin Manifesto) வெளியான போது, அதை எல்லோரும் ஆவலுடன் பார்த்தனர். முதலில் ஆங்கிலத்தில் வெளியான அந்தப் பிரகடனம், பிறகு தமிழ், தெலுங்கு ஆகிய மொழிகளிலும் வெளியானது. பொதுவாக, பிராமணரல்லாதார்

இயக்கத்திற்கு, குறிப்பாக நீதிக்கட்சியின் வரலாற்றிற்கும் முக்கியமானது இவ்வரசாணை என்றால் அது மிகையாகாது. நீதிக்கட்சியின் வலியுறுத்தலின் விளைவாக, சென்னை அரசாங்கம் 1921ல் செப்டம்பர் 16ல், முதலாவது வகுப்புரிமை அரசாணை (First Communal G.O.) என அழைக்கப்பட்டதோர் அரசாணையை வெளியிட்டது.

தனி ஆந்திர மாகாணத்திற்கான கோரிக்கை 1927 தொடக்கத்தில் தான் சட்டமன்றத்தில் மீண்டும் எழுப்பப்பட்டது. எனினும், ஆந்திர பல்கலைக்கழகம் தொடங்கப்பட வேண்டுமென்ற கருத்து முதலாவது நீதிக்கட்சியின் முதலாவது அமைச்சரவை பதவி எற்றவுடனேயே வலியுறுத்தப்பட்டது. அப்போது கல்வியமைச்சராயிருந்த A.P.பாத்ரோ அப் பல்கலைக்கழகத்திற்கானதொரு திட்டத்தை கொண்டு வந்தார் ஆந்திரப் பல்கலைக்கழகம் உருவாக்கப்பட்டால், பிராமனரல்லாத வகுப்பினரிடையே பிரிவினை ஏற்பட்டு விடுமென்று அவர் அஞ்சினார்.

ஆந்திரப் பல்கலைகழகம் ஏற்படின் கட்சி பிளவுற நேரிடுமென்பதற்காக முன்னர் அதனை எதிர்த்த நடேச முதலியார் இப்போது கட்சியின் ஒற்றுமைக்காக வேண்டுகோள் விடுத்தார். தெலுங்கை ஒரு போதும் தமிழர்களிடமிருந்து பிரிக்க முடியாது. திராவிடர்களாகிய நம்மைப் பிரிக்க முடியாது என்றார்கள். தமிழ் கலாச்சார நலன்களைக் காப்பதற்காக தனியொரு பல்கலைக்கழகம் தமிழ் நாட்டின் மையப் பகுதியில் ஏற்பட வேண்டும். சமஸ்கிருதம் மற்றும் பிராமணியம் தழுவிய கல்வியறிந்தமையால், தமிழ் பேசுபவர்களுக்குத் தேவையென்று தமிழ் பேசுபவர்கள் குறைபட்டனர். அவர்களுடைய கோரிக்கையை ஆதரித்து சென்னைப் பல்கலைக்கழகத்தின் செனட் சபை மாகாணத்தில் ஒவ்வொரு முக்கிய மொழிப் பகுதியிலும் ஒரு பல்கலைக்கழகம் நிறுவப்பட வேண்டுமென்ற ஓர் தீர்மானத்தை நிறைவேற்றியது. கடைசியில் கல்விக்கு அருந்தொண்டு புரிந்த ராஜா சர் அண்ணாமலை செட்டியார் வழங்கிய பெருங்கொடையின் பயனாக, தென்னாற்காடு மாவட்டம், சிதம்பரத்தில் 1929—ம் ஆண்டு நிறுவப்பட்ட அண்ணாமலை பல்கலைக்கழகம் தமிழர்களின் விருப்பத்தை நிறைவேற்றக் கூடியதாய் இருந்தது. அப்பல்கலைக்கழகம் தமிழ், மற்றும் சமஸ்கிருதம் ஆகிய இருமொழிகளையும் ஊக்குவிப்பதை நோக்கமாகக் கொண்டிருந்தது.

நீதிக்கட்சியின் முதல் இரண்டு அரசாங்கத்தின் முக்கிய தீர்மானச் சட்டங்களாக உருவானது. சென்னையின் நிர்வகத்தை நெறிப்படுத்துதலை நோக்கமாக கொண்டே 1923 ஜனவரியில் நடந்த நீதிக்கட்சி மாநாட்டில் நிறைவேற்றப்பட்டதொரு தீர்மானம், சமூக சீர்திருத்தம் பற்றிய அவர்களுடைய கருத்தை வெளிப்படுத்துவதாக அமைந்தது அத்தீர்மானத்தின்படி, பிராமணரல்லாதாரின் திருமணங்களை நடத்தி

வைக்கும் பொருட்டு சில புரோகிதர்களுக்கு போதிய பயிற்சி வேண்டும். அதே போல், பிராமணரல்லாத வகுப்பினருக்கும் மற்ற சாதியினருடைய திருமண உறவுகளை ஆதரிக்க வேண்டும் என்றும் அதில் கேட்டுக் கொள்ளப்பட்டது.

பிராமணர்கள் சிறுபான்மை வகுப்பினராக இருக்கின்றனர். பொது வாழ்வில் அவர்கள் ஆதிக்கம் இருப்பதாகச் சொல்வதை யாரும் மறுப்பதில்லை. கல்வித் துறையில் பிராமணரல்லாதார் எந்நிலையில் இருந்தாலும் பெருவாரியான நிலம் உடையவர்கள் பிராமணரல்லாதாரே.

### 10.2.2. முதலாவது வகுப்புவாரி அரசாணை:

அரசாங்க பணிகளில் பிராமணரல்லாதரின் விகிதத்தை அதிகரிக்கும் படியாக, பல்வேறு சாதிகள், வகுப்புகளிடையே பணிகளை பகிர்ந்தளிப்பது குறித்து வருவாய்த்துறை வாரியத்தின் நிரந்தர ஆணை எண். 128(2)ஐ ஒட்டி அரசாங்கத்தில் பல்வேறு துறைகளின், எல்லா நிலைப்பணிகளுக்கும் கொள்கையை விஸ்தரிக்கும்படியாக அரசாங்கம் ஆணையிட்டது.

## முதலாவது வகுப்புவாரி அரசாணை(சுருக்கம்)

அரசாங்கப் பணிகளில் பிராமணரல்லாதாரின் விகிதத்தை அதிகரிக்கும்படியாக, பல்வேறு சாதிகள், வகுப்புக்களிடையே பணிகளைப் பகிர்ந்தளிப்பது குறித்த வருவாய்த்துறை வாரியத்தின் நிரந்தர ஆணை எண்.128(2)—ஐ ஒட்டி அரசாங்கத்தின் பல்வேறு துறைகளின் எல்லா நிலைப்பணிகளுக்கும் கொள்கையை விஸ்தரிக்கும்படியாக அரசாங்கம் ஆணையிடுகின்றது. எதிர்காலத்தில் காலியிடங்களை நிரப்புகையில் இக்கொள்கையைக் கடைபிடிக்குமாறு எல்லாத்துறைத்தலைவர்களும், நியமன அதிகாரங் கொண்டுள்ள பிற அதிகாரிகளும் கேட்டுக் கொள்ளப்பட்டனர்.

1. பிராமணர்கள்
2. பிராமணரல்லாத இந்துக்கள்
3. இந்தியக் கிறிஸ்துவர்கள்
4. முகம்மதியர்
5. ஐரோப்பியரும், ஆங்கிலோ — இந்தியரும்
6. பிறர்

ஒவ்வொரு வருடமும் ஜனவரி 15, சூலை 15 ஆகிய தேதிகளுக்கு மேற்படாமல் அறிக்கைகள் சமர்ப்பிக்கப்படவேண்டும் என்றும் முதலாவது அறிக்கை 1921 ஆம் ஆண்டு டிசம்பர் 31ந்தேதி முடிவுறும்

அரையாண்டுக்காலத்திற்கானதாயிருக்க வேண்டும் என்றும் அதில் குறிப்பிடப்பட்டிருந்தது.

### 10.2.2. இரண்டாவது வகுப்புவாரி அரசாங்க ஆணை:

சட்டமன்ற கூட்டத்தில் 1921 ஆகஸ்டில் நிறைவேற்றப்பட்ட ஒரு தீர்மானத்தின்படி, பிராமணரல்லாத வகுப்புகளைச் சேர்ந்தோர், விகிதப்படி அதிக அளவில் அரசாங்க வேலைகளைப் பெறுவதற்கு உடனடியாக உத்தரவிடப்பட்டு, ஆறு மாதத்திற்கு ஒருமுறை அதிகரிக்கும் அறிக்கை சமர்ப்பிக்க வேண்டப்பட்டது.

இரண்டாவது வகுப்புவாரி அரசாங்க ஆணை(சுருக்கம்)

1. சட்டமன்றக் கூட்டத்தில் 1921 ஆகஸ்டில் நிறைவேற்றப்பட்ட ஒரு தீர்மானத்தின் படி பிராமனரல்லாத வகுப்புகளைச் சேர்ந்தோர் விகிதப்படி அதிக அளவில் அரசாங்க வேலைகளை பெறுவதற்கு உடனடியாக உத்தரவிடப்பட்டு, ஆறுமாதத்திற்கொருமுறை அதிகாரிகள் அறிக்கை சமர்ப்பிக்க வேண்டப்பட்டது.

2. 1921, செப்டம்பர் 16 ஆம் தேதியிட்ட அரசாங்க ஆணை எண்.613 இத்தீர்மானத்தை நடைமுறைப்படுத்தி, ஆறு முக்கிய பிரிவுகளில் புதிதாய் அரசாங்கப்பணிகளில் சேர்ந்தோர் விவரமாவது பிராமணர்கள் 22% பிராமணரல்லாத இந்துக்கள் 48%, இந்தியக் கிறிஸ்தவர்கள் 10% முஸ்லீம்கள் 15% ஐரோப்பியரும் ஆங்கிலோ—இந்தியரும் 2% மற்றும் பிறர் 3%.

3. இடஒதுக்கீடு புதிதாக அரசாங்கப் பணிகளில் சேருவோர்க்கு மட்டுமாகையால் கீழ்நிலைப்பதவிகளிலிருந்து பதவி உயர்வு பெறுவோருக்கும் இட ஒதுக்கீடு செய்யப்பட வேண்டுமென்று கோரிக்கை எழுந்திருப்பதையும் அரசாங்கம் அறிந்திருந்தது. அரசாங்கத்தின் கொள்கை வெற்றி பெற வேண்டுமெனில், மற்றவை சமமாயிருக்கையில், தேர்வுமுறை அல்லது மூப்பு அடிப்படையில் கொள்கையை அமலாக்குவது பற்றிய தகவல்களைப் பெறுவதிலுள்ள சிக்கல்களையும் அரசாங்கம் அறிந்திருந்ததால், வருடத்திற்கொருமுறை ஒவ்வொரு துறையிலும் ஆறு முக்கியப் பிரிவுகளும் பெற்றுள்ள இடங்களைப்பற்றிய அறிக்கையைச் சமர்ப்பிக்கச் செய்யவேண்டுமென்று அரசாங்கம் முடிவெடுத்தது. ஒரு துறையின் முந்திய ஆண்டின் அறிக்கையை நடப்பு ஆண்டின் அறிக்கையோடு ஒப்பிடுகையில், அத்துறையில் நிகழ்ந்துள்ள முன்னேற்றம் பற்றி அறிய முடியும் இவ்வறிக்கை அரசிதழ் பதிவு பெறாத அலுவலர்களுக்கே பொருந்தும்.

4. அரசிதழ் பதிவு பெற்ற அதிகாரிகளைப் பொறுத்தவரை, காலண்டுப் பட்டியலில் ஒவ்வொரு அதிகாரியும் ஆறு முக்கியப்பிரிவுகளில் எவ்வகுப்பைச் சேர்ந்தவரென்ற விவரம் குறிப்பிடப்படும்.

5. சட்டமன்றத்தில் தொடர்ந்து வலியுறுத்தப்பட்டதும், அரசாங்கத்தால் ஒப்புகொள்ளப்பட்டதுமான ஒரு குறிப்பிட்ட மொழி பேசும் பகுதிகளில் இயன்றவரை அம்மொழி பேசும் அதிகாரிகளே நியமிக்கப்பட வேண்டுமென்ற கோரிக்கை ஏற்கப்பட்டது.

6. அரசாங்கத்தின் கொள்கை தெளிவாகக் கூறப்பட்டுள்ளமையால், அரசாங்கப்பணிகளில் வகுப்புகள், சாதிகள், சாதிப்பிரிவுகள் ஆகியவற்றின் பிரதிநிதித்துவம் பற்றி மேல் விவரங்களைக் கோருவது முடிவடையும்.

10.2.4. நீதிக்கட்சியின் –தோற்றமும்—வளர்ச்சியும் மற்றும் அதன் சாதனைகள்

இருபதாம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில் தமிழகம் புதுமையமான தொரு திருப்ப நிலையில் இருந்தது. ஆங்கிலேயர் ஆட்சி புதிய நிர்வாகத்தை அளித்தது. புதிய கல்வி முறையை வழங்கியது. அரசியல் வாய்ப்பினை பெருக்கியது. அரசுப்பணி வாய்ப்புக்களை அதிகரித்தது. புதிய சமய நிலையை உருவாக்கியது. சமூக அமைப்புக்கு புது விளக்கமளிக்கச் செய்தது. இது சாமனியர்களிடையே விழிப்புணர்வை ஏற்படுத்தியது. தங்களது உரிமைகளைப் பெற பல சமூக அமைப்புக்கள் தோன்றிய வண்ணம் இருந்தன. இச்சமயத்தில் மேல்நாட்டுக்கல்வி பயின்று பொது வாழ்விலும், சமூகப் பணியிலும் ஈடுபட்டிருந்த டாக்டர். டி.எம். நாயர் தியாகராசச் செட்டியார், கேசவபிள்ளை, நடேசமுதலியார், போன்றோர் சாமனியர்களின் உரிமைகளுக்காகவும், சிறுபான்மையினரின் ஆதிக்கத்திற்கு எதிராகவும் இயக்கங்களில் ஈடுபட்டனர். 1912ல் சென்னையில் ஒரு திராவிடர் அமைப்பு தோன்றியது அமைப்புகள் பல வடிவங்கள் பெற்றன.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனை கேள்விகள்

1.இருபதாம் நூற்றாண்டில் தமிழகத்தில் நிலவிய சமூக நிலையை விவரி.
2. பிராமணரல்லா இயக்கத்தின் நோக்கங்களை விளக்குக.
3. இரண்டாவது வகுப்புவாரி அரசாங்க ஆணை பற்றி ஒரு சிறுகுறிப்ப வரைக.

**நீதிக்கட்சி:**

தென்னிந்திய நலஉரிமைச்சங்கம் என்ற பெயரில் தொடங்கப்பட்டது. தாழ்த்தப்பட்ட தமிழர்களின் வாழ்வில் ஏற்றமும், எழுச்சியும் ஏற்பட இச்சங்கம் உறுதியெடுத்தது. தமிழகத்தில் காங்கிரசுக்கு எதிராக அமைந்தது. இவ்வியக்கம் தமிழகத்தில் பிற்காலத்தில் தோன்றிய திராவிடர் கழகத்தின் தாய் கட்சியாகும். 1916—ம் ஆண்டு டிசம்பர் திங்களில் நீதிக்கட்சி அடியெடுத்து வைத்தது. இக்கட்சி தோன்றுவதற்கான காரணங்கள் பின்வருமாறு:

பார்ப்பணர்களின் போக்கு நீதிக்கட்சி தோன்றுவதற்குரிய காரணங்களில் முதலாவதும், முக்கியமானதுமாகும்.

ஆங்கிலேயரின் ஆங்கிலக் கல்வியும், அவர்களது பிரித்தாளும் கொள்கையும் ஒரு முக்கியமான காரணமாகும். எங்கும் எதிலும் பார்ப்பணர் மயமாக இருப்பதை பார்த்த பிரமாணர் அல்லாத அறிஞர்களும், மேதைகளும், தங்கள் சமுதாய மக்களுக்கு சமுதாய சுதந்திரத்தையும், சமத்துவத்தையும், ஆங்கிலேயர் ஆட்சிலேயே பெற்றுவிட எண்ணம் கொண்டு துவக்கியதுதான் நீதிக்கட்சி. சாதிக் கொடுமைகளை எதிர்க்கவும் சாமனியர்களின் சமுக அரசியல் உரிமைகளைக் காக்கவும், இந்திய தேசிய இயக்கத்திலும், வெளியிலும் தொண்டர்கள் அணி திரண்டனர். பொது வாழ்விலும், ஆலயங்களிலும், குருகுலக்கல்வி நிலையங்களிலும் நாட்டு மக்கள் சமூகக் கொடுமைகளுக்கு உள்ளாக்கப்பட்டிருந்தனர். எனவே அவற்றை எடுத்தெறியும் உணர்ச்சி எழுந்தது.

சேரன்மாதேவியில் தேச பக்தர் வ.வே.சி.ஐயர் நடத்திய குருகுலத்தில் சாமனியர்கள் இழிவாக நடத்தப்பட்டதையும் திருவிதாங்கூர் சிற்றரசில் வைக்கம் நகரில் அரிசனங்கள் பொது வீதிகளில் நடனமாடுவதிலும் ஆலயங்களில் புகுவதிலுமிருந்த தடைக்கு எதிரான போராட்டங்கள் நடைபெற்றன. டாக்டர் வரதராயலு நாயுடு, பெரியார் ஈ.வே.ரா. நாயக்கர் போராட்டம் நடத்தினர். வைக்கம் போராட்டத்தில் தீவிரப் பாங்குகொண்டு வெற்றி கண்டதன் விளைவாக பெரியார் ஈ.வே.ரா.அவர்கள் “வைக்கம் வீரர்” என்று அழைக்கப்பட்டார்.

சாதிய அமைப்பு முறையைக் கண்டித்து மனுநீதிச்சரித்திரம் கொளுத்தும் இயக்கமும் துவங்கியது. தன்னாட்சி இயக்கத்தைச் சார்ந்தவர்களும், தேசிய இயக்கத் தொண்டர்களும், வேதியர் எதிர்ப்பு இயக்கத்தாரும் தமிழ் மொழியை துணைக்கு இழுத்தனர். வைதீகர்களின் ஆதிக்கத்தாலும் சாதியக் கொடுமையாலும் புண்பட்டிருந்த மக்களிடத்தில் தமிழ் ஆர்வமும், தமிழர் என்ற உணர்வும், தமிழ் பற்றும் ஏற்பட்டது. ஆகஸ்ட் 20, 1919ல் மாண்டேகுவின் அறிக்கை தன்னாட்சி இயக்கத்தின் வெற்றிக்கு பச்சைக்கொடி காட்டியது. நீதிக்கட்சியை சார்ந்தவர்கள் தமிழகத்தின் நிலையை மனதில் கொண்டு இனவாரி சார்பாளர் முறையை வழியுறுத்தினர். சாமனியர் தொண்டில் ஈடுபட்டிருந்த டாக்டர்.டி.எம்.நாயர், பேராசிரியர்.கந்தசாமி செட்டியார் ஆகியோர் இனவாரி சார்பாளர் முறைக்காக தம்மால் இயன்றளவு முயற்சித்தனர். நீதிக்கட்சியின் கொள்கையை பரப்ப தமிழில் ‘திராவிடர்’ என்ற இதழையும் தெலுங்கில் ‘ஆந்திர பிரகாசிகா’ என்ற இதழையும் ஆங்கிலத்தில் ‘Justice’ (நீதி) என்ற இதழையும் தொடங்கினர்.

தமிழகத்து அரசியல் குழப்பத்தில் சமரசம்காண மாண்டே பிரபு தமிழகம் வந்தார். அவரது சமரச முயற்சியின் விளைவாக தன்னாட்சி

என்ற நிலை மாறி இரட்டை ஆட்சி தோன்றியது. இதனை நீதிக்கட்சியும் வரவேற்றது. அரசியல் அமைப்பு சார்ந்த மக்களாட்சி அமைத்தல், அரசியல் விடுதலை பெறப் பயிற்சி அளித்தல், சிலரின் கொடும் ஆட்சியை ஒழித்தல், மேல் மட்ட கல்வி முறையையும், அதனால் ஏற்படுகின்ற ஊழலை அகற்றுதல் கிராமம் தழுவிய அடிப்படை பொதுக்கல்வியை வழங்குதல், கிராமங்களின் மறுமலர்ச்சி, தொழில் சுதேசி மயமாக்குதல், போன்ற அடிப்படையில் நீதிக்கட்சி செயலாற்றி வந்தது. பனகல் அரசரின் தலைமையில் நீதிக்கட்சி அகில இந்திய கட்சியாக மாறியது. காந்தியடிகளின் இயக்கத்தை அவர்கள் வரவேற்கவில்லை என்றாலும், அவருடைய சிறந்த குணங்களை பாராட்ட தவறவில்லை. டாக்டர்.டி.எம். நாயர் அவர்கள் 1919ஆம் ஆண்டு காலமடைந்தார். அவருடைய மறைவு நீதிக்கட்சியின் முதுகெலும்பை இழக்கச்செய்தது.

நீதிக்கட்சியின் ஆட்சி: மாண்டேகு செம்ஸ்போர்டு சீர்திருத்தம் வழங்கிய இரட்டையாட்சி, 1919 ஆம் ஆண்டின் ரௌலட் சட்டத்தின் கொடுமைகள், அமிர்தசரஸ் படுகொலை மற்றும் காந்தியடிகளின் அரசியல் செல்வாக்கு ஆகிய காரணங்களினால் தேசிய இயக்கம், மக்கள் இயக்கமாக மாறியது. இத்தகைய மாறுபட்ட ஒரு சூழ்நிலையில், இரட்டையாட்சி வகுத்தளித்த பொறுப்பாட்சியை நீதிக்கட்சி ஏற்றது.

1919ஆம் ஆண்டைய இந்திய சட்டப்படி, 1920ல் நடைபெற்ற தேர்தலில் நீதிக்கட்சி பெரும் வெற்றி பெற்றது. பிரிட்டிஷ் வழக்காறுகளின்படி, கடலூரைச் சார்ந்த ஏ.சுப்பாராயலு ரெட்டியாரை முதலமைச்சராகக் கொண்டு, தன்னுடைய முதல் அமைச்சரவையை அமைத்து, சென்னை மாநிலத்தின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றது. கல்வி அமைச்சர், தல சுயாட்சி அமைச்சர், வளர்ச்சி திட்ட அமைச்சர் என மூவரைக்கொண்டு அமைச்சரவை உருவாக்கப்பட்டது. 1923ல் நடைபெற்ற தேர்தலில் மீண்டும் இக்கட்சி வெற்றி பெற்றது. ஆனால் யாரும் ஆட்சி அமைக்கும் அளவிற்குப் பெரும்பான்மை பெறவில்லை. எனவே டாக்டர். பி.சுப்பராயன் அவர்கள் சுயராஜ்ய கட்சியின் ஆதரவுடன் அமைச்சரவை அமைத்தார். சுயராஜ்ய கட்சி தன்னுடைய ஆதரவை விலக்கிக் கொண்டவுடன், நீதிக் கட்சியின் ஆதரவைப் பெற்று 1929 ஆம் ஆண்டு வரையிலும் அந்த கட்சியின் ஆட்சி நடைபெற்றது. 1927 ஆம் ஆண்டு முதல் நீதிக்கட்சி மாநில சுயாட்சி கோரியது. 1930 தேர்தலில் காங்கிரசும், சுயராஜ்ய கட்சியும் தேர்தலில் இருந்து விலகிக் கொண்டு, நீதிக்கட்சி வெற்றி பெற்று பி.முனுசாமிநாயுடு தலைமையில் அமைச்சரவை பதவி ஏற்றது. 1932 தேர்தலில் பொப்பிலி ராஜா தலைமையில் அமைச்சரவை அமைந்தது. 1934 தேர்தலில் தோல்வி கண்டது. நீதிக்கட்சி சாதாரண மக்களைக் கவரவில்லை. எனவே வெகுவிரைவில் நீதிக்கட்சி தன்

செல்வாக்கினை இழந்தது. முடிவில் 1937 தேர்தலில் நீதிக்கட்சி முழுமையாக முறியடிக்கப்பட்டது.

சாதனைகள்:

நீதிக்கட்சியின் அமைச்சரவைகள் பல ஆக்கப்பணிகளைச் செய்தன அவைகள் பின்வருமாறு:

மெஸ்டன் அறிக்கைப்படி மத்திய வரவு செலவுத் திட்டத்தில் சென்னை மாநிலம் மத்திய அரசுக்கு அளிக்க வேண்டிய பங்கு 35% எனக் காட்டியது. நீதிக்கட்சி அமைச்சரவை இதனை முழு மூச்சுடன் எதிர்த்தது, நீதிக்கட்சி இயற்றிய இனவாரி பதவி ஒதுக்கீட்டுச் சட்டம் நாட்டு மக்களுக்கு நலனை அளித்தது.

நிலமற்ற தாழ்த்தப்பட்டவர்களுக்கு நிலப்பட்டாக்கள் முதலில் வழங்கிய பெருமை நீதிக்கட்சியையே சாரும்.

புறம்போக்கு நிலங்களில் ஏழைமக்களுக்கு நிலப்பட்டா வழங்கியது.

கூட்டுறவுச் சங்கங்கள் அமைத்து விவசாயிகளுக்கு கடன்கள் வழங்கியது.

பயிர்செய்ய நிலங்கள் இலவசமாக அளித்ததோடு மட்டுமின்றி கிராமங்களில் கிணறுகள் தோண்டப்பட்டன. சாலைகள் அமைக்கப்பட்டன.

வகுப்புவாரி பிரதிநித்துவம் கொண்டு வந்து பிற்படுத்தப்பட்டோர் முன்னேற்றம் காண வகை செய்தது.

வகுப்புவாரி பிரதிநித்துவம் கொண்டுவந்து பிற்படுத்தப்பட்டோர் முன்னேற்றம் காண வகை செய்தது.

1921ல் பெண்களுக்கு வாக்குரிமை அளிக்கப்பட்டது. தேவதாசி முறை ஒழிப்புச் சட்டம் கொண்டு வரப்பட்டது.

மத்திய உணவுத் திட்டத்துடன், தாழ்த்தப்பட்ட மாணவர்களுக்கு உதவித்தொகை, தேர்வுத் தொகை, மற்றும் பள்ளிக்கட்டணம் ஆகியவைகளையும் வழங்கியது. ஆசிரியர்களுக்கு பயிற்சிக் கட்டணமும் அளித்தது.

சென்னைப் பல்கலைக் கழகச் சட்டமும் குறிப்பிடத்தக்கது. (1925ல் ஆந்திரா பல்கலைக்கழகம் உருவாகியது) தமிழகத்தை சேர்ந்தவர்கள் ஒரு தமிழ் பல்கலைக் கழகத்தை விரும்பினர். எனவே 1929ல் அண்ணாமலை பல்கலைக் கழகம் தோன்றியது.

நீதிக்கட்சி இவ்வளவு சாதனைகளைச் செய்திருப்பினும் எதிர்பார்த்த அளவிற்கு சமூக முன்னேற்றப் பணிகளைச் செய்ய தவறிவிட்டது, அதன் விளைவாக பாமர மக்களிடையே தன்னுடைய செல்வாக்கினை இழந்தது இதன் விளைவாக 1937ல் நடைபெற்ற தேர்தலில் நீதிக்கட்சி முழுமையாக முறியடிக்கப்பட்டது.

நீதிக்கட்சி, வீழ்ச்சி அடையத் தொடங்கியது இருப்பினும் இதனை மக்கள் இயக்கமாக மாற்றிட கட்சியின் தலைமை பொறுப்பு பெரியார்

ஈ.வே.ரா விடம் ஒப்படைக்கப்பட்டது. பெரியாருடைய சுயமரியாதை கருத்துக்கள், கடவுள் மறுப்பு போன்றவை இயக்கம் 1944ல் பிளவுபட காரணமாக அமைந்தது. நீதிக்கட்சி 1944—ம் ஆண்டு திராவிடர் கழகம் என பெயர் மாற்றம் செய்யப்பட்டது. இந்த மாற்றத்தை விரும்பாதவர்கள் திரு.பி.டி.இராசன் தலைமையில், தென்னிந்திய நல உரிமைச் சங்கம் என்ற பெயரில் நீதிக் கட்சியைத் துவக்கினர். இது தன்னுடைய இரண்டாவது வகுப்புவாரி அறிக்கையினையும் வெளியிட்டது. இருப்பினும், காங்கிரஸ், திராவிடர் கழகம் ஆகியவற்றின் வேகத்திற்கு பி.டி.இராசனின் நீதிக் கட்சியினால் ஈடு கொடுக்க முடியவில்லை. 1952ம் ஆண்டு நடைபெற்ற தேர்தலில், திரு.பி.டி.இராசன் அவர்கள் தம்முடைய சொந்த ஊரான உத்தமபாளையம் தொகுதியில் போட்டியிட்டு வெற்றி பெற்றார். மற்ற அனைத்து நீதிக்கட்சி வேட்பாளர்களும் தோல்வி அடைந்தனர்.

நீதிக்கட்சி தோல்வியுற்றாலும் அதனுடைய நோக்கம் நன்கு பரவியது. பார்ப்பணர் அல்லாத வரை விழிப்புணர்ச்சி அடையச் செய்தது. தமிழகத்தில் பிற்காலத்தில் தோன்றிய திராவிட கழகம், அதனின்று திராவிட முன்னேற்ற கழகம் ஆகிய திராவிட இயக்கங்களுக்கு இக்கட்சியே தாய் கட்சியாக அமைந்தது.

## 10.3. மாண்டேகு செம்ஸ்போர்டு சீர்திருத்தம்.

பிரிட்டிஷ் ஆட்சியில், அதிகாரத்தை இந்தியர்களுக்கு மாற்றி அமைத்துத்தரும் ஒரு முதல் வாய்ப்பு அமைய மாண்டேகுவின் அறிக்கை ஒரு காரணமாக அமைந்தது. 1917ஆம் ஆண்டு ஆகஸ்டு 20ஆம் நாள் பிரிட்டிஸ் அமைச்சரவையில் இந்தியப் பிரதிநிதி அமைச்சராக இருந்த மாண்டேகு, இந்தியா பற்றிய அரசுக்கொள்கை குறித்து பாராளுமன்றத்தில் ஒரு முக்கிய அறிவிப்பு செய்தார். அதன்படி நிர்வாகத்தில் ஒவ்வொரு பிரிவிலும், இந்தியர்களை அதிகமாக சேர்த்துக் கொள்வதாகும்.

1917 டிசம்பர் மாதத்தில் மாண்டேகு சென்னை வந்த பொழுது நீதிக்கட்சி அவரிடம் அளித்த மனுவில் பிராமணரல்லாதவர்க்கு சட்ட மன்றங்களிலும், நிர்வாகத்தின் எல்லா பிரிவுகளிலும் போதிய அளவு பிரதிநிதித்துவம் வழங்கும் பொருட்டு விதிகள் உருவாக்கப்படவேண்டுமெனக் கோரிக்கை விடுவிக்கப்பட்டது. நீதிக்கட்சியளித்த ஒரு திட்டத்தின்படி, ஒவ்வொரு பிராமணரல்லாத சாதிப்பிரிவிற்கும், தனித் தனியே பிரதிநிதித்துவம் அளிக்கப்படவேண்டும்.

மாண்டேகு—செம்ஸ்போர்டு திட்டம் இங்கிலாந்தில் மிகவும் பரவலாக விமர்சிக்கப்பட்டது. இங்கிலாந்தின் அரசியல் கூட்டங்கள் செயதித் தாளில் விவாதிக்கப்பட்டன. அதே போல் இந்தியாவிலும் அதன்

திறனாய்வு ஏற்றுக்கொள்ளக்கூடியதாக அமைந்தது. இது டாக்டர் நாயர் தனது கருத்தை எடுத்துச் சொல்ல இத ஏதுவாக அமைந்தது. அவர் மாண்டேகு செமஸ்போர்டு அறிக்கையை விமர்சிக்கும் போது, சட்டமன்றத்திற்கு தனி நபர் வாக்குரிமை செயல் படுத்தப்பட்டால், பிராமணர்கள் அதிக இடங்கள் பெற்று விடுவார்கள் என்றார். அதற்கு மாறாக, சென்னை மாகாணத்தில் பிராமணரல்லாதவர்களுக்கு வகுப்பு வாரிய பிரதிநிதித்துவம் வழங்கப்படவேண்டும் என்று மீண்டும் வலியுறுத்தினார். மாண்டேகு செம்ஸ்போர்டு அறிக்கை இதற்கு மாறாக வகுப்புவாரி பிரதிநித்துவம் ஒரு மோசமான கொள்கை என்றும், சாதி பிரிவுகளிடையே தற்போது நிலவும் உறவுகளை அது நிலை நிறுத்தி விடும் என்றும் இந்தியர்கள் தம்மையே ஆண்டு கொண்டு நிலை நிறுத்திக்கொள்ள வகை செய்யும் சூழ்நிலையில், அந்த வகுப்புவாரி பிரதிநிதித்துவம் அவர்களை வகுப்பின் அடிப்படையில் பிரித்துவிட வழிவகுக்கும் என்றும் இவ்வாறு இந்தியாவை பொறுப்பான அரசாங்க முறைக்கு இட்டுச் செல்லும் வழிகளுக்கு வகுப்புவாரிப் பிரதிநித்துவம் ஒவ்வாததாகும் என்றும் கூறினார்.

மாண்டேகு செம்ஸ்போர்டு சீர்திருத்த திட்டத்திற்குச் செயல் வடிவம் கொடுப்பதாயிருந்த இந்திய அரசாங்க மசோதா 1919ல் ஜீன் மாதத்தில் இரண்டாவது வாசிப்புக்கு உட்படுத்தப்பட்டு, பாராளுமன்றக் குழுவிற்கு அனுப்பப்பட்டது. மசோதாவின் இறுதி வடிவம் பொறுப்புக்குழுவால் நிச்சயிக்கப் படுமேயானால், அது ஒரு முக்கியமான கட்டமென்பதைச் சில இந்தியர்கள் அறிந்திருந்தனர்.

### 10.3.1. தந்தை பெரியாரின் சுயமரியாதை இயக்கம்

திராவிடப் பாரம்பரியத்தில் பெரிதும் கவரப்பட்ட, காங்கிரசிலிருந்து விலகிய தலைவர்களுள் ஒருவர் ஈ.வே.ராமசாமி நாயக்கர். இவர் 1879 ஆம் ஆண்டு கன்டம் பேசும் பலிகா நாயுடு வகுப்பின் நடுத்தரக் குடும்பத்தில் பிறந்தார்.

இவரது பெற்றோர் தெய்வ பக்தி மிக்க ஆசார இந்துக்களாவர். மேலும், பிராமண குருக்களின் ஆதரவாளர்கள். இவர் தம்முடைய 10 வயதில் பள்ளிப்படிப்பை விட்டு விட்டு, தமது தந்தையின் மளிகைக் கடையில் அவருக்கு உதவியாக இருந்தார். இவருக்கு 19—வயதில் திருமணம் நடை பெற்றது. தம்முடைய 25—வது வயதில் இல்லற வாழ்வைத் துறந்து ஒரு துறவியாக வட இந்தியாவில் சுற்றுப்பயணம் செய்தார். தம்முடைய சுற்றுப் பயணத்தின் போது, இந்து மதத்தில், அதிலும் குறிப்பாக காசி போன்ற புனித தலங்களில் நடைபெற்ற

குறைகளை அவரால் நேரடியாகவே கண்டறிய முடிந்தது. பிராமணக் குருக்களின் செயல் முறைகளே இதற்குக் காரணம் எனக் கூறிய அவர், ஈரோடு திரும்பியதும் மதத்தின் பால் தாம் கொண்டிருந்த நம்பிக்கையைப் படிப் படியாக கைவிட்டார்.

இருபதாம் நூற்றாண்டில் தமிழகத்தில் தோன்றிய சமூக சீர்திருத்த வாதிகளில் குறிப்பிடத்தக்கவர் பெரியார் ஈ.வே.ரா. அவர்கள் மற்ற சமுதாயச் சீர்திருத்தவாதிகளுக்கும் இவருக்குமிடையே வேறுபாடு உண்டு. மற்றவர்களுக்கு கடவுள் நம்பிக்கையும், சமய நம்பிக்கையும் உண்டு. மேலும், அவர்கள் கடவுள் ஒருவர் உண்டு என்று நம்பியவர்கள். சமுதாயத்தில் நிலவி வந்த சாதி வேற்றுமைக்கு காரணம் பார்ப்பனர்கள், என்றும் புராணம், மனுஸ் போன்றவைகளின் அடிப்படையில் தான் இவ்வேற்றுமை உருவாகிறது என்றும், அவை இறைவன் அருளால் பெறப்பட்டவை என்றும் கூறப்பட்டது. சாதி வேற்றுமையை சமுதாயத்தில் உருவாக்கக்கூடிய படைப்புக்களையும், அவற்றை அளித்த இறைவனையும் தேவையில்லை என்று இதனை ஒழிக்க ஈ.வெ.ரா. புறப்படடார். அவருக்கு கடவுள் மீது எள்ளளவும் நம்பிக்கையில்லை. மேலும் கடவுள் இல்லை என்று இந்தியாவில் கூறிய முதல் சமுதாயச் சீர்திருத்தவாதி பெரியார் ஈ.வே.ராமசாமியாவார்.

1919ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் நடைபெற்ற ஜாலியன் வாலாபாக் படுகொலையைக் கண்டித்து, தம்முடைய நகரசபைத் தலைவர் பதவியை ஈ.வெ.ரா. ராஜினாமா செய்தார் (ஈரோடு நகரசபை) 1920ல் காந்தியடிகள் ஆரம்பித்த ஒத்துழையாமை இயக்கத்தில் தீவிரமாக இறங்கினார். 1922ல் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். மது விலக்கு, தீண்டாமை ஒழிப்பு மற்றும் கதர் ஆடைகளைப் பயன்படுத்துதல் போன்ற காந்தியடிகளின் கொள்கைகளைத் தீவிரமாகப் பிரச்சாரம் செய்தார்.

அ. காங்கிரசிலிருந்து விலகுதல்

1925 நவம்பரில் காஞ்சிபுரத்தில் நடந்த மாநாட்டில் குறிப்பாக காங்கிரஸ் கட்சியிலிருந்து பிராமணரல்லாதவருக்கு இழைக்கப்படும் அநீதி குறித்து இரு தீர்மானங்கள் கொண்டு வருவதற்கு ஈ.வே.ரா விரும்பினார். ஆனால் மாநாட்டின் தலைவராக இருந்த வி.கல்யாண சுந்தரமுதலியார் அவற்றை அனுமதிக்க மறுத்துவிட்டார். ஈ.வே.ரா.அவர்கள் இதற்கு எதிர்ப்பு தெரிவிக்கும் வகையில், அம்மாநாட்டை விட்டு வெளியேறினார். இது அவருடைய அரசியல் வரலாற்றில் ஒரு திருப்பு முனையாக அமைந்தது. 1925—26 ஆண்டிற்குள் அவரது நடவடிக்கையின் பேரில் காங்கிரசுக்கு சந்தேகம் எழலாயிற்று. அவரது நடவடிக்கைகளை விசாரிக்க ஒரு குழு நியமிக்கப்பட்டது. முதலாவதாக, நீதிக்கட்சியுடன்

அவர் கொண்டிருந்த தொடர்பு, இரண்டாவதாக, காங்கிரஸ் வேட்பாளர்களை எதிர்த்து சட்டமன்றத் தேர்தல்களில் பிரச்சாரம் செய்தது, மூன்றாவதாக கான்பூர் காங்கிரஸ் தீர்மானத்திற்கு எதிரான அவருடைய பிரச்சாரம், நான்காவது அ.இ.கா.க.தீர்மானங்களுக்கு எதிர்ப்பு போன்ற அவருடைய நடவடிக்கைகளை விசாரணைக்குழு ஆராய்ந்து. ஈ.வே.ரா. அவர்கள் த.நா.கா. கமிட்டியின் செயற்குழு உறுப்பினராகத் தொடர்ந்து இருக்க முடியாது என சிபாரிசு செய்தது. அக்குழுவின் அறிக்கையும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இதற்குப் பின்னால் வகுப்புவாரி பிரதிநிதித்துவம் "சேரன்மாதேவி குருகுலசம்பவம்" "வைக்கம் அறப்போர்", "காஞ்சிபுரம் மாநாட்டு நிகழ்ச்சிகள்", ஆகியவற்றின் பயனாகப் ஈ.வெ.ரா. படிப்படியாக பார்ப்பணரின் எதிர்ப்பாளராக மாறினார்.

தன்மான அல்லது சுயமரியாதை இயக்கத்தின் துவக்கம் பார்ப்பணர் எதிர்ப்பு:

சேரன்மாதேவியில் உள்ள குருகுலத்தில் ஏற்பட்ட ஒரு நிகழ்ச்சி இங்கே குறிப்பிடத்தக்கதாகும். தேசிய உணர்வினை வளர்க்க வேண்டும் என்ற அடிப்படையில் வ.வே.சு.அவர்கள் குருகுலம் ஒன்றினைத் தொடங்கி, அதற்க காங்கிரஸ் நிதியிலிருந்து ரூபாய் 5,000 வழங்கப்பட்டது. குருகுலத்தில் வேற்றுமை பாராட்டுவதாகப் புகார் வந்தது. உணவு வழங்குவதற்காகவும், தண்ணீர்க்குத் தனியாகத் தண்ணீர் பானை வைத்திருப்பதாகவும் பெரியாருக்குச் செய்தி எட்டியது. தேசிய இயக்க நிதி பெற்ற அமைப்பு ஒன்றான குருகுலம் வேற்றுமை காட்டுவதை எதிர்த்து, குருகுலத்திற்கு கொடுப்பதாக இருந்த ரூபாயை கொடுக்க பெரியார் மறுத்தார், ஆனால், வ.வே.சு அவர்கள் பெரியாருக்குத் தெரியாமல், செயலாளர் சந்தானத்திடமிருந்து அந்த ரூபாயைப் பெற்றுச் சென்று விட்டார்: இவ்வாறு பெரியார் பார்ப்பணரிடத்தில் காட்டிய வெறுப்பு அவர் காங்கிரசிலிருந்து விலக காரணமாக அமைந்தது.

ஆ. வைக்கம் அறப்போர்

கேரள மாநிலத்தில் வைக்கம் எனும் ஊரில் இருந்த ஆலயத்தில் ஈழ சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் செல்வதற்கு தடை விதிக்கப்பட்டிருந்தது. அவ்வாலயத்திற்குச் செல்லுகின்ற வழியில் தான் நீதிமன்றத்திற்குச் செல்ல வேண்டும். மாதவன் என்ற ஈழச் சமூகத்தைச் சேர்ந்த வழக்கறிஞர் அவ்வழியாகச் செல்ல அனுமதிக்கப்படவில்லை. இதனை எதிர்த்து ஜார்ஜ் ஜோசப் போன்ற தலைவர்கள் போராட்டம் நடத்தி, சிறை சென்றார்கள். இத்தகவல் பெரியாருக்குத் தெரிவிக்கப்பட்டது. ஈ.வே.ரா. அவர்கள் உடனடியாக அங்கு சென்று போராட்டம் நடத்தி கைது ஆனார். இப்போராட்டத்தில் பெரியாரின் துணைவியார் நாகம்மை, சகோதரி கண்ணம்மாள், எஸ்.இராமனாதன், நீலகண்ட நம்பூதிரி

ஆகியோரும் கலந்து கொண்டனர். முடிவில் காந்திஜியின் தலையீட்டின் பேரில் ஒரு உடன்பாடு ஏற்பட்டது. வைக்கத்தில் மனித உரிமைக்கு குரல் கொடுத்தமைக்காக ஈ.வே.ரா.அவர்கள் "வைக்கம் வீரர்" என்று அழைக்கப்பட்டார்.

காங்கிரஸிலிருந்து விலகி தமிழகத்தில் சமுதாய சீர்திருத்தத்திற்கென ஒரு புதிய இயக்கத்தை தொடங்கினார். அதுவே சுயமரியாதை இயக்கம் என்றும் தன்மான இயக்கம் என்றும் அழைக்கப்பட்டது. இவ்வியக்கம், பிரமாண எதிர்ப்போடு, மதஎதிர்ப்பு, கடவுள் எதிர்ப்பு ஆகியவற்றையும் தன்னுடைய கொள்கைகளாகக் கொண்டிருந்தது. 1924—மே மாதத்தில் பெரியார் "குடியரசு" என்ற தமிழ் வார இதழைத் தொடங்கினார். இவ்விதழில் சமூக அமைப்பை ஆதரிக்கும் மதக்கோட்பாடுகளையும் பிராமணர்களை ஆதரிக்கும் மதக் கோட்பாடுகளையும், பிராமணர்கள் வேதங்கள், புராணங்கள், இராமாயணம், மகாபாரதம் போன்ற காவியங்கள் யாவும் போன்ற பெரியாருடைய விமரிசனத்திற்கு உள்ளாகின.

## 10.3.2. சுயமரியாதை அல்லது தன்மான இயக்கம்

மனுநீதி வகுத்த வருணாசிரமக் கொள்கையின் உளஆற்றல் மாயையினால் ,சமூகத்தில் சாமனிய மக்கள் தாழ்வடைந்திருந்ததைக் கண்டு மனம் கலங்கினார். புராணக் கதைகளையும், இதிகாசங்களையும் [illegible]ட்டு நம்பி மூடப்பழக்கங்களினால் துன்பங்களுக்கு விதியைக் காரணம் காட்டி இருளில் மூழ்கிக்கிடந்த மக்களைக் கண்டு வேதனை அடைந்தார். அம்மக்கள், சமூக, அரசியல், பொருளாதார மீட்புக்காகச் செயலாற்றிய நீதிக்கட்சி சமூகச் சீர்திருத்தங்களில் வேகம் காட்டவில்லை என்பதனை பெரியார் அவர்கள் உணர்ந்தார். எனவே சாமனியர்களை அம்மாயையினின்று மீட்கவும், விழிப்படையச் செய்யவும் "குடியரசு" பத்திரிக்கையைத் துவக்கினார். 20—ம் நூற்றாண்டில் ஏப்ரல் 1921, மார்ச் 1925, அக்டோபர் 1927—களில் தமிழகம் வந்த காந்தியடிகள் வேதியர்களின் உயர் நிலையையும், வர்ணா சிரமத்தின் தேவையையும் ஆதரித்துப் பேசினார்கள். எனவே, காங்கிரசில் தாம் கொண்டிருந்த நம்பிக்கையை இழந்த பெரியார் 1925—ல் காங்கிரசை விட்டு விலகினார். நீதிக்கட்சியுடன் தம்முடைய தொடர்பை நெருக்கப்படுத்தினார் அங்கேயும் சமூக சீர்திருத்தத்தில் கண்ட தயக்கத்தால் தனித்துச் சென்றார். இந்து புராணங்கள், வர்ணாசிரமதர்மம் ஆகியவற்றிற்கு எதிராகத் தம்முடைய ஏவுகனைகளைத் தொடுத்தார். பகுத்தறிவைப் பயன்படுத்தி மூடநம்பிக்கைகளை உடைத்தெறிந்து சாதி வேற்றுமையற்றதும், தன்மான உணர்வுடையதும், மனிதத் தன்மையை மதிப்பதுமான இலட்சிய சமூகத்தை அடைய தனது இயக்கத்தை திருப்பினார். அவருடைய சமூக

சீர்திருத்தங்களுடன் விதவை மறுமணமும் சேர்க்கப்பட்டிருந்தது. 1926—ல் தேர்தலிலிருந்து விலகியிருந்த பெரியார், தேர்தலின் முடிவு நீதிக்கட்சியினரை மனம் தளரச் செய்ததையும், அதனால் சாமனியர்களின் நலன் பேண எவருமில்லை என்பதனையும் உணர்ந்து, அக்குறையைப் போக்க தன்மான அல்லது சுயமரியாதை இயக்கத்தின் மாநாடுகளைக் கூட்டி, நாட்டுத் தலைவர்களின் ஆற்றல்களை ஒருமுகப்படுத்த முனைந்தார்.

“நாம் சுயமரியாதை அடைந்தால்தான் அரசியல் உரிமை பெற தகுதியுடையவராவோம், முதலில் நாம் சுயமரியாதை பெற முயற்சிக்க வேண்டும்” என்று ஈ.வெ.ரா.பெரியார் கூறினார்.

சுயமரியாதை இயக்கத்தின் சார்பில் 1929—ம் ஆண்டு செங்கல்பட்டில் டபிள்யு.பி.ஏ.சவுந்திரபாண்டியன் அவர்களின் தலைமையிலும், 1931—ம் ஆண்டு விருதுநகரில் சர்.ஆர்.சண்முகம் அவர்கள் தலைமையிலும் மூன்று மாநாடுகள் நடத்தப்பட்டன. இம்மாநாடுகளின் வாயிலாக சுயமரியாதைக் கருத்துக்கள் பரவலாயின இம்மாநாடுகளின் விளைவாக நாட்டில் கலப்புதிருமணங்கள், விதவை மணங்கள், பார்ப்பணர் அல்லாத திருமணங்கள் நடைபெற்றன. பார்ப்பணர் ஆதிக்க காங்கிரசை எதிர்ப்பதும், சமுதாயக் கொள்கை, சாதி மத பேதங்களை அகற்றுவதும் மூடநம்பிக்கைகளை ஒழிப்பதும், மற்றும் பொருளியல் கொள்கை, சமதர்மம் ஆகியவை இவ்வியக்கத்தின் அரசியல், சமூக, பொருளாதாரக் கொள்கைகளாகும். வர்ணா சிரமத்தில் வெறுப்பு கொண்டிருந்த மக்கள், மனுதர்ம எதிர்ப்புப் போராட்டத்தில் தங்கள் ஆத்திரத்தைக் காட்டினர். தன்மான இயக்கத்தில் ஆறுதல் கண்டனர். தமிழகத்தில் கதர் இயக்கத்தின் பொறுப்பாளராக இருந்த எஸ்.இராமநாதன் அவர்கள் காந்தியடிகள் விளக்கத்தை கேட்டு வேதியர் ஆதிக்கத்தை எதிர்த்து, காங்கிரசை விட்டு விலகினார். உடனடியாக தன்மான இயக்கத்திலும் தன்னை இணைத்துக் கொண்டார். திறமையான பேச்சாற்றல் பெற்ற இராமனாதன் அவர்களும் பெரியார் அவர்களும் தங்களின் பேச்சாற்றலின் மூலமாக மக்களின் உள்ளங்களை கவர்ந்தனர். நீதிக்கட்சியினால் புறக்கணிக்கப்பட்டிருந்த தாய்க்குலத்தையும், இளைஞர் களையும் தன்மான இயக்கம் கவர்ந்தது.

தன்மான அல்லது சுயமரியாதை இயக்கத்திற்கு ஆதரவாகப் பாடல்களும், நூல்களும் வரலாயின. பாரதிதாசனாரின் பாடல்கள் இயக்கத்திற்கு துணை நின்றன. 1929—ல் செங்கல்பட்டில் சுயமரியாதை இயக்கத்தின் முதல்மாநாடு திருவிழாக்கோலத்தில் நடைபெற்றது. மாநாட்டிற்குத் தலைமை தாங்கிய W.P.A. சௌந்திரபாண்டிய நாடார் அவர்கள் வர்ணாசிரம தர்மத்திற்கு விளக்கம் கொடுத்தார். அதாவது,

சமூக அமைப்பில் மக்களை பிளவு படுத்திக் காட்டும் புராணங்களும், இதிகாசங்களும் இடைக்காலத்தில் தோற்று விக்கப்பட்டவை. மேலும் சாமனியர்களை அடிமைப்படுத்த பயன்பட்ட கருவியே வர்ணாசிரம தர்மம் என்றார். மாநாட்டில் சிறப்புரையாற்றிய அன்றைய தமிழக முதலமைச்சர் திரு.சர்.பி.சுப்பராயன் அவர்கள் சுயமரியாதை இயக்கத்தை வெகுவாக பாராட்டினார். சுயமரியாதை இயக்கம் வலிமை பெறப் பெற மக்களிடையே சமூக விழிப்பு சுடர்விடலாயிற்று. கலப்புத் திருமணங்களும், விதவைத் திருமணங்களும் நடைபெற்றன. சுயமரியாதை இயக்கம் தமிழகத்திற்கு வெளியேயும் பரவத்தொடங்கியது. 1931—ல் பெரியார் ஐரோப்பாவிற்கும், ரஷ்யாவிற்கும் சென்று வந்தபின்னர் சுயமரியாதை இயக்கத்துடன் பொருள் முதல் வாதத்தையும் (Materialism) சேர்த்து சமதர்மக்கொள்கை ஏற்பட்டது. இது ஆங்கில கல்வி கற்ற இளைஞர்களையும் பெரிதும் கவர்ந்தது. சி.என்.அண்ணாதுரை போன்ற அறிவாற்றல் பெற்ற இளம் தொண்டர்கள் சுயமரியாதை இயக்கப் பணியில் பெரிதளவில் சேரத்தொடங்கினர்.

சுயமரியாதை இயக்கம் சார்பு கொண்டிருந்த அரசியல் கட்சியான நீதிக்கட்சி 1934 தேர்தலில் படுதோல்வி அடைந்தது. பெரியார் அவர்கள் இதனை சிறிதளவும் பொருட்படுத்தவில்லை. இருப்பினும், சுயமரியாதை இயக்கம் அரசின் அடக்கு முறைக்கே உள்ளாகியது. நீதிக்கட்சி அரசியலுக்கு சுயமரியாதை இயக்கத்தை சேர்ந்தவர்கள் ஆதரவு காட்டி வந்தாலும், சுயமரியாதை இயக்கம் அரசியல் சார்பிலிருந்து விலகிய ஒரு சமூக சீர்திருத்த இயக்கமாகவே செயல்பட்டு வந்தது. பெரியார் அவர்கள், சாமனியர்களின் நலனிலும், தமிழர்களின் விடுதலையிலும் அக்கறை காட்டி வந்த நீதிக்கட்சிக்கு தம்முடைய ஆதரவை அளிக்கத் தயங்கியதில்லை. 1937 தேர்தலில் நீதிக்கட்சி தன்னுடைய இறுதியான தோல்வியை தழுவியது. அக்கட்சியின் வெற்றிக்காக பாடுபட்ட சுயமரியாதை இயக்கத் தொண்டர்கள் தளர்ச்சி அடைந்தனர். ஆனால் பெரியார் அவர்கள் தன் நாவண்மையினால் தளர்ந்திருந்த தொண்டர்களை தட்டி எழுப்பினார். தோல்வி மீது வெற்றிகாண அழைத்துச்சென்றார். தேர்தலில் வெற்றி கண்ட காங்கிரசு கட்சியின் அமைச்சரவை சி.ராஜகோபாலாச்சாரியாரின் தலைமையில் இயங்கத் தொடங்கியது. காங்கிரசு ஆட்சியின் இந்திக் கொள்கையால் சுயமரியாதை இயக்கத்தினர் கட்டாய இந்தி திணிப்பு எதிர்ப்பு போராட்டத்தில் ஈடுபட்டு சிறை சென்றனர்.

நீதிக் கட்சியினர் அனைவரும் ஒட்டு மொத்தமாக சுயமரியாதை இயக்கத்திற்கு ஆதரவளிக்க முன்வரவில்லை. இருப்பினும், அடிப்படையில் ஒற்றுமை, அரசியலில் காங்கிரசாரை எதிர்ப்பதற்கு நீதிக்கட்சி பயன்

பட்டதாலும் சுயமரியாதை இயக்கத்தினர் நீதிக் கட்சியினருக்கு வேற்றுமையற்ற ஆதரவளித்து வந்தனர். 1932 க்கு பின்னர் நீதிக்கட்சியின் எதிர்காலத்தை மனதில் கொண்டு சிறையிலிருந்த பெரியாரிடம் அக்கட்சியின் தலைமைப் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது. பெரியாரின் தலைமையில் நீதிக்கட்சியின் அரசியல் நோக்கில் ஒரு மாற்றம் ஏற்பட்டது. முழு சுய ஆட்சி, கூட்டான்மை அரசியல் போன்றவற்றை கொள்கைகளாக ஏற்ற போதிலும் நீதிகட்சி பெயரளவில் நிலைத்ததோடு, சுயமரியாதை இயக்கத்தில் முழுமையாகக் கலந்தது.

இரண்டாம் உலகப்போர் காலத்தில், முஸ்லீம் லீக் தனிநாடு கோரிக் கொண்டிருந்தது. 1939 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 10 நாள், சுயமரியாதை இயக்கத்தினர் தமிழ் நாடு தமிழருக்கே என்ற கொள்கையை ஏற்றதோடு மட்டுமின்றி அதனை வலியுறுத்தவும் செய்தனர். திராவிடர்களின் கலை, நாகரிகம், பொருளாதாரம் ஆகியவை முன்னேற்றம் அடைவதற்கும், பாதுகாக்கப்படுவதற்கும் திராவிடர்களுடைய அகமாகிய சென்னை மாகாணம், இந்தியா மந்திரியின் நேர் பார்வையின் கீழ் ஒரு தனி நாடாகப் பிரிக்கப்பட வேண்டுமென்று 1940 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 24ம் நாள், திருவாரூரில் நடைபெற்ற மாநாட்டில் தீர்மானமாக நிறைவேற்றப்பட்டது. 1944 ஆம் ஆண்டில் சேலத்தில் கோலாகலத்துடன் நடைபெற்ற மாநாட்டில் சட்டப்பூர்வமாக சுயமரியாதை இயக்கத்திற்கு "தென்னிந்திய நலஉரிமைச்சங்கம்" என்ற பெயரை மாற்றி சட்டப்பூர்வமாக "திராவிடர் கழகம்" என்று பெயரிடப்பட்டது. கழகத்தின் செயலில் புது விறுவிறுப்பும் பல முனைகளில் வளர்ச்சியும் ஏற்பட்டது. திராவிடர் எழுத்தாளர் கழகம், திராவிடர் மாணவர் கழகம் ஆகியவை தோற்றுவிக்கப்பட்டன. கழகத்தை தென்னகத்தில் ஆற்றல் மிக்க இயக்கமாக்கிட 1946—ல் முழுநேரத் தொண்டர்களைக் கொண்ட கருஞ் சட்டைப் படையும் உருவாக்கப்பட்டது. 1944 ஆம் ஆண்டு சேலம் மாநாட்டில் நீதிக்கட்சி என்ற பெயரை மாற்றி, திராவிடர் கழகம் என்று அழைக்கும் தீர்மானத்தை அறிஞர் அண்ணா கொண்டு வந்து அது நிறைவேற்றப்பட்டது. பெரியாருடன் அண்ணா அவர்களுக்கு கருத்து வேறுபாடு ஏற்பட்டது. பெரியாரின் அன்பிற்குரியவராகவும், பாராட்டிற்குரியவராகவும் விளங்கிய அறிஞர் அண்ணா அவர்கள், பெரியாரின் பொருந்தாத திருமணத்தை கண்டித்து 1949 செப்டம்பர் 17 அன்று சென்னை ராயபுரத்தில் 'திராவிட முன்னேற்ற கழகம்' என்னும் புதிய இயக்கத்தினை உருவாக்கினார். திராவிட முன்னேற்ற கழகம் சொல்லாற்றல் வீரத்துடனும், எழுத்தாற்றல் வேகத்துடனும் அரசியலில் புகுந்தது.

### 10.3.3. திராவிடர் கழகமும் பெரியாரும்

இரண்டாம் உலகப்போர் மூண்டபோது இந்தி எதிர்ப்புப்போராட்டம் தடைபட்டது. காங்கிரஸ் கட்சி பிரிட்டிஷாரின் போர் நடவடிக்கைகளை ஆதரிக்கவில்லை. ஆனால் வெள்ளையனே வெளியேறு போன்ற போராட்டங்களை நடத்தினர். ஈ.வே.ராமசாமி போர் நடவடிக்கைகளை ஆதரித்து தமது செய்தித்தாளில் எழுதினார். போர்க்காலங்களில் பிரிட்டிஷ் அரசாங்கம் அச்செய்தித்தாளுக்கு பொருளாதார உதவியும் செய்தது. 1939 முதல் 1944—ல் திராவிடர் கழகம் தொடங்கப்படும் வரை ஈ.வெ.ரா. நீதிக்கட்சிக்கு பெருத்த அளவில் மக்களாதரவைப் பெற முயன்றார். முக்கிய காங்கிரஸ் தலைவர்களில் பெரும்பாலோர் அப்போது சிறைப் பட்டிருந்ததால், அவரால் அதில் வெற்றி காண இயல வில்லை. 1939—ல் சர்.ஸ்டாபோர்டு கிரிப்ஸை சந்தித்த அவர் திராவிட நாட்டின் தேவையை வலியுறுத்தினார். 1943—ல் ஜின்னா, அம்பேத்கார் ஆகியோரை சந்தித்து, சுதந்திர இந்தியாவிற்கான தமது பிரிவினை திட்டத்தை அவர்களிடம் விளக்கினார். இந்நூற்றாண்டு தொடக்க முதல் மறைமுகமாய் இருந்து வந்த திராவிட இனம், திராவிட உணர்வு போன்ற கொள்கை 1938 ஆம் ஆண்டு இந்தி எதிர்ப்பு போராட்டத்தின் மூலம் மேலும் விரிவடைந்து, மொழி அரசியலோடு இணைக்கப்பட்டது.

அறிஞர் அண்ணாவின் தலைமையில் திராவிட முன்னேற்றக் கழகம் செயல்படத் துவங்கியது. பெரியார் அவர்கள் தனித் தமிழ் நாடு பெறுவது, மூடநம்பிக்கை ஒழிப்பு, சமுதாய ஏற்றத்தாழ்வுகளை போக்குதல், பார்ப்பணியத்தை ஒழித்தல் போன்றவற்றை திராவிட கழகத்தின் கொள்கையாகக் கொண்டு செயல்படத் துவங்கினார். 1951—ல் வகுப்புரிமைக்காகவும், 1953—ல் ராஜகோபாலாச்சாரியாரின் குலக்கல்வி திட்டத்தை ஏதிர்த்தும், 1956—ல் ராமன் பட எரிப்பு, பிள்ளையார் சிலை உடைப்பு, பிராமணாள் என்று எழுதப்பட்ட விளம்பரபலகை அழிப்பு போன்ற போராட்டங்களை நிகழ்த்தினார். 1957—ல் பிராமணாள் பெயர் பலகை மறைந்தது. அதே ஆண்டில் இந்திய அரசியல் சட்டத்தை கொளுத்திச் சிறை சென்றார். தமிழக அரசியலில் பெரியார் அவர்கள் காமராசரை ஊக்குவித்ததோடு மட்டுமின்றி, தம்முடைய முழுமையான ஆதரவையும் நல்கினார். காமராசர் அவர்களை பச்சைத்தமிழர் என்றும் வர்ணித்தார். காமராசருக்குப் பின்னால் திரு.பக்தவச்சலம் அவர்கள் முதலமைச்சர் ஆனவுடன் காங்கிரசுக்கு தாம் அளித்து வந்த ஆதரவை ஈ.வெ.ரா. விலக்கிக் கொண்டார்.

#### அ. ராஜாஜியின் குலக் கல்வித்திட்டம்

ராஜாஜியின் தலைமையில் அமைந்த காங்கிரஸ் அரசாங்கம், சென்னை மாநிலத்தில் எல்லோருக்கும் தொடக்க நிலைக்கல்வி

வழங்குவதற்கான சாத்தியக் கூறுகளை 1952 ஜூலை மாதம் ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்தது. அதன் விளைவாக ராஜாஜி, குலக்கல்வி திட்டம் ஒன்றைக் கொண்டு வந்தார். அதன் படி எல்லாக் குழந்தைகளும் ஒரு நாளில் பகுதி நேரம் பள்ளிக்கு வந்துவிட்டு மீதி பகுதி நேரம் தம் தகப்பனார்களின் தொழில்களைச் செய்ய வேண்டும். இதன் மூலம் கல்விக்கென இருந்த வசதிகளை பயன்படுத்தி, எல்லாக் குழந்தைகளுக்கும் குறைந்த பட்சம் தொடக்கக்கல்வி வழங்க உத்தேசிக்கப்பட்டது. பள்ளி செல்லும் வயது குழந்தைகளில் 50 விழுக்காட்டினரே அப்போது பள்ளிகளுக்கு சென்று வந்தனர். ராஜாஜியின் குலக்கல்வி திட்டம் காங்கிரஸ் கட்சிக்குள்ளும் கட்சிக்கு வெளியேயும் கடுமையான எதிர்ப்புக்குள்ளாகியதோடு அது அவரது தற்காலிக அரசியல் வீழ்ச்சிக்கும் காரணமாயிற்று.

ஈ.வெ.ரா.வும், அண்ணாத்துரையும் குலக்கல்வித்திட்டத்தை எதிர்ப்பில் முண்ணணியில் இருந்தனர். பிராமணரான ராஜாஜி சென்னையில் மிண்டும் அதிகாரத்திற்கு வந்ததை கடுமையாக எதிர்த்த ஈ.வெ.ரா. வருணாசிரம தர்மத்தையும் சேர்த்தே எதிர்த்தார்.

### ஆ. சுயமரியாதை இயக்கத்தின் விளைவுகள்

ஜாதி வேற்றுமை கொடுமை அதிக அளவில் மறைந்தது. மூடப்பழக்க வழக்கங்கள் பெருமளவில் குறைந்தன. இன்றைய சூழ்நிலையில் உயர் பதவிகளும் கல்லூரிகளிலும் பள்ளிக்கூடங்களிலும் பிற்படுத்தப்பட்டோரும் தாழ்த்தப்பட்டோரும் பெருமளவில் காணப்படுவதற்கு இவ்வியக்கமே முக்கியமானதொரு காரணமாகும் என்று குறிப்பிட்டால், அது மிகையாகாது இவ்வியக்கத்தினால் ஏற்பட்ட எதிர்மறை விளைவுகளையும் இங்கே குறிப்பிடவேண்டும். அதாவது, ஜாதிச் சங்கங்களின் எண்ணிக்கையும், சமய எதிர்ப்பாளர்களின் எண்ணிக்கையும் பெருகியது.

தந்தை பெரியார் அவர்களின் திட்டங்களையும், கொள்கைகளையும் முற்றிலும் ஏற்று செயல் படக்கூடிய எந்த ஒரு அரசாங்கமும் இல்லாத காரணத்தினால் அரசியலில் அவரது பங்கு படிப்படியாக வீழ்ச்சியுறத் தொடங்கியது. அவர் எந்த ஒரு சூழ்நிலையிலும், தன்னுடைய கொள்கையினின்று சிறிதளவும் மனம் தளராமலும், தன்னுடைய இறுதி மூச்சு வரை தமிழ் இனத்திற்காகவும், அவர்களுடைய ஒருமித்த முன்னேற்றத்திற்காகவும் அரும்பாடுபட்டு தன்னுடைய 94வது வயதில் இம்மண்ணுலகை விட்டு விண்ணுலகம் அடைந்தார்.

## 10.4. தமிழ்நாட்டு அரசியலில் பத்திரிக்கையின் தாக்கம்:

தமிழ்நாட்டு அரசியலுடன் சினிமாவும், பத்திரிக்கையும் இரண்டறக் கலந்து விட்டன என்று கூறலாம். இந்தியாவின் மற்ற பகுதிகளிலும் அரசியலில் சினிமா புகுவதற்கு தமிழ் நாடு முன்னோடியாக இருந்தது என்பதை எளிதில் மறுக்க முடியாது. அன்னி பெசனட் நீதிக்கட்சி, காங்கிரஸ் கட்சி ஆகிய அரசியல் சக்திகள் இந்நூற்றாண்டின் ஆரம்பத்திலிருந்தே தமது அரசியலை பரப்பவும், ஆதரவைத் தேடவும் பத்திரிக்கைகளையும் பிரசுரங்களையும் மிக முக்கியமாக நம்பினர். ஆகவே, கட்சிப் பத்திரிக்கைகள் ஏற்பட்டன. பெரியார் அரசியலில் செல்வாக்குப் பெற்ற பின் சமுதாய மறுமலர்ச்சி, சீர்திருத்தம் ஆகிய நோக்கங்களுடன் பத்திரிக்கைகள் வெளிவந்தன. வார இதழ்களும், அரசியலுக்கென்று சில பகுதிகளை ஒதுக்கின. சுதந்திரப் போராட்ட காலத்தில் ஏற்பட்ட இந்தப் போக்கு சுதந்திரத்திற்குப் பிறகும் நீடித்து, வலுத்தது. இந்து, சுதேசிமித்திரன், மெயில், விடுதலை, குடியரசு, நீதி, தேசபக்தன் போன்ற பத்திரிக்கைகள் யாவரும் கேட்டறிந்த பெயர்களாயின. அரசியல் போர் பத்திரிக்கை உலகில்தான் பெருமளவு நடந்தது. சுதந்திரத்திற்குப் பின் தி.மு.கவும் இப்பத்திரிக்கை உலகில் ஆதிக்கம் செய்யலாயிற்று. கட்சி சார்புடைய மாலை பத்திரிக்கைகள் வெளிவரலாயின. போக்குவரத்திலும், அச்சிடலிலும் ஏற்பட்ட முன்னேற்றங்களை முழுவதும் பயன்படுத்திக் கொண்டு தமிழக அரசியலின் ஒவ்வொரு கோணத்தையும் பிரதிபலிக்கும் பல விதமான கட்சி சார்புடைய செய்திப்பத்திரிக்கைகளும், அரசியல் விமர்சனப் பத்திரிக்கைகளும், வார, மாத இதழ்களும், ஆங்கிலம், தமிழ் மூலமாகவும் கிராமங்களின் மூலை முடுக்குகளில் கூட பத்திரிக்கை படிக்கும் ஆர்வத்தை வளர்த்தன. எழுதப்படித்தோர் எண்ணிக்கை அதிகமாகவும் பரவவும் பத்திரிக்கைகள் உதவியாக இருந்தன.

மேலும் சினிமாவுக்கும், அரசியலுக்குமிடையே பிரிக்க முடியாத அளவிலான உறவு ஏற்பட்ட நிலையில், சினிமா பத்திரிக்கைகள் ஏற்பட்டன. செய்தி இதழ்களில் கூட, சினிமாவுக்கென்று பகுதிகள் ஒதுக்கப்பட்டன. இன்று தமிழ்நாட்டில் பத்திரிக்கைகள் இல்லாத அரசியல் என்ற ஒன்றை நினைத்துக்கூட பார்க்க முடியாத அளவிலான அரசியலில் பத்திரிக்கைகள் இடம் பெற்றுள்ளன.

### 10.4.1. தமிழக அரசியலில் சினிமாவின் தாக்கம்.

தேச பக்தியை உணர்த்தும் நாடகங்கள் சுதந்திர போராட்டத்தில் முக்கிய இடம் வகித்தன. சினிமாக்கலை இந்தியாவில் அறிமுகமானதும் அரசியல் கருத்துக்களைக் கொண்ட சினிமாக்கள் ஏற்பட்டதில் வியப்பில்லை. தீரர் சத்தியமூர்த்தி அரசியலில் சிறந்த தலைவராகவும்,

ஆவேசமான, அலங்காரமான பேச்சாளராகவும் நாடக நடிகராகவும், இருந்து மக்களைக் கவர்ந்தது அவருக்கு பிறகு வந்தவர்களுக்கும் முன்னோடியாக இருந்தது என்று கூறலாம்.

அண்ணாத்துரை, கருணாநிதி, ஆகியோர் சினிமாவின் சக்தியை நன்கு புரிந்து கொண்டு தங்களது கருத்துக்களைப் பரப்புவதற்கு சினிமாவைத் திறமையாகக் கையாண்டனர். சமூக, அரசியல் சீர்திருத்தப் படங்கள் இவர்களது கதை அல்லது வசனத்தை முன்வைத்து நாடெங்கிலும் புகழ் பெற்றன. வேலைக்காரி, பராசக்தி, போன்ற திரைப்படங்களை இவற்றுக்கு எடுத்துக் காட்டாக கூறலாம். மதுவிலக்கு, தீண்டாமை ஒழிப்பு போன்ற கருத்துக்கள், பெண்களின் முன்னேற்றம், கல்வி, விஞ்ஞான அறிவு இவற்றின் தேவை, தமிழரின் பண்பாடு இவற்றை எல்லாம் பரப்பும் வண்ணம் கதைகளும், வசனங்களும் ஏற்பட்டன. என்.எஸ்.கிருஷ்ணன் போன்ற நடிகர்கள் சீர்திருத்தக் கருத்துக்களை பரப்பும் பாத்திரங்களாக இருந்து, காந்தி, பெரியார் ஆகியோரது எண்ணங்கள் மக்கள் மத்தியில் பரவுவதற்கு உதவினர். சினிமா பாடல்கள் பலவும், இதே போல தமிழ், திராவிட உணர்ச்சிகளைப் பரப்புவதாகவும், சுதந்திரம், சமத்துவம், மூடநம்பிக்கை எதிர்ப்பு ஆகியவற்றை பிரதிபலிப்பதாகவும் அமைந்தன.

முக்கியமாக கதாநாயகன் பாத்திரங்களில் நடித்து புகழ் பெற்ற நடிகர்கள், சினிமாவில் மட்டுமின்றி, பொது வாழ்விலும் மக்கள் மத்தியில் செல்வவாக்குப் பெறத் தொடங்கினார்கள். எம்.ஜி.ராமச்சந்திரன் சினிமாத் துறையில் தனக்குத் துணையாக இருந்த அண்ணாத்துரை, கருணாநிதி இவர்களுடன் தி.மு.க.வில் ஒரு பெரிய சக்தியானர். படங்களில் தான் ஏற்கும் பாத்திரம் மூலமும், பாடும் பாடல்கள் மூலமும், பேசும் வசனங்கள் மூலமும், கட்சிக் கொள்கைகளை பாமரர் மத்தியிலும் பரப்பினார். ஏழைப் பங்காளனாகவும், வீரனாகவும், நல்லவனாகவும், தமிழ் பண்பாட்டைக் காப்பவனாகவுமே நடித்து மக்கள் மனதில் நீங்காத இடம் பெற்றுத் திகழ்ந்தார். எம்.ஜி.ஆர்—ன் ஓட்டுபெறும் சக்தியை தேர்தல் பிரச்சாரத்தில் அண்ணாத்துரை நன்கு பயன்படுத்திக் கொண்டனர்.

கட்சியிலிருந்து விலகி போட்டிக்கட்சியை ஆரம்பித்து பதவிக்கு வந்த பின் சினிமாவில் நடிப்பதை எம்.ஜி.ஆர் நிறுத்திவிட்டபோதிலும், அவரது சினிமா பின்னனி இறுதி வரை அவருக்குத் துணை செய்தது. இதே போல் சிவாஜி கணேசனும் காங்கிரஸ் கட்சிக்கு தனது சினிமா நடிப்பின் மூலம் பணிபுரிந்தார். இவர்களுக்கு அரசியலில் அடிப்படையாக ரசிகர் மன்றங்கள் அமைந்தது மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். சினிமாவின் ஈர்க்கும் சக்தியினை உணர்ந்து கடந்த சில தேர்தல்களில் பிரச்சார படங்களும் எடுத்து மக்கள் கருத்தினை கவரும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. இதற்கு அன்மைக் காலத்தில் பரவியுள்ள

தொலைக்காட்சி நுட்பமும் துணை செய்துள்ளது. தமிழக அரசியலில் சினிமா நடிகரும், நடிகைகளும், கதை வசனம் எழுதுபவரும், பாடல் ஆசிரியர்களும் (கண்ணதாசன், பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் போன்றவர்கள்) பெரும் பங்கு வகிக்கின்றனர் என்றால் அது மிகையாகாது. இப்போக்கு நல்லதா? அல்லதா? என்பதற்கு விடை சொல்லும்முன், நமது பொருளாதார, கலாச்சார அடிப்படையில், சினிமாவின் சக்தியை நாம் பூரணமாக உணர்ந்து கொண்டு, மற்ற சக்திகளுடன் சினிமாவையும் இணைத்துச் செல்வதற்கான சாத்தியக்கூறுகளை ஆராய்தல் வேண்டும். தொழில் வளமும், கல்விச் சிறப்பும், வாழ்க்கை நிலையில் பெருத்த முன்னேற்றமும் காணும் வரை சராசரியான, மனிதனுக்குத் துணையாக நிற்பது சினிமா என்பதை நாம் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

இன்றைய நிலையில் கேபிள் டி.வி.யின் வளர்ச்சியானது சினிமா, நாடகம், விஞ்ஞானம், கலை, கல்வி, அரசியலை ஒவ்வொரு வீட்டிற்குள்ளும் புகுத்தி பெரும் விழிப்புணர்வை உண்டாக்கியுள்ளது.

### 10.4.2. நவீனமாக்கம் — முன்னேற்றம்

தமிழகம் விவசாயப் பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்டிருந்தாலும், படிப்படியாக பல தொழில் துறைகளையும் நிறுவி, முன்மாதிரியான மாநிலம் என்ற அளவிற்கு முன்னேறியுள்ளது.

தமிழ்நாடு தொழில் அபிவிருத்தி கழகம், அரசு சிறு தொழில் மேம்பாட்டுக்கழகம் ஆகிய நிறுவனங்கள் தமிழ்நாட்டின் பெரிய, மத்திய தர, சிறு தொழில்களுக்கு கடன் வழங்கியும், நுட்ப ஆலோசனைகள் கூறியும் உதவுகின்றன. தமிழ்நாடு உல்லாச பயணிகளையும், சமய பயணிகளையும், பெரிதும் ஈர்க்கும் பல இடங்களையும், பல தலங்களையும் பெற்றுள்ளது.

சென்னை, அண்ணாமலை பல்கலைக்கழகங்கள் தவிர, மதுரை காமராசர் பல்கலைக்கழகம் பக்தவச்சலம் முதலமைச்சராயிருந்த போது ஏற்பட்டது. இதற்கான ஆரம்ப திட்டமிடுதல் காமராசர் பதவிக்காலத்திலேயே ஏற்பட்டது. கோவையிலும், திருச்சியிலும் மேலும் இரு பல்கலைக்கழகங்கள் எம்.ஜி.ராமச்சந்திரன் முதல்வராக இருந்தபோது ஏற்பட்டன. விவசாயம், மருத்துவம், பொறியியல் ஆகியவற்றுக்கு தனித்தனியே பல்கலைக்கழகங்கள் அமைந்தன. கொடைக்கானலில் பெண்களுக்கான அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகமும், காரைக்குடியில் அழகப்பா பல்கலைக்கழகமும், கோவை, சேலம்

ஆகியவைகளில் பாரதியார், மற்றும் பெரியார் பல்கலைக்கழகமும் ஏற்பட்டன. காந்தி கிராமத்தில் ஒரு இணை பல்கலைக்கழகம் உள்ளது.

சுதந்திரம் பெற்றதிலிருந்தே விவசாய மற்றும் தொழில் வளர்ச்சிக்கான அடித்தளங்களை அமைத்திட அரசாங்கம் முயன்று வந்தது. சமூக நெறிகள் மற்றும் கல்வி குறித்து ராஜாஜி அக்கரை காட்டினார். காமரசரோவெனில் சுதந்திர இந்தியாவின் வளர்ச்சித்திட்டங்கள், கிராமப்புறத்தினர் மற்றும் ஏழை எளியவர்களுக்கு நன்மை பயக்க வேண்டும் என்பதற்காகப் பாடுபட்டார். தமிழ்நாட்டை நவீனமயமாக்கி வளர்ச்சியுறச் செய்யும் பொருட்டு நீர்ப்பாசனத்திட்டங்கள், பசுமைப்புரட்சி, பல்கலைக்கழகங்கள் நிறுவுதல், சிறு தொழில்கள் ஏற்படுத்துதல், மாவட்டங்களில் அரசு தொழிற் பேட்டைகளை அமைத்து சிறு தொழில் முனைவோரை ஊக்குவித்தல், கிராமப்புறங்களில் மின் மயமாதல் திட்டங்கள், பல்வேறு சுகாதாரத்திட்டங்கள், தொடக்க நிலைக்கல்வியை எல்லாப்பகுதிகளுக்கும் விஸ்தரித்து ஏழைக் குழந்தைகளுக்கு இலவச மதிய உணவு போன்ற பல்வேறு அடிப்படைத்திட்டங்களை காங்கிரஸ் மேற்கொண்டது. எனினும் தமிழ்நாடு, மத்திய அரசாங்கத்தால் தொடர்ந்து புறக்கணிக்கப்படுவதாகத் தி.க. மற்றும் தி.மு.க. ஆகிய கட்சிகள் கூறி, வடக்கு வாழ்கிறது, தெற்கு தேய்கிறது என்று பிரச்சாரமும் செய்து வந்தனர். காமராசருக்கு பின், முதலமைச்சரான பக்தவச்சலம் காலத்திலும் அரசாங்கக் கொள்கையில் பெரும் மாற்றமில்லை.

இந்திய மாநிலங்களில் சிறப்பாக நிறுவகிக்கப்பட்ட மாநிலங்களில் ஒன்று என்று தமிழ்நாடு பெருமை படைத்தது. விவசாயத்தில் ஓரளவு உபரி மாநிலமாக இருந்த தமிழ்நாடு, தொழில் வளர்ச்சியில் மூன்றாவது இடத்தையும், எழுத்தறிவு பெற்றோர் விழுக்காட்டில் இரண்டாவது இடத்தையும், நவீனமயமாதல், சமூகவளர்ச்சி ஆகியவற்றில் மூன்றாவது இடத்தையும் பெற்றிருந்தது. காங்கிரஸ் கட்சியினுள் உட்பூசல்கள் மிகவும் குறைவாக இருந்தது. தமிழ்நாட்டில் காமராசர் முதலமைச்சராக இருந்த போது, சி.சுப்ரமணியம் கல்வி மற்றும் நிதியமைச்சராகவும் ஆர்.வெங்கட்ராமன் தொழில் அமைச்சராகவும் இருந்து தமிழக வளர்ச்சிக்கு அரும் பாடுபட்டனர்.

காங்கிரஸ் தோற்றதன் காரணங்களில் பருவமழை பொய்த்தது போன்ற இயற்கைக் காரணங்கள் தவிர, புதிய தலைமுறை வாக்காளர்களின் ஆதரவை பெறத்தவறியது, இந்தி எதிர்ப்புப் போராட்டங்கள், தமிழ் தேசிய உணர்வின் எழுச்சி ஆகிய அரசியல் காரணங்களும் அடங்கும். சில வளர்ச்சித் திட்டங்களை பொறுத்தவரை தி.மு.க., காங்கிரஸின் வழி முறைகளையே பின்பற்றியது. விவசாயத்துறையில் அதிக கவனம் காட்டப்பட்டது. தி.மு.க. அரசாங்கம்

விவசாயத்துறையில் மேற்கொண்ட திட்டங்களுள் முக்கியமானவை பின்வருமாறு:

புஞ்சை நிலங்களுக்கு நிலத்தீர்வையிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டது. ஒரு போக நிலங்களில் ஏராளமான நிலங்கள் இரு போக நிலங்களாக மாற்றப்பட்டன. நிலமற்ற ஏழைகளுக்கு நிலம் வழங்கப்பட்டது. உரங்கள் மற்றும் பூச்சிக்கொல்லிகள் அதிகமாய் விநியோகிக்கப்பட்டன. கிராமங்கள் மின்சார மயமாக்கப்பட்டன. வறட்சி நிவாரணப்பணிகள், குடிநீர் விநியோகம் ஆகியவற்றிற்கு முன்னுரிமை வழங்கப்பட்டது.

போக்குவரத்துத் துறையில் எல்லா தொலை தூரப்பேருந்துகளும் தேசிய மயமாக்கப்பட்டன. அதிகப் போக்குவரத்துக் கழகங்கள் பல நிறுவப்பட்டன. விவசாயத் தொழிலாளர்களுக்கு ஊதிய உயர்வு, குடிசை மாற்று வாரிய அமைப்பு, தமிழ்நாடு தொழில் வளர்ச்சிக் கழகம் அமைப்பு போன்றவையும் முக்கிய சாதனைகளாக கருதப்பட்டன. சிறுதொழில் முதலீட்டு கழகம் மூலமாக பல சிறிய தொழில்களுக்கு அதிகமாக நிதி உதவி வழங்கப்பட்டது. திட்டமிடுதல் மாநிலஅளவில் தொடங்கப்பட வேண்டுமென தி.மு.க. வலியுறுத்தியது. மாநில திட்ட வாரியம் ஒன்று ஏற்படுத்தப்பட்டு 10 ஆண்டு காலத்திற்கான திட்டம் தயாரிக்குமாறு கோரப்பட்டது. மாநில நிர்வாகத்தைச் சீரமைக்கும் பொருட்டு, நிர்வாக சீர்திருத்த வாரியம் ஏற்படுத்தப்பட்டது.

மாநிலப் பொருளாதாரம் தண்ணீர் பற்றாக்குறையால் பெரிதும் பாதிக்கப்பட்டது. தண்ணீர் பற்றாக்குறை, மின்சாரப் பற்றாக்குறை ஆகியவற்றைத் தீர்ப்பதற்கு, அரசாங்கத்தால் புதிய திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டன. காவேரி நீர்ப்பிரச்சனை, அண்டை மாநிலங்களோடு நீர் பங்கீட்டுத்தகராறு போன்றவற்றின் காரணமாக, மாநிலத்தின் பொருளாதார வளர்ச்சி குறையலாயிற்று. புதிய தொழில்களைத் தொடங்குவதில் இருந்த நடைமுறைச் சிக்கல் மற்றும் சிகப்பு நாடா முறை காரணமாக தொழில் முனைவோர் பிற மாநிலங்களுக்கு சென்று விட ஆரம்பித்தனர்.

வளர்ச்சி மற்றும் நவீனமயமாதலில் மேற்கூறிய போக்குகளைத் தவிர பிற்போக்கான சில நடவடிக்கைகளையும் குறிப்பிட வேண்டும். நலிவு மற்றும் வன்முறை போராட்டங்கள், ஜாதிப் போராட்டங்கள், தீக்குளிப்பு, தனிநபர் புகழ்பாடுதல் போன்ற பகுத்தறிவிற்கு முரணான நடவடிக்கைகளும் தமிழ்நாட்டில் வளர்ந்து வருவது குறிப்பிடத்தக்கதாகும். இத்தகைய நிலை மாறாவிடில், தமிழ்நாட்டில் போதிய வளர்ச்சியோ, நவீனமயமாதலோ சாத்தியமில்லை. இந்நிலையை உணர்ந்து, புதிய நீர் வளப்பெருக்குத் திட்டங்களும், மின்வளப்பெருக்குத் திட்டங்களும், புதிய தொழில் மையங்களும் நவீன முறையில் எழுப்புவதற்கு அரசு ஆர்வம்

காட்டி வருகிறது. புதிய நூற்றாண்டில் முன்னேறிய தமிழ்நாடாக இருத்தல் வேண்டும் என்கிற முனைப்பு காணப்படுகிறது.

### 10.4.3. மனித உரிமைகள்

ஐக்கிய நாடுகள் அமைப்பின் பொது சபை 1948 ஆம் ஆண்டு டிசம்பர் 10 ம் தேதி உலக மனித உரிமைகள் பிரகடணத்தை இயற்றி பறைசாற்றியது. இதன் பொருளாதார சமூகக்குழு மனித உரிமைகள் கமிஷனின் உறுப்பினர்களை பல்வேறு பகுதிகளுக்கும் பிரதிநிதித்துவம் கொடுக்கும் வகையில் நியமித்தது. உலகின் எப்பகுதியிலும் ஏற்படக்கூடும் மனித உரிமை மீறலை இது கண்காணிக்கிறது. ஆறு மாத உரிமை ஒப்பந்தக் குழுக்கள் மூலமாக இக்கண்காணிப்பு நடைபெறுகிறது. இந்தியாவிலும் 1993—ல் இயற்றப்பட்ட மனிதஉரிமைகள் பாதுகாப்பு சட்டம் தேசிய மனித உரிமை கமிஷனை தோற்றுவித்தது. மாநில அளவிலும் இது போன்ற கமிஷன் தமிழ் நாடு உள்பட பல இந்திய மாநிலங்களில் ஏற்படுத்தப்பட்டுள்ளன. இவை சுதந்திரமாக செயல்படும் கமிஷனாக இருத்தல் வேண்டும் என்பது நடைமுறையில் முற்றிலும் சாத்தியமாக இல்லை. ஏனெனில் அவற்றிற்கு அதிகார வலிமையும், நூற்றுக்கணக்கான உரிமை மீறலை ஆராய்ந்து விசாரிக்க தேவையான பணியாளர் அமைப்பும் இல்லை. இதற்காக, இக்கமிஷன்கள் அரசு நிர்வாகத்தையும், போலீஸையும் நம்பியே செயல்பட வேண்டியிருக்கிறது. இதனால் ஏற்படும் தாமதம் ஒரு புறம் இருக்க, வழக்குகளில் உரிமை மீறல் உள்ளது என்று கமிஷன் கருதினாலும் கூட இது பரிந்துரை மட்டுமே செய்ய முடியும். அவைகளை தண்டிக்கும் அதிகாரம் இக்கமிஷன்களுக்கு இல்லை. நீதிமன்ற நடவடிக்கைகள் மூலம் உரிமை மீறல் கண்டறியப்பட்டால் மீறுவோருக்கு நிவாரணமும் கிடைக்கலாம். அல்லது உரிமை மீறல் இல்லை என்றும் தீர்ப்பு வரலாம்.

எனினும் அண்மைக்காலமாக பொது மக்களிடையேயும், அரசாங்கத்தின் பாலும், மக்களின் அனைத்து தரப்பினருக்கும், அனைத்து நிலைகளிலும் மனித உரிமைகளை பேண வேண்டியதின் அவசியம் உணரப்பட்டுள்ளது. முக்கியமாக குழந்தைத் தொழிலாளி, கொத்தடிமை முறை, சட்டவிரோதமாக சிறைப்படுத்துதல், அரசியல் கொலைகள், சாதி சமய ரீதியான வன்முறைகள், சமுதாய, பொருளாதார ரீதியில் பின் தங்கியவர்கள், பெண்கள், மதச்சிறுபான்மையினர்கள், பயங்கரவாத எதிர்ப்புச்சட்டம், மனித உரிமை மீறல் காணப்படும் விஷயங்களாக கொள்ளலாம்.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவு சோதனை கேள்விகள்

4. நீதிக்கட்சியின் தோற்றத்தினை ஆய்க.

5. மாண்டேகு செம்ஸ்போர்டு சீர்திருத்தம் பற்றி குறிப்பு வரைக.

6. தந்தை பெரியாரின் சுயமரியாதை இயக்கம் பற்றி விவரி.

எவ்வாறாயினும், இந்திய அரசியல் அமைப்பை ஆக்கிய சான்றோர்கள் இது போன்ற துறைகள் அனைத்திலுமே எந்த ஒரு

தனியான எச்சரிக்கை அமைப்பையும் [illegible] உரிமைகளையும், மாண்பினையும் உறுதிப்படுத்த வழி வகுத்துள்ளனர். அடிப்படை உரிமைகள் தனி மனித உரிமைகளை, மீறல்களிடமிருந்து உடனடியாக காப்பாற்றிக் கொள்ள வகை செய்கிறது. அரசுக்கு வழிகாட்டு நெறிகள் பொதுவான உரிமை மீறல்களில் இருந்து அத்தகைய மீறல்களில் பாதிக்கக்கூடிய இனங்களைப் பாதுகாக்க வேண்டிய அவசியத்தையும் வழிமுறைகளையும் வலியுறுத்துகிறது. எப்படியாயினும், மனித உரிமைக்கு சிறந்த பாதுகாவலன் மனிதனே. இறுதியாக பிளேட்டோ, பர்க், மில், காந்தியடிகள் போன்ற சான்றோர்கள் கூறியது போல, மனித மாண்புகளில் பற்றும், துணிச்சலும் கல்வி அறிவுமே உரிமைகளுக்கான சாதனங்களாகும்.

## 10.5. தொகுப்புரை:

இருபதாம் நூற்றாண்டின் முதல் 10 ஆண்டு காலத்தில் அரசியல், சமயம், அரசாங்கப்பணி, கல்வி ஆகிய அனைத்திலும் பிராமணர்க்கும் பிராமணரல்லாதவருக்குமிடையே இருந்த வேறுபாடு இந்த அலகில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. சென்னை மாகாணத்தில் பிராமணரல்லா சாதி இந்துக்களிடையே சமூக அரசியல் உணர்வு அதிகரிக்கப்பட்டதற்கு காரணம் அவ்விடங்களில் நிகழ்ந்த சமூக, சீர்திருத்த மறுமலர்ச்சி நடவடிக்கைகளாகும். சாதிக் கொடுமைகளை எதிர்க்கவும் சாமனியர்களின் சமூக அரசியல் உரிமைகளுக்காகவும் நீதிக்கட்சி தோன்றியது என்பதை இவ்வலகின் மூலம் தெளிவு செய்யப்பட்டுள்ளது. மேலும் தமிழ்நாட்டின் அரசியலிலும், அரசாங்கத்திலும் சினிமா, பத்திரிக்கைகள் ஆகியவற்றின் பங்கினை இவ்வலகில் ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

## 10.6. முக்கிய வார்த்தைகள்:

1. சென்னை மாகாணம் : தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளு, உருது முதலிய மொழிகள் பேசும் நான்கு எல்லைப் பகுதியைக் கொண்ட நீண்ட நிலப்பரப்பு.

2. நீதிக்கட்சி : தென்னிந்திய வரலாற்றின் முற்போக்கு கருத்துக்களை கொண்ட நீதிக்கட்சி பிராமணர்கள் ஆதிக்க எழுச்சிக்கு ஒரு முடிவு கட்டவும், பிராமணரல்லாதவர்கள் கல்வி,

பொருளாதாரம், வேலைவாய்ப்பு பெறுவதற்கு ஏற்பட்டதாகும்.

3. வகுப்புவாரி அரசாங்க ஆணை : பிராமணரல்லாத வகுப்புக்களை சேர்ந்தோர் விகிதப்படி அதிக அளவில் அரசாங்க வேலைகளைப் பெறுவதற்கு பிறப்பிக்கப்பட்ட ஆணையாகும்.

4. வைக்கம் அறப்போர் : கேரள மாநிலத்தில் வைக்கம் என்னும் ஊரில் இருந்த காலத்தில் ஈழ சமுதாயத்தை சேர்ந்தவர்கள் செல்வதற்க தடை விதிக்கப்பட்டிருந்தது. இதை எதிர்த்து தந்தை பெரியார் போராட்டத்தில் ஈடுபட்டு தன் மனைவி நாகம்மையுடன் சிறை சென்றார்.

5. சுயமரியாதை இயக்கம் : சாதி வேற்றுமைக் கொடுமைகளையும் மூடப்பழக்க வழக்கங்களையும் சமுதாய ஏற்றத்தாழ்வுகளையும் ஒழிப்பதற்க ஏற்பட்ட இயக்கமாகும்.

## 10.7. முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னறிவுச் சோதனைக் கேள்விக்கான பதில்கள்.

கேள்வி எண். 1 — இந்த கேள்விக்கான விடையை பகுதி எண். 10.1.ல் அறிக.

கேள்வி எண். 2 — இந்த கேள்விக்கான விடையை பகுதி எண். 10.2.1.ல் அறிக.

கேள்வி எண். 3 — இந்த கேள்விக்கான விடையை பகுதி எண். 10.2.3.ல் அறிக.

கேள்வி எண். 4 — இந்த கேள்விக்கான விடையை பகுதி எண். 10.2.4.ல் அறிக.

கேள்வி எண். 5 — இந்த கேள்விக்கான விடையை பகுதி எண். 10.3.ல் அறிக.

கேள்வி எண். 6 — இந்த கேள்விக்கான விடையை பகுதி எண். 10.3.2.ல் அறிக.

## 10.8. இந்த அலகு சம்பந்தப்பட்ட மேலும் படிக்க வேண்டிய நூல்கள்.

1. Kalyani.T; Union and State Polity in India. Arivuchudaragam, Madurai; 2005.
2. Kothari.R.; Caste, and Politics in India; New Delhi, Orient. Logmanms; 1970.
3. Oomen .T.K. Protest and Change; Studies in Social Movements, New Delhi; 1990.
4. Srinivasachari, C.S; A.History of the city of Madras, Madras; 1939.
5. Ramasamy. M.S. The founding if Madras, Orient Longman 1978; Madras.
6. Eugene F.Irschick; Politics and Social conflict in South India; Oxford University press, Bombay. 1989.
7. Robert L.Hard grake, Jr.The Dravidian Movement; Popular Prakasham, Bombay; 1965.

## 10.9. வினாக்கள் / செய்முறைப்பயிற்சிகள்.

1. இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பகாலத்தில் சென்னை மாகாணத்தில் நிலவிய சமூக அரசியல் நிலையினை விவரிக்கவும்.
2. பிராமணரல்லா இயக்கத்தின் தோற்றத்தையும் நோக்கங்களையும் விளக்குக.
3. நீதிக்கட்சியின் தோற்றம், அதனுடைய சாதனைகளை தொகுத்து வரைக.
4. தமிழ்நாட்டு அரசியலில் தந்தை பெரியாரின் பங்கினை விவரி.
5. தமிழ்நாட்டின் அரசியலிலும், அரசாங்கத்திலும் சினிமா, பத்திரிக்கைகள் ஆகியவற்றின் பங்கினை ஆராய்க.

# M.A. FIRST YEAR
## Branch : POLITICAL SCIENCE
## PAPER – III NATIONAL AND STATE POLITY IN INDIA

Time : Three hours Maximum: 100 Marks

### MODEL PAPER

**Answer any FIVE Questions**
All Qustions carry equal marks

மாடல்: I

1. இந்திய அரசியல் முறையமைவிற்கு ஆங்கிலேயர் ஆட்சியின் பங்களிப்பினை ஆய்க.
2. இந்திய அரசயிலமைப்பின் சிறப்புப் பண்பகளை விளக்குக.
3. அரசு வழிகாட்டுக் கொள்கைகள் யாவை? அவை அடிப்படை உரிமைகளிலிருந்து எவ்வாறு வேறுபடுகிறது.
4. பாராளுமன்ற உறுப்பினர்களின்அதிகாரங்கள் மற்றும் சிறப்புரிமைகளை விவாதிக்க.
5. மாநில உறவுகளை சீரமைக்க ராஜமன்னர் குழு செய்த பரிந்துரைகளை பகுத்தாய்க
6. மக்களவை சபாநாயகரின் அதிகாரஙகளையும் பணிகளையும் விவரி.
7. இந்தியாவில் பஞ்சாயத்துராஜ் அமைப்பின் வளர்ச்சியை ஆய்க.
8. இந்திய அரசியலில் மொழிப்பிரச்சனையை ஆராய்க.
9. கி.பி.1900—ல் சென்னை மாகாணத்தில் அரசியலில் நிலவிய முக்கிய அம்சங்களைப் பட்டியலிடுக.
10. சமூக தீமைகளை ஒழிப்பதில் பெரியார் அவர்களின் திராவிடர்கழகம் ஆற்றிய பங்கினை மதிப்பீட செய்க.

மாடல். II

1. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி விட்டுச் சென்ற பாரம் பரியத்தை எடுத்துரைக்கவும்.
2. இந்தியாவில் மதச் சார்பின்மை மற்றும் சமதர்மம் குறித்து ஒரு திறனாய்வுக் கட்டுரை வரைக.
3. பாராளுமன்றத்தின் பங்கு மற்றும் அதன் பொறுப்புக்களை ஆராய்க.
4. மத்திய – மாநில உறவுகளை ஆய்க.
5. இந்திய பிரதம அமைச்சரின் மற்றும் அமைச்சரவையின் அதிகாரம் மற்றும் பணிகளை விளக்குக.
6. இந்தியாவில் நீதித்துறையின் பணிகள் பற்றி ஆராய்க
7. மாநில ஆளுநரின் அதிகாரங்கள் மற்றும் பணிகளை விவாதி.
8. இந்தியாவில் பிராந்தியக் கட்சிகளின் வளர்ச்சியை திறனாய்க.
9. தேர்தல் ஆணையத்தின் அதிகாரம் மற்றும் பணிகளை ஆராய்க.
10. சென்னை மாகாணத்தில் பிராமணரல்லாதார் இயக்கத்தின் தோற்றம் பற்றி ஆராய்க.

மாடல் III

1. மாநில நிர்வாகத்தில் முதலமைச்சரின் பங்கினை விவாதிக்கவும்.
2. அரசு வழிகாட்டு நெறிகள் கொள்கையை மதிப்பாய்க.
3. இந்தியாவில் குடிமைப் பணியில் பங்கினை ஆராய்க.
4. இந்திய அரசியலமைப்பின் 42—வது சட்ட திருத்தத்தினை விவரி.
5. சென்னை மாகாண அரசியல் விழிப்புணர்வை விவரி.
6. மொழிவாரி மாநில சீரமைப்பு குறித்து ஒரு திறனாய்வுக்கட்டுரை வரைக.
7. சுயமரியாதை இயக்கத்தின் தோற்றம் மற்றும் அதன் பங்கினை விவரி.
8. தமிழக அரசியலில் பத்திரிக்கை மற்றும் சினிமா சாதனங்களின் பங்களிப்பை ஆராய்க.
9. 1920—களில் சென்னை மாகாணத்தில் சமூகப் பொருளாதார நிலையின் பகுத்தாய்க.
10. இந்திய தேர்தல் சீர்திருத்தம் என்பதை ஆராய்ந்து எழுதுக.

